# புயலடித்த இரவு

பி.வி.ஆர்.




மாலைமதி : : சென்னை-10.

மாலைமதி

ஜூன்-'78

மதி : 4 — மாலை : 8

பொருளடக்கம்



மாலைமதி ஆசிரியரும், பிரசுரகர்த்தரும்:
பி. வி. பார்த்தசாரதி,
83, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010:
குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில் அச்சிட்டவர்:
ஏ. பி. ஏ. பெரியகருப்பன்.

# புயலடித்த இரவு...

பி. வி. ஆர்.




## 1978 - ஜனவரி - 1

அதிகாலையில் கண்ட கனவு பலிக்கும் என்று யாரோ எப்போதோ சொன்னது, அவன் கண்ணை விழித்ததுமே நினைவுக்கு வந்தது. மூடநம்பிக்கைகளில் என்றுமே லவலேசமும் நம்பிக்கை கொண்டிராத அவன், தான் கண்ட கனவின் விசித்திரத்தை நினைத்துப் பார்த்தான். வேறொருவராக இருந்தால், கனவுக்கும் தன் எதிர்கால வாழ்க்கைக்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்குமோ, கனவு பலித்துவிடுமோ என்று சிறிதுஅச்சப்பட்டிருக்கக்கூடும். விந்தையான சொப்பனம் விபரீதமாகப் பலித்து விடுமோ என்று பயப்பட்டிருக்கக்கூடும். ஆனல் டாக்டர் கோபிநாத்துக்கு அந்தக் கனவு வேடிக்கையான அனுபவமாக இருந்தது.

ஒரு நீண்ட கனவு இரண்டரை வினடிகளில் தொடங்கி முடிந்து விடுகிறது என்று ஒரு பிரபல விஞ்ஞானி சொல்லியிருப்பது அவனுக்குத் தெரியும். இருந்தாலும் அவனுடைய சொப்பனம் இந்தக் காலவரையறையை மீறிப்போய்விட்டதான பிரமையை உண்டாக்கியது. இதற்குக் காரணம் கனவில் முழுக்க முழுக்க அவன் ஒருத்தனே சம்பந்தப்பட்டிருந்ததுதானே.

டாக்டர் கோபிநாத் கண்ட கனவு இதுதான்.

அவன் சைக்கிளை வெகு விரைவாக ஓட்டிக் கொண்டு ஒரு மலைப்பாதையின் சரிவில் செல்லுகிறான். திடீரென்று ஒரு பெரிய பள்ளம் தெரிகிறது.

பிரேக்குகளை அழுத்தி வண்டியை நிறுத்த மனம் பதை பதைக்கிறது. ஆனால் வலது கை திடீரென்று இயங்க முடியாமல் மரக் கட்டையைப்போல் விறைப்புடன் நிற்கிறது. இந்தத் திடீர் உணர்ச்சியின் காரணமாக இடது கையும் ஒத்துழைக்க மறுக்கிறது.

பள்ளம் சமீபித்துக்கொண்டே வருகிறது. அதன் ஆழம் அவனுக்குத் தெரியாது. அதனாலேயே பயம் ஒரு பீதியாக மாறி அவனை உலுக்குகிறது.

பள்ளத்தின் விளிம்புக்கு வந்தபோது அவனே அதிசயிக்கும் வண்ணம் சைக்கிள் திடீரென்று நிற்கிறது. காரணம் முதலில் புரியவில்லை. இயங்காத கைகள் இன்னும் அதே நிலையில்தான் இருக்கின்றன.

அவன் சைக்கிளைவிட்டு இறங்கவும் பள்ளத்தி லிருந்து ஒரு மனிதன் சைக்கிள் அருகே வரவும் சரியாக இருக்கிறது.

வந்த ஆளை டாக்டர் கோபிநாத் பார்க்கிறான். அவனுடைய திகைப்பும் மலைப்பும் எல்லை கடந்து போகின் றன. தான் ஒரு பெரிய நிலைக்கண்ணாடியில் தன்னுடைய உருவத்தைத்தான் பார்த்துக்கொண்டிருக்கிறோமோ என்ற பிரமை உண்டாகியது. கண்ணாடியாக இருந்தால் பிரதி பலிப்பில் சைக்கிளும் இருக்க வேண்டுமே?

இன்னொரு கோபிநாத் எங்கேயிருந்து முளைத் தான்? அவன் அம்மாவுக்கு ஒற்றையாகத்தானே பிறந் தான்! இந்த இரண்டாவது அவன் யார்?

ஒரு புன்முறுவலுடன் கோபிநாத்தின் அச்சு பேசியது.

''டாக்டர், பள்ளத்தில் விழ இருந்த நீ பிழைத்துவிட்டாய். இனிமேல் உன்னை தெய்வம்தான் காப்பாற்றவேண்டும்.....''

''நீ யார்..யார் நீ?'' கிணற்றிலிருந்து கிளம் பும் ஒலியாக கோபிநாத்தின் குரல் கேவியது.

''நீதான் நான்....நான்தான் நீ.....''

''புரியலே.''

''உனக்குள் இருக்கும் நீதான் உன்னை விட்டுப் பிரிந்து உன் எதிரேயே நிற்கிறாய்...இன்னும் சில வினாடிகளில்

உனக்குள் இருக்கும் நீ உன்னிடமே வந்து சேர்ந்துவிடும்... அதற்கு முன்னால் ஒன்று சொல்லுகிறேன், கேள்!''

டாக்டர் கோபிநாத் வாயடைத்து நின்றான். அவன் எதிரே இருந்த அவனுடைய மறுபதிப்பு பேசியது.

''இனி நீ டாக்டர் கோபிநாத் அல்ல. இனிமேல் உனது வலது கைக்கு சுவாதீனம் இருக்காது...உன்னுடைய கடைசி ரணசிகிச்சை நேற்றே முடிந்துவிட்டது.''

''என்ன!''

கோபிநாத்தின் கேள்விக்குப் பதில் கிடைக்கவில்லை. பள்ளத்திலிருந்து ஏறிவந்த உருவம் திடீரென்று மறைந்துவிட்டது.

டாக்டர் கோபிநாத் கண் விழித்தான். விசித்திரமான கனவை நினைத்து நினைத்து மனத்துக்குள் சிரித்துக் கொண்டான். முந்தின இரவு அளவுக்கு அதிகமாகச் சாப்பிட்ட தன் வினை இப்படி வேலை செய்யும் என்று அவன் எதிர்பார்க்கவேயில்லை.

படுக்கையிலேயே படுத்துத் தனக்குள்ளே சிரித்துக்கொண்ட அவன் வலது கையை ஆட்டினான். அது நன்றாக ஆடியது. அருகே முக்காலியில் இருந்த கண்ணாடித் தம்ளரைக் கை எடுத்தது. மறுபடியும் வைத்தது.

இப்போது கோபிநாத் வாய்விட்டுச் சிரித்தான். 'இந்தக் கனவு அபூர்வமான ஒரு கனவு. இதை டாக்டர் ரம்யாவிடமும் டாக்டர் முரளியிடமும் சொல்லி அவர்களுடன் சேர்ந்து ரசிக்க வேண்டும். அன்றைய ஆபரேஷனுக்கு முன்னால், தியேட்டரை மற்றவர்கள் தயார்செய்து கொண்டிருக்கையில், அரட்டை அடிக்க நல்ல விஷயம் கிடைத்துவிட்டது.'

கடிகாரத்தைப் பார்த்தான். நாலே முக்கால். சொப்பனம் சிரிப்பை மூட்டிவிட்டாலும், அவனால் ஏனோ மேலும் தூங்க முடியவில்லை. வழக்கத்துக்கு ஒரு மணி நேரம் முன்னாலேயே எழுந்தால் தவறு இல்லை என்று தோன்றியது. சரியாக எட்டு மணிக்கு சிவபாதசுந்தரத்துக்கு ஆபரேஷன். குடலில் புண். ஏன் ஒரு மணி நேரத்துக்கு அது சம்பந்தமாகப் புத்தகத்தைப் புரட்டிப் பார்க்கக் கூடாது? குடல் ஆபரேஷன் செய்து இப்போது ஆறுமாதங்களுக்கு மேலாகிவிட்டது. புத்தகத்தைப் படித்து, மறந்து போயிருக்கக்கூடிய ஓரிரு சிறு விஷயங்களை நினைவுக்குக் கொண்டு வருவதும் நல்லதுதான்.

கோபிநாத் படுக்கையிலிருந்து எழுந்து, பேஸ்ட்டை

யும் பிரஷ்ஷையும் எடுத்துக்கொண்டு குளியலறைக்குச் சென்றான்.



டாக்டர் கோபிநாத்துக்கு வருகிற ஆகஸ்ட் மாதம் பதினெட்டாம் தேதி இருபத்தெட்டாவது வயது நிறைவு. பிறந்த தினத்திலிருந்து அப்பாவின் முகத்தைப் பார்த்த தில்லை. ஆறு வயதுவரை அம்மாவிடம் வளர்ந்த அவன், அதன் பிறகு அவளுடைய அண்ணன் வீட்டில் அவருடைய ஒரே மகனைப்போல வளர்ந்தான். மாமாவே அப்பாவாகி, மாமி அம்மாவாக மாறிவிடவே, அவனுடைய நேசமும் பாசமும் அவர்களிடையே நிலைத்தது. பன்னிரண்டு வயது வரை அம்மா அவ்வப்போது அவனைப் பார்க்க வருவாள். அவனுக்கு புது ஷர்ட்டும், அரைநிஜாரும் வாங்கிக் கொடுப்பாள். போவதற்கு முன்னால் அவனுடைய கன்னத்துக்கு ஒரு முத்தம் கிடைக்கும். உடனடியாக அவன் ஷர்ட்டால் கன்னத்தின் ஈரத்தைத் துடைத்துக் கொள்ளுவான்.

மாமாவுக்கு நாக்பூருக்கு மாற்றலாகியது. அவனும் கூடவே போனான். அங்கிருந்து பம்பாய். படிப்பு எதிர்பார்த்ததற்கு மேலேயே வந்ததால் அவனை டாக்டருக்குப் படிக்க வைத்தார்கள். அவன் டாக்டர் பட்டம் வாங்கும்வரை, படிப்புக்கான செலவை அம்மாதான் அனுப்பி வந்தாள் என்று அவனுக்குத் தெரியாது. தெரிந்தபோது அதைப்பற்றி அவன் வெகுவாக சிந்திக்கவுமில்லை.

இருபத்தைந்தாவது வயதிலேயே ரண சிகிச்சையில் அவன் ஒரு நிபுணன் எனறு பெயர் வாங்கினான். சர்க்கார் உத்தியோகத்திலிருந்து கொண்டு மாதச் சம்பளம் வாங்க அவனுக்குப் பிடிக்கவில்லை. மாமா ஒய்வு பெற்றுக் கோயமுத்தூருக்குத் திரும்பியபோது கூடவே அவனும் வந்தான். ஊட்டியில் மைசூர் ரோடில் ஒரு தனியார் ஆஸ்பத்திரியின் உரிமையாளர் திடீரென்று காலமாகிவிட்டார் என்றும் அது விலைக்கு வருகிறது என்றும் தெரியவந்தது. லட்

சம் ரூபாய்க்குக் கிடைக்கும். அவனும் டாக்டர் முரளியு மாகச் சேர்ந்து ஒரு பாங்கியை அணுகினார்கள். முதலி லெல்லாம் அக்கறை காட்டாத மாமா திடீரென்று இரு பதாயிரம் தருவதாகச் சொன்னார். இது அவனுக்கு ஆச் சரியமாக இருந்தது. ஒய்வு பெற்றதால் கிடைத்த பணத்தில் பெரும் பங்கை அவர் அளிக்கிறார் என்று நினைத்தான்.

பாங்கியும் உதவி செய்யவே, மைசூர் ரோட் நர்ஸிங் ஹோம் அவனுக்கும் டாக்டர் முரளிக்கும் சொந்த மாகியது. வைத்திய பரிசோதனைகளை முரளி கவனித்துக் கொள்ள கோபிநாத் ரணசிகிச்சையை ஏற்றுக்கொண்டான். உதவிக்கு இருபத்துநாலு வயது அழகி ரம்யாவும் வந்து சேர்ந்தாள்.

இந்த மூன்று வருடங்களில் ஊட்டி நர்ஸிங் ஹோம் அமோகமாக வளர்ந்துவிட்டது, அங்கே கோபி நாத் செய்து வெற்றிகண்ட ஆபரேஷன்களுக்குக் கணக் கில்லை. அவனுடைய திறமையைக்கண்டு, கோயமுத்தூர், சேலம் போன்ற பெரிய ஊர்களிலிருந்து கூட நோயாளிகள் வந்தார்கள். அனேகமாக வந்தவர்கள் எல்லாருமே, சிகிச்சை முடிந்து வீட்டுக்குத்தான் திரும்பினார்கள். ஒருவர்கூட காட் டுக்குப் போகவில்லை.

டாக்டர் கோபிநாத் இன்னும் இரண்டே அங்குலங்கள் வளர்ந்திருந்தால் உயரம் ஆறு அடி என்று பெருமைப் பட்டுக்கொண்டிருப்பான். நல்ல சிவப்பு நிறம். நன்றாகப் படிந்த தலை. கண்களின் கூர்மையிலேயே அவனு டைய புத்தி தீட்சண்ணியம் தெரிந்தது. அவன் வாய் விட்டுச் சிரிக்கும்போது, வெள்ளைப் பற்களின் வரிசை கண்களை ஈர்க்கும். பிறரைக் கேலி செய்வதில் தனி நாட் டம். டாக்டர் ரம்யாவைச் சீண்டிக் கொண்டே இருப்பான். அவள் அவனுடைய அழகில், பேச்சில், தொழிலின் திற மையில் மயங்கியவள். அவளும் அவனுடன் சேர்ந்து ரசிப் பாள்.

டாக்டர் கோபிநாத் இன்னும் கல்யாணத்தைப் பற்றித் தீவிரமாக யோசிக்கவில்லை. ரம்யா நல்ல அழகி தான். ஆனால் அவள்மீது டாக்டர் முரளிக்கு நாட்டம் இருக்கிறது என்பதை அவன் அறிவான். கடந்த காலம் எப்படி இருந்தாலும் இப்போதைக்கு, அவனுடைய லட்சிய மெல்லாம், மற்ற டாக்டர்கள் எளிதில் சாதிக்க முடியாத கடினமான ஆபரேஷன்களை வெற்றியுடன் செய்துமுடிக்க

வேண்டும் என்பதுதான். இதுவரையில் அவனுடைய நர்ஸிங் ஹோமில் இருதய சம்பந்தமாக, ஆபரேஷனுக்கு வரவில்லை. ஒரு 'ஹார்ட் ஸர்ஜரி' யாவது செய்யவேண்டும், அதன் மூலம் பெயர் பிரபலமாக வேண்டும் என்பது அவனுடைய தீராத ஆசை. இந்த ஆசை கைகூடினால் ஒருவேளை மனம் திரு மணத்தில் லயிக்குமோ என்னவோ?



நர்ஸிங்ஹோம் அரை ஏக்கர் நிலத்தில், காம் பவுண்டுக் கதவிலிருந்து நன்றாக உள்ளே தள்ளி இருந்தது. வெள்ளைக் கட்டிடம். நிலவில் ஒரு சின்னஞ்சிறு பளிங்கு மண்டபம் போலக் காட்சி அளித்தது. இரண்டு மாடிகள். கீழே வலது புற அறை டாக்டர்களுடையது. இடது புறத்தில் மருந்துகளும் ஆஸ்பத்திரிக்குத் தேவையான பொருள்களும் அடைந்து கிடந்தன. இரண்டு அறைகளுக் கும் இடையே உள்ள நீண்ட திண்ணையில் இரு நீள பெஞ் சுகள்—தினசரி நோயாளிகள் உட்கார. இரண்டு அறைகளைத் தொடர்ந்து மேலும் இரண்டு அறைகள். ஒரு பெரிய ஹால். இந்த மூன்று இடங்களில் மொத்தம் எட்டு கட்டில் கள். எட்டு நோயாளிகள். ஹாலை அடுத்தாற்போல ஒரு பெரிய தாழ்வாரம். தாழ்வாரத்தின் வெளிப்புறத்தை அடைத்து அதை நீண்ட அறையாக மாற்றி அதில் மூன்று பேர் படுக்க வசதி செய்திருந்தார்கள்.

மாடியில் ஆபரேஷன் தியேட்டர். நவீன வசதி களெல்லாம் நிறைந்த கூடம். டாக்டர் கோபிநாத்தின் கை வண்ணம் இந்த அறையில்தான் வெளியாகிறது. எந்த வேளையிலும் அது துப்புரவாக, எந்தவித அசுத்தமுமில்லா மல் காணப்பட்டது. டெட்டனஸ் எந்த நோயாளியையும் எப்போதும் அணுகக்கூடாது என்பது டாக்டருடைய லட் சியம்.

டாக்டர் கோபிநாத் ஆஸ்பத்திரிக்கு வந்த போது சரியாக மணி ஆறேமுக்கால். காக்கி சட்டையுடன்,

நெற்றி நிறைய விபூதியும் குங்குமமுமாக, கையில் ஒரு தடியுடன் நின்ற வாட்ச்மேன் வீராசாமி, விறைப்பாக நின்று சலாம் செய்தான்.

''என்னப்பா, பொண்ணை பவானிக்கு அனுப்பிச் சியா?''

''ஆமாம் டாக்டர் ஐயா.''

''புருஷன் என்ன சொல்ருன்...பட்டை அடிக் கிறதை நிறுத்திட்டானு, இல்லையா.....?''

''நிறுத்திட்டேன்னு பனுரி அம்மன்மேலே சத்தி யம் செய்யருன்.....''

''அவன் நிறுத்தலேன்னு சொல்லு...முரளியை விட்டு ஒரு இஞ்செக்ஷன் கொடுக்கச் சொல்றேன். ஒரு மருந்தும் தருவான். அப்புறம் ஆறுமாசத்துக்குப் பட்டை நாக்கில் பட்டாலே, நாக்கு வெளியே வந்துடும்.....''

''சரி, ஐயா.''

அவன் அறைக்குள் பிரவேசித்தபோது, நர்ஸிங் ஆர்டர்லி லிங்கம், தினத்தாள் காலண்டரில் டிசம்பர்—31 ஐக் கிழித்துவிட்டு, சிவப்பு நிற ஜனவரி—1ஐப் பார்த்தவ ஞய் நின்று கொண்டிருந்தான்.

''ஹாப்பி நியூ இயர், லிங்கம்,'' என்ருன் உற்சாக மாக.

என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் அசடு வழிந்த ஆர்டர்லி மெள்ள, ''வணக்கமுங்க,'' என்ருன்.

''ஆபரேஷன் தியேட்டர் ரெடியா?''

''ஒரு நிமிஷத்திலே சுத்தம் செய்துடறேன் சார்.''

''ஸ்வீப்பர் வந்தாச்சா?''

''அறையைப் பெருக்கியாச்சு, டாக்டர் ... உங்க மேஜையைத்தான் இப்ப சரி செய்யணும்.....''

''ஸ்வீப்பர் வந்தாச்சா?''

''வந்துட்டான்...ஹால், ரூம் தாழ்வாரம் எல்லாம் பெருக்கி, டெட்டால் போட்டு மெழுகியாகி விட்டது.''

''குட்.....''

கோபிநாத் ஒவ்வொரு அறையாகப் பார்க்கப் புறப்பட்டான். மொத்தம் பதினெரு படுக்கைகள். ஏழு பேர் இருந்தனர். நான்குபேர்கள் முரளியால் கவனிக் கப்படுகிறவர்கள். மூன்று பேர் ஆபரேஷனுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறவர்கள். புது வருஷம் சிவபாதசுந்தரத் துடன் ஆரம்பிக்கிறது. மறுநாள் காலையில் பன்னிரண்டு

வயது பாஸ்கருக்கு டான்ஸில்ஸ். மூன்றும் தேதி காலையில் சேலம் கவுண்டருக்கு ஹெர்னியா. நான்காம் தேதியிலிருந்து சில நாட்கள் வெறிச்சோடும் போலிருக்கு. ஒரு பெரிய ஆபரேஷன் காரணமாக, போன வாரம் நடந்த அவருடைய சஷ்டியப்த பூர்த்தியில் அவனால் கலந்துகொள்ள முடியவில்லை. மாமா கோபித்துக் கொண்டிருப்பார். மாமி மிகவும் தாபப் பட்டிருப்பாள். புது கேஸ்கள் ஏதும் அதற்குள் வரவில்லை என்றால், கோயமுத்தூருக்குப் போய் மாமா, மாமியை ஒரு முறை பார்த்து வரவேண்டும்.

சிவபாதசுந்தரம் இருந்த அறைக்குள் கோபிநாத் பிரவேசித்தான்.

நர்ஸ் லீலா, சிவபாதசுந்தரத்தின் நாடியைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தாள். டாக்டரைக் கண்டதும் சிவபாதசுந்தரம், வாயிலிருக்கும் தெர்மாமீட்டரை லட்சியம் செய்யாமல் எழுந்திருக்க முயன்றார். கோபிநாத் அவரைச் சைகையால் அமர்த்தி விட்டு, நர்ஸ் அருகே நின்றான்.

லீலா, ''குட் மார்னிங் டாக்டர். விஷ் யு எ வெரி வெரி ஹாப்பி நியூ இயர்!'' என்றாள்.

''தாங்க்யு. விஷ் யு தி ஸேம்...'' அவன் சொல்லிக் கொண்டிருக்கையிலேயே அவள் கை தர்மாமீட்டரை நோயாளியின் வாயிலிருந்து எடுத்தது.

''நார்மல்?'' என்றான்.

''யெஸ் டாக்டர்.''

''பல்ஸ்?''

''நார்மல்.''

''ப்ரெஷர்?''

''இப்பப் பார்க்கப் போறேன்.''

''ப்ளீஸ்....''

''வணக்கம் டாக்டர்.''

''வணக்கம் சிவபாதம்.''

''இன்னிக்கு நல்ல நாள்தான்னு நெனைக்கறேன் டாக்டர்.''

''நாள் என்னங்க செய்யும். நீங்கதான் மருத மலை பக்தராச்சே. உங்களுக்கு ஒரு குறைவும் வராது. பயப்படாதீங்க.....''

''ஆபரேஷன் முடிஞ்சா நான் புளி, எலுமிச்சம் பழம், காரம் எல்லாம் சேர்த்துக்கலாம் இல்லையா?''

''கொஞ்ச நாளைக்குக் கூடாது.''

"அப்புறம்?"

"சேர்க்கலாம்."

"டாக்டர்....."

"என்ன சிவபாதம்....."

"ஒண்ணு கேட்டா நீங்க தப்பா எடுத்துக்க மாட்டீங்களே?"

"கேளுங்க."

"பிழைப்பேனா?"

"இப்படி எல்லாம் கேட்கக் கூடாது...தைரியமா இருங்க."

"நீங்க செய்ஞ்சிருக்குற ஆபரேஷன்லே இது வரை யாருமே கண்ணை மூடினதில்லேன்னு எனக்கும் தெரியும், டாக்டர்..... முதல் ஆள் நானா இருப்பேனோங்கற பயம் என்னை மீறி வந்தது. என்னை மன்னிச்சுடுங்க..".

கோபிநாத்துக்கு எரிச்சல் வந்தது. அடக்கிக் கொண்டான்.

"கவலைப்படாதீங்க. கொஞ்சம் அப்படியே படுங்க. ஸிஸ்டர், பிரெஷர் ப்ளீஸ்."

நர்ஸ் லீலா, இரத்த அழுத்தப் பரிசோதனையை நடத்தினாள்.

"150—90," என்றாள் அவள்.

"சிவபாதம்...மனசை அலட்டிக்காம இருங்க... ரொம்பக் கலங்கிப் போனிங்கன்னா, பிரெஷர் அதிகமாயிடும். அப்புறம் அனாவசிய சங்கடம் உண்டாகும்."

"சரி டாக்டர். நான் முருகனைத் தியானம் செய்யறேன்."

"செக் எகெய்ன், லீலா," என்ற டாக்டர், "ஐ ஆம் நாட் வெரி ஹாப்பி அபௌட் ஹிஸ் பிரஷர்... 140—80 இல்லாமப்போனா 140—90 ரொம்ப ஐடியலா இருக்கும்," என்றான்.

"ஹி வில் பி ஒகே, டாக்டர்."

கோபிநாத் எல்லா அறைகளையும் பார்த்து, மாடியில் ஆபரேஷன் தியேட்டரினுள் பிரவேசித்தான். எல்லாம் சரியாக இருக்கிறதா என்று ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக பார்த்தால்தான் அவனுக்குத் திருப்தி.

"ஹாபி நியூ இயர் டாக்டர்!"

நர்ஸ் மேரி அவனைப் பார்க்காமலேயே, தனது காரியத்தில் கண்ணாகி நின்றாள். அவளுடைய ஒழுங்கும் கண்டிப்பும் கருரும் கடமை உணர்ச்சியும் கோபிநாத்தை

''எவரிதிங் ஆல் ரைட், மேரி?''
''யெஸ் டாக்டர்.''
''குட்..கரெக்டா எட்டு மணிக்கு ஆபரேஷன்.''
''யெஸ், டாக்டர்.''



படி இறங்கி வரும்போது கோபிநாத் கைக் கடிகாரத்தைப் பார்த்தான். ஏழு அடித்துப் பத்து நிமிடங்கள். தன் அறைக்குச் செல்லும் முன், திண்ணைக்கு வந்தான்.

வழக்கம்போல திண்ணை பெஞ்சியில் பத்திரிகையும் கையுமாக சீனுமணி உட்கார்ந்திருந்தான். அவனுகவே வரவழைத்துக் கொண்ட சோகம் முகத்தில் படர்ந்திருந்தது. கோபிநாத் புன்னகைத்தான்.

''நமஸ்காரம் டாக்டர்.''

''இன்னிக்கு என்ன சீனுமணி?''

''நேத்து ராத்திரி பத்து மணி இருக்கும். இடது பக்கத்திலேந்து வலது பக்கமா திரும்பிப் படுத்தேன். திடீர்னு, நடு முதுகிலே சுரீர்னு ஒரு வலி.....''

''உன் ஒய்ஃப் உன் பக்கத்திலேதானே படுத்துக்கிறு?''

''என்ன டாக்டர், இப்படிக் கேட்கறீங்க..அவ பின்னே வேறு யார் பக்கத்திலே படுத்துக்க முடியும். என் பக்கத்திலேதான்.''

''அவ உன் நடுமுதுகிலே நிமிண்டியிருப்பா...''

''இருக்காது டாக்டர்.''

''எப்படிச் சொல்றே?''

''என்னை நிமிண்டற நிலையிலே அவ இல்லை...''

''அப்படீன்னு?''

''விளையாட்டெல்லாம் முடிஞ்சு அவ தூங்கிப் போயிட்டா. நானும் தூங்க ட்ரை பண்ணினேன். நேத்துக் காலையிலே ஆடுசதையிலே கொரவளிச்சதைப் பத்தி

நினைச்சேனு, தூக்கமே வரலே. மறுபக்கம் பார்த்துப் படுத்தா வரலாம்னு திரும்பினேன். முதுகுத் தண்டிலே கட்டெறும்பு கடிச்சமாதிரி ஒரு வலி...''

''முரளி வருவான், இரு.''

மீண்டும் அறைக்குள் பிரவேசித்தபோது அவன் அது சுத்தமாக நேர்த்தியாக இருப்பதைக் கண்டான். இன்னும் பதினைந்து நிமிடங்களில், முரளி ரம்யாவை ஸ்கூட்டரில் ஏற்றிக் கொண்டு வந்து விடுவான். ரம்யா முரளியுடன் தினசரி ஸ்கூட்டரில் வருகிருள். அவனுக்கு அவளிடம் காதல் இருப்பதை கோபிநாத் உணர்ந்திருக்கிறுன். இந்த விஷயம் அவளுக்குத் தெரியுமா? ஒருநாள், ரம்யாவை வைத்துக் கொண்டே விசாரிக்கவேண்டும்.

திடீரென்று அவனுடைய சிந்தனை தடைப்பட்டது.

சீனுமணி உள்ளே வந்து அவன் முன் நின்றுன்.

''என்ன சீனுமணி?''

''டாக்டர். என் உடம்பிலே என்னமோ கோளாறு இருக்கு...இப்ப பெஞ்சியிலே உட்கார்ந்திருந் தேனு, திடீர்னு வலது கால் மரத்துப் போச்சு. கிள்ளிட்டேன். வலியே தெரியலே...இதுக்கும் முதுகுத் தண்டு வலிக்கும் ஏதானும் சம்பந்தமிருக்குமோ?''

கோபிநாத் சிரித்தான்.

''இரத்த ஓட்டம் சரியா இருந்திருக்காது. அதுதான் மரத்துப் போயிருக்கு.''

''அதுக்குக் காரணம் என்னவாயிருக்கும் டாக்டர்? ரத்தக்குழாய் வீக்கா போயிருக்குமோ... இல்லே ஹார்ட்லே ஏதாவது கோளாறு இருக்குமா?''

''முரளி வரட்டும்.''

''எனக்கு ஏதோ பெரிசா வந்திருக்கு, டாக்டர்......''

சொல்லிவிட்டு சீனுமணி பெஞ்சுக்குத் திரும்பினுன்.

இந்த மணியைப் பற்றி நினைத்தபோது கோபிநாத்துக்குச் சிரிப்புதான் வந்தது. வயது முப்பத்தெட்டு ஆகியும் இன்னும் மூளை முதிர்ச்சி அடையவில்லை என்று நினைத்தான். மணி, 1962ல் இருபத்திரண்டு வயது இளைஞனுக, ஊர் மேடைகளிலெல்லாம் ஏறி, வாயாலேயே சீனுவை விரட்டி அடித்தவன் அவன். அவன் ஊட்டியில் கொடுத்த குரல், இமாலயத்தைக் கடந்து பீகிங்குக்குச் சென்று சூயென்லாய் காதில் மோதியது. இதன் காரணமாகவே,

அவனுக்கு 'சீனு' மணி என்று பெயர் வந்தது. இன்று அந்த வாய்ச் சொல் வீரன், நாளுக்கொரு வியாதியைக் கற்பனை செய்துகொண்டு, பால்காரன் தபால்காரன் தினசரி வருவது போல ஆஸ்பத்திரிக்கு வருகிறன். ஆனுல் ஒருநாள்கூட, டாக்டர் ஃபீஸைக் கொடுக்காமல் போவதில்லை. பார்க்கப் போனுல் ஒவ்வொரு விஜயத்தின்போதும், அவன் முரளியின் மேஜை மேல் வைக்கும் ஐந்து ரூபாயைக் கொண்டே, வாட்ச் மேன் வீராசாமியின் மாதச் சம்பளம் பட்டுவாடா ஆகிறது.

சீனுமணிக்கு வேலை எதுவும் இல்லை. அவன் வேலைக்குப் போக வேண்டிய அவசியம் இல்லாமல், தகப்பனுரும், மாமனாவாக இருந்து பிறகு மாமனுராக மாறினவரும் பார்த்துக் கொண்டார்கள். ஊட்டி கடைவீதியில் ஏழு கடைகளிலிருந்து கிட்டத்தட்ட எண்ணூறு ரூபாய் வாடகை வருகிறது. உருளைக் கிழங்கு விவசாயத்தில், ஆண்டுக்குக் குறைந்தது இருபதாயிரமாவது வரும். மாதத்துக்கு நூற்றைம்பது என்று கொடுத்தால் கூட, ஆஸ்பத்திரிச் செலவு இரண்டாயிரத்தைத் தாண்டாது. சீனுமணி நல்லதோர் வாடிக்கை நோயாளி.

இப்படியும் மனிதர்கள் இருக்க முடியுமா என்று கோபிநாத் தன்னுள் கேட்டுக் கொண்டிருக்கையில், ஸ்கூட்டர் சத்தம் கேட்டது.

ரம்யாவின் குரலும் கேட்டது.



அன்று காலை ஏழு மணிக்கே ரம்யா தயாராஞள். ஆபரேஷன் தினத்தன்று அவள் அணிவது ரத்தச் சிவப்புப் புடவை. மனித ரத்தத்தின் நிறத்துக்கும் தனக்கும் ஏதேனும் ஒரு சம்பந்தம் இருக்க வேண்டும் என்று நினைத்துத்தானே என்னவோ, தவருமல் இந்தப் பழக்கத்தைக் கொண்டிருந்தாள்.

சரியாக ஏழு ஐந்துக்கு முரளி ஸ்கூட்டரில் வந்து இறங்கினுன்.

''நீங்க அஞ்சு நிமிஷம் லேட்!'' என்றாள் ரம்யா.

''ஏழேகாலுக்குள் நர்ஸிங் ஹோமில் இருப்போம். இங்கிருந்து சரியா எட்டு நிமிஷம்...கம் ஆன்.''

''கோபி காத்திட்டிருப்பார்.''

''அவனுக்கு வேலே ரொம்பக் குறைவு...இந்த வாரம் மூணு ஆபரேஷன், அப்புறம் புதுசா யாராவது வந்தால்தான் உண்டு. இல்லாவிட்டால் குண்டுச் சட்டியில் குதிரை ஓட்டிக் கொண்டிருக்க வேண்டியதுதான்...நான் அப்படியா...? காலேயிலேயும் சாயங்காலமும் திரு விழாக் கூட்டம் மாதிரி அந்த வலி இந்த வலின்னு வர்ரு.....''

''இன்னிக்கு உங்க ஃபிரண்டு சீனுமணிக்கு புதுசா என்ன வியாதி வந்திருக்கோ?'' என்று சிரித்துக் கொண்டே ஸ்கூட்டரில் ஏறி, முரளியின் தோள்பட்டை யைப் பிடித்துக் கொண்டாள் ரம்யா.

வண்டி சிறிது தூரம் போனதும், வாரத்துக்கு ஒரு தடவை கேட்கும் கேள்வியை ரம்யா கேட்டாள்.

''உங்க ஃப்ரண்டு எப்ப கல்யாணம் பண்ணிக் கப் போருராம்?''

''என்னேக் கேட்டா? நீயே அவன் கிட்டே நேரடியாக் கேளு.''

''அதிலே ஒரு ஆபத்து இருக்கு.''

''என்ன ஆபத்து?''

''ஆபத்து எனக்கு இல்லே, உங்களுக்குத்தான்!'' என்றாள் ரம்யா.

''என்ன ஆபத்துன்னு சொன்னுத்தானே நான் முன் ஜாக்கிரதையா இருக்க முடியும்?''

''ஒகே, சொல்றேன். நான் கோபிநாத்திடம், 'நீங்க எப்போ கலியாணம் பண்ணிக்கப் போறீங்க'ன்னு கேட்கிறேன். அதுக்கு அவர் திருப்பி என்னிடம் அதே கேள்வியைக் கேட்கிறுர். நான், 'முரளிக்குத்தான் தெரி யும்'னு சொல்றேன். அதுக்கு கோபிநாத் என்ன பதில் சொல்லுவார் தெரியுமா?''

''தெரியாது.''

''முரளி ஒரு சாதாரண வயிற்றுவலி, தலேவலி டாக்டர். நான் ஸர்ஜன். பெரிய ஸர்ஜன் நீயும் என்னேப் போல ஸர்ஜன். பெரிய ஸர்ஜன் இல்லேன்னுலும் ஒரு ஸர்ஜன். ஸர்ஜன் ஸர்ஜனேக் கல்யாணம் பண்ணிக் கொள்றதுதான் நல்லதுங்கறுர். அப்படியே என் மேலே

தனக்கு லவ்னு ஏதோ சொல்கிறார். அந்த லவ் இருக்குங்கறார். இதுக்கு நான் என்ன பதில் சொல்லுவேன், முரளி?''

''மனசிலே பட்டதைச் சொல்ல வேண்டியது தானே. இதிலே எனக்கு என்ன ஆபத்து இருக்கு?''

''என் மனசிலே பட்டதைச் சொன்னா உங்களுக்கு ஆபத்துதான்...''

''அப்படீன்னா?''

''நீங்க வயிற்றுவலி டாக்டர்தானே...ஸர்ஜன் இல்லேயே..அதுவுமில்லாம பாவம், கோபிநாத் என்னை ரியலாவே லவ் பண்றார்னு எனக்குத் தெரிகிறது...அவர் பார்க்கிற பார்வை, நான் சிரிக்கணும்னு அவர் கஷ்டப் பட்டு அடிக்கிற ஜோக்...''

''ஒரு வழியாச் சரின்னு சொன்னா எனக்கு விடுதலை கிடைக்கும். ரம்யா... எனக்கு நல்ல இடத்தில் நல்ல பெண்ணு வாய்க்கணும்னு அம்மா ரொம்ப ஆசைப் படறா...''

''அந்த அம்மா என் அப்பாவோடு ஒன்று விட்ட அக்காங்கறதை மறந்து விடாதீங்க, முரளி.''

''அதனாலதான் நல்ல இடம் வேண்டும்னு அம்மா அபிப்பிராயப் படறா...''

''இப்ப நான் ஸ்கூட்டர்லேந்து குதிச்சுடுவேன்..''

''உனக்கு எதுக்கு சிரமம், ரம்யா? நானே ஸடன் பிரேக் போட்டு உன்னைத் தள்ளிடறேன். உன் மண்டையில் அடிபட்டா நல்லது. கோபிக்கு மண்டை ஆபரேஷனுக்கு ஒரு சான்ஸ் கிடைக்கும்!''

ரம்யா 'பளார்' என்று அவன் முதுகில் அறைந்தாள்.

பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த ஓரிரு பொழுதுபோக்கிகள் அக்காட்சியை மனமார ரசித்தார்கள்.

கோத்தகிரியில் ஒரு பெரிய தேயிலைத் தோட்டத்தின் அதிபரின் ஒரு பெண் ரம்யா. அவள் டாக்டராவதிலோ தொழில் நடத்துவதிலோ தந்தைக்கு விருப்பம் இல்லைதான். ஆனால் பெண்ணின் ஆசைக்குக் குறுக்கே நிற்கக்கூடாது என்று அவள் வழியிலேயே விட்டார்.

ஊட்டியில் இருந்த அவருடைய பங்களாவில் ரம்யா, அத்தை ஒருத்தியின் துணையுடன் இருந்தாள். கோத்தகிரி எஸ்டேட் டிஸ்பென்ஸரியிலேயே தொழிலை நடத்த அவள் முதலில் எண்ணினாள். ஆனால் முரளியின் வற்புறுத்தலின் பேரிலும், அவளுடைய தொழிலில் முன்னேற்றம் காணும் நோக்கத்திலும் 'ஊட்டி நர்ஸிங் ஹோமில்' டாக்டர் கோபிநாத்துக்கு உதவியாகச் சேர்ந்தாள். மாதத்துக்கு ஆயிரம் ரூபாய் சம்பளம் அவளுக்கு ஒரு பெரிய தொகை இல்லைதான். முரளியின் தொடர்ந்த நட்பும், கோபிநாத்துடன் சேர்ந்து பணி செய்வதால் கிடைக்கும் அனுபவமும் அவளுக்கு ஒரு நிதியாக அமைந்தது.

ரம்யாவின் நிறம் மாநிறத்திலிருந்து சிவப்பை நோக்கி ஓடத் துடிக்கும் ஒரு நிறம். பார்க்கிறவர்கள் நல்ல நிறம் என்று நிறுத்திக்கொண்டார்கள். கவலையே இல்லாத வாழ்க்கையாதலால், உடல் எப்போதும் தளதளவென்றிருந்தது. பூக்கள் சிதறும் அமெரிக்கன் ஜார்ஜட் புடவை கட்டுவதில் தனி மோகம். அதற்கேற்ற கை இல்லாத சோளிதான் அணிவாள். அவளுடைய சதைப்பற்று மிகுந்த தோள்பட்டைகளைக் கண்களால் தொட்டு, ருசி பார்த்து ரசிப்பதில் முரளிக்கு எப்போதுமே ஒரு தனி ஆனந்தம் உண்டு.

கழுத்தில், தொப்புள்வரை ஓடிய ஒரு மெல்லிய செயின். வலது கையில் அப்பா இரண்டு வருடங்களுக்கு முன், ஸ்விட்ஜர்லாந்திலிருந்து வாங்கி ஒரு பிறந்த நாள் பரிசாக அளித்த கைக்கடிகாரம். புடவை நிறத்துக்கேற்ற கால் அணிகள். அவளுக்கு என்று ஒரு கார் இருந்தபோதிலும் முரளியின் ஸ்கூட்டர்தான் அவளுக்குப் பிடிக்கும். வலது கையால் அவனுடைய தோளையோ, அல்லது இடையையோ பற்றிக்கொண்டு வருவதில் அவளுக்கு ஒரு உற்சாகம். முரளி ஏதாவது பேசிக் கொண்டேதான் ஸ்கூட்டர் ஓட்டுவான். நடுநடுவில் அவன் அடிக்கும் ஜோக்குகளை ரசிக்கும்போது, தன்னுடைய ரசிப்பை ரம்யா காட்டும் விதமே அலாதி. ஒன்று அவனுடைய நடு வயிற்றில் கிள்ளுவாள். அல்லது வயிற்றுச் சதையையோ, தோள்பட்டையையோ, அழுத்திப் பிடிப்பாள். முரளி வலிப்பதாகப் பாசாங்கு செய்து கத்துவான்.



"என்னடா இன்னிக்கு மூணு நிமிஷம் லேட்?'' என்று கேட்டான் கோபிநாத்.

''பெண்கள் டிரெஸ் பண்ணிக்கிறதுன்னு ஒண்ணு உண்டு, உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் முரளி.

''டாக்டர் முரளி!'' என்று குரல் கொடுத்த ரம்யா, முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டே, ''நீங்க வரும்போது நான் டிரெஸ்ஸா செய்திட்டிருந்தேன்?'' என்று கேட்டாள்.

''அப்பப்ப, எப்படி சுருக்னு கோபம் வர்றது!'' என்று சிரித்த முரளி, ''சிவபாதம் எப்படி இருக்கிறுர்?'' என்று கேட்டான்.

''ஆள் உள்ளூர நடுங்கறுன்.''

''பிளட் ப்ரெஷர்லே தெரிஞ்சுதா...''

''பேச்சிலேந்தும் தெரிஞ்சுது.''

''அனிஸ்திஸியா கொடுக்க டாக்டர் வில்லியம்ஸ் எப்ப வருர்?'' என்று கேட்டாள் ரம்யா.

''ஆபரேஷன் நடக்கற அன்னிக்கு, வில்லியம்ஸ் எங்கே போவானே, மாட்டானே, கண்டிப்பா சர்ச்சுக்குப் போயிட்டுத்தான் வருவான்.''—முரளி.

''நல்ல பழக்கம்தானே?''

''நான் கெட்ட பழக்கம்னு சொன்னேனு, ரம்யா?''

''உங்க பேச்சிலே கேலி ஒலிக்கிற மாதிரி பட்டது.''

''அதுக்குக் காரணம் உன் காது...ஆபரேஷன் முடிஞ்சதும் வா, டெஸ்ட் பண்றேன்...''

திடீரென்று கோபிநாத் வாய்விட்டுச் சிரித்தான்.

''ஏண்டா, நான் ஒண்ணும் பெரிய ஜோக்கா ஏதும் அடிக்கலையே? எதுக்குச் சிரிக்கிறே?'' என்று கேட்டான் முரளி.

''இன்னிக்கு எர்லி மார்னிங் ஒரு ட்ரீம்...''

''ஐயோ, எர்லிமார்னிங் ட்ரீம்னு பலிச்சுடுமே? என்ன ட்ரீம் டாக்டர்...? உத்தரப்பிரதேச லாட்டரி யிலே 'பத்து லட்சம் வர்றதா? டிக்கட் வாங்கியிருக்கீங் களா, இல்லியா?''

''எனக்கு ட்ரீம்லே நம்பிக்கை இல்லே.... நான் முழுக்க, முழுக்க யதார்த்தவாதி. நான் கண்ட கனவு இந்த ஜன்மத்திலே பலிக்காது. என் வலது கையைப் பார்.....''

''ஏன் எப்பவும் போல நீளமாத்தானே இருக்கு?'' —முரளி.

''டாக்டருக்கு கை நீளம்னு சொல்றீங்களா, டாக்டர், முரளி?''

''கேளுடா...ட்ரீம்லே நான் வேகமா சைக் கிள்ளே போறேன்...''

''போலீஸ்காரர் பிடிச்சு நிறுத்தி, தன்னையும் டபிள்ஸ் ஏத்திக்கச் சொன்னரா?'' என்று கேட்டாள் ரம்யா.

கோபிநாத் சிரித்தான்.

''சரி, நீ சைக்கிள்ளே ரொம்ப வேகமாப் போறே...மேலே சொல்லு,'' என்றான் முரளி.

''மலைப்பாதை, சரிவு. திடீர்னு ஒரு பள்ளம். சடார்னு பிரேக்கைப் போடணும்னு தோணறது. ஆனா கை விரலே, ஏன் கையே இயங்க மாட்டேங்கறது...''

''அப்புறம்...?''

''வண்டி தானா நிக்கறது. இறங்கிப் பார்க்கி றேன். பள்ளத்திலேந்து ஒருத்தன் ஏறி வந்து நிக்கறான்... ஆச்சரியத்திலே விழிச்சு விழிச்சுப் பார்க்கறேன்.''

''ஏன் அவன் தேவதூதன் மாதிரி இருந் தானா?''

''இல்லே. அவன் என் பிரதிபலிப்பா, என்னை ப்ளாக் எடுத்த மாதிரி இருந்தான்... அப்புறம் அவன் பேசினான்.''

''ஓ, டாக்டர், அது உங்க மனச்சாட்சி... உங்க மனச்சாட்சிக்கு உருவம் கொடுத்தா அது உங்களே மாதிரித்தானே இருக்கும். சினிமாவிலே எல்லாம் அப்படித் தான் வரும்!'' என்றாள் ரம்யா.

''இருக்கலாம். ஆனா அப்போ இது எனக்குத் தோணலே. அந்த உருவம் என்ன சொல்லித்து தெரி யுமா?''

''சொல்...'' என்றான் முரளி.

''நான் ஏதோ குற்றம் பண்ணியிருக்கேனும். அதனுலே இனிமே என் வலக்கை உபயோகப்படாம போயிடுமாம்...என் கடைசி ஆபரேஷன் நேற்றே முடிஞ்சிட்டுதாம்...''

''பெரிய சாபம்னு அவன் கொடுத்திருக்கான்!'' என்ருள் ரம்யா.

முரளியின் முகத்தில் கவலை தெரிந்தது. ''கை விளங்காமப்போகும்னு சொன்னவன் பரிகாரம் சொல்லலியா?''

''அதுக்குள்ளே அவன் போயிட்டான். நானும் கண் முழிச்சுட்டேன்...'' என்று சொல்லிச் சிரித்தான் கோபிநாத்.

''என்ன சிரிக்கறீங்க, டாக்டர்? ஜோக்கையும் சொல்லிட்டு நீங்களே சிரிச்சா நல்லாயில்லேயே?'' என்ருள் ரம்யா.

''விசித்திரமான சொப்பனமா இல்லே?'' என்று முரளியைப் பார்த்துக் கேட்டான் கோபிநாத்.

''இப்ப உன் கை எப்படி இருக்கு?''

''நீயே பாரேன்!'' கோபிநாத் கையை நீட்டிஞன்.....

''அந்த ஸ்டெதஸ்கோப்பை எடு.....''

சொப்பனத்தை முரளி ஸீரியஸாக எடுத்துக் கொண்டுவிட்டாஞ, என்ன?

''முரளி, என்னே என்ன பரீட்சை பண்றியா... இதோ எடுத்தேன்...உன் ஹார்ட் பீட்டைச் சோதிக்கனுமா, சொல், சோதிக்கிறேன்.''

ரம்யா புன்முறுவலுடன் கேட்டாள். ''என்ன டாக்டர் முரளி, அவருக்குக் கை உபயோகமில்லாமல் போயிட்டுதோன்னு உங்களுக்கே பயம் வந்திட்டுதா...''

''எல்லா சொப்பனங்களும் பலிக்கும்னு நான் சொல்ல மாட்டேன். ஆனு சில கனவுகள் பலிக்கத்தான் பலிக்கின்றன. வரப்போற விபரீதங்களை முன்னெச்சரிக்கை செய்து காட்டறதுதான் கனவுன்னு நான் படிச்சிருக்கேன்!''

கோபிநாத் சிலிர்த்து எழுந்தான்.

''நான்சென்ஸ். கனவுலே என்ன சொல்லிற்று? என்னுடைய கடைசி ஆபரேஷன் நேத்தே முடிஞ்சிட்டுதுன்னு. இப்போ சிவபாதசுந்தரத்துக்கு ஆபரேஷன் செய்

யப்போறேன். என் கை எப்பவும் போல நார்மலா இருக்கிறதை நீங்களே பார்த்தாச்சு...இந்த சொப்பனம் பலிக்கும்னு நீங்க யாராவது கொஞ்சமும் நம்பினுல் உங்களை நான் வேறு பெயர் சொல்லித்தான் கூப்பிடுவேன்..''

''அதாவது, முட்டாள் என்று! அப்படித் தானே?'' என்று கேட்டான் முரளி.

''ஆனு எனக்கு ஒரு சந்தேகம், டாக்டர் கோபிநாத்..'' என்று ஆரம்பித்தாள் ரம்யா.

''என்ன?''

''உங்க கை விளங்காமப் போகும். அதுக்குக் காரணம் நீங்க செய்ஞ்ச குற்றம்தான்னு உங்களோடு டுப்ளிகேட் சொல்லிற்று. இல்லையா?''

''ஆமாம்.....''

''நீங்க ஏதேனும் குற்றம் பண்ணியிருக்கீங்களா?''

''நிச்சயமா பண்ணியிருப்பேன். தெரிந்தும் தெரியாமலும் நிறைய குற்றம் செய்ஞ்சிருப்பேன்... எல்லா மனிதர்களும் செய்கிற, செய்யக்கூடிய குற்றங்களுக்கு அப்பாற்பட்டவன் நான் என்று எப்படிச் சொல்லமுடியும்?''

''நான் அந்த மாதிரி மனித வாழ்க்கையில், மனித இயல்பில் செய்யற, செய்யக்கூடிய தவறுகளைச் சொல்லவில்லை டாக்டர்! மன்னிக்க முடியாத குற்றம் ஏதானும் நீங்க வேண்டுமென்றே செய்திருக்கலாம்...''

''அப்படிச் செய்திருந்தாலும் அது என் மனச் சாட்சிக்கு விரோதமில்லாமல் செய்த குற்றமாகத்தான் இருக்கும்...''

''உதாரணமா?'' என்ருன் முரளி.

''எப்படித் திடீர்னு சொல்றது? ஆனுல் ஒரு விஷயத்தை நாம் மறைக்கக் கூடாது. மன்னிக்க முடியாத குற்றத்தை மனுஷனுல் செய்ய முடியாது. கொலையாளிக்குக்கூட மன்னிப்பு உண்டு. என் சொப்பனத்தை முரளி ஸீரியஸாக எடுத்துக் கொண்டிருக்கிருன். கவலைப்படாதே, முரளி. என் கை எப்போதும் போல..''

''உங்க கை எப்போதும் போல, சிகரெட்டைப் பிடிச்சுட்டு, சைக்கிளை ஓட்டிட்டு இருந்தால் சரிதான்,'' என்ருள் ரம்யா.

'' 'ஆபரேஷனையும் செய்துகொண்டு' என்று சேர்த்துச் சொல்!'' என்ருன் முரளி.

''ஐ அம் ஓகே அண்ட் ஐ வில் பி ஓகே!'' என்ற கோபிநாத், வலதுகை முட்டியால் இடது உள்ளங்கை

யில் ஓங்கி அடித்துக்கொண்டான். பிறகு, ''கனவாவது, மண்ணுவது!'' என்முன்.

அவன் பேசிமுடிக்கவும் நர்ஸ் மேரி உள்ளே வரவும் சரியாக இருந்தது.

''யெஸ் மேரி?'' என்று அவளைப் பார்த்தான் கோபிநாத்.

''எவரிதிங் இஸ் ரெடி, டாக்டர்.''

''எல்லாம் நார்மலா இருக்கா?''

''யெஸ், ஸார்.''

''பிளட் பிரெஷர்?''

''140—80.''

''குட். வெரிகுட்...எக்ஸெலண்ட்...ரம்யா, கெட் ரெடி...இது ஒரு மேஜர் ஆபரேஷன்... டியோடெனத்திலிருந்து, ஒரு செயற்கை டியூப் ஃபிக்ஸ் பண்ணப்போறேன். ஒரு அடி நீளத்துக்கு. யூ ஃபாலோ?''

''யெஸ் டாக்டர். அந்த ஒரு அடி நீளக்குடலில்தான் அல்ஸர். ஆகாரம் அது வழியா போறபோது, கெமிகல் ரியாக்ஷன்லே, இரிடேட் ஆறது. அல்ஸர் உலருவதற்கோ, காய்வதற்கோ ஏன் மறைவதற்கோ, வாய்ப்பு இல்லாமல் போகிறது. அப்படித்தானே, டாக்டர்?''

''யூ ஆர் பர்ஃபக்ட்லி கரெக்ட்... இரண்டு மூணு வருஷத்துக்கு அப்புறம், சிவபாதம் ஆசைப்பட்டா, இந்த செயற்கை டியூபை ரிமூவ் பண்ணிடலாம். அதுக்குள்ளே புண் தானுகவே, அமிலம் ஏதும் படாத காரணத்தாலே கருகிப் போயிடும்...''

''ஐ ஆம் ரெடி, டாக்டர். மேரி! வில்லியம்ஸ் வந்தாகிவிட்டதா?'' என்று கேட்டாள் ரம்யா.

''வந்தாகிவிட்டது, டாக்டர்,'' என்ருள் மேரி.

டாக்டர் கோபிநாத் எழுந்தான். கூடவே முரளியும் ரம்யாவும் எழுந்தார்கள்.

''கோபி!''

''யெஸ், முரளி.''

''இன்னிக்கு நானும் தியேட்டருக்கு வரப் போறேன்.....''

''ஏன்...ஏன்...உன்னுடைய பேஷண்ட்ஸ் காத்துட்டிருக்காங்களே...சீனுமணி ஏழுமணிக்கே வந்துட்டான்.''

''அவனை எப்ப வேண்டுமானுலும் பார்த்துக்கலாம்...,நீ இன்னிக்கு ஒரு சுவாரசியமான ஆபரேஷன் செய்யப்போறே.... நான் பார்க்கணும்,'' என்ருன் முரளி.

"ஓகே, யூ ஆர் வெல்கம். ஆனு எனக்கு என்ன தோண்றது தெரியுமா, முரளி...நீ இன்னும் அந்த ட்ரீமைப்பத்தி நினைச்சுட்டிருக்கே..."

"இருக்கலாம். ஆனு அதைப் பற்றி நீயே விசாரப்படாம இருக்கும்போது, எனக்கு என்ன கவலே? கடவுள் எப்பவும் உன் பக்கம்தான் என்கிற நம்பிக்கை உண்டு."

"தாங்க்ஸ்....."

"சாயங்காலம் நீயும் ஃப்ரீ...எனக்கும் வேலே இல்லே. ஏன் மருத மலேக்குப் போய் முருகனேத் தரிசனம் செய்துவிட்டு வரக்கூடாது, கோபி!"

"வேஸ்ட் அஃப் டைம். வீட்டிலே சுவரில் தொங்கற படத்திலும் முருகன் இருக்கான். இதுக்காக பெட்ரோலேச் செலவு செய்ஞ்சு அவ்வளவு தூரம் போக ணுமா?"

"ஓகே!" என்ருன் முரளி. ஒரு பெரிய ஆப ரேஷனேச் செய்து முடிக்கத் தயாராக இருக்கும் கோபி நாத்துடன் மேற்கொண்டு தர்க்கம் செய்ய அவன் விரும்ப வில்லே.



ஆபரேஷன் தியேட்டர். சிவபாத சுந்தரம் மேஜைமேல் படுத்திருந்தார். ஒரு பக்கம் மயக்க மருந்து கொடுத்து, அவ்வப்போது, இரத்த அழுத்தத்தை சோதனே செய்யும் டாக்டர் வில்லியம்ஸ் தயாராக நிற்க, ஆபரேஷனுக்கு தேவையான கருவிகளே ஒரு தட வைக்கு இரு தடவைகளாகச் சரி பார்த்துக் கொண்டி ருந்தாள் மேரி. லீலா, கை உறைகளே வினியோகம் செய்துவிட்டு, டாக்டர் கோபிநாத்தின் உத்தரவுக்குக் காத்திருந்தாள்.

நர்ஸ் லீலா கொடுத்த கை உறைகளில், இடது

கை உறையை கோபிநாத் மாட்டிக்கொள்ளும்போது, முழங்கையில் திடீரென்று எறும்பு கடி போல வலித்தது. கோபிநாத் லட்சியம் செய்யவில்லை. வலி மனத்தில் ஒரு சின்னஞ்சிறு மூலையில் தோன்றியிருக்கும் பலவீனம்—அவனையும் அறியாமல், அவனையும் மீறித்தோன்றிய பலவீனம்—வலியாக பிரமைதட்ட வைக்கிறது என்று அவன் நினைத்தான்.

வலது கை உறை.

அதைப் போட்டுக் கொள்ள அவன் முயன்ற போது முழங்கையின் வலி, மின்சார வேகத்தில் முன் கைமுழுவதும் வியாபித்து, மணிக்கட்டைத் தூக்கமுடியாமல் போயிற்று. விரல்கள் மரத்துப் போயின. கை உறை கீழே விழுந்தது. நர்ஸ் லீலா வேறு ஒரு உறையுடன் முன் வந்தாள். அதை வாங்க அவன் கையை நீட்டியபோது, கை நீள மறுத்தது.

திடீரென்று கோபிநாத்தின் முகம் வியர்த்தது. தன்னை மீறிய சக்தியோடு, ஜீவனற்றுப்போன வலது கையை உயிர்ப்பிக்கும் முயற்சியில் இறங்கினான். லீலா கொடுத்த இரண்டாவது கை உறை அனாதையாக, விரல் நுனிகளில் தொங்கியது.

"முரளி!"

"என்ன கோபி?"

"வாட் ஹாப்பன்ட்?"

"வாட் இஸ் இட், டாக்டர் கோபிநாத்?"—டாக்டர் வில்லியம்ஸ்.

"என் கை மரத்துப் போன மாதிரி இருக்கு. என் கையிலே ஜீவன் இல்லே..."

"டேக் இட் ஈஸி, கோபி," என்ற முரளி, அவனைக் கைலாகு கொடுத்து, தியேட்டருக்கு வெளியே அழைத்து வந்தான்.

டாக்டர் வில்லியம்ஸ் திருதிருவென்று விழிக்க, சிவபாதசுந்தரம் மேஜைமேலேயே கிடந்தார்.

முரளியைப் பின் தொடர்ந்து, ரம்யாவும் நர்ஸ்களும் சென்றனர்.

கீழே அறைக்கு வந்ததும், எல்லாமே மாயையாகத் தோன்றியது டாக்டர் கோபிநாத்துக்கு. இந்த வலதுகையா சற்று முன் முரண் செய்தது என்று ஆச்சரியப்படும் வண்ணம் வலி நீங்கியது. விரல்கள் இயங்கின.

"இப்ப எப்படி இருக்கு, கோபி..."

"நதிங்...இப்ப ஒண்ணுமே இல்லே. வாங்க, எல்லோரும் மறுபடியும் தியேட்டருக்குப் போகலாம்..."

ரம்யா முரளியைப் பார்த்தாள். முரளி ரம்யாவைப் பார்த்தான். கோபியின் செய்கை ஒரு பெரும் புதிராக இருந்தது. லீலாவும் மேரியும் மௌனமாக விழித்தார்கள்.

ஆபரேஷன் தியேட்டரை மீண்டும் சுத்தப் படுத்தினார்கள். டெட்டாலும், லைஸாலும் நெடியைக் கிளப்பின. டாக்டர் வில்லியம்ஸ் இரண்டாம் முறையாக சிலுவைக் குறி செய்துவிட்டு ஆயத்தமானார்.

"என்ன நடந்தது கோபி?" என்று முரளி மெல்லிய குரலில் கேட்டான்.

"இடது கிளவுஸைப் போட்டுக்கறப்போ முதல்லே முழங்கையிலே எறும்பு கடிச்ச மாதிரி, சுரீர்னு வலிச்சுது. அப்புறம் வலது கைக்கு மாட்டிக்கப்போறப்போ, கை வலி என்னையே கொன்னுட்டுது. விரலெல்லாம் காய்ஞ்ச மரக்கட்டை மாதிரி விறைச்சு நின்னுது... இப்ப நான் ஆல் ரைட்..."

"ஆபரேஷனை நாளைக்கு ஒத்திப்போடு கோபி!"

"ஏன்? எதுக்கு? ஐ ஆம் நௌ ஆல் ரைட்... இன்னிக்கே வெற்றிகரமா முடிக்கப்போறேன்."

லீலா நீட்டிய கை உறைகளை வாங்கிக் கொள்ள கோபிநாத் எண்ணியபோதே கை தோள்பட்டையிலிருந்து வலிக்க ஆரம்பித்தது. எண்ணத்துக்கும் செய்கைக்குமிடையே இருந்த ஒரு சில நொடிகளில் அவனுடைய கையே, அவனுக்கே சொந்தமில்லாத, அவனுடன் சம்பந்தப்படாத ஓர் அங்கமாகத் தனித்து நின்றது.

லீலா உறைகளை நீட்டிக்கொண்டேயிருந்தாள். கோபிநாத்தின் வலது கை—தொங்கும் கை—தொங்கிய படியே இருந்தது.

வலியில் அவன் துவண்டு போனான்.

இப்போது அவனால் வாயால் சத்தம் போடவும் முடியவில்லை. அவனுடைய வலது கையில் என்ன நாடகம் நடக்கிறது என்பதை விவரிக்கவும் தெரியவில்லை.



சிவபாதசுந்தரம் ஆபரேஷன் மேஜையிலிருந்து ஆபரேஷன் செய்யப்படாமலே படுக்கைக்கு எடுத்துச் செல்லப் பட்டார். தியேட்டரைப் பூட்டிவிட்டு சாவியை ஜாக்கிரதை யாக அலமாரியில் வைத்தாள்.

ரம்யா வாய்திறக்கவில்லை. கோபியின் கனவு பலித்துவிட்டதோ? அதன் கொடூரமும் பயங்கரமும்தான் அவளை அறைந்தன.

இப்போது அவள் எல்லாவற்றையுமே பரிபூர்ண மாக நம்பினாள். கோபியின் கனவு எல்லாருக்கும் வரும் சாதாரண சொப்பனமல்ல, அவனுடைய வாழ்க்கையின் திசையையே மாற்றக்கூடிய ஒரு பயங்கர சொப்பனம்!

கோபிநாத்தின் கை ஆபரேஷன் தியேட்டரில் விளங்காமல் போகிறது என்றால் அது அவனுக்குக் கிடைத்திருக்கும் சாபம்தான். இந்த சாபத்துக்கு விமோ சனம், கண்டிப்பாக எந்த மருத்துவ மனையிலும் இருக்க முடியாது. எந்த டாக்டராலும் குணப்படுத்த முடியாத விதியின் கோபத்தில் கோபிநாத் இப்போது தவிக்கிறான்.

அவன் செய்திருக்கும் குற்றத்துக்கு இது தண் டனை என்றால், இத்தகைய கடுமையான தண்டனையைப் பெற அவன் எவ்வளவு பெரிய குற்றம் செய்திருக்க முடி யும்? செய்திருப்பான்?

எல்லா மனிதர்களும் செய்கிற, செய்யக்கூடிய குற்றங்களைத்தான், தானும் செய்திருக்கக்கூடும் என்று கோபி கூறினானே, அது உண்மையானால், ஏன் இந்தத் தண்டனை ஏற்பட்டிருக்க வேண்டும்?

சாப விமோசனம் என்று ஒன்று இருக்குமானால் அது பாவமன்னிப்பில்தான் இருக்கமுடியும்?

என்ன பாவம் என்பதை கோபிநாத்தைத் தவிர யார் அறிவார்?

கேட்டால் கோபிநாத்தான் சொல்லுவாஞ?

ரம்யா அவர்கள் இருந்த அறைக்குள், தயக்கத்தோடு பிரவேசித்தாள்.

வெளிறிய முகத்துடன் கோபிநாத் உட்கார்ந்திருந்தான். அரைமணி நேரத்தில், இருபது வயது அதிகமாகிவிட்டதுபோல இருந்தது அவனுடைய முகமும் பார்வையும். சிகரெட் பிடித்துக்கொண்டிருந்தான்.

''வா, ரம்யா..சிகரெட் பிடிக்க கை இருக்கு. சாப்பிட கை இருக்கு...ஆனு, ஆனு ஆபரேஷன் செய்த கை செத்துப் போயிட்டுது. இனி என் வாழ்க்கை என்ன ஆவது?''

''கோபி, பீ கொயட்...உனக்கு ஒண்ணும் வந்துவிடவில்லே. பேசாம, பேத்தாமல் இரு... யூ ஆர் எ கிரேட் ஸர்ஜன்... நீ கண்ட கனவின் ரியாக்ஷன் உன்னேயும் அறியாம, உன்னே இப்ப பாதிச்சிருக்கு...இன்னிக்கு சாயங்காலம் நீ, நான், ரம்யா மூணுபேரும் மருதமலேக்குப் போறேம்! நீ உன்னேடு ரெண்டு கையையும் கூப்பி முருகனே வணங்கப்போறே!''

''யெஸ், டாக்டர். உங்க கை இறைவனேப் பிரார்த்திக்கவும் இருக்கு. அதன் மூலம் பழையபடி ஆபரேஷன் செய்யவும் உங்க கைகளாலே முடியப்போகிறது!''

கோபிநாத் பதில் பேசவில்லே. மேஜைமேல் இருந்த சிகரெட்டை எடுத்து உதடுகளிடையே வைத்துக்கொண்டான்.

அவனுடைய வலது கை, பரமசாதுவாக இயங்க ஆரம்பித்தது. சிகரெட்டுக்கு நெருப்பு வைத்தது. விரல்கள் சிகரெட்டை எடுத்து மீண்டும் உதட்டில் வைத்தன!

எதற்குமே இந்தக் கை உபயோகப்படாமல் போயிருந்தால், அவனுக்கு எவ்வளவோ திருப்தியாக இருந்திருக்கும். பாரதத்திலே சிறந்த ஸர்ஜன்களில் ஒருவன் என்று பெயர் எடுக்க வேண்டும் என்று லட்சிய வெறியில் அவன் கூத்தாடினனே, அவனுடைய கையைச் சிகிச்சையின்போது மட்டும் ஏன் தெய்வம் ஊனமாக்கியது?

கோபி உள்ளூர பொருமினன்.



## 1978 ஜனவரி 2-10

கோபிநாத்துக்கு ஏற்பட்ட சோதனையைப் பரம ரகசியமாக வைத்துக்கொள்ள முரளியும் ரம்யாவும் எவ்வளவோ முயன்றார்கள். நர்ஸ்களிடமிருந்தும் மற்ற சிப்பந்திகளிடமிருந்தும், டாக்டருக்கு நேர்ந்துவிட்ட விநோதமான வியாதியை 'வெளியிட மாட்டோம்' என்று சத்தியப் பிரமாணம் வாங்கிக் கொண்டார்கள். ஆனால் இம்மாதிரியான வாக்குறுதியை சிவபாதசுந்தரத்திடமிருந்தோ சீனுமணியிடமிருந்தோ பெற முடியவில்லை. சிவபாதசுந்தரம் டாக்டருடைய தவிப்பை நேரிலேயே கண்டு அறிந்தவர். சீனுமணி, வெளித்திண்ணையில் உட்கார்ந்தவாறே அறையினுள் நடந்த பேச்சைக்கேட்டு, விஷயத்தையும் புரிந்து கொண்டவன். டாக்டர் கோபிநாத்தின் மீது அவனுக்கு மிகுந்த அக்கறை இருந்ததால், அவனைக் குணப்படுத்த தனி முயற்சியில் இறங்கினான்.

இரண்டே நாட்களில் ஊட்டி முழுவதும் கலகலத்தது. டாக்டரை நேரில் கண்டு அனுதாபம் தெரிவிக்க, அல்லது செய்தி உண்மைதானா என்று சரிபார்க்க தெரிந்தவர்களும் தெரியாதவர்களும் அவருடைய வீட்டை முற்றுகை இட்டார்கள்.

ஏற்கனவே மனம் குழம்பிப் போயிருந்த கோபிநாத்துக்கு எப்படிச் சமாளிப்பது என்று புரியவில்லை. தன் கைக்கு எந்தக் கேடும் விளையவில்லை என்று அவர்களுக்கு முன் கையை ஆட்டியும், பொருள்களை எடுத்தும், கீழே வைத்தும் நிரூபித்துக் காட்டினான். ஆனாலும் அவர்கள் திருப்தி அடையவில்லை. ஏன் ஜனவரி ஒன்றாம் தேதியிலிருந்து ஏழாம் தேதிவரை ஆபரேஷனே செய்யவில்லை என்று கேட்டார்கள்.

இரத்தப் பரிசோதனை, எக்ஸ்ரே— எல்லாம் எடுத்தாகிவிட்டது. கையில் எந்தக் கோளாறும் தெரியவில்லை. நரம்பு சம்பந்தமாக ஏதேனும் வியாதி தோன்றியிருக்கலாம் என்று நினைத்த கோபிநாத், மறுகணமே எண்ணத்தை மாற்றிக் கொண்டான். வியாதி என்று ஒன்றிருந்தால்

அது ஆபரேஷன் தியேட்டரில் மட்டும்தானு, தலையைக் காட்டும்!

அன்று பிற்பகல் மூன்று மணிக்கு முரளி அவனைப் பார்க்க வந்தான்.

''இப்ப எப்படி இருக்கே, கோபி?'' என்று கேட்டான் அவன்.

''உனக்குத்தான் தெரியுமே...என் கை எப்பவும் போலத்தான் இருக்கிறது...''

''உன் கனவு இன்னும் நன்ருக நினைவு இருக்கிறது. இல்லையா?''

''ஆமாம்.''

''நீ ஏதோ ஒரு குற்றம் செய்த காரணத்தால் தான் கை விளங்காமல் போகும் என்று உன் குரல் சொல்லியது...அப்படித்தானே?''

''ஆமாம்.''

''கோபி, என்னிடம் நீ எதையும் மறைக்கக் கூடாது. உன் வியாதி மருத்துவத்தால் குணப்படுத்த முடியாத வியாதி...தர்க்க ரீதியாக, விஞ்ஞான அறிவு பூர்வமாக நாம் நமக்கு விளங்காதவைகளை மறுக்கிருேம்... உதாசீனம் செய்கிருேம்...உலகத்தில் எத்தனையோ அதிசயங்கள் நடக்கின்றன...அவற்றின் காரணத்தை நம்மால் ஆராய முடிவதில்லை...''

''போர் அடிக்காதே, முரளி.''

''ஓகே...போர் அடிக்கவில்லை...உன் கையைக் குணப்படுத்திக்கொள்ள ஒரே ஒரு வைத்தியன்தான் இருக்கிருன்...''

''எங்கே...யார் அவன்?''

''இங்கேயே...நீதான்.''

''புரியும்படியாச் சொல்லு...''

''உன் விஷயத்தில் கனவு நன்ருகவே பலித்திருக்கிறது. இரண்டு நாட்கள் தொடர்ந்து நீயும் முயற்சி பண்ணினே. ஆனுல் உன்னுல் ஆபரேஷன் செய்ய முடியலே...ஏன்? கை அங்கேமட்டும் ஏன் முரண் செய்ய வேண்டும்..? இதை நீயும் நானும் படித்து வாங்கின பட்டத்தால் ஆராயவும் முடியாது. பிரசினைக்கு முடிவு காண வழியும் கிடைக்காது...குற்றம் செய்ஞ்சே... கை ஊனமாப்போயிருக்கு...கை மறுபடியும் பழைய கையா மாறணும்னு, நீ பரிகாரம் செய்யணும்...அந்த ஒரு வழி தான் எனக்குப் புலப்படுகிறது...வெறும் பக்தியாலோ,

கோயில் விஜயங்களினாலோ உன் கை சரியாகும்னு எனக்குத் தோணலே... பாவமன்னிப்பை நீ பரிகாரம் மூலமாத்தான் செய்ய முடியும்...''

''என்னை என்ன செய்யச் சொல்றே, முரளி?''

''உனக்கு நினைவுதோன்றிய நாளிலிருந்து நீ எத்தனையோ தப்புகள், குற்றங்கள், தவறுகள் செய்திருப்பே...மனசாலும் கண்ணாலும் வாயாலும் செய்த குற்றங்களை ஒதுக்கிவிட்டு, நீ உன் கையால் செய்த குற்றங்களை எண்ணிப் பார். எது இன்னும் உன் மனத்தின் மூலையில் ஒளிந்து கொண்டு உன்னை வதைக்கிறது என்பதை நீ உணர்வாய். அதன்பின் பரிகாரம் தேடப் புறப்படு.''

டாக்டர் கோபிநாத் கண்ணை மூடிக்கொண்டான்.

திடீரென்று முரளியின் குரல் கேட்கவே, கோபிநாத் விழித்துக்கொண்டான்.

''ஐ அம் ஸாரி, சாருமதி!'' என்றான். சொன்ன பின்தான், தான் என்ன உளறினோம் என்று அவனுக்குப் புரிந்தது.

''யார் சாருமதி?'' என்று கேட்டான் முரளி.

''அவளைப்பற்றி நீ எதுவும் கேட்காதே... என் ரகசியம் என்னுள்ளேயே புதைந்து கிடக்கட்டும், முரளி...''

''சரி...உன் ரகசியம் எனக்குத் தெரியவேண்டாம். ஆனால் ஒன்று மட்டும் உன்னிடம் கேட்கிறேன்... அவளால்தான் உன் கை இன்று இப்படி ஆகிவிட்டது என்று உன் மனச்சாட்சி சொல்லுகிறதா?''

திடீரென்று சாருமதி அவன் கண்முன் தோன்றினாள். ஐந்து வருடங்களுக்கு முன் அவன் பார்த்த அவளுடைய நிர்வாண நிலை இப்போது ஒரு பயங்கர உருவமாகக் கண்முன் நின்றது. அவனால் கசக்கி எறியப்பட்ட ஒரு பூப்பந்து இப்போது ஒரு முள் பந்தாக விரைந்து வந்து அவனைத் தாக்கியது.

''அப்படித்தான் நினைக்கிறேன்...''

''இப்ப என்ன செய்யப்போறே?''

''இன்னிக்கே ரயில் ஏறப்போறேன்.''

''எந்த ஊருக்கு?''

''திரும்பி வந்தபின் சொல்லுகிறேன், முரளி.''

''பணம் தேவையா?''

'பணத்தால் பரிகாரம் தேட முடியாத குற்றம்' என்று சொல்ல வேண்டும் போல இருந்தது.

கோபிநாத்துக்கு. ஆனால் அவன் சொல்லவில்லை. 'வேண்டாம்' என்று ஒரே வார்த்தையில் கூறினான்.

"இன்னிக்குப் போனா என்னிக்குத் திரும்பி வருவே?"

"தெரியாது. நான் திரும்பி வரும் வரையில் நர்ஸிங் ஹோமை நீ பார்த்துக்கொள். மைனர் ஆபரேஷன்களை ரம்யா நடத்தட்டும். தவிர்க்க முடியாத பெரிய ஆபரேஷன் வந்துவிட்டால், டாக்டர் சிவசங்கரனை அழைத்துக்கொள்..."

"ஓகே."

"நான் வெளியூர் போற விஷயம் ரகசியமாக இருக்கட்டும்..."

"ஸாரி, கோபி...ஏற்கெனவே ஊட்டி பூராவும் உன்னைப்பற்றித்தான் பேசிக்கிறார்கள். நீ ஊரைவிட்டு ஓடிப் போகவில்லை, வெளியூருக்குப் போயிருக்கிறாய் என்று சொல்லி வைக்கிறேன்..."

"உன் இஷ்டம்."

சொல்லிவிட்டு கோபிநாத் எழுந்தான்.

இப்போது அவனுடைய மனத்தில் எந்த சிந்தனையும் ஓடவில்லை. சாருமதி அவனுள் விசுவரூபமெடுத்திருந்தாள்.



## 1971- 1972

பம்பாய், அந்தேரி, எஸ். வி ரோட், ஸ்ரீராம் நகர் காலனிக்கு வெகு சமீபத்தில் ஒரு ஐந்து மாடிக் கட்டிடம். ஐந்தாவது மாடியில் இரண்டு ஃப்ளாட்கள். இரண்டு அறைகள், ஒரு சிறு கூடம், ஒரு சமையலறை, சமையலறையை அடுத்தாற்போல ஒரு நீண்ட தாழ்வாரம் போன்ற இடம். இந்தத் தாழ்வாரம் வெட்டவெளியாக இருந்தது. முன்னூறு ரூபாய் செலவு செய்து துத்தநாகத் தகடுகளால் மூடி, வெய்யிலை மறைத்து, மழையிலிருந்து

தப்பிக்க வழி செய்தார்கள். அதுவே இன்னொரு நீண்ட அறையாக உபயோகப் படலாயிற்று.

பலராமன், அவருடைய மனைவி சுசீலா, அவரது தங்கை பிள்ளை கோபிநாத் மூன்று பேருக்குத் தேவைக்கும் அதிகமாகவே இடம் இருந்தது. அவர்கள் குடிபுகும் முன்பேயே, ஓர் அம்மாவும் அவளுடைய பெண்ணும் தாழ்வாரத்தில் எழுபது ரூபாய் வாடகைக்குக் குடி இருந்தார்கள். பலராமன், காரியாலயத்திலிருந்து கடன் வாங்கி, இருபத்தேழாயிரம் ரூபாய்க்கு இடத்தையே வாங்கினார். மாதா மாதம் கட்ட வேண்டிய இருநூறு ரூபாயில் எழுபது ரூபாய் அனுமத்தாகக் கிடைப்பதாகத் தோன்றவே, ஒரு தொந்தரவையும் அளிக்காமல் வசிக்கும் அம்மாவையும் பெண்ணையும் வெளியேற்றவில்லை.

முதன் முதலாக சாருமதியை கோபிநாத் சந்தித்தது அவளுடைய தாழ்வாரத்தில்தான். அவன் குடி வந்த பத்து நாட்கள் வீட்டை ஒழுங்கு செய்வதிலும், கல்லூரிக்கு ஓடுவதிலுமே மும்முரமாக இருந்தான். ஒருநாள் கல்லூரிப் பேராசிரியர் ஒருவர் திடீரென காலமாகவே, செய்தி கிடைத்ததும் கல்லூரியை மூடினார்கள். நூற்றுக் கணக்கான மாணவர்கள் பேராசிரியரின் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொள்ள ஸயானுக்குச் சென்றார்கள். கோபிநாத் சர்ச்கேட்டுக்கு வந்து அந்தேரி செல்லும் ரெயிலில் ஏறினான்.

அவன் வீட்டை அடைந்தபோது மணி பன்னிரண்டு. மாமா பலராமன் காரியாலயத்தில் இருந்தார். மாமி அன்று காலையிலேயே கல்யாணில் இருக்கும் தங்கையைப் பார்க்கப் போய்விட்டாள். மத்தியானம் பன்னிரண்டு மணிக்கே கோபிநாத் கல்லூரியிலிருந்து திரும்பி விடுவான் என்று தெரிந்திருந்தால் ஒரு வேளை அவள் தங்கையைப் பார்க்க போயிருக்க மாட்டாளோ என்னவோ.

மாற்றுச் சாவியால் கதவைத் திறந்துகொண்டு வீட்டினுள் பிரவேசித்த அவன் கூடத்தில், ஒரு ஜன்னலின் கீழே அமர்ந்து ஒரு புத்தகத்தில் மூழ்கியிருக்கும் சாருமதியைக் கண்டான். முதலில் வந்த உணர்ச்சி எரிச்சல் தான். தாழ்வாரத்தில் குடி இருக்கிறவள் எதற்கு அவர்களுடைய பகுதிக்கு வரவேண்டும். அவர்கள் வீட்டுப் புத்தகத்தைப் படிக்க வேண்டும்?

அவனைக் கண்டதும் ஒரு பரபரப்புடன் சாருமதி எழுந்தாள். அவள் எழுந்து நின்றபோது அவளுடைய அங்க லட்சணங்கள் அவனுடைய கண்ணில் மோதி,

அவனைத் தடுமாறவைத்தன. இந்தப் பத்து நாட்களில் அவன் நான்கைந்து தடவைகளாவது, சாருமதியை அவள் தாழ் வாரத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடக்கும்போது பார்த் திருப்பான். மாமாவும் மாமியும் அச்சமயங்களில் இருந் ததாலும், சாமான்களை அடுக்கி வைப்பதில் மும்முரமாக இருந்ததாலும் அவளுடைய உருவத்தையோ, அங்க அழகு களையோ அவன் கண்டு ரசிக்கவில்லை. இப்போது அவள் நின்று அவனைக் கண்டு மிரளமிரள விழித்தபோது, கோபி நாத் தேவைக்கு அதிகமாகவே நின்று பார்த்தான்.

சாருமதி செக்கச் செவேலென்று இருந்தாள். 'கொழுக்கு மொழுக்கு' என்பார்களே அப்படிப்பட்ட உடல். வீட்டில் தன்னந்தனியாகத்தானே இருக்கிறோம், இப்போதைக்கு ஆண்கள் யாரும் வரமாட்டார்களே என்ற எண்ணத்தில் அவள் வெறும் உள் பாவாடையும், பாடி யும் மட்டும் அணிந்திருந்தாள். எழுந்து நின்றபோது அவ ளுடைய மார்பு பயத்தாலோ அல்லது அவன் எதிர்பாரா வண்ணம் வந்ததால் ஏற்பட்ட அதிர்ச்சியினாலோ விம்மி விம்மி அடங்கியது. சதை செழித்த உடற்கட்டில், அவளுடைய மார்பகம் அவனுள் போதையை ஏற்றியது.

அவள் அப்படி நின்றதும் அவளை அவன் விழுங் குவதுபோலப் பார்த்துநின்றதும் ஒரு நிமிடம்கூட இருக் காது. ஆனால் ஒரு யுகமாக அவளையே கவனித்துக் கொண்டு நிற்பதுபோல அவனுக்குத் தோன்றியது.

சாருமதி புத்தகத்தை ஜன்னல் படியில் தூக்கிப் போட்டு விட்டு தாழ்வாரத்தை நோக்கி ஓடினாள். அவள் போகும் திசையையே பார்த்துக் கொண்டு நின்றான் கோபிநாத். அந்த நிலையிலேயே அவன் நீண்ட நேரம் இருந்திருக்கவேண்டும். மீண்டும் அவன் சாருமதியைப் பார்த்தபோது, அவள் நீலப் புடவையில் காட்சி அளித் தாள். முகத்தை சோப் தேய்த்து அலம்பியிருக்கிறாள் என்று முகப்பொலிவும், ஓரிரு இடங்களில் இன்னும் துடைக்கப் படாத பவுடரும், நெற்றியின் நீல நிறப் பொட்டும் எடுத்துக் காட்டின. அவளுடைய கைப்பை அவள் வெளியே புறப்பட்டுச் செல்லப் போகிறாள் என்பதை உணர்த்தியது.

இது வரையில் ஒருவருக்கொருவர் பேசிக்கொண் டதில்லை. வயது வந்த ஒரு பெண்ணிடம் பேசினால் மாமி ஏதாவது நினைத்துக்கொள்ளுவாள் என்று அவனுக்குத் தெரியும். அவளுடைய அதிருப்திக்கு ஆளாகக் கூடாது

என்ற ஒரு காரணத்துக்காகவே அவன் எத்தனையோ பெண்களிடம் பேசியதில்லை.

இப்போது மாமி வீட்டில் இல்லை. மாமா சாயங்காலம் கல்யாணுக்குச் சென்று, மாமியைச் சந்தித்து அழைத்துவரப் போகிறார். ஒன்பது மணிக்கு முன்னால் வரப்போவதில்லை. இந்தப் பெண்ணுடன் இப்போது பேசாவிட்டால் பின் எப்போதுதான் சந்தர்ப்பம் வாய்க்கும்?

கைப்பையுடன் முன்னேறி வந்து கொண்டிருந்த சாருமதியைப் பார்த்துப் புன்முறுவலித்தான் கோபிநாத். அவள் அதை ஏற்றுக்கொண்டு பதிலுக்கு புன்னகை செய்யவில்லை. நின்றாள். ஒரு பயம் இன்னும் அவளுடைய கண்களில் பிரதிபலித்தது.

''என் பெயர் கோபிநாத்.''

''தெரியும்...''

''நான் டாக்டருக்குப் படிக்கிறேன். இதுதான் கடைசி வருஷம்.''

''தெரியும்.''

''அம்மா வீட்டில் இல்லையா?''

''இல்லை.''

''எங்கே போயிருக்கிறாள்?''

''வேலைக்கு.''

''என்ன வேலை?''

''டீச்சர் வேலை.''

''எங்கே?''

''தாதரில்.''

''நீ வேலையில் சேரவில்லையா?''

''கிடைக்கலை.''

''உன் பெயர் ...''

''உனக்குத் தெரிஞ்சிருக்குமே?''

''சாருமதிதானே?''

''ஆமாம்.''

''அழகான பெயர்.''

''அப்படித்தான் அப்பா நினைச்சுப் பேர் வைச்சுட்டுப் போனார்.''

''எப்போ?''

''எனக்கு மூணுவயசு நடக்கறப்போ...''

''அதாவது?''

''புரியலே...''

''எத்தனை வருஷத்துக்கு முன்னாலே?''

''இப்ப என் வயசு பத்தொன்பது.''

''நீ இந்த வேளையிலே ஏன் வெளியே போறேன்னு எனக்குத் தெரியும்...''

''சரி.''

''என்னைக்கண்டு பயந்துதானே போறே?''

''இல்லே.''

''பின்?''

''என்னைக்கண்டு நானே பயப்படறதாலே போறேன்.''

''நான் நல்லவன்.''

''பார்த்தால் அப்படித்தான் தெரிகிறது.''

''அப்ப என்னாலே உனக்கு ஒரு ஆபத்தும் வராது...''

''என்னிக்காவது ஒருநாள் வரக்கூடிய ஆபத்துக்கு இன்னிக்கு அஸ்திவாரம் போடவேண்டாம் இல்லையா?''

''சாருமதி!''

''என்ன? ஏதானும் தப்பா சொல்லிட்டேனா?''

''நீ அழகா இருக்கே... கவர்ச்சியா இருக்கே. இப்ப அழகாகவும் பேசறே...''

''இதெல்லாம்தான் அஸ்திவாரம்...நான் வரேன்...''

''நாம் ஏன் பேசிக்கொண்டிருக்கக் கூடாது?''

''நமக்குள் பேச எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.''

''பேச ஆரம்பித்தால் விஷயங்கள் நிறைய வரும். நீ உன் கதையைச் சொல். நான் என் கதையைச் சொல்லுகிறேன்...''

''அப்புறம் நமக்குன்னு ஒரு கதை பிறந்து விடும்...''

''நான் ஒண்ணு சொன்னா தப்பா எடுத்துக்க மாட்டாயே?''

''சொன்னப்புறம்தான் தெரியும்.''

''நீ இவ்வளவு அழகு என்பதை இப்பத்தான் கண்டு பிடிச்சேன்...உன்னை எனக்குப் பிடித்து விட்டது.''

''என் அம்மாவிடம் சொல்...''

''சொன்னல்?''

''டாக்டர் மாப்பிள்ளை கிடைக்கிறார்னு பூரிச்சுப் போவாள்.''

''நான் இன்னும் டாக்டர் ஆகவில்லை.''

''அப்ப ஆனபிறகு சொல்.''

''இப்ப வெளியே போய்த்தான் ஆகவேண்டுமா?''

''ஆமாம்.''

''நீயும் நானும் இங்கே இருந்தால்தானே, என்னல் உனக்கு சங்கடமோ ஆபத்தோ உண்டாகும்? நாம் ஏன் ஒரு சினிமாவுக்குப் போகக் கூடாது?''

''நான் சினிமா பார்ப்பது கிடையாது.''

''மலபார் ஹில்லுக்குப் போவோம்... அங்கே கார்டன்ஸ்லே உட்காருவோம்..''

''உன்னை நான் நன்ருகத் தெரிந்து கொள்வதற்கு முன்னலே, நான் உன்னுடன் எங்கேயும் வரமாட்டேன்...''

''ஏன் அப்படிச் சொல்றே. என்னுடன் வந்தால்தானே என்னைப்பற்றி நீ நன்ருக அறிய முடியும்?''

''உன்னை அறிய சினிமா தியேட்டரும் மலபார் ஹில்ஸும் தேவை இல்லை...''

''உனக்கு ஆண்களைக் கண்டாலே பயமா?''

''பயம் இல்லை. தற்காப்புப் பிரச்னை.''

''நான் படித்தவன்.''

''அவன்தான் புத்திசாதுர்யத்துடன் பெண்களை எளிதில் ஏமாற்றுகிருன்...''

''நான் ஏமாற்றமாட்டேன்...''

''இன்னிக்குத்தான் நீயும் நானும் முதன் முதலா சந்திக்கிறேம்... குழந்தை பொம்மையைப் பார்த்ததும் கைநீட்டுகிற மாதிரி, நீ என்னிடம் வருகிருய். ஒரே பொம்மையுடன் குழந்தை விளையாடாது. அதுக்கு அலுத்து விடும்...''

''நீ பொம்மையும் இல்லை. நான் குழந்தையும் இல்லை. எனக்கு வயசு இருபத்திரண்டு.''

''அபாயகரமான வயசு. பொறுப்பை உணர முடியாத வயசு.''

''சீண்டறே, சாருமதி...''

''மன்னிச்சிடு. நான் வரேன்.''

''எப்ப திரும்பி வருவே?''

''அம்மா வந்தப்புறம்.''

"நான் உங்கிட்டே தோத்துட்டேன்..."

"நான் தோத்திருந்தா என் தோல்வி மறக்க முடியாத தோல்வியாப் போயிருக்கும்."

அடுத்த கணம் அவள் வீட்டை விட்டு வெளியேறினுள்.

வெறிச்சோடின இடத்தில் கோபிநாத் வெறி பிடித்தவனைப்போல வளைய வளைய வந்தான்.



ஒரே வீட்டில் அடுத்து அடுத்த அறைகளில் இருந்தபோதிலும், சாருமதி எங்கோ தொலைதூரத்தில் எட்டாக்கொம்பில் கிட்டாத ஒரு கனியாகிவிட்டாள். அவளுடன் பேசும் சந்தர்ப்பங்கள் அவ்வப்போது தோன்றினுலும், அவள் அவனுடைய ஆசைகளுக்குச் செவியும் சாய்க்கவில்லை. யாருமில்லாத வேளைகளில் கோபிநாத் வர நேர்ந்தால், அவள் மறுநிமிடமே வீட்டைவிட்டு வெளியேறி விடுவாள். அவனுடைய இதயத்தின் அன்பை விட, அவனுடைய மிருக உணர்ச்சிகள்தான் மேலோங்கி நிற்கின்றன என்பதை சாருமதி எளிதில் புரிந்து கொண்டதே இதற்குக் காரணம்.

அவளை எப்படிக் கவருவது, எப்படி அடைவது என்ற சிந்தனையே இரவும் அவனை வதைத்தது. பிடி கொடுக்காமல் நழுவும் அவள் மீது எரிச்சலும் ஆத்திரமும் கூட உண்டாயின.

திடீரென்று ஒருநாள் ஓர் உபாயம் அவனுக்குத் தோன்றியது. பெண்ணைத் தன்வசப்படுத்த வேண்டுமானுல், அவளுடைய தாயாரின் அன்பையும் அபிமானத்தையும் நன் மதிப்பையும் சம்பாதித்துக் கொள்ள வேண்டும். சாருமதியின் தாயார் வேதம் ஒரு வெகுளி என்பதை கோபிநாத் புரிந்து கொண்டான். அவளுடைய நட்பைப் பெறுவதில் சிரமமில்லை என்பதை எளிதில் அறிந்துகொண்டான். மாமி சுசீலா ஒவ்வொரு சனிக்கிழமையும் தங்கை வீட்டுக்

குப் போய்விடுவாள். மாமா ஆபீஸிலிருந்து திரும்ப ஏழு மணியாவது ஆகும். சனிக்கிழமைகளில் பள்ளிக்கூடம் இல்லாததால் வேதம் வீட்டிலேயே இருந்தாள். இது கோபிநாத்துக்கு சௌகரியமாகப் போயிற்று.

ஒரு சனிக்கிழமை வேதத்திடம் வென்னீர் போட்டுத் தரும்படி கேட்டுக்கொண்டான். இன்னொரு சனிக்கிழமை சாதம் பரிமாற வேண்டினான். மூன்றும் சனிக்கிழமைக்குள் வேதமும் கோபிநாத்தும் சரளமாகப் பேச ஆரம்பித்தனர். அவன் நடத்தும் நாடகத்தைப் புரிந்து கொண்டுதானோ என்னமோ சாருமதி ஒதுங்கி நின்றாள்.

''உங்க பெண் ரொம்பவும் கூச்சப்படுகிறாள்,'' என்றான் கோபிநாத், ஒரு சனிக்கிழமை அன்று.

''அவளுக்கு ஆண்பிள்ளைகளென்றாலே தனி பயம்.''

''இப்படி இருக்கக் கூடாது.

''நான் கூடச் சொன்னேன், நீ நல்ல பிள்ளை என்று. ஒருநாள் யாருமில்லாத வேளையில் நீ வந்திருக்கே. உன்னைக் கண்டு பயந்து அவள் நேரே ஸ்கூலுக்கு வந்து, தாழ்வாரத்திலேயே சாயங்காலம் வரை எனக்காகக் காத்திருந்தாள்.''

''எல்லா ஆண்பிள்ளைகளும் ஒரே மாதிரி என்று நினைக்கிறது தப்பு, வேதம் மாமி! நான் பெண்களை மதிக்கிறவன்.''

''ஒருத்தன் கையிலே அவளை ஒப்படைச்சுட்டா அப்புறம் அவ சரியாயிடுவா...''

''சின்ன வயசிலே அவள் பயப்படும்படியா ஏதோ நேர்ந்திருக்கணும்....''

''இருக்கலாம்.''

''அவளுக்கு வரன் பார்த்திருக்கிறீர்களா?''

''என் அண்ணா பையன் இருக்கான். நானும் என் அண்ணாவும், சம்மதம் தெரிவிச்சுண்டாச்சு...''

''அப்ப நல்ல முகூர்த்தம் பார்த்து கல்யாணத்தை நடத்த வேண்டியதுதானே?''

''அதிலேதான் கொஞ்சம் சிரமம் இருக்கு...''

''அப்படியா?''

''பிள்ளை மலேசியாவில் இருக்கிறான்...ரப்பர் தோட்டத்திலே சூபர்வைசர். 'வேலையை விட்டுட்டு இந்தியா வா'ன்னு அண்ணா சொன்னார்... 'இந்தியாவை விட்டுட்டு இங்கே வா'ன்னு அவன் எழுதறான்.''

''சாருமதியைக் கல்யாணம் செய்ஞ்சுக்க அவன் சம்மதிச்சுட்டானு?''

''ஓ.''

அவளுடைய பதில் அவனுக்கும் கசப்பாக இருந்தது. ஆனால் அடுத்த கணமே, வேதம் அவனுக்கு நம்பிக்கை ஊட்டினாள்.

''ஆனு நான் என் பெண்ணை மலேயாவுக்கு அனுப்பமாட்டேன். அவளை விட்டுட்டு என்னாலே இங்கே இருக்க முடியாது...அவளுடன் போறதும் சாத்தியமில்லே.''

''உங்க அண்ணு பிள்ளை பிடிவாதம் பிடித்தா என்ன செய்வீங்க?''

''வேறு இடம் பார்ப்பேன்.''

''அப்படீன்னு?''

''நான் ஏழை. என்னால செலவு செய்ய முடியாது. வரதட்சணை கொடுக்க வக்கு இல்லே. என் நிலைமைக்கு ஏற்றபடியா ஒரு பிள்ளையைப் பார்த்து, அவன் கையிலே என் பெண்ணை ஒப்படைப்பேன்...அவள் பிடிவாதக் காரியானுலும் சாது... எனக்கு அடங்கி நடக்கிற மாதிரி அவ புருஷனுக்கும் அடங்கி நடப்பாள்.''

''என்னைப்பத்தி என்ன நினைக்கறீங்க, வேதம் மாமி?''

திடீரென்று அவன் கேட்ட இந்தக் கேள்வி அவளை அயரவைத்தது. அவள் விழித்தாள்.

''ஏன், பதில் சொல்ல முடியலையா? இல்லே பிடிக்கலையா?''

''உன்னைப்பத்தி நான் என்னென்னு சொல்றது?''

''மனசிலே பட்டதை சொல்லுங்க.....''

''உன்னைமாதிரி ஒரு பிள்ளையைப் பெறக் கொடுத்து வைக்கணும்.....''

''இனிமேல் உங்களாலே பெறமுடியாது... ஆனு பிள்ளையாக ஏத்துக்கலாம், இல்லியா?''

''நீ என்ன சொல்றே, கோபி?''

''மாப்பிள்ளையும் பிள்ளைபோலத்தானே?''

''ஆமாம்.''

''நான் இந்தியாவிலேயேதான் டாக்டர் தொழிலை நடத்தப்போறேன். நிச்சயமா மலேயா போகமாட்டேன்!''

வேதம் விழித்தாள். அவன் கூறுவதை அவளால் நம்பவே முடியவில்லை. டாக்டராகப் போகும் இந்தப்

பிள்ளை அவளுக்கு மருமகனு! இது நடக்கக் கூடிய காரியமா? நடந்துவிட்டால் சாருமதியைப் போன்ற அதிருஷ்டசாலி, உலகில் வேறு எங்கே இருக்கமுடியும்?

''ஏன் அப்படி அசந்து போயிட்டீங்க?''

''எனக்குத் தலை சுற்றுகிறது.''

''என் மாமாவும் மாமியும்தான் எனக்கு அப்பா அம்மா மாதிரி...அவர்கள்தான் என் தெய்வம்...நான் ஆசைப்பட்டதை அவர்கள் இதுவரையில் மறுத்ததில்லை...''

''நீ ஆசைப்படறியா, கோபி?''

''ஆமாம், வேதம் மாமி.''

''ஆனு இந்தப் பேச்சை எடுக்க எனக்குத் தைரியம் வரலையே? நான் ஒரு பரம ஏழை. நானூறு ரூபாய் சம்பளத்தில் எழுபது ரூபாய் வாடகையைக் கொடுத்து, மிச்சத்தில் நாங்க ரெண்டு பேரும் வயிற்றைக் கழுவுகிறோம்...ஒரு டாக்டருக்கு வரதட்சணை எவ்வளவு தெரியுமா?''

''என் மாமாவும் மாமியும் பேராசைக்காரங்க இல்லை...''

''எனக்குப் பயமா இருக்கு.''

''என்னுலே நேரடியா, இப்ப என் ஆசையைச் சொல்ல முடியாது வேதம் மாமி...ஏன்னு நான் இன்னும் பட்டம் வாங்கலே...அதனுலே...''

''அதனுலே?''

''என் மாமிக்கு, நானும் சாருமதியும் ஒருத்தரை ஒருத்தர் விரும்பறேம்ங்கறது தெரிய வரணும்.''

''அதுக்கு வழி?''

''சாரு என்னைக்கண்டு பயந்து ஓடக்கூடாது. மத்த ஆண்பிள்ளைகளைப் போன்றவன்தான் நானும் என்கிற எண்ணம், அவள் மன்சிலிருந்து ஒழியணும். என்கூட சகஜமாய்ப் பழகணும்.''

''பழகினு?''

''எங்க சிநேகம் மாமிக்குத் தெரியும், அப்புறம் அவ மெதுவா என்கிட்டை விசாரிப்பா. நானும் என் மனசைத் திறந்து காட்டுவேன். அதுக்குள்ளே பரீட்சை முடிந்து நானும் பட்டம் வாங்கிவிடுவேன்...இன்னும் நாலு மாசம்தான் இருக்கு பரீட்சைக்கு.''

''சத்தியமா என் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளுவியா?''

''எந்தக் கோவில்லே சத்தியம் செய்யணும்?''

"எந்தக் கோவிலும் வேண்டாம். நான், தினமும் பூஜிக்கிற ராமர் படம் இருக்கு. அதுக்கு முன்னுலே கற்பூரத்தை ஏத்தி, இரண்டு பூக்களையும் போட்டு சத்தியம் பண்ணினுல் போதும்."

"செய்யறேன்."

"ஒரு வேளை உன் மாமியும் மாமாவும் இந்த சம்பந்தத்துக்கு இணங்கலேன்னு?"

"அப்பவும் சத்தியம் சத்தியம்தான்... சாருவைத் தவிர நான் வேறு யாரையும் இந்த ஜன்மத்தில் மனைவியா ஏத்துக்க மாட்டேன்." அப்போது அவன் உண்மையைச் சொல்வதாகத்தான் நினைத்தான்.

"கோபி!"

"என்ன வேதம் மாமி?"

"உன்னை நான் நம்பறேன். உன்னை மனப்பூர்வமா நம்பறேன். என் பெண் கொடுத்து வைத்தவள்."



ஒரு ஞாயிற்றுக் கிழமை.

கோரேகானில் ஸ்ரீகணேஷ் சதுர்த்தியை விமரிசையாகக் கொண்டாடுகிறுர்கள். பலராமன், சுசீலா, வேதம் மூவரும் காலையிலேயே போனுர்கள். அவர்கள் அப்படிப் போகப் போகிறுர்கள் என்று வெள்ளிக்கிழமை அன்றே கோபிநாத்துக்குத் தெரியும். வீட்டு வேலையைக் கவனிக்க சாருமதியை விட்டு விட்டுத் தாயார் மட்டும் செல்லப் போகிறுள் என்பதை அவன் அறிந்து வைத்திருந்தான்.

ஞாயிற்றுக்கிழமை காலை ஏழுமணிக்கு கோபிநாத் புறப்பட்டுப் போனுன். போகும் முன், மாமி விசாரித்ததற்கு, ஆஸ்பத்திரியில் ஒரு பெரிய இருதய ஆபரேஷன் நடக்கப்போகிறது என்றும், அக்கறையுள்ள மாணவர்கள் பார்க்க ஏற்பாடு செய்திருக்கிறுர்கள் என்றும் கூறினுன். அவன் பொய்யை எடுத்துச் சொன்ன விதமே பொய்மையை மறைத்தது.

சர்ச்கேட் வரைசென்று ஒருமணி நேரம் சுற்றி விட்டு அந்தேரிக்குத் திரும்பினான். அப்போது மணி பத்து. அவன் எதிர்பார்த்தபடியே சாருமதி மட்டும் வீட்டில் இருந்தாள். சமையலறை வேலையில் ஈடுபட்டிருந்த அவள் அவன் வந்ததைக் கவனிக்கவில்லை.

கோபி சப்தம் செய்யாமல் பூட்ஸைக் கழற்றி விட்டு அடிமேலடி வைத்துத் தாழ்வாரத்தை அடைந்தான். ஓரிரு நிமிடங்கள் நின்று அவளுடைய உடலமைப்பை ரசித் தான். அடுப்பின் உஷ்ணத்தில் அவளுடைய சிவந்த முகம் கன்றிப்போயிருப்பதாகத் தோன்றியது. எப்படி அவள் இன்னும் அவன் வந்து நிற்பதை உணராமல் இருக்கிருள் என்று அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

மெல்லிய குரலில்–

"சாரு!" என்று அழைத்தான்.

திடீரென்று தோன்றிய ஒலி ஒரு மாபெரும் ஓசையாக அவளுடைய காதில் அறைந்திருக்க வேண்டும்.

தூக்கி வாரிப்போட்டுக்கொண்டு அவள் ஏறிட் டுப் பார்த்தாள். திகைப்பு, பயமாகி, பீதியாகி மாறியது. அவள் உடல் நடுங்கியது.

"ஏன் சாரு, ஏன் பயப்படறே! நான்தான் வந்திருக்கேன்."

"நீ எதுக்கு இப்ப வந்தே?"

"இது என்ன கேள்வி, சாரு?"

"திட்டமிட்டு வந்திருக்கே...நீ இன்னிக்குக் காத்தாலே உன் மாமிகிட்டை பேசிக்கொண்டிருந்ததை நான் கேட்டேன்...நீ சொன்னதெல்லாம் பொய்னு அப்பவே எனக்கு சந்தேகம் ஏற்பட்டது. இப்பப் போயிடு... இல் லாமப்போனு நான் போயிடுவேன்..."

"சாரு..கொஞ்சம் நிதானமாப் பேசு...ஏன் இப்படிப் பதை பதைச்சுப் போறே...என்னுலே உனக்கு எந்தக் கெடுதலும் வராது!"

"சத்தியமா?"

"சத்தியமா!"

"அப்ப அதை நிரூபிக்க இப்பவே வெளியேறு."

"சாரு, நீ நாளைக்கு என் மனைவியா வரப் போறவ..."

"நாளைக்குத்தானே? இன்னிக்கு நீ யார், நான் யார்?"

"பரீட்சை முடிய இன்னும் இருபது நாள்தான்

இருக்கு. அது முடிஞ்சதுமே முகூர்த்தம் வைச்சுக்கலாம்னு அம்மா சொல்லியாச்சு...வேணும்னு உன் அம்மாவைக் கேளு.''

''தெரியும். ஆனா என் கழுத்திலே உன் கை தாலியைக் கட்டறவரைக்கும் நீ என் புருஷன் இல்லே.. நான் உன் மனைவி இல்லே. இதை ஞாபகம் வைச்சுக்கோ.''

''மூணுமாசம் முன்னாடியே என் மனசை, கதவு திறந்து காட்டற மாதிரி உன் அம்மாவுக்குக் காட்டினேன். அவ என்னைப் புரிஞ்சுண்டா...ஆனா, நீ? நீ நம்ப மறுத்துட்டே...என்மேலே நம்பிக்கையை விட, சந்தேகம் தான் அதிகமாயிருக்கு...''

''நீ என் மனசைத் தொட இதுவரையிலே ஆசைப்படலே கோபி! நீ என் உடம்பைத் தொடத்தான் வெறியாயிருக்கே.''

''அதுக்குக் காரணம் நீதான் சாரு... உன்னோடு பேச, சகஜமாகப் பழக நீ எனக்கு வாய்ப்பே தரலே... என்னைக் கண்டதுமே ஓடி ஒளியறே...உன் அம்மா கூட எனக்காக உங்கிட்டே வாதாடியிருக்கா...நீ அவளையும் நம்பலே....''

''என் கழுத்திலே தாலி ஏறட்டும். அப்புறம் உன்னை நான் நம்பறேன்.''

''ஏன் என் வார்த்தையிலே உனக்கு நம்பிக்கை இல்லே, சாரு!''

''நீயே உன் நெஞ்சைக் கேளு.''

''என் நெஞ்சின் குரல் என் காதிலே விழலே... நீ சொல்லு, தெரிஞ்சுக்கறேன்.''

''முதன் முதலா நீ வந்தாயே, யாருமில்லாத வேளையில்...''

''ஆமாம். நீ உள்பாவாடையுடன் ஜன்னல் கீழே உட்கார்ந்து புஸ்தகம் படிச்சிட்டிருந்தே...''

''அப்ப நீ என் முகத்தைப் பார்க்கலே... என் கண்ணைச் சந்திக்கலே...என் உள்பாவாடையை ஊடுருவிப் பார்த்தே..என் இடுப்புக்கு மேலே என்ன இருக்கு, எப்படி இருக்குன்னு ஒரு வெறிபிடிச்ச மிருகம் போலப் பார்த்தே... நீ பண்பு உள்ள மனுஷனா என்ன செய்ஞ்சிருக்கணும்? பெண்களின் மானத்தை மதிக்கிற மனுஷனா நீ என்ன செய்ஞ்சிருக்கணும்....உள்ளே காலைவைச்ச மறுவினாடியே வெளியேறியிருக்கணும். ஆனா நீ என்ன செய்ஞ்சே..? என் நிர்வாணத்தை மனசார, மானசீகமா என் கண்முன்

முன்னுலேயே அனுபவிச்சே...என்னைத் தொடாமலே என் பெண்மையைக் குறையடப் பார்த்தே...!''

''சாரு!''

''இன்னிக்கு இப்ப நான் பயப்படலே...என் மனசிலே இத்தனை நாளா கொதிச்சு வைத்துக்கொண்டிருந்ததையெல்லாம் சொல்லிட்டேன்...இனிமே நான் எதுக்கும் கவலைப்படலே!''

''சாரு, நீ என்னை ஒரு மிருகம்னு சொல்லிட்டே ...பண்பு இல்லாதவன்னு சொல்லிட்டே....'' அவனுக்கு ஆத்திரம்.

''சரியாகத்தான் விமர்சனம் செய்ஞ்சிருக்கேன் கோபிநாத். இன்னும் சொல்லப்போனுல் நீ பெண்களை வட்டமிடற கழுகு..எந்தப் பெண் உன் கண்ணிலே பட்டு, மனசிலே வெறியை உண்டாக்குகிருளோ அவளை விழுங்காமல் நீ விடமாட்டே!''

''என்ன சொன்னே?''

''கொஞ்சம் பொறுமையாக் கேளு... என் அம்மாவுக்கு உன்னைப் பிடிச்சுருக்கு...நீ என்ன சொக்குப் பொடி போட்டு அவளை மயக்கினுயோ எனக்குத் தெரியாது. உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள சம்மதமான்னு என்கிட்டே மூணுமாசம் முன்னுலே ஒருநாள் கேட்டாள். யோசித்துச் சொல்றேன்னேன். அப்புறம் உன்னைப்பத்தி நீ அறியாமல் விசாரிக்க ஆரம்பித்தேன்... நீ படிப்பில் சூரன்...ஆனுல் ஒழுக்கத்தில் தெரு நாய்னு கேள்விப் பட்டேன்...நீ எந்தெந்தப் பெண்களோடு என்னென்னிக்கு எங்கங்கே சுத்தினேன்னு சொல்லட்டுமா? அதுவும் கடந்த ஆறுமாசத்தில்?''

''சாரு!'' என்று கத்தினுன் கோபிநாத். ஆத்திரத்தில் அவனுடைய கண்கள் இருண்டன.

''ஏன் கத்தறே? இப்பவாவது வெளியே போயிடு. ஆனு நீ போறதுக்கு முன்னுடி ஒண்ணு சொல்றேன், உன் மனசுக்கு இதமா இருக்கும்...நீ ஒரு அயோக்கியனு இருந்தும்கூட, உன்னைக் கல்யாணம் பண்ணிக்க நான் தயார்! ஏன் தெரியுமா, நோய்பிடிச்ச உன் மனசை என்னுல் மெள்ள மெள்ளக் குணப்படுத்த முடியும்! அதை நான் ஒரு சவாலா ஏத்துண்டு ஜெயிப்பேன்!''

அவள் கூறியது எதும் அவன் காதில் விழவில்லை. அவனை அவள் வெறிபிடித்தவன் என்கிருள். ஒழுக்கம் கெட்ட தெருநாய் என்று அழைக்கிருள். எந்தெந்தப்

பெண்களுடன் அவன் என்றென்றைக்கு எங்கெங்கே போனுன் என்று அவளுக்குத் தெரியுமாம்!

இந்தச் சாருமதியும் கேவலம் ரத்தமும் சதையும் நிறைந்த ஒரு பிண்டம்தானே? அவ்வளவு நாத்துடுக்குடன் பேசும் பிண்டத்தை அவன் பழிவாங்காமல் போனுல், அப்புறம் அவனுடைய ஆண்மைக்குத்தான் என்ன அர்த்தம்? அவனுடைய எல்லாப் பரிமாணங்களையும் அளந்து பார்த்தவளைப்போல அவள் அவனிடமே விமரிசிக்கிருள். அவன் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு ஒரு கோழையாக, பேடியாக நிற்பதா? அவள் கழுத்தில் தாலி ஏறிய பிறகுதான் கட்டிலுக்கு வருவாள் என்ருல், அவன் அவளைக் கட்டிலில் மட்டும்தான் கிடத்துவான், அவனுக்கு இனி அவள் மனைவியாக வாய்க்க வேண்டும் என்ற ஆசையே கிடையாது. ஏன் என்றுமே இருந்ததில்லை. அவனுடைய தேவையெல்லாம் அவளுடைய உடல். அவன் வெறிக்கு ஒரு இரை...இந்த இரையை அவன் ஏன் இன்னும் விட்டு வைக்க வேண்டும்.

அவள் சற்றும் எதிர்பாராமல் முகத்தை வேறு பக்கம் திரும்பிக் கொண்டிருந்தபோது, பூனை அணில் மீது பாய்வது போல, அவன் திடீரென்று பாய்ந்தான்.

பாய்ந்த வேகத்தில் அவனுடைய வலது கை அவளுடைய தோள் பட்டையைப் பற்றியது. இடது கை இடையை இறுக்கியது. அவனுடைய பலத்தை அவனே உணர்ந்தபோது, அந்த உணர்வே ஒரு திருப்தியைக் கொடுத்தது.

வலதுகையைப் படார் என்று இழுத்தான். சோளி இரண்டாகக் கிழிந்தது.

அவனுடைய திடீர்த்தாக்கலில் அவள் சாய்ந்தாள். அவளால் திமிற முடியவில்லை. கத்தவேண்டும் போல இருந்தது. ஆனுல் குரல் தொண்டையில் பிறந்து அங்கேயே இறந்தது.

குரல் இறந்த கணமே அவளுடைய பெண்மையும் கொஞ்சம் கொஞ்சமாக இறக்க ஆரம்பித்தது. வேதனையில் அவள் கண்களை மூடிக்கொண்டாள்.

''தெரு நாய்னு என்னைச் சொன்னே! தெரு நாயாகவே மாறிட்டேன்!''

அவன் நின்றுகொண்டு அவளைப் பார்த்தான். அவள் இப்போது தன் நிர்வாணத்தை மறைக்க எந்த முயற்சியும் எடுக்கவில்லை. அருகே தாறுமாருகக் கிடந்த

புடவையோ கொடியில் கிடக்கும் துணிகளோ கண்ணில் படவில்லை.

அவள் மெல்ல மெல்ல அழ ஆரம்பித்தாள். அவளுடைய கேவல் ஒலி, அவன் கதவைத் திறந்து மாடிப் படி இறங்கும்வரை கேட்டுக்கொண்டே இருந்தது.

ஒரு நல்ல இரையைப் புசித்த திருப்தியில், மிதப்புடன் நடக்கும் காட்டு விலங்கைப் போல கோபி நாத் தெருவில் நடக்க ஆரம்பித்தான்.



## 13

## 1978 - ஜனவரி 11-15

பம்பாய்.

ஸாண்டாக்ரூஸ் விமான நிலையத்தில் இறங்கிய கோபிநாத்துக்கு அன்று இரவே சாருமதியைச் சந்திக்க வேண்டுமென்று தோன்றியது. அதே சமயத்தில் அவள் அதே வீட்டில்தான் இன்னமும் இருக்கிறாளா அல்லது போய் விட்டாளா என்ற சந்தேகமும் உண்டாயிற்று. ஏன் ஓர் ஓட்டலில் அன்று இரவைக் கழித்து விட்டு மறு நாள் காலையில் அவளுடைய தாயார் வேதத்தை முதலில் சந்திக்கக் கூடாது? யோசித்துக் கொண்டிருக்கையில் டாக்ஸி நின்றது. அவன் அதில் ஏறினான்..

''கிங் சர்க்கிள்!'' என்றான், ஷண்முகானந்தா ஹாலில் தங்குவது என்று தீர்மானித்தவனாய்.

நல்ல வேளையாக அவனுக்கு இரண்டாவது மாடியில் ஒரு அறை கிடைத்தது. கிங் சர்க்கிள் ரெயில் நிலையம் சமீபத்திலேயே இருந்தது. தாதருக்குச் சென்று பார்க்க வேண்டுமானால் பார்க்கலாம். அல்லது தாதரி லிருந்து இன்னொரு ரெயிலைப் பிடித்து அந்தேரிக்குச் செல் லலாம். எது எப்படி போனாலும் மறுநாள் அவன் சாரு மதியைச் சந்திக்க போகிறான். அவளுடைய மன்னிப்பைப் பெறப்போகிறான். எத்தனையோ கடுமையான பரிகாரமானாலும் அதைச் செய்து, தன் பாவ மூட்டையை பம்பாய் சமுத்திரத்திலேயே கரைக்கப் போகிறான்.

அதன் பிறகு?

பாவம் செய்த கை பழையபடி மலரும். கறை பட்ட கை மீண்டும் விளங்கும். அவன் இது வரை செய்திராத ஆபத்தான ஆபரேஷன்களை செய்து முடிப்பான். அவனுடைய பெயர் இன்னும் பன் மடங்காக எல்லா மாநிலங்களிலும் பரவும்.

படுக்கையில் படுத்தபோது உறக்கம் வரவில்லை. சின்னஞ்சிறு பிள்ளையாக மாமா வீட்டுக்கு வந்தது முதல் அவன் ஊட்டியில் மருத்துவ மனையை வாங்கியது வரை, பற்பல நிகழ்ச்சிகள் அவனுடைய நினைவில் மோதின.

எல்லா நினைவுகளையும் அப்புறப் படுத்திக் கொண்டு சாருமதி கண் முன் நின்றாள்.

சாருமதி, நடந்ததை யாரிடமும் சொல்லவில்லை. சொல்லுவதில் எந்த லாபமும் இருக்காது என்று நினைத்தாள் போலும்.

கோபிநாத் எதுவுமே நடக்காதது போல நடித்தான். அவளை நிர்வாண நிலையில் தன்னந்தனியாக அழ விட்டு விட்டு வெளியேறிய அவன் அந்தேரியில் ரெயிலேறி, மாதுங்காவில் இறங்கி ஒரு நண்பன் வீட்டில் நாள் முழுவதும் கழித்தான். அன்று இரவு அவன் வீடு திரும்பும் போது இரவு பத்து. சாருமதி இன்னும் அழுது கொண்டிருப்பாள் என்று அவன் எதிர் பார்த்தான். ஆனால் தாழ்வாரம் நிம்மதியில் உறங்கிக் கொண்டிருந்தது. சாருமதியும் உறங்குகிறாளோ?

மூன்று வாரங்களுக்குப் பிறகு ஒரு நாள் மாமி மெதுவாக அவனிடம் பேச்சு கொடுத்தாள்.

‘‘உனக்குப் பரீட்சை முடிந்து விட்டது. இன்னும் இரண்டு மாதங்களில் முடிவும் தெரிந்து விடும். ஜூனில் மாமா, நீ நான் எல்லோரும் மெட்ராஸ் திரும்பறோம். . . . அதற்குள் . . .

சுசீலா நிறுத்தினாள். ஒரு கடினமான பிரச்னையை அவன் முன் வைக்க அவள் தவிப்பது போலத் தோன்றியது.

‘‘என்ன மாமி சொல்றே. . . நாம மெட்ராஸ் போறதுக்குள்ளே என்ன செய்வதாக உத்தேசம்?’’

‘‘கல்யாணம்?’’

கோபிநாத் வாய்விட்டுச் சிரித்தான்.

‘‘என்ன மாமி விளையாடறேளா? வெறும் எம். பி.பி.எஸ். வாங்கிட்டா நான் டாக்டராயிட்டேன்னு நினைச்

சேளா? ஒரு வருஷம் ஹவுஸ் ஸர்ஜனு இருக்கணும். நான் பம்பாயை விட்டு எப்படி வர முடியும்? இருபத்திரண்டு வயசில கல்யாணத்தை பண்ணிண்டு என்ன செய்கிறது?''

''மாமாவும் நானும் தீர்மானித்தாகி விட்டது. இந்த வைகாசி முடியறதுக்குள்ளே நீ கல்யாணம் பண்ணிண்டாகணும்...''

''இதை எப்படி மாமி நீங்க அவ்வளவு கண்டிப்பாகப் பேசிச் செயல் படுத்தமுடியும்? நான் இன்னும் அஞ்சாறு வருஷத்துக்கு கல்யாணத்தைபத்தியே நினைக்கப் போறதில்லே.''

''வேதம் அவசரப்படறுள். ஏன், அவசரப் படுத்துகிறுள்...''

கோபிநாத் வாயடைத்துப் போய் நின்றுன்.

''அப்படீன்னு?''

''உனக்குப் புரிஞ்சிருக்கணுமே? இன்னும் புரியலேயா? இத்தனை நேரம் நான் உன் கல்யாணத்தைப் பற்றிப் பேசினப்போ, உன் மனேவியா வரப் போறவள் யாருன்னு உனக்குத் தெரியாமலா இருந்தது?''

''மாமி...''

''என்கிட்டே இதைப் பத்தி பேசிப் புண்ணியமில்லே. மாமாவும் வேதத்துக்கு வாக்குக் கொடுத்தாகிவிட்டது. எவ்வளவு சீக்கிரம் நீ அவ கழுத்திலே தாலி கட்டிறியோ அவ்வளவு துரம் உன் மானமும் எங்க மானமும் தெருவுக்கு வராது.''

மேற்கொண்டு மாமியுடன் பேசுவதில் அர்த்தமில்லே என்று கோபிநாத் நினேத்தான். அவள் அவனுடைய திருமணத்துக்காக பதட்டப்படவில்லே. சாருமதியின் கல்யாணத்தில் தான் அவசரத்தைக் காட்டுகிறுள் என்று அவனுக்குப் புரிந்தது.

அன்று மத்தியானம் மாமி யாரையோ பார்க்க போரிவ்லிக்குச் சென்றிருந்தாள். மாமா வீட்டில் இல்லே. வேதம் மாமியும் சாருமதியும் அவர்களுடைய பகுதியில் இருந்தார்கள்.

தாழ்வாரத்தை அடுத்து இருந்த அறையில் நின்று கொண்டே, மெல்லிய குரலில் வேதத்தை அழைத்தான். அவள் எழுந்து அவனே நோக்கி வந்தாள்.

''சாப்பிட்டாயா, கோபி?''

''ஆமாம் வேதம் மாமி. உங்களிடம் நான் கொஞ்சம் பேசணும்.''

''எதைப் பற்றி?''

''என்னைப் பற்றி, சாருவைப் பற்றி.''

''பேசு.''

''என் மாமி கல்யாணப் பேச்சை எடுக்கிறாள்.''

''நீ என்ன சொன்னே?''

''இப்ப அவசரமில்லேன்னு சொன்னேன்...''

''அப்படீன்னு?''

''அஞ்சாறு வருஷத்துக்கு எனக்குக் கல்யாண சிந்தனை இருக்காது. இப்ப வயசு இருபத்திரண்டுதான்.''

''இந்த எண்ணம் இப்பத்தான் உன் மனசில தோணித்தா. கோபி...''

''எதுக்குக் கேட்கிறேள்?''

''உனக்கே தெரியலையா?''

''ஊஹூம்...''

''நீ அஞ்சாறு வருஷத்துக்கு அப்புறம்தான் கல்யாணத்தைப் பத்தி நினைக்கப் போறேன்னு இருந்தா நாலஞ்சு மாசம் முன்னாலே, என் கிட்டேயே என் பெண் சாரு மேலே உனக்குள்ள ஆசையை வெளிப்படுத்தி யிருக்க மாட்டே...''

''ஏதோ ஒரு உணர்ச்சி வேகத்திலே, முன்னே பின்னே யோசிக்காம பேசியிருப்பேன்.''

''ஆனா நீ பேச்சோடு நிக்கலே.. நீ ஆசைப் பட்ட பூ தானா உதிர்ந்து உன் மடியிலே விழறத்துக்கு முன்னாலே, நீயே கிளையை ஒடிச்சு பூவைப் பறிச்சுண்டே... உன் மடியிலே அதை வச்சுக்குவேன்னு நான் நினைச் சேன்...இப்ப நீ பேசறதைப் பார்த்தா, அதை ஏற் கனவே கசக்கிப் போட்டாச்சுன்னு தெரியறது...''

''நீங்க என்னென்னமோ பேசறேள்...''

''அன்னிக்கு நான், உன் மாமி, மாமா எல்லா ரும் கோரேகானுக்கு கணேஷ் சதுர்த்தி உற்சவத்துக்குப் போனோமே நினைவு இருக்கா?''

''இருக்கு.''

''அங்கே நாங்க இருக்கறப்போ, இங்கே என்ன நடந்தது?''

''............''

''நான் சொல்லட்டுமா, கோபி...''

''சாரு என்ன சொன்னாள்?''

''ஒரு பெண் தன் தாயாரிடம் அந்தரங்கமா என்ன சொல்லனும்மா அதை அன்னிக்கே சொன்னு. நீ அவசரப்பட்டுட்டேன்னு எனக்கு கோபம் வரத்தான் வந்தது. ஆனு ஊமைக் கோபத்திலே யாருக்கு என்ன லாபம்? நீ எவ்வளவு தூரம் என் பெண் மேலே ஆசைப் பட்டிருக்கே, எனக்கு மருமகனு வரத் துடிக்கிறேன்னு நீயே உன் வாயாலேயே சொன்னதாலே, என் பெண் தாலிகட்டிக் கிறதுக்கு முன்னுடியே உனக்கு மனைவியாயிட்டாங்கற அசம்பாவிதத்தைத் தாங்கிண்டேன். இன்னொரு காரணம் உன்மேலே எனக்கு இருந்த அபார நம்பிக்கை. ஒரு பெண் ணுக்குத் துரோகம் நினைக்கிற அளவுக்கு நீ கயவன் இல்லை என்கிற நம்பிக்கை.''

''சாருமதி எல்லாவற்றையும் உங்ககிட்டே சொன் னதுக்கப்புறம், நான் எதுவும் பேசிப் புண்ணியமில்லை. ஆனுல் நீங்களும் சரி, என் மாமா மாமியும் சரி அவசரப் பட்டு புண்ணியமில்லை. நான் இன்னும் அஞ்சாறு வருஷங் களுக்கு கல்யாணத்தைப் பத்தி நினைக்கப் போறதில்லை.''

''நீ அஞ்சு வருஷத்துக்கு அப்புறம் பண்ணிண்டா அப்போ உன் குழந்தைக்கு நாலு வயசு நிரம்பியிருக்கும்...''

''ஓ, அதுதான் நீங்க அவசரப்படக் காரணமா?''

''ஆமாம்.''

கோபிநாத்துக்கு நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்று தெரியவில்லை. இந்தப் பிரச்னைக்கு ஒரு வழி கண்டு பிடித்தாக வேண்டும். மாமா அவன்மீது உயிரையே வைத் திருக்கிறுர். அவருடைய கோபத்துக்கும் அதிருப்திக்கும் ஆளாகக்கூடாது. ஏற்கனவே மாமி கதையை அவரிடம் சொல்லி விட்டாளோ என்னவோ அவனுக்குத் தெரியாது. அவருக்குத் தெரிந்திருந்து, இன்னும் அதைப்பற்றி விசாரிக்க வில்லை என்ருல், அவனுடைய முடிவுக்காக அவர் காத்திருக் கிறுர் என்றுதான் அர்த்தம். ஒரு வேளை இன்னும் விஷயம் அறியாதவராக இருந்தால், மாமி அவனைக் காப்பாற்றப் பாடுபடுகிறுள் என்றுதான் கொள்ள வேண்டும். எப்படிப் பார்த்தாலும் அவன் இருவருக்கும் கடமைப்பட்டவன்.

ஆனுல் அவனல் சாருமதியை ஏற்றுக் கொள்ள முடியாது. அவனுடைய கண்களில் மிருக வெறி பிரதி பலிக்கிறது என்று சொன்னவள் அவள்! அவன் ஒழுக்கம் கெட்ட நாய் என்று பட்டம் கட்டினுள்! கல்லூரியில் அவனைப் பற்றி பலரிடம் விசாரித்து, தகவல்கள் சேகரித்திருக்கிறுள்.

எங்கெங்கே எந்தெந்தப் பெண்ணுடன் என்னென்ன தேதியில் ஊர் சுற்றினுன் என்று அவளுக்குத் தெரியும் என்று சவால் விட்டாள். அவனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு அவனைத் திருத்த அவளால் முடியுமாம்.

இப்படிப்பட்ட ஒரு பெண் அவனுக்கு—ஒரு டாக்டருக்கு—மனைவியாவதா? படுக்கையில் அவள் சுகம் அளிக்கலாம். ஆனுல் வாழ்க்கையில் அவளால் நிம்மதியை அளிக்க முடியாது. முதல் முதலாகப் பார்த்தபோது, அவன் மனத்தை அவள் கிறங்க வைத்தது என்னமோ உண்மைதான். ஆனுல் மனைவி ஸ்தானத்துக்கு அருகதை உள்ளவள் அல்ல. ஏற்றவள் இல்லை.

''வேதம் மாமி!''

''என்ன கோபி?''

''நான் ஒரு அஞ்சு நிமிஷம் உங்க பெண்ணுேடு தனியாப் பேசணும்.''

''எதுக்கு?''

''இந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு கட்ட....''

''இந்தப் பிரச்னை நீ நினைக்கிற மாதிரி எளிதாகத் தீரக்கூடிய பிரச்னை அல்ல கோபி. நீ கட்டற தாலியில் தான் பிரச்னை முடியும்...''

''ஒரு அஞ்சு நிமிஷம் அவளுடன் நான் பேசப் படாதா?''

''திவ்யமாப் பேசு. ஆனு ஒண்ணு சொல்றேன், அவ பிடிவாதக்காரி...''

வேதம் மாமி உள்ளே சென்ருள். சாருமதி தயங்கித் தயங்கி, தலை குனிந்தவளாய் வந்து அவன் முன் நிற்பாள் என்று கோபிநாத் எதிர்பார்த்தான்.

சாருமதி தலை நிமிர்ந்து, வறண்டு போன கண்களை உருட்டி விழித்துக் கொண்டே வந்தாள். அவளுடைய பார்வையில் மருட்சியை எதிர்பார்த்த அவன் ஒரு கணம் கலங்கினுன். இருப்பினும் தன்னுடைய பயத்தையோ பலவீனத்தையோ அவன் காட்டிக் கொள்ளவில்லை.

''சாரு!''

''அழைச்சீங்களாமே?''

இது வரையில் ஒருமையிலேயே பேசி வந்தவள் மரியாதையில் இறங்குவதை கோபி கண்டு கொண்டான்.

''ஆமாம், சாரு... நம்ம கல்யாணத்தைப் பற்றி எல்லோரும் பேசுகிருர்கள்...''

''அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்...?''

''உன் வயிற்றில் ஒரு குழந்தை முளைத்து விட்டதுன்னு உன் அம்மா சொன்னுள்...''

''ஒரு குழந்தை இல்லே, உங்க குழந்தை.''

''அதை எப்படி நீ நிச்சயமா சொல்றே?''

''என்ன சொல்றீங்க!''

அவளுடைய குரல் அவனைத் தாக்கியது. ஆனல் அவன் சமாளித்துக் கொண்டான்.

''என்னை ஒழுக்கம் கெட்ட நாய்னு நீ சொன்னே. இப்ப நான் சொல்றேன், நீ ஒழுக்கம் கெட்ட நாய்னு. உன் வயத்திலே எவனுடைய குழந்தை யா வளர்றது. ஆனு அதை என்மேலே சுமத்தப் பார்க்கிறே...ஏன்னு உன்னலே எளிதா என் மேலே குற்றம் சுமத்த முடியும். என்னைப் பத்தி எல்லா தகவலும் வைச்சுண்டிருக்கிற நீ அதை வச்சுண்டே, உன் காரியத்தைச் சாதிக்கப் பார்க்கிறே.''

''இதைச் சொல்லத்தான் என்னை வரச் சொன்னீங்களா?''

''ஆமாம். நீ என் மனைவியா வர்றது இந்த ஜன்மத்தில் இல்லே... என் மேலே காறித் துப்பியவளோட உதடு என் உதடோடு சேராது...''

''சரி...நான் வரேன்.''

''இன்னமும் கேள். நான் வெளிப் பார்வைக்கு சாது. நல்லவன். படிப்பிலே கெட்டிக்காரன்... ஆனு என் நெஞ்சு இருக்கே, அது உடைக்க முடியாத வைரம்... என்னைக் கேலி பேசியது யாராக இருந்தாலும் அவனை, அவளை நான் என் வழியில் அழிச்சுடுவேன்...உன்னை எந்த வழியில் அழிக்கணும்னு நினைச்சேனே அந்த வழியில் அழிச்சுட்டேன்...என் குழந்தை உன் வயத்திலே வளர்றதுன்னு சொல்றே. அதுவே உன்னை அழிக்க நான் ஏவின ஆயுதம். ஆனு ஊரும் உலகமும் நீயோ உன் அம்மாவோ சொல்றதைக் கேட்டு என்கிட்டே வரமாட்டா. வரவும் முடியாது. ஏன் தெரியுமா? சாட்சி இல்லே. ஆதாரம் இல்லே. கோர்ட்டுக்குப் போனுலும் நீ ஜெயிக்க முடியாது...''

''சரி.''

''என்னைக் கணவனு மனசாலே வரிச்சுக்கோ. நான் கவலைப்படலே...ஆனு மணையிலே நான் உட்கார்ந்து உன் கழுத்திலே தாலியைக் கட்டுவேன்னு எதிர்பார்க்காதே.''

இதன்பின் என்ன பேசுவது? கோபிக்குப் புரியவில்லை. அவள் எதிர்த்தால் அவன் தன் கைவலிமையையும் வாய்வரிசையையும் காட்டலாம். எல்லாவற்றிற்கும் தலையை

ஆட்டி 'சரி' என்று கூறுகிறவளிடம் அவன் என்ன யுத்தம் செய்வான்?

அவள் தலைகுனியாமல், ஒரு பொட்டுக் கண்ணீர் விடாமல் அவனை ஏறிட்டு பார்த்துச் சொன்னாள். "ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள், அது இன்னிக்கோ இல்லை அஞ்சு வருஷம், பத்து வருஷம்—ஏன் நீங்க உங்க கண் மூடறதுக்கு முன்னாலேயோ என்னையும் உங்க குழந்தையையும் பார்க்க வருவேள்...அன்னிக்கு நாம் மறுபடியும் பேசிக் கலாம்..."

ஒவ்வொரு வார்த்தையிலும் அவள் தன் நெஞ்சின் உறுதியைப் பதித்தாள். அவள் பேச்சில் பொங்கி ஓடிய நம்பிக்கை அவனை அயர வைத்தது.

அன்று இரவே மாமியிடம் கோபி கேட்டான்.

"என்னையும் சாருமதியையும் பற்றி மாமாகிட்டே சொல்லியாச்சா?"

"ஒருத்தரை ஒருத்தர் விரும்பறேள்னு சொன்னேன்."

"வேறு ஏதும் சொல்லலியா?"

"இல்லை. சொன்னா, உன் மாமா உன்னை வெட்டிப் போட்டுடுவார்..."

"இப்போதைக்கு எதுவும் சொல்ல வேண்டாம் மாமி."

சுசிலா ஒரு தடவை அவனை ஏற இறங்கப் பார்த்தாள்.

"அப்படீன்னா?"

"நான் சாருகிட்டேயே பேசிட்டேன்...அவள் எனக்காக எத்தனை வருஷம் வேணும்னாலும் காத்திருப்பாளாம்..."

"விபரீதம் பொறக்கிறதுக்கு முன்னாலே..."

"விபரீதம்னு எதுவும் இல்லை...வரவும் வராது. போதுமா?"

"ஒரு நாள் இல்லாமல் போனா ஒரு நாள் நீ அவளைக் கல்யாணம் செய்ஞ்சுப்பே, இல்லையா?"

"அதைப்பத்தி ஏன் மாமி, இன்னிக்கு விசாரப் படணும்?"

மாமிக்குத் திருப்தி உண்டாகவில்லை என்பதை அவன் புரிந்து கொண்டான். ஆனால் மாமி திருப்தி அடைந்தால் என்ன, அடையாவிட்டால் என்ன என்ற அலட்சியம்தான் அவனுள் மேலோங்கி நின்றது. இனிமேல் மாமா

வின் ஆத்திரத்தைக் கூட—அது அவரிடமிருந்து கிளம்பினுல்—லட்சியம் செய்யமாட்டான். எம். பி. பி. எஸ். பரீட்சை எழுதியாகிவிட்டது. இனிமேல் காலே ஊன்றி நிற்க எந்த மாமாவின் தயவும் அவனுக்குத் தேவை இல்லே.

தன்னுடைய ஈரமில்லா நெஞ்சைப்பற்றி அவனே பெருமைப் பட்டுக்கொண்டான். அரட்டலிலும் உருட்டலிலும் மனிதனுல் பிறரை எளிதாக அடக்க முடியும் என்ற உண்மையையும் அவன் தெரிந்துகொண்டான்.

இது நடந்த இரண்டு மாதங்களில் பரீட்சை முடிவுகள் வெளியாயின. முதல் வகுப்பில் வெற்றி. மகாராஷ்டிர மாநிலத்தில் ஆருவது ஸ்தானம்.

கல்லூரி முதல்வர், அவனே நேரில் பாராட்டி 'ஹவுஸ் ஸர்ஜன்' பணியை ஆரம்பிக்கச் சொன்னுர். இந்த சமயத்தில்தான், மாமா சென்னேக்குப் புறப்பட்டார். ஓர் அறையில் தங்கி ஓராண்டுகாலம் பம்பாயில் இருப்பதாகக் கூறினுன் கோபிநாத். அவர்கள் வீட்டைக் காலி பண்ணும்போது வேதம் மாமி மட்டும்தான் அங்கே குடியிருந்தாள். சாருமதி ஒரு மாதம் முன்பே பூனு சென்றுவிட்டாள். அவள் பூனு சென்ற விவரமே கோபிக்கு பல நாட்களுக்குப் பிறகுதான் தெரிய வந்தது.

மாமாவின் வீட்டை விலேக்கு வாங்கினவர், வேதம் மாமியின் எழுபது ரூபாய் வாடகையை எண்பதாக உயர்த்தினுரே தவிர, அவளே வெளியேற்றவில்லே.

ஒரு பெண்ணே அலேக்கழிய வைத்துவிட்டு கோபிநாத் அந்தேரிப் பிரதேசத்தை விட்டே வெளியேறினுன்.




அன்று இரவு டாக்டர் கோபிநாத்துக்கு நீண்ட நேரம் தூக்கம் வரவில்லே.

சாருமதியின் விஷயத்தில் பாவம் செய்திருக்கிறுன். இந்தப் பாவத்தின் விளேவு அவனுடைய கையில்

புகுந்துவிட்டது. அவன் ஒரு டாக்டராக இருந்தும் தொழிலைத் தொடமுடியாமலடிக்கிறது. இதற்கும் ஒரு முடிவு இப்போது நெருங்கிக் கொண்டிருக்கிறது. எந்த சாருமதியின் சாபத்துக்கு அவன் ஆளாகியிருக்கிறானோ அந்தப் பெண்ணை அவன் மறுநாள் சந்திக்கப் போகிறான். அவசியம் நேர்ந்தால், அவன் தன் தொழிலின் மேன்மையைக் கருதி, அவளுடைய காலில் வேண்டுமானாலும் விழுவான். வேதம் மாமியின் பாதங்களைத் தொட்டு வணங்கி அவளுடைய மன்னிப்பையும் கோருவான். அவன் இப்போது நெஞ்சுக்குள் உகுக்கும் கண்ணீர் நாளை, பொலபொல வென்று கொட்டும்போது தாயும் பெண்ணும் கண்டிப்பாக மனம் இரங்கி அவனை மன்னிப்பார்கள். அதன் பிறகு அவன் உடனேயே விமானம் ஏறி கோயமுத்தூர் சென்று, ஏதாவது ஒரு டாக்ஸியை அமர்த்தி ஊட்டி மருத்துவ மனைக்கு ஓடுவான். டாக்டர் முரளியும், டாக்டர் ரம்யாவும் ஆர்வத்துடனும் ஆதுரத்துடனும் அவனை வரவேற்பார்கள். மறுநாளே ஆபரேஷன் தியேட்டரில் பழைய கோபிநாத்தாக திகழ்வான்.

அவனுடைய சரியாத கற்பனைக்கிடையே திடீரென்று ஒரு பயம் பிறந்தது. ஒருவேளை வேதம் மாமியையும் சாருமதியையும் அவனால் சந்திக்க முடியாமல் போய்விட்டால்?

பிறந்த பயம் வளர வளர அவனுக்கு மேற்கொண்டு என்ன நினைப்பது என்றே புரியவில்லை. சாருமதியை அவன் பார்த்தாக வேண்டும். அவளுடைய மன்னிப்புக் கிடைக்கவில்லையென்றால் அவனுக்கு வாழ்வே கிடையாது. அவனுடைய கை மீண்டும் உயிர் பிறவாது.

அவன் முதன் முதலாக தெய்வத்தை நினைத்துப் பார்த்தான். இதுவரையில் அவன் நண்பர்களுடன், அவர்களுடைய வற்புறுத்தலின் பேரில் பல கோயில்களுக்குச் சென்றிருக்கிறான். பல தெய்வங்களை அவன் பார்த்திருக்கிறான். ஆனால் என்றுமே ஒரு கண நேரம் கூட, விக்கிரகங்களைக் கண்டு அவன் தன்னை மறந்ததில்லை. பக்திக் கண்ணீரை அவன் கண்கள் அறிந்ததில்லை. ஆனால் இப்போது எல்லா மனித சக்திகளையும்விட, மனித பலத்தையும்விட தெய்வம்தான் பெரியது என்று அவனுக்குத் தோன்றியது. அந்தத் தெய்வத்தின் அருள் இருந்தால்தான் அவன் உயிர் வாழ முடியும் என்ற நம்பிக்கை உண்டாயிற்று. அவனுடைய இந்த மாற்றம் அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

எதையும் லட்சியம் செய்யாமலிருந்தவன், எந்தச் செயலையும் சுயநலத்தை முன்னிட்டே செய்து பழகியவன் எப்படி, தெய்வத்தையும் நினைக்கமுடிகிறது? அதிலும் ஒரு சுயநலம் இருப்பதாகப்பட்டது. அவனுடைய நலத்தைக் கருதித்தான் இப்போது, இவ்வளவு தூரம் பம்பாய்க்கு வந்திருக்கிறான். சாருமதிமீது அவனுக்குப் பரிவோ, பச்சாதாபமோ இல்லை. அவளுடைய மன்னிப்பு அவனுக்கு புத்துயிர் கொடுக்கும் என்ற நம்பிக்கைதான் அவனை இவ்வளவு தூரம் உந்தி வந்திருக்கிறதே தவிர, சாருமதிக்குப் புதுவாழ்வு கொடுக்க வேண்டும் என்ற எண்ணமே அவனுள் உதித்ததில்லை.

தன் பாவமன்னிப்பே சுயநலத்தால் எழுந்த பொய்மையாகப் பட்டது.

சத்தியமில்லாத பாவ மன்னிப்பு ஒரு மன்னிப்பா?

அவனுடைய மனம் இறைவனை இறைஞ்சியது. அவனுடைய பாவத்தைச் சாருமதி மன்னிக்கும்போது, தெய்வம் அவனுடைய சுயநலத்தை மன்னித்து விடவேண்டும். பிறருடைய நலனுக்காக வாழ அருளும் புரிய வேண்டும்.

எப்போது அவன் ஒரு வழியாக உறங்க ஆரம்பித்தானோ அவனுக்கே தெரியாது. கண் விழிக்கும்போது அருகே இருக்கும் தண்டவாளங்களில் ரெயில்கள் எதிரும் புதிருமாக ஓடும் சத்தம் கேட்டது. நன்றாக விடிந்துவிட்டது என்று எண்ணிக்கொண்டே எழுந்தான்.

அவசர அவசரமாகக் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு அவன் புறப்பட்டான். அப்போது மணி எட்டு. எட்டரை மணிக்கு பள்ளி துவங்கும் என்பதை அவன் அறிவான். அந்தேரியில் இருக்கும்போது, வேதம் மாமி ஏழே காலுக்குப் புறப்பட்டு, ஏழு இருபத்தைந்து மணி ரெயிலில் செல்லுவாள். எட்டேகாலுக்குள் அவள் பள்ளிக்கூடத்தை அடைந்தாகிவிடும்.

தாதர் வெகு அருகிலேயே இருந்தபோதிலும் அவனுடைய மனத்தில் அவசரம் டாக்ஸியை நாடியது.

பத்து நிமிடங்களில் பள்ளிக்கூடத்தின் வாயிலை அடைந்தவனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. கேட் பூட்டிக் கிடந்தது. எட்டரை மணிக்கு ஆரம்பிக்கும் பள்ளிக்கூடம் எட்டேகால் வரையிலும் பூட்டி இருந்தால் என்ன அர்த்தம்?

எட்டரைமணிவரை நின்று பார்த்தான். ஓர் ஆசிரியர் அல்லது ஆசிரியை வரவில்லை. ஒரு மாணவ மாணவியைக் காணவில்லை. கண்கள் வாட்ச்மேனைத் தேடின.

அவனையும் காணேம். ஒருவேளை ஜனவரி லீவுக்குப்பின் இன்னும் பள்ளிக்கூடத்தைத் திறக்கவில்லையோ?

ஏமாற்றம் ஒரு பெரிய இடியாக விழுந்த போதிலும், டாக்டர் கோபிநாத் மனம் தளரவில்லை. தாதர் ரெயில் நிலையத்தை நோக்கி நடந்தான்.

ஐந்து ஆண்டுகளுக்குப் பின் அந்தேரியில் நடக்கும் போது எல்லாம் புதுமையாகத் தோன்றியது. நிறைய கட்டிடங்களும் கடைகளும் முளைத்துவிட்டதைக் கண்டான். ஸ்ரீராம் நகர் காலனியைத் தாண்டியபோது, அது பழைய கட்டிடங்களின் குவியலாகப்பட்டது.

அவன் இருந்த வீட்டை நெருங்க நெருங்க, தன் கால்களில் ஒரு மாற்றத்தை அவன் உணர்ந்தான். கால்கள் பின்னின. ஏதோ ஒரு பயம் அவனைக் கவ்வி இழுத்தது. சாருமதி இப்போது ஒரு சாதாரணப் பெண்ணாக, அவனால் பாதிக்கப்பட்ட ஒரு பெண் உயிராகத், தெரியவில்லை. அவனை ஆட்டிப்படைக்கும் ஒரு சக்தியாக, அவனைத்தாக்கிவிட்ட ஒரு வஜ்ராயுதமாகத் தோன்றியது. அவள் அவனை மன்னிப்பாளா என்ற சந்தேகமும் எழுந்தது.

அவன் ஒவ்வொரு படியாக மாடி ஏறினான். ஒரு காலத்தில் தினந்தோறும் ஏழெட்டு முறைகளாவது ஏறி இறங்கிய படிகள். இப்போது ஏறும்போது கால்கள் வலியில் கெஞ்சின.

மாடிப்படியின் நிசப்தம் வேறு அவனைப் பயமுறுத்தியது. கட்டிடமே ஆள் அரவமில்லாமல், அவனை விழுங்க வாயைத் திறந்து கொண்டிருப்பதாகப் பட்டது.

எப்படியோ அவன் தான் இருந்த வீட்டுக்கு வந்து விட்டான். மின்சார மணியின் பொத்தானை விரல் நடுங்க அழுத்தினான்.

ஒரு சில நிமிடங்களில் அவன் இதுவரை பார்த்திராத ஒரு பெரியவர் கதவைத் திறந்தார். அவர் வெளியே செல்ல ஆயத்தமாக இருக்கிறார் என்பதைக் கண்டான்.

''வேதம் அம்மாள் இந்த வீட்டில் குடியிருக்கிறாளோ?'' என்று நாக்குழற கேட்டான்.

அவனை ஒருதரம் ஏற இறங்கப்பார்த்துவிட்டு, சைகையால் தாழ்வாரத்தைக் காட்டினார்.

வீட்டில் பெரியவரைத் தவிர வேறு யாருமே இல்லை என்பதைத் தெரிந்துகொண்ட அவன், தாழ்வாரத்தின் விளிம்பில் நின்று எட்டிப் பார்க்கவில்லை. உள்ளே பிரவேசித்தான்.

அவன் பார்த்த காட்சியில் அவன் நிலைபெயர்ந்து போனான்.

வேதம் மாமி ஒரு கட்டிலின் மீது கண்களை மூடியவளாய்க் கிடந்தாள். அவளுடைய தலைமாட்டில் ஒரு நான்கு வயதுப்பெண் நின்று, அவளது நெற்றியை வருடிக் கொண்டிருந்தது. அக்குழந்தையின் முகத்தைக் கோபிநாத் உற்றுப் பார்த்தான். அவனுடைய அம்சம் குழந்தையின் கண்களில் பிரதிபலித்ததாகத் தோன்றியது.

''சாருமதி!'' என்று அவன் மெல்ல அழைக்க குழந்தை ஏறிட்டுப்பார்த்தது. பிறகு அவனை நோக்கி நடந்து வந்தது.

''சத்தம் போடாமல் பேசு. பாட்டி செத்துப் போகப் போகிறு. நீ யாரு...'' என்றது.

தான் யார் என்று சொல்லுவது? டாக்டர் என்பதா, அல்லது அவளுடைய தகப்பன் என்பதா?

''அம்மா எங்கே?''

''டாக்டர்கிட்டே போயிருக்கா...இப்ப வந்துடுவா...நீ யாரு.''

''நான் யாருன்னு உன் அம்மாகிட்டே கேளு... அவ சொல்லுவா...''

''ஏன் நீ சொல்ல மாட்டாயா?''

என்னதான் தாழ்ந்த குரலில் அவன் பேசினாலும், சத்தம் போடாமல் பேசச் சொன்ன பெண்ணின் குரல் வேதத்தின் காதில் விழுந்தது. அவள் மெல்லக் கண்களைத் திறந்தாள். பார்த்தாள். வந்தவன் யார் என்று அவளுக்குத் தெரியவில்லை.

''மீனு...யார்மா அங்கே? டாக்டரா?'' என்று கேட்டாள். அவளுடைய குரல் அவன் அறிந்த வேதம் மாமியின் குரலாக ஒலிக்கவில்லை.

''இல்லே, பாட்டி...டாக்டர் இல்லே...யாரோ அம்மாவைத் தேடிண்டு வந்திருக்கா...''

''உட்காரச் சொல்லும்மா.''

''உன்னைப் பாட்டி உட்காரச் சொல்று...இதோ இங்கே உக்காரு.'' குழந்தை கால் ஒடியும் தருவாயிலிருந்த ஒரு நாற்காலியைக் காட்டியது.

கனத்த கண்களைக் கையால் அழுத்திக் கொண்டே அவன் நாற்காலியில் உட்கார்ந்தான். மீனுவை வாரி அணைத்துத் தன் மடியில் வைத்துக்கொள்ள அவனையும் மீறி அவன் மனம் துடித்தது. இதற்குக் காரணம் கண்

டிப்பாக சுயநலம் இல்லை என்பதை அவன் உணர்ந்தான். தெய்வசக்தி ஒன்றுல்தான் அவனுடைய உள்ளத்தில் இப் பேர்ப்பட்ட பாசத்தைச் சுண்டி இழுக்க முடியும்.

அவனுடைய சிந்தனையில் அவன் தன்னை இழந்து கொண்டிருக்கையில், திடீரென்று காலோசை கேட்டது. அவன் எழுந்து நின்றுன்.

"நீ ஏன் நிக்கறே? உட்கார். அம்மா வந்தூட்டா..." என்றுள் மீனு.

"அம்மா வந்தாச்சா, மீனு?" என்று பதில் தெரிந்தும் கேள்வியைக் கேட்டாள் வேதம்.

"வந்தாச்சு பாட்டி..."

"டாக்டர் வரலையா?"

"இல்லே பாட்டி!"

சாருமதி உள்ளே பிரவேசித்தவள் நேரே கட்டிலுக்குச் சென்றுள். யாரோ வந்திருக்கிறுர்கள். அதே தாழ்வாரத்தில் இருக்கிறுர்கள் என்று தெரிந்தும் அவள் தாயாரை நோக்கிச் செல்வதாகத் தோன்றியது.

"அம்மா, வாயைத் திற, இந்த மாத்திரையை மூணு வேளை சாப்பிடணுமாம்..."

"டாக்டர் என்ன சொன்னுர்."

"ரெண்டு மூணு நாள்லே குணமாயிடும்னுர்.... இதோ இதை முதல்லே முழுங்கு..."

"யாரோ வந்திருக்காளாம். யாருன்னு தெரியலே...ஆனு எப்பவோ கேட்ட குரலாகப் படறது..."

சாருமதி திரும்பிப் பார்த்தாள். ஒரு கணம்—ஒரே கணம் அவளுடைய கண்கள் அவனைச் சந்தித்தன.

பிறகு அவள் தாயிடம் திரும்பினுள்.

"யார் வந்திருக்கா தெரியுமா, அம்மா?"

"யாரு?"

"தினம் தினம் யாரை நீ எதிர்பார்த்துண்டிருந்தியோ அவர்.."

"யார்டீ!"

"டாக்டர்."

"இப்ப கேட்டதுக்கு டாக்டர் வரலேன்னு மீனு சொன்னுளே."

"இப்ப வந்திருக்கிறவரும் டாக்டர்தான்... ஊட்டி டாக்டர்..."

"என்னடீ சொல்றே..என்ன சொல்றே... உன் புருஷன் வருந்திருக்கானு...கோபி வந்திருக்கானு!"

''இன்னும் அவர் என் புருஷன் ஆகலே அம்மா. ...நீ சுசீலா மாமி லெட்டரைப் படிச்சுட்டு நம்பிண்டிருந்தே... ஆனா நான் அந்த லெட்டர் இல்லாமலே நம்பிண்டிருந்தேன்...''

''கோபி!'' என்று வேதம் கத்தினாள், உடம்பின் சக்தியெல்லாம் திரட்டிக்கொண்டு.

உடல் வியர்வையில் குளித்துக் கொண்டிருந்த கோபிநாத்—டாக்டர் கோபிநாத்—மெதுவாக எழுந்தான். கட்டிலை நோக்கி நடந்தான்.

''நான் வந்துட்டேன் சாரு...வேதம் மாமி, நான் வந்துட்டேன்...'' என்றான் கோபிநாத். இப்போது ஏனோ அவன் நா தழுதழுக்கவில்லை.

''எனக்குத் தெரியும், நீ என் பொண்ணைக் கை விடமாட்டேன்னு...அவளைப் பார்த்தியா, அவதான் உன் பொண்! மீனா...!''

''என்ன பாட்டி?''

''ஒண்ணுமில்லே, மீனா...நீ பேசாம இரு... பாட்கே மாமா வெளியே போயாச்சான்னு பாரு...''

மீனா ஓடினாள்.

''நீ ஏம்மா அந்தப் பிஞ்சு நெஞ்சிலே ஏதோ சொல்ல வர்றே...அவருக்குத் தெரிய வேண்டியதுதான், மீனா யார்னு...ஆனா மீனாவுக்கு அவசியமில்லாமத் தெரிவானேன், இவர் யாருன்னு?''

''கோபி வீடு தேடி வந்திருக்கான்னா என்னடீ அர்த்தம்? கோபி...கோபி... '' வேதத்தால் மேலே பேச முடியவில்லை. அசதி தள்ளியது.

மீனா ஓடோடி வந்தாள்.

''அம்மா, பாட்கே மாமா போயாச்சு. வீடு காலி. நான் ஹால்லே விளையாடப் போகட்டுமா?''

குழந்தையின் கேள்வியில் கோபிநாத் தளர்ந்து போனான். அவள் யாருடன் விளையாடுவாள்? எதை வைத்துக்கொண்டு, தன்னந்தனியாக அவளால் விளையாடமுடியும்?

''வேண்டாம், நீ இங்கேயே பாட்டியை கவனிச்சுண்டு இரு...நான் அவரோட ஹால்லே பேசிண்டிருக்கேன்...''

அவள் அவனைப் பாராமலே நடந்தாள். அவன் பின் தொடர்ந்து நடக்கும்போதுதான், அவன் அவள் கழுத்தின் மஞ்சள் கயிற்றைப் பார்த்தான். தூக்கிவாரிப் போட்டது. அவள் கழுத்தில் தாலி இருக்கிறது என்றால்

என்ன அர்த்தம்? யார் கட்டியிருக்கிறார்கள்? கட்டினவன் எங்கே? வேறு யாராவது ஒருவனாக இருந்தால், அம்மாவும் பெண்ணும் சுசீலாவின் கடிதங்களை ஏன் குறிப்பிட்டார்கள்? அவன் நிச்சயம் வருவான் என்று சாரு தன் நம்பிக் கையை வெளியிட்டாளே! ஏன்?

குழப்பத்தோடு ஹாலை அடைந்தவன், பேச்சை எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் தவித்தான். அவனுடைய உள்ளத்தைப் புரிந்து கொண்டவளைப்போல, சாரு கேட்டாள்: ''இத்தனை வருஷத்துக்கு அப்புறம் இங்கே வந்து என்னைப் பார்க்கிறப்போ என்ன பேசுவது என்று புரியலை. இல்லையா?''

கோபிநாத் 'ஆமாம்' என்று தலை அசைத்தான். அவளுடைய தாலி இன்னும் கண்ணை உறுத்திக் கொண்டிருந் தது.

''உங்க கை இப்ப எப்படி இருக்கு?''

அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவ்னு டைய வியாதியைப் பற்றி அவள் எப்படித் தெரிந்து கொண் டாள். ஊட்டியிலேயே ரகசியமாக இருக்க வேண்டும் என்று அவன் பாடுபட்டான். அது எப்படி பம்பாய் வரை தெரிந்தது!

''என்ன யோசிக்கிறீர்கள்...சுசீலா மாமி என்னை ஒரு பெறாத பெண்ணாக ஏற்றுக் கொண்டிருக்கிறாள். குழந்தை பிறந்ததும் வந்தாள். ஆண்டு நிறைவுக்கு வந் தாள்...ஏன் இரண்டு மாசம் முன்னாலேகூட ஒருநடை வந்துவிட்டுப் போனாள்...''

''எனக்கு இதெல்லாம் தெரியாது.''

''உங்களுக்கு எதுவுமே தெரியாது...ஊட்டி நர்ஸிங் ஹோம் ஒன்றுதான் தெரியும்...முந்தாநாள் லெட் டர் வந்தது...உங்களுக்கு கை திடீர்னு இழுத்துண்டுதுன்னு. என்ன காரணம்? ஏதாவது நரம்புக் கோளாறு...?''

''இல்லை...''

''பின்னே...ஆபரேஷன் செய்ய முடியாமல் கை இழுத்துண்டுதுன்னு சுசீலா மாமி எழுதி இருந்தா...அதுக்கு ஏதாவது பெரிய வைத்தியம் பார்க்க வேண்டாமா?''

சாருமதிக்கு சுசீலா மாமி எழுதியிருக்கிறாள். ஆனால் மாமிக்கு எப்படித் தெரிய வந்தது? சீனு மணி மாமாவிடம் சொல்லிவிட்டானா? இல்லை, டாக்டர் முரளியே மாமாவுக்குத் தெரியப்படுத்தினாரா?

அவன் சாருவைப் பார்த்தான். ஓர் ஆச்சரியம்

அவனைத் திடீரென்று தாக்கியது. கடைசியாக அவளைப் பார்த்த போது, இவளுடன் பேசியபோது அவள் அவனுடைய சாட்டை அடியை துவண்டு போகாமல், எல்லாவற்றிற்கும் 'சரி, சரி,' என்று கூறினுள். அவன் முடிவில் வெளியேறு கையில் அவனை நிறுத்தி தன் நெஞ்சின் உறுதியை முகத்தில் அடிப்பது போலக் காட்டினுள். எத்தனை ஆண்டுகளானுலும் அவன் அவளிடம் வந்துதான் தீரவேண்டும் என்ற பாவனையில் பேசினுள். இப்போதும் அவள் முன்பு இருந்தது போலவே எவ்வித சலனமும் இல்லாமல் காணப்படுகிருள். இது எப்படி சாத்தியம்? நம்பிக்கை பலித்துவிடும் என்று எப்படித் தெரிந்தது?

அவளுடைய வாக்கு பலிக்கத்தான் அவனுடைய கைக்கு இப்படி ஒரு ஆபத்து விளைந்ததா? வாக்குப் பலிக்கிறது என்ருல் என்ன அர்த்தம்? அவளை அவன் ஏற்றுக்கொள்ளப் போகிருன் என்ரு?

தாலிக்கயிறு மீண்டும் கண்ணை உறுத்தியது.

அவனுடைய மௌனத்தைக் கிழித்துக்கொண்டு சாரு பேசினுள்.

''பாம்பேயில் பெரிய டாக்டர்கள் இருப்பார்களே...அவர்களைப் பார்க்கத்தான் வந்தீர்களா?''

''என் வியாதியை டாக்டர்களால் போக்க முடியாது, சாரு...''

''அப்போ?''

''உன்னுல்தான் போக்க முடியும்.''

''என்னுலா! எப்படி?''

''என்னை நீ மனமார மன்னிச்சா, அந்த மன்னிப்பே எனக்கு மருந்தா அமைஞ்சுடும்...''

''நீங்க தப்பு செஞ்சிருந்தாத்தானே நான் மன்னிக்க வேண்டும்...?''

''நீ என்ன சொல்றே?''

''என் விதி உங்க மூலமா என்னைத் தாக்கிற்று.. நீங்க என் விதியின் கருவி...அவ்வளவுதான்.''

''இல்லை சாரு...நான் மகா பாவம் செய்திருக்கிறேன். கொடூரமா நடந்துண்டிருக்கேன்...நீ இளமையிலே பூரிச்சுக்கிடக்கிறப்போ, நான் அதை வேண்டுமென்றே சூறையாடினேன்...நீ ஏதோ என்னைப்பற்றித் தாழ்வாப் பேசினேங்கறதுக்காக, நீ சொல்ற உண்மை கசக்கிறதை நினேச்சு ஆத்திரப்பட்டு, உன்னை நான் சீரழிச்சேன்...நான் எத்தனையோ பெண்களோடு தகாத உறவு வைச்சுண்டி-

ருந்தது உண்மைதான். ஆனா அதெல்லாம் பரஸ்பர அறி வோடு, உணர்வோடு செஞ்ச தப்புக்கள்...உன் விஷயத்தில் அப்படி இல்லே...நீ என்னை மன்னித்துத்தான் ஆக வேண் டும்...உன் மன்னிப்பு இல்லே என்றால் நான் ஊட்டிக்குத் திரும்பிப் போகவேண்டிய அவசியமே இருக்காது...என் கை என்னென்னிக்கும் விளங்காமலே போயிடும்...''

''நீங்க பேசறதைப் பார்த்தா, என்மேலே அனு தாபப்பட்டு, நம்ம குழந்தைமேலே இரக்கப்பட்டு இங்கே வரலேன்னு தெரியறது... உங்க கை குணமாக வேண்டும். அதற்கு என் மன்னிப்பு தேவைன்னு நீங்க வந்திருக்கீங்க! அப்படித்தானே?''

கோபிநாத்தால் பதில் கூற முடியவில்லே. அவள் ஒரு மென்மையுடன்தான் பேசினாள். ஆனால் வார்த்தைகள் சம்மட்டியால் அவனைத் தாக்கின.

''உங்களால் என் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது என்று எனக்குத் தெரியும்...எனக்குத் தெரிஞ்ச வரையில், மனிதனை மனிதன் வாயளவில் மன்னிக்கிறதுங் கறது அவனுடைய அகம்பாவத்தைக் காட்டுகிறது. மனித னுடைய தப்பை மன்னிக்கிற உரிமை தெய்வத்திடம் மட் டும்தான் இருக்கு...''

''உன்னை தெய்வமா மதிச்சுக் கேட்கிறேன் சாரு.''

''தாய் ஒருத்தியைத்தான் தெய்வத்தின் நிலேக்கு நாம உயர்த்த முடியும்...ஏன்னா பூமி தாங்கற மாதிரி தாய் நம்மை எல்லாம் தாங்கறா...பிள்ளே எட்டி உதைத் தாலும் அவனுடைய தாயார் அந்த வலியால் துவளுவ தில்லே. உதைச்சதில் பிள்ளேயின் காலுக்கு வலிச்சுட்டு தோன்னுதான் கவலேப்படறா...''

''ஐயோ என் பிரச்னேயின் வலி தெரியாம நீ என்னென்னவோ பேசிண்டே போறியே...!'' என்றான் கோபிநாத்.

''தெய்வத்திடம் மன்னிப்பைக் கேளுங்கள்!''

''என் குரல் அவனுக்குக் கேட்கவில்லேயே!''

''அவனுக்குக் கேட்கும்படியா நீங்க கேட்க வில்லே.''

''எப்படிச் கேட்பது.....?''

''மனிதன்கிட்டே மனிதன் பேசறான்...ஆனா தெய்வத்திடம் அவனால் பேசமுடியாது...செயல் மூலம் காட்டுகிறான்...உங்க மன்னிப்புக்கு ஒரு உருவம் கொடுங்

கள்...நீங்க செய்து விட்டதா நினைக்கிற பாவகாரியத்துக்குப் பிராயச்சித்தும் செய்யுங்கள்...அதை மனமார செயல் படுத்துங்கள்.....''

''அதாவது.....''

''மீனு உங்களுக்கும் எனக்கும் பிறந்தவள்... நாம இப்ப ரெண்டு துருவங்களிலே இருக்கிறோம். அவ பாலமா இருக்கா...அந்தப் பாலத்தின் மூலமா நீங்க தான் என்னை அடையமுடியும்...என்னாலே பாலத்தைப் பார்த்துண்டு தவிக்கத்தான் முடியும்...இதை நீங்க செஞ்சா நீங்க கண்டிப்பா தெய்வத்தின் அருளுக்குப் பாத்திரமாயிடுவீங்க... அப்புறம், உங்க வீட்டு மூலையிலே ஒரு சின்ன இடம் கொடுத்தாக்கூட எனக்குப் போதும். நான் அதையே சொர்க்கமா நினைச்சுண்டு என் தாலி தீர்க்காயுசா இருக்க வேண்டிப்பேன்...''

''இப்பவே சம்மதிக்கிறேன், சாரு... இப்பவே சம்மதிக்கிறேன். ஆனா ஆனா...'' அவனுடைய வாய் நிறுத்தியது. கண்கள் அவளுடைய கழுத்தில் நிலைந்தன.

''இது ஏதுன்னுதானே இப்ப குழம்பிப் போயிருக்கீங்க?'' சாருமதி மஞ்சள் கயிற்றைத் தொட்டுக் கொண்டே கேட்டாள்.

மௌனத்தால் கோபிநாத் பதில் சொன்னான்.

''சுசீலா மாமி இந்த ஊரைவிட்டுப் போறதுக்கு முன்னாலேயே நான் பூனாவில் இருக்கிற என் சித்தி வீட்டுக்குப் போயிட்டேன். இது உங்களுக்குத் தெரியும். நான் போறதுக்கு முன்னாலே சுசீலா மாமி இதை என் கையிலே கொடுத்தா. எப்பவோ ஒரு தடவை உங்க மாமாவுக்கு உடம்பு ரொம்ப மோசமா போயிருந்தாம். உடம்பு குணமானா, கனகதுர்க்கைக்கு மாங்கல்லியம் சார்த்துகிறேன்னு வேண்டிண்டாளாம். அம்மனுக்கு வாங்கின தாலியை என் கையிலே கொடுத்துக் கட்டிக்கச் சொன்னாள்.. நான் தயங்கினேன்...கழுத்து மூளியா இருக்கறப்போ, வயிறு பெரிசா தெரிஞ்சா அபவாதம் வரும்னு மாமி சொன்னா... அப்பத்தான் அவளோடு நல்ல எண்ணம் எனக்கும் புரிஞ்சுது.''

''நாம நாளைக்கே புறப்படலாம்... மருதமலை சந்நிதியில் நம்ம கல்யாணம்.''

''அம்மாவுக்குக் குணமாகணும். நீங்கள் புறப்பட்டுப் போங்கள்...நான் அப்புறமா மீனுவை அழைச்சுண்டு வரேன்...''

"அம்மா?"

"அவள் பம்பாயைவிட்டு பள்ளிக்கூடத்தை விட்டு வரமாட்டாள்."

"சாரு.."

"என்ன?"

"இப்பவே என் கையிலே புது ரத்தம் ஓடற மாதிரிப் படறது. எனக்கு குணமாயிட்டமாதிரி மனசிலே உற்சாகம் உண்டானது...நான் எடுத்துவிட்ட முடிவை தெய்வமே பாராட்டறதுன்னு தோண்றது."

"சாப்பிட வாருங்கள்."

"நான் முதல்லே வெளியே போய், மீனுவுக்கு நிறைய பொம்மைகளை வாங்கிண்டு வர்றேன். பாவம், எதுவுமில்லாம, தன்னந்தனியா ஹால்லே விளையாட எப்படி முடியும்?"

சலனமில்லாத முகத்துடன் சாரு அவனைப்பார்த்தாள். உணர்ச்சி பொங்கும் முகத்தோடு டாக்டர் கோபிநாத் வெளியேறினான்.



# 1978 ஜனவரி 29-30

"ஒரு டாக்டருக்கு சமைக்கவும் தெரியும் என்கிறதை நினைச்சுப் பார்க்கிறப்போ, நம்ம கண்ட்ரியிலே பெண்கள் சமுதாயம் எவ்வளவு தூரம் முன்னேறிவிட்டாங்கறதை என்னாலே கணிக்க முடிகிறது!" என்றான் முரளி, மூன்றாவது கப் ரசத்தை உறிஞ்சிக்கொண்டே.

"ஆனா ஆண்கள்தான் பாவம் முன்னேற முடியாம முடங்கிப் போய் கிடக்கிறார்கள். ஊராருக்கு நன்றாக வாய்கிழிய உபதேசம் செய்யத் தெரிகிறது. ஆனா அவங்க இருக்கிற நிலையிலேயே இருக்கிறார்கள்..." என்றாள் ரம்யா.

"உதாரணம்?"

"நீங்கள்தான்."

"எப்படி?"

"எனக்கு அட்வைஸ் பண்றீங்க, சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கோன்னு. ஆனு நீங்க? கட்டை பிரம்மச்சாரியாகவே இருக்கீங்க..."

"பிரம்மச்சாரின்னு சொல்லு, ரம்யா... ஆனு கட்டை, மரம், கிளைன்னு மட்டும் வர்ணிக்காதே..."

"எப்பத்தான் நீங்க உங்க பொறுப்பை உணர்ந்து மணையிலே உட்காருவீங்களோ?"

"நான் மட்டும் தனியா உட்கார்ந்தா போதுமா? பெண்ணும் உட்காரணுமே....."

"அவள் மாட்டேன்னு எப்ப சொன்னு?"

"என்னை என்ன செய்யச் சொல்றே.....?"

"ஒரு அப்பா இன்னெருு அப்பாவைப் பார்த்தாகி விட்டது. பேசியாகி விட்டது. பிள்ளை இன்னும் பதில் சொல்லலைன்னு இன்னெருு அப்பா ஒரு அப்பாவிடம் குறைப்பட்டுக்கிறுர்..."

"கவலைப்படாதே... அந்த இன்னெருு அப்பாவின் குறையைத் தீர்த்துடறேன்...அந்த உருளைக்கிழங்கை எடு.."

"ஊட்டியிலே நிறைய பொடேடோ கிடைக்குங்கறதுக்காக இப்படி மொசுக்கிஞ எப்படி? உடம்புலே அப்புறம் எலும்பைத் தேடித்தான் பார்க்கணும்..."

"ஒண்ணு கவனிச்சியா... அந்தப் பொண் சாருமதி இங்கே வந்து முழுசா பத்து நாள் ஆகலை, அதுக்குள்ளே கோபிநாத் பூசின மாதிரி ஆகிவிட்டான்."

"ஆசையா சமைச்சுப் போடறு, அள்ளி அள்ளிப் போட்டுக்கறுர்."

"அவ அன்னிக்கே அஞ்சு வருஷம் முன்னுலேயே ஆசையா போட்டிருப்பாள்...இவன்தான் துஷ்யந்தன் மாதிரி இங்கே ஊட்டியை ஆள ஓடி வந்துவிட்டான்..."

"மீன் வயத்திலேந்து மோதிரம் கிடைச்சுது. சகுந்தலை பிழைச்சா...கோபிநாத்துக்குக் கை விளங்காமல் போச்சு, சாரு பிழைச்சா....."

"இன்னெருு சமாசாரம் தெரியுமா?"

"என்ன?"

"முந்தா நாள் வெள்ளிக்கிழமைதான் சாஸ்திரப்படி கல்யாணமாயிருக்கு. மருத மலையிலே தாலியைக் கட்டிவிட்டு, கோயமுத்தூர் ரிஜிஸ்திரார் ஆபிஸ்லே கையெழுத்தும் போட்டிருக்கான்."

''யார் சொன்னு?''

''நம்ம சீனுமணி...இன்னிக்குக் கார்த்தாலே புறங்கால்லே வீக்கம்னு வந்தான். என்னடான்னு விசாரிச்சேன்...சாதத்தைத் தள்ளு...தாங்க்ஸ்...அப்ப அவன் மருத மலைக்குப் போன கதையைச் சொன்னுன். கல்யாணம் பண்ணிவைச்ச சாஸ்திரிகள் இவனுக்கு ஒண்ணு விட்ட மாமனுராம்...''

''நல்ல நியூஸ் ரிபோர்ட்டர்! அதுசரி, எதுக்கு டாக்டர் கோபிநாத் சிவபாதசுந்தரத்துக்குச் சொல்லி சொல்லி அனுப்பினுர்...நேத்திலேந்து அது திருதிருன்னு முழிச்சுண்டிருக்கு...''

''அவருக்கு ஆபரேஷன் ஆரம்பிக்கறதுக்கு முன்னே தானே திடீர்னு கை ஒடிஞ்சுது?''

''கை எங்கே ஒடிஞ்சுது...''

''சரி, கைக்குள்ளே என்னமோ பிரளயம் வந்தது. பூகம்பம் உண்டாச்சு...தயிரைத் தள்ளப் போறியா இல்லையா.....''

''அப்பப்பா, ஏன் உயிரை இப்பவே இப்படி வாங்கறீங்க... கல்யாணமானப்புறம்தான் என் உயிரை வாங்கப்போறேளே?''

''அது எப்படி 'என் உயிர்'னு அவ்வளவு நிச்சயமா சொல்றே...''

''தயிரை எடுத்து மூஞ்சியிலே கொட்டிடுவேன்! ஆமாம், நாளைக்கு ஆபரேஷன் சரியா நடக்குமா?''

''நடக்காம என்ன? பெரிய கறையா கையிலே ஏந்திட்டிருந்தான்...அதை இப்பக் கழுவித் தொலைச்சாங்க...''

''பாவம் சாரு.''

''விமோசனம்தான் கிடைச்சுடுத்தே!''

''இருந்தாலும் அஞ்சு வருஷமா என்ன துடிப்பு துடிச்சிருப்பா. ஒரு பெண்ணோடு கஷ்டம் உங்களுக்கு என்ன தெரியும்!''

''பெண்களாலே எத்தனை ஆண்கள் எப்படி எல்லாம் கஷ்டப்படறுன்னு உனக்கு எப்படித் தெரியும்? உதாரணத்துக்கு என்னையே எடுத்துக்கே...''

''உங்களை என்னுலே எடுக்க முடியாது. நீங்க ரொம்ப கனம். நீங்க வேணும்னு...''

''உனக்கு ஏதோ கேட்கிறது?''

''அது என்னன்னு புரிஞ்சா சரித்தான்...''

''இன்னிக்கு மத்தியானம் சினிமா போறோம்... அதுக்கு அப்புறம்?''

''நீங்களே சொல்லுங்கள்.''

''கோபி வீட்டுக்குப் போனா என்ன?''

''நான் வரலே.''

''ஏன்...''

''இவ்வளவு தூரம் நம்ம கிட்டே பழகிட்டு, கல்யாணத்துக்கு நம்மைக் கூப்பிடலே...''

''சே, இந்தப் பெண்களே ரொம்ப ஸில்லி! அவன் எல்லாரையும் மாதிரியா கல்யாணம் பண்ணிண்டான்? அவன் பொண்ணுக்கு இப்ப வயசு நாலு...இந்த வயசில அப்பன் அவ அம்மா அந்தக் குழந்தைமேலே அபவாதம் வரப்படாதுன்னு தாலி கட்டறான்... இதுக்கு உன்னையும் என்னையும் கூப்பிடுவானா? நாம்தான் எதிர் பார்க்கலாமா?''

''சரி, அப்ப ஒண்ணு செய்வோம்!''

''என்ன?''

''நர்ஸிங் ஹோமுக்குப் போய், சிவபாதசுந்தரம் திருதிருன்னு முழிக்கறதை வேடிக்கை பார்ப்போம்!'' என்றாள் ரம்யா.

''வேண்டாம் அவர் முழியைப் பார்த்தா அப்புறம் ராத்திரி எனக்குத் தூக்கம் வராது.''

''டாக்டர் கோபிநாத் இன்னிக்கு தூங்குவாரோ?''

''நாளைக்கு பொழுது விடிஞ்சதும் கேட்போம்.''



திங்கள் பிறந்தது.

இன்னும் தூங்கிக் கொண்டிருந்த மீனாவின் முகத்தைப் பார்த்துவிட்டு டாக்டர் கோபிநாத் திரும்பினான். அவனுக்கு முன்பாகவே எழுந்துவிட்ட சாருமதி குளியலறையிலிருந்து வந்தாள். ஈரப்புடவை, உடம்புடன் ஒட்டி

நிற்க, அவள் புடவைத் தலைப்பால் மார்பகத்தை இறுக மூடி இருந்தாள். அந்த இறுக்கம் அவளுடைய கவர்ச்சியைப் பன் மடங்காக்குவதாகத் தோன்றியது கோபிநாத்துக்கு. இத்தனை வருட காலத்தை அநியாயமாக விரயமாக்கிவிட்டதாக வருந்தினான்.

"என்ன அப்படிப் பார்க்கறீங்க?"

"இது பாம்பே இல்லை. ஈரப் புடவையோடு பாத்ரூமைவிட்டு வர்றத்துக்கு. நாளையிலிருந்து மாற்றுப் புடவையுடன் குளிக்கப் போ... ஊட்டிக் குளிர், அதுவும் ஜனவரிக் குளிரில் இப்படி வந்தால், மார்பிலே சளி கட்டிவிடும்....."

"நீங்கதான் டாக்டராச்சே.எனக்கு என்ன கவலை... நர்ஸிங் ஹோமுக்கு எத்தனை மணிக்குப் புறப்படணும்?"

"ஆறரை."

"பத்து நிமிஷத்திலே இட்லி ரெடியாயிடும்... நீங்க குளிச்சுட்டு சுவாமிக்கு ரெண்டு பூ போட்டுட்டு டிரெஸ் பண்ணிட்டு வாங்க..."

"சரி....."

"இன்னிக்கு நீங்க செய்யப் போற ஆபரேஷன் வெற்றியா முடியணும்னு நான் முருகனையும் குருவாயூரப்பனையும் வேண்டிண்டிருக்கேன்... நாம ஒரு நடை குருவாயூருக்குப் போய் பாலகிருஷ்ணனுக்கு வெள்ளியிலே ஒரு கை வாங்கிப் போடணும்..."

"சரி..."

"சரியின்னு இங்கேயே நின்னா எப்படி...ஆறரைக்குப் புறப்பட வேண்டாம்?"

நெற்றி நிறைய விபூதியும் குங்குமமுமாக சைக்கிளில் வந்து இறங்கிய டாக்டர் கோபிநாத்தைக் கண்டதும், வியப்பில் வாயடைத்து நின்றான் டாக்டர் முரளி.

"இது என்னடா புது வேஷம்!"

"என் வேஷம் கலைஞ்சப்புறம் என்னுடைய சுய உருவத்தைத்தாண்டா நீ பார்க்கிறே!" என்றான் கோபி.

"கோபி, இப்ப நான் உன்னைவிட எவ்வளவு சந்தோஷமா இருக்கேன் தெரியுமா? அதுசரி, நேத்து ஞாயிற்றுக் கிழமையாச்சே, என்ன செய்ஞ்சே?"

"இந்தக் கையாலே என்னென்ன செய்ய முடியுமோ அவ்வளவும் செய்ஞ்சேண்டா... மம் மட்டியாலே மண் வெட்டினேன்... மீனுவோடே பந்து அடிச்சேன்... அப்புறம்....."

"அப்புறம்?"

"வெளியே மூச்சுவிட மாட்டேயே?"

"ஹூம்..."

"இட்லிக்கு அரைச்சேண்டா!"

"சபாஷ்!"

"இப்ப என் கை எப்படி இருக்கு தெரியுமா... முன்னே இருந்ததைவிட அதிக பலத்தோடு, அதிக சக்தியோடு இருக்குடா!"

"குட் வெரிகுட்...ஐ விஷ் யு ஆல் ஸக்ஸஸ்!"



சரியாக எட்டரை மணிக்கு நர்ஸ் மேரி, எல்லாம் ரெடி என்று கூறிக்கொண்டுவந்தாள். டாக்டர் முரளியும் டாக்டர் ரம்யாவும் பின் தொடர கோபிநாத் ஆபரேஷன் தியேட்டரை நோக்கி நடந்தான்.

"முருகன் பிரசாதம், டாக்டர்!" என்று ஒரு குரல் கிளம்பியது.

கோபிநாத் பார்த்தான்.

சீனுமணி ஒரு சிறு பொட்டலத்தை நீட்டியவனாய் அவன் அருகே வந்தான்.

"மருதமலை முருகனுக்கு அபிஷேகம் செய்ஞ்ச விபூதி, டாக்டர்."

"தாங்க் யு, தாங்க் யு மணி!" என்ற கோபிநாத், பயபக்தியுடன் பிரசாதத்தை வாங்கிக் கொண்டான்.

"நல்லபடியாக ஆபரேஷன் முடியப் போறது. சிவபாதசுந்தரம் சோத்தைக் கட்டி வளைத்து ஒரு கை பார்க்கப் போகிறார்! நீங்கள் அதையும் பார்க்கப் போகிறீர்கள், டாக்டர்!"

டாக்டர் கோபிநாத் கலகலவென்று சிரித்துக் கொண்டே நடந்தான்.

ஆபரேஷன் தியேட்டர். மயக்க மருந்தைக் கொடுத்து. அவ்வப்பொது நோயாளியின் ரத்த அழுத்தத்தைப் பரிசோதிக்கும் டாக்டர் தயாராக இருந்தார்.

நர்ஸ் லீலா, சிவபாதத்தின் தலைமாட்டில் நிற்க, நர்ஸ் மேரி கை உறைகளை எடுத்து தந்தாள். ஒரு ஜோடி உறைகளை டாக்டர் ரம்யாவிடம் கொடுத்த அவள், இன்னொரு ஜோடியை டாக்டர் கோபிநாத்திடம் அளித்தாள்.

கோபிநாத் அனுயாசமாக உறைகளை வாங்கி அணிந்து கொண்டான். விரல்களை மடக்கினான். அவை மடங்கின. கையை வீசினான். கையால் காற்றில் வட்டங்களிட்டான்.

"என்ன சிவபாதம், பார்த்தீங்களா? அன்னிக்கு இந்த மாதிரி கையை ஆட்ட முடிஞ்சுதா?"

"ஆமாம் டாக்டர்...அன்னிக்குப் பாவம், நீங்க கை உறையைப் போட்டுக்கவே முடியலை. அப்புறம் போட்டுண்டதுமே கை விறைச்ச கட்டை மாதிரி தொங்கித்து...."

"நர்ஸ், ரெடி?" என்று கேட்டார் மயக்க மருந்து கொடுக்க வந்த டாக்டர்.

"ரெடி....."

"டாக்டர் கோபிநாத், ரெடி?"

"ரெடி, ரெடி!"

சற்றைக்கெல்லாம் சிவபாதசுந்தரத்தின் உருளும் கண்கள் மூடின. ஆழ்ந்த நித்திரையில் அவர் உடல் கிடந்தது.

சிவபாதசுந்தரத்தின் வயிற்றில் எந்த இடத்தில், எப்படி முதல் கீறல் விழப் போகிறது என்பதை ரம்யாவுக்கு கோபிநாத் விவரித்தான். பிறகு, குடலின் எந்த பாகத்தில் புண் இருக்கிறது என்றும், எப்படி அப்பாகத்துக்கு இருபக்கங்களிலும் ஒரு குழாயைப் பொருத்திக் குடலின் பாதையை சீராக்கப் போகிறோம் என்பதையும் விளக்கினான். ரம்யா கவனமாகக் கேட்டாள்.

நர்ஸ் மேரி, கத்தி, கத்திரி, ஃபோர்ஸெப்ஸ் முதலான கருவிகளுடன் தயாராக நின்றாள்.

அவள் கத்தியை நீட்டினாள்.

கோபிநாத் வாங்கினான்.

சிவபாதசுந்தரத்தின் வயிறு ஒரு சிறு குன்று போல தூக்கி நின்றது.

கோபிநாத்தின் கை கத்தியுடன் வயிற்றுக்குச் சென்றது.

கத்திமுனை வயிற்றில் குத்தியது.

அடுத்த கணம்—

"ஐயோ," என்ற அலறல்.

முரளி பாய்ந்து ஓடி கோபிநாத் அருகே சென்று அவனுடைய தோள்பட்டையைப் பிடித்தான்.

''முரளி...முரளி...கை,, கை...தூக்க முடியலே...ப்ளீஸ் ஹெல்ப் மி...ப்ளீஸ் ஹெல்ப் மி...''

முரளி கோபியின் இடையைப் பிடித்து நகர்த்தி வர, ரம்யா சிவபாதசுந்தரத்தின் வயிற்றிலிருந்து பீறிட்டு வரும் இரத்தத்தைத் துடைத்து, சிகிச்சை அளிக்க ஆயத்த மானுள்.

நர்ஸ் மேரி இடிந்து போய் நிற்க, நர்ஸ் லீலா இரு டாக்டர்களையும் தொடர்ந்து சென்றுள்.

''நான் செய்ஞ்ச பாபம் கரையலேடா, முரளி கரையலே...''

''டேக் இட் ஈஸி!''

''முரளி...முரளி..ஒரு சின்ன ஹெல்ப் பண்ணுடா.''

''என்ன கோபி!''

''என் வலது கையை பாதியா வெட்டி விடு... முழுக்கையை வைச்சுண்டு, தினம் தினம் புழுங்கி புழுங்கிச் சாகிறதை விட அரைக்கையுடன் என்னை நானே சமாதானப் படுத்திக்கிறேன்... என்னுலே இந்தக் கொடுமையைத் தாங்கிக்க முடியாது!''

''உணர்ச்சி வேகத்திலே கன்னு பின்னுன்னு பேசாதே, கோபி...அன்னிக்கு நடந்ததை யோசிச்சுப் பார்...க்ளவுஸையே போட்டுக்க முடியாம இருந்தது. இன்னிக்கு? கத்தியை அனுயசமாக வயிறு வரை கொண்டு போக முடிஞ்சிருக்கு...இதிலேர்ந்து என்ன புரிகிறது உனக்கு?''

''எனக்கு ஒண்ணுமே புரியலேடா முரளி!''

''எனக்குப் புரிஞ்சதை சொல்றேன்...நீ இன்னும் தெரிஞ்சோ தெரியாமலோ என்னென்னவோ தப்புகள் செஞ்சிருக்கே...அதுக்கெல்லாம் பரிகாரமோ பிராயச்சித்தமோ செய்யலே...இப்ப நீ அதைச் செய்யணும். உன் கை கண்டிப்பா பழய கையா மாறும்...போ, வீட்டிலே உட்கார்ந்து நல்லா யோசனை பண்ணு... இன்னும் யார் யார் உன்னுலே எங்கெங்கே எப்படி எப்படித் தவிச்சுக் கண்ணீர் விட்டார்களோ, அவர்களை எல்லாம் தேடிப்பிடிச்சு அவர்களுடைய மன்னிப்புகளை வாங்கிக் கொண்டு வா; மனசைத் தெளிவாக வைத்துக்கொள்...''

முரளி பேசிக் கொண்டே போனுன்.

கோபி புலம்பிக் கொண்டே இருந்தான்.



## 1978 - பிப்ரவரி - 2-5

ஒன்று மட்டும் டாக்டர் கோபிநாத்துக்கு நிதர்சனமாக விளங்கிற்று. தெய்வம் அவனே இன்னும் தண்டிக்கவில்லே. ஒரு எச்சரிக்கையைத்தான் அவனுக்குக் கொடுத்திருக்கிறது. எல்லாமே அஸ்தமித்து விட்டது, இனிமேல் கை இருந்தும் புண்ணியமில்லே என்று அவன் மனம்தளருவது விவேகமல்ல. அவன் செய்த ஒரு மாபெரும் தப்புக்கு பிராயச்சித்தம் செய்தான்.சாருமதியையும் மீனுவையும் அவன் ஏற்றுக் கொண்டதை தெய்வமே பாராட்டி, அவனுடைய கையை முன்னேவிட அதிகமாக இயங்கவைத்துவிட்டார். முதலில் கை உறையைப் போட்ட உடனேயே அவனுடைய வலது கை இயங்காமல் நின்றது. இப்போது ரண சிகிச்சைக் கத்தியை நோயாளியின் உடல்வரைக் கொண்டுபோகும் அளவுக்கு கை குணமாகிவிட்டது. இதிலிருந்து என்ன தெரிகிறது? அவன் செய்த மற்ற குற்றங்களேயும் அவன் அலசிப் பார்த்து, என்னென்ன பரிகாரங்கள் செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்துவிட வேண்டும். அவனுடைய கை பூரணமாக குணமடைந்து, ஒவ்வொரு ஆபரேஷனேயும் தங்கு தடையின்றி நடத்தி முழு வெற்றியையும் அடைய வேண்டும் என்ருல் அவன் மனத்தாலும், வாயாலும், ஏன் கையாலும் செய்த பாவங்கள் நிவர்த்தியாக வேண்டும்.

தனிமையில் அவன் சிந்தனேயில் லயித்தபோது சிறு சிறு குற்றங்களும் ஒரு சில பெரிய தவறுகளும் கண் முன் அன்று நடந்த நிகழ்ச்சிகள் போலத் தோன்றின.

எந்தக் குற்றத்தை முதலில் எடுத்துக் கொண்டு பரிகாரம் செய்து மன்னிப்பைப் பெறலாம்?

அன்று வியாழக்கிழமை. இதே ஒரு வியாழக்கிழமை அன்றுதான்—நன்ருக நினைவு இருக்கிறது, '1976'ம் ஆண்டு செப்டம்பர் 2'ம் தேதி ஜானகி தன் வயதான தந்தையையும் அழைத்துக்கொண்டு வந்தாள்.

## 1976-செப்டம்பர்- 2-20

ஊட்டியின் இரண்டாவது ஸீஸன் ஆரம்பித்து விட்டது. கோடையைவிட ரம்யமான பருவம். ஏரியில் நீர் நிரம்பி வழிந்தது. குதிரைப் பந்தய மைதானம் மரகதப் பச்சையில் பளபளத்தது. ஆள் கூட்டம் அதிக மில்லாததால், ஊட்டியின் அமைதி குலையவில்லை. உண்மை யாகவே ஊட்டியை அனுபவிக்க வேண்டும், வேடிக்கை பார்க்க வரக்கூடாது என்ற எண்ணமுள்ளவர்களே வந்திருந் ததால் தெருக்களில் நெரிசல் இல்லை.

அன்று டாக்டர் கோபிநாத்துக்கு ஆபரேஷன் ஏதும் இல்லை. சாரிங் கிராஸ் அருகே குன்னூர் பாதை துவங்கும் சந்திப்பில் ஒரு சிறிய, ஆனல் சிறந்த காப்பி ஹவுஸ் உண்டு. வறுத்த முந்திரிப் பருப்பு விசேஷம். டாக்டர் கோபிநாத்துக்கு முந்திரிப் பருப்பு என்ருல் உயிர். சளைக்காமல், ஒவ்வொரு வாய் காப்பிக்கு இரண்டிரண்டு பருப்புகளாக, கையில் ஒரு தினசரியை வைத்துக் கொண்டே சாப்பிடுவான். காலையில் ஒன்பது மணிக்குச் சென்ருல் பத்து மணி வரை ஒரே யுத்தம்தான். குறைந்தது நான்கு கோப்பை காப்பியும் நான்கு ப்ளேட் பருப்பும் காலியாகும்.

அன்று பத்து மணிக்கு அவன் காப்பி ஹவுஸி லிருந்து வெளியே வந்து பொட்டானிக்கல் கார்டன்ஸை நோக்கி நடந்தான். என்னதான் நாக்குக்கு ருசியாக இருந் தாலும், சாப்பிட்ட பின் ஒரு அசௌகரியம் ஏற்பட்டது. பூங்காவில் சிறிது நேரம் நடந்தால் வயிற்றின் கனம் குறைந்துவிடும் என்று தோன்றியது.

வெய்யில் இதமாக, ஒரு தண்மையுடன் இருந்தது. நடந்ததில் கால் வலிக்கவில்லை என்ருலும் கோபிநாத்துக்கு அலுப்பு ஏற்பட்டது. இயல்பாகவே அவனுக்குப் பொறுமை கிடையாது. அனுவசியமாக அவசரப்படுவான். மனம் உடலை விட வேகமாகக் கண்ட கண்ட திசைகளில் ஓடிக்கொண்டே யிருக்கும்.

ஒரு சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்தான். அவன் உட்காரக் காத்திருந்தவளைப்போல ஒரு பெண் அவனை நோக்கி வந்தாள். அவளுடன் இருந்த வயதான ஒரு மனிதர் கீழே புல்தரையில் உட்கார்ந்திருந்தார்.

''குட் மார்னிங் டாக்டர்,'' என்று ஆரம்பித்தாள்.

''குட் மார்னிங்,'' என்றான் கோபிநாத்.

''உங்களைப் பார்க்க நானும் என் அப்பாவும் நர்ஸிங் ஹோமுக்குப் போனோம்...டாக்டர் முரளிதான் இருந்தார்...''

''இவர்தான் உன் அப்பாவா?''

''ஆமாம்.''

''என்ன உடம்பு?''

''அவர் உடம்புக்கு ஒன்றுமில்லை. எனக்குத் தான்...'' அவள் இழுத்தாள்.

''நாம இப்ப கார்டன்ஸ்லே இருக்கோம்...ஏன் நர்ஸிங் ஹோமுக்குப் போகக்கூடாது?''

''போகலாம். ஆனா அதற்கு முன்னாடி உங்க கிட்டே ஒரு விஷயத்தைச் சொல்லிடறேன்...அதுக்கு அப்புறம் அவசியம் இருந்தால் நர்ஸிங் ஹோமுக்குப்போவோம்.''

''என்ன?''

''எனக்கு உடனடியா ஆபரேஷன் செய்தாகணும். உங்க கையாலே அது நடக்கணும்னு அப்பா ரொம்ப ஆசைப் படறார். அவர் ஆசை நிறைவேர்றதும் நிறைவேறாததும் உங்க கையிலே இருக்கு.''

''புரியும்படியா சொல்லு.''

''சாதாரணமா இந்த ஆபரேஷனுக்கு ஐந்நூறு ரூபாய் ஆகும்னு தெரிஞ்சுண்டேன். இப்ப எங்க கையிலே அம்பது ரூபா இருக்கு. ஆறு மாசத்திலே என் அப்பாவுக்கு கிராடியூட்டி, பிராவிடண்ட் ஃபண்ட் எல்லாம் வந்துடும். உங்க டாக்டர் ஃபீஸை அப்புறம்தான் கொடுக்க முடியும்.''

''ஏன் ஆபரேஷனை ஆறு மாசத்துக்கு ஒத்திப் போட முடியாதா?''

''முடியும். ஆறு வயசிலிருந்தே ஒத்திப் போட்டுண்டே வந்த கேஸ்தான். ஆனா இப்பவே செய்தாகணும்ங்கற நிலைமை பிறந்துடுத்து. இன்னும் புரியும்படியா சொல்லணும்னா, எனக்குக் கல்யாணம் நிச்சயமாயிடுத்து. அத்தை பிள்ளை. நைஜீரியாவிலே இருக்கார்...இன்னும் ரெண்டு மாசத்திலே கலியாணம் செய்துக்க வரார்....''

கோபிநாத் ஒரு கணம் யோசித்தான்.

''சாயங்காலம் நான்கு மணிக்கு நர்ஸிங் ஹோமுக்கு வா.''

''தாங்க்ஸ், டாக்டர். நீங்க ஃபீஸ் விஷயத்திலே ரொம்பக் கண்டிப்புன்னு பயமுறுத்தினு...அதை நம்பினது எவ்வளவு தப்புன்னு இப்பப் புரியுது.''—அவள் சொல்லி விட்டு அப்பாவை நோக்கிச் சென்ருள்.

வேண்டுமென்றுதான் அவளை நான்கு மணிக்கு வரச் சொன்ஞன் கோபிநாத். முரளி ஒரு அவசர வேலையாக மேட்டுப்பாளையம் போகிருன். ரம்யா சாயங்கால வேளை களில், ஆபரேஷன் இருந்தாலொழிய வரமாட்டாள். மாடி யில் ஆபரேஷன் தியேட்டருக்குப் பக்கத்தில் ஒரு அறை இருக்கிறது. அவளுடைய உடலை அவன் அங்கே பரிசோதிக்க லாம். அவளுடைய தந்தையைக் கீழேயே உட்கார்த்திவிட லாம்.

தொழிலில் அவன் கெட்டிக்காரஞக இருந்தாலும் தொழில் முறைகளில், தான் கண்ணியமாக நடந்து கொள்வ தில்லை என்பதை அவன் எப்போதாவது நினைத்துக் கொள் ளுவான். மனச்சாட்சி லேசாக உறுத்தவும் செய்யும். ஆனல் உடனுக்குடனே மனச்சாட்சியை மூட்டைகட்டி வைத்து விடுவான். மனச்சாட்சிக்கு அதிக இடம் கொடுத்தால் அப்புறம் எஞ்சி நிற்பது மன உளைச்சலும் தூக்கமின்மையும் தான். அவனுக்கு மன உளைச்சல் பிடிக்காது, தூக்கம் பிடிக்கும்.

சரியாக நான்கு அடிக்க ஐந்து நிமிடங்கள் இருக்கும்போது அவள் தன் தந்தையுடன் வந்தாள். அவர் வெராந்தா பெஞ்சியில் உட்கார, அவள் அவனுடைய அறை யினுள் பிரவேசித்தாள்.

''ப்ளீஸ் ஸிட் டௌன்.''

''தாங்க்ஸ் டாக்டர்.''

''உன் பெயர்?''

''ஜானகி. கே. ஜானகி.''

''எங்கே இருக்கே?''

''கேத்தியிலே.''

''அப்பாவுக்கு என்ன வேலை?''

''ஒரு கம்பெனியிலே குமாஸ்தா...ஆறு மாசத் திலே ரிடயர் ஆகிருர்...''

''ஓ. கே. இப்ப விஷயத்துக்கு வருவோம். என்ன ஆபரேஷனுக்காக வந்திருக்கே...''

''வலது உள் தொடையிலே ஒரு கட்டி. வயசு

நாலோ அஞ்சோ...ஒரு சின்ன கோலி மாதிரி ஆரம்பிச்சுது...இப்போ ரொம்பப் பெரிசா, ஒரு பொருவிளங்கா சைஸுக்கு வளர்ந்திருக்கு...''

''பொருவிளங்காய்க்கு ஸ்டாண்டர்ட் சைஸ் கிடையாது. ஒவ்வொரு வீட்டிலே ஒவ்வொரு சைஸா இருக்கும்...'' டாக்டர் கோபிநாத் சிரித்தான்.

ஒரு கணம் யோசித்த ஜானகி, ''ஒரு டென்னிஸ் பந்தைவிட ஒரு சுற்றுச் சின்னதா இருக்கும்னு வைச்சுக்குங்கோ,'' என்றாள்.

''ட்ரபிள் கொடுக்கிறதா?''

''ட்ரபிள் கொடுக்கிறதுன்னு சொல்ல முடியாது... வேகமாக நடக்கிறப்போ கொஞ்சம் வலிக்கிறது. சில சமயங்களிலே கால்களைச் சேர்ந்து நிக்கறப்போ, கட்டி இடது தொடையில் இடிக்கிறது...''

''அப்படியே இருந்துட்டுப் போகட்டுமே...''

''இருக்கலாம். ஆனா எனக்கு கலியாணம் ஆகப் போகிறது. என் கண்ணுக்கே, அசிங்கமா அவலட்சணமா இருக்கிற கட்டி என் ஹஸ்பெண்ட் கண்ணிலே படப்படாதுன்னு எனக்கு ஆசை...''

''இதை ஒரு லேடி டாக்டரிடம் காட்டணும்னு உனக்குத் தோணலியா?''

''காட்டினேன், டாக்டர் சாரதா பார்த்தாள்.''

''கோயமுத்தூர்லேயா?''

''ஆமாம்.''

''என்ன சொன்னாள்?''

''பயாப்ஸி எடுத்தாள். ஒரு ஊமைக்கட்டிதான். இதுபாட்டுக்கு இருந்துட்டுப் போகட்டும்னு சொன்னா!''

''ஆபரேஷன் வேண்டாம்னு அவ முடிவு செய்ஞ்சதுக்கு இதுதான் காரணமா?''

''இன்னொரு காரணமும் சொன்னா.''

''அது என்ன?''

''கட்டி இரத்தக் குழாயிலிருந்தோ அல்லது நரம்பிலிருந்தோ கிளம்பி இருந்தா, ஆபரேஷன்லே டேஞ்சர் இருக்கலாம்னு சொன்னா...ஆனா எனக்குத் தோணறது. இது ஒரு சாதாரண காளான், இதை வெட்டி எறிவதிலே ஒரு ஆபத்தும் இல்லேன்னு.....''

''எனக்கும் அப்படித் தோணினாத்தான் ஆபரேஷனைப்பற்றி நான் நினைக்க முடியும். மாடிக்கு வா... எக்ஸாமின் பண்ணிடறேன்.''

ஜானகி தயங்காமல் எழுந்தாள்.

''இப்ப எதுக்கும் பணம் தர முடியாத நிலையிலே இருக்கேன், டாக்டர்.''

''பணப் பிரச்னையை இப்ப ஏன் எடுக்கறே..'' என்று சொன்ன அவன் சிரித்துக்கொண்டே, ''உங்கிட்டேந்து எப்படி வாங்கறதுன்னு எனக்குத் தெரியும்!'' என்றான்.

மூன்றும் நாள் ஆபரேஷன் நடந்தது.

பத்தாம் நாள் தையலைப் பிரித்தார்கள்.

''ஜானகி!''

''யெஸ் டாக்டர்!''

''இனிமே நீ எப்ப வேண்டுமானாலும் டிஸ்சார்ஜ் வாங்கிண்டு போகலாம்.''

''அப்பா நாளன்னிக்கு வரேன்னு போயிருக்கார்...அவர் வரட்டும்.''

''அடடா, நான் உன் அப்பாவையே மறந்துட்டேன்..அவர் எப்போ போனார்னுகூட எனக்குத் தெரியாது!''

''ஆபரேஷன் நடந்த மறுநாளே போயிட்டார். உங்க பில் எவ்வளவுன்னு சொன்னா சௌகரியமா இருக்கும்.....''

''இன்னிக்கு சாயங்காலம், நீ என் வீட்டுக்கு வறே ஜானகி. அப்ப சொல்றேன்.''

''எதுக்கு டாக்டர் நான் உங்க வீட்டுக்கு வரணும்?''

''ஒரு சின்ன பார்ட்டி. இந்த ஆபரேஷன் பேசறதுக்கு ரொம்ப எளிது. ஆனா செய்யறபோதுதான் அதன் கஷ்டம் தெரியும். கத்தி நரம்பிலே படக்கூடாது. ரத்தக் குழாயைத் தொடப்படாது...எனக்கே பெருமையா இருக்கு, இதை வெற்றிகரமா முடிச்சேன்னு...''

''உங்க வெற்றியைக் கொண்டாடப் போறீங்களாக்கும்.''

''ஆமாம்.''

''உங்க ஹவுஸ் எங்கே, டாக்டர்?''

''இதே மைசூர் ரோட்டிலே. ஒரு அரை கிலோமீட்டர் நடந்தா, ஒரு இறக்கம் வரும். இறக்கத்திலே ஒரு டீ கடையும் டெய்லர் ஷாப்பும் இருக்கு. அதை ஒட்டினால்

போல, ஒரு மேடு. மேட்டுமேலே ஒரு பச்சைக்கட்டிடம். 'க்ரீன் ஹவுஸ்'னு பெயர் இருக்கும். என் பெயர்ப் பல கையும் இருக்கும்.''

''எத்தனை மணிக்கு டாக்டர்?''

''ஆறு மணி.''

''வரேன் டாக்டர்.''

## 1976 – செப்டம்பர் – 20

ஜானகி சொன்னபடி வந்து சேர்ந்தாள்.

''நடந்து வந்தாயா?''

''ஆமாம். மேட்லே ஏர்றப்போ கொஞ்சம் வலிச்சுது. மற்றபடி ஒரு அசௌகரியமும் இல்லே... டாக்டர். உங்க ஒய்ஃப் எங்கே? உள்ளே வேலையா இருக் காங்களோ? பாவம், எனக்காக என்னன்னமோ டிபனெல்லாம் பண்றுங்க போலிருக்கு!''

கோபிநாத் சிரித்தான்.

''எனக்கு இன்னும் கலியாணமாகவில்லை.''

''அப்படியா? ஆச்சரியமா இருக்கே! காப்பி ரெடியா? இருட்டறதுக்குள்ளே நர்ஸிங் ஹோமுக்குத் திரும் பணும்...''

''ஏன் அவசரப்படறே...நான் துணை வரேன்... இல்லாமப்போனு, நீ இங்கேயே தூங்கலாம்.''

''பாவம், உங்களுக்கு ஏன் சிரமம், டாக்டர்.''

''ஜானகி!''

''என்ன டாக்டர்?''

''என்னை நீ டாக்டர் டாக்டர்னு வெறும் டாக் டராகவேதான் மதிக்கிறே!''

''நீங்க டாக்டர்தானே!''

''இந்த டாக்டருக்குள்ளே ஒரு மனிதனும் இருக் கான் என்கிறதை நீ மறந்துட்டே...''

''என்னை நான் உங்க கிட்டே ஒப்படைக்கறப்போ நீங்க மனிதனு என் மனசுக்குப் படலே...ஒரு டாக்டரா கத்தான் பட்டது...''

''உன்கிட்டே பேசிப் புண்ணியமில்லை.''

ஜானகி சிரித்தாள். பிறகு, ''பில் எவ்வளவு டாக்டர்?'' என்றுள்.

''பணக்காரனு இருந்தா மூவாயிரம் சார்ஜ் பண்ணுவேன். உனக்காக இரண்டாயிரம்.''

''இரண்டாயிரமா!''

''ஆமாம். ஏன் மலைக்கிறே?''

''ஐநூறு அறுநூறுக்கு மேலே போகாதுன்னு நினைச்சேன். டாக்டர்...இது ஒரு ஸிம்பிள் ஆபரேஷன் தானே, எல்லாம் சேர்ந்து அவ்வளவுதான் வரும்னு எண்ணினேன். இரண்டாயிரம்னு ரொம்பக் கஷ்டம் டாக்டர்! அப்பாவுக்கு பிராவிடண்ட், கிராடியுடி எல்லாம் சேர்ந்து நாலாயிரம்கூட வராது...அதிலே இரண்டாயிரம் போயிட்டா கல்யாண செலவுக்கு ரொம்ப சிரமமாப் போயிடும்...கொஞ்சம் குறைச்சுக்க முடியாதா...இல்லேன்னு, கலியாணமானப்புறம் நைஜீரியா போய், அவர் கிட்டேந்து வாங்கி அனுப்பறேன்...''

கோபிநாத் சிரித்தான்.

''என்ன டாக்டர்?''

''நீ பணமாத்தான் தரணும்னு இல்லே.''

''அப்படீன்னு? அதுக்கு பர்த்தியா தர என் கிட்டே என்ன இருக்கு. கழுத்திலே நாலுபவுன் சங்கிலி. கையிலே ஒரு ஜதை வளையல்...இரண்டாயிரம் தேறலாம். அதைக் கழற்றித் தரச் சொல்றேளா.''

''உன் பொன்னும் பணமும் எனக்குத் தேவை இல்லே...''

''அப்போ?'' முதன்முறையாக, ஜானகியின் முகத்தில் ஒரு மாற்றம் தெரிந்தது.

''நான் வர்றேன் டாக்டர்.''

''ஃபீஸ் தராம போனு எப்படி?''

''என் சங்கிலியையும் வளையலையும் கழட்டிக் கொடுத்துடறேன்.''

அவள் வளையலைக் கழற்றினுள்.

''உன் நகை எனக்கு வேண்டாம்.''

''நீங்க என் கட்டியை வெட்டி எறிஞ்சதுக்கு ரொம்ப நன்றி...தயவு செய்து என்னையும் வெட்டி எறிய ட்ரை பண்ணுதீங்க...''

அவளுடைய அதிர்ஷ்டம், திடீரென்று வாசற் கதவை யாரோ தட்டினுர்கள். மின்சார மணியின் ஒலியும் எழுந்தது.

''இதோ வரேன்!'' என்று கத்தினுள், ஜானகி.

கோபிநாத் செயல் இழந்து நின்றான். அவனுடைய ஏமாற்றம் ஆத்திரமாகப் பீறிட்டது.

டாக்டர் முரளி உள்ளே பிரவேசித்தான். அப்போது கோபிநாத்தின் மனம் அவனை சபித்தது.

ஜானகி ஒரு தடவை முரளியை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ''ரொம்ப தாங்க்ஸ், டாக்டர், சரியான வேளைக்குத்தான் வந்திருக்கிறீர்கள். உள்ளே காப்பி ஆறிப் போகிறது!'' என்றாள். அடுத்த வினாடி அவள் வாசலை நோக்கி ஓடினாள்.

முரளி, அவள் இறக்கத்தில் ஓடி. மேட்டில் ஏறி பாதையை அடையும்வரை பார்த்துவிட்டு, கோபிநாத்தைப் பார்த்தான்.

''என்னடா விஷயம்?''

''அவள் ஒரு லூஸ்.''

''என்ன சொல்றே?''

''பில் பணம் எவ்வளவுன்னு கேட்டா... ஸிக்ஸ் ஹண்ட்ரட்னு சொன்னேன்...பணத்துக்கு பதிலா வேறு ஏதானும் தரலாமான்னு கேட்க வந்தா!''

''என்ன ஒரு உத்தேசமாம்.''

''ஜானகி மாதிரிப் பெண்கள் என்னை மாதிரி டாக்டருக்கு எதைத் தா முன் வருவா?''

''நீ என்ன சொன்னே?''

''ஓங்கி அறையலாம்னு இருந்தேன்...ஏன் கையையும் ஓங்கினேன். அப்பத்தான் நீ கதவை இடிச்சே!''

''ஓ ஐ ஸீ! அவ பேசின பேச்சையும், ஓடற ஓட்டத்தையும் பார்க்கப்போ, நான் நினைச்சதே வேறே.''

''இப்ப பிளேட்டை நான் மாத்தேறேன்னு நினைக்கிறியா?''

''உன் பெர்ஸனல் மேட்டர்ஸைப் பத்தி எனக்கு என்ன கவலை? உன்னைப் பார்த்துக் கொள்ள உனக்குத் தெரியும்!'' என்றான் முரளி.




கோபிநாத்தின் அற்பகுணம் அவனுள்ளேயே ஒரு ரகசியமாகப் புதைந்திருந்தது. ஜானகி அவன் கையை

விட்டு நழுவிப்போனது வெறும் ஏமாற்றமாக மட்டும் இருக்கவில்லை. வஞ்சம் தீர்க்கும் எண்ணத்தில் அது அவனை இழுத்தது. எப்படி வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவது. இரண்டாயிரம் ரூபாய்க்கு ஒரு பில்லை அனுப்பினால் அவள் எப்படியாவது சிரமப்பட்டுக் கொடுத்து விடுவாள். அவன் மனத்தின் ரௌத்திராகாரம் அதில் குறைந்து போய்விடாது. அவள் கஷ்டப்பட வேண்டும். அதைக் கண்டு அவன் ரசிக்க வேண்டும் மகிழவேண்டும். என்ன வழி?

ஜானகியின் சந்தோஷத்தைக் குலைக்க அவனுக்கு ஒரு வழிதான் புலப்பட்டது. புலப்பட்ட வழியில் செல்ல அவனுக்கு சில தகவல்கள் தேவைப்பட்டன. சீனுமணி சமய சஞ்சீவியாக வந்து வாய்த்தான்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒருநாள் சீனுமணி செய்தியுடன் வந்தான். ஜானகியை மணக்க இருக்கும் அவளுடைய அத்தை பிள்ளை நைஜீரியாவிலிருந்து வந்து விட்டதாகவும், தற்போது கோத்தகிரியில் இருப்பதாகவும் கூறினான். ஏன் டாக்டர் இத்தகவல்களைக் கேட்கிறார் என்று சீனுமணிக்குத் தெரியாது. நைஜீரியாபற்றி ஏதோ விசாரிக்கத்தான் கேட்கிறார் என்று நினைத்தான்.

இன்னும் சில நாட்களில் ஜானகிக்குத் திருமணம் ஆகிவிடும். அவளுடைய செழுமையான உடலை—அவன் அனுபவிக்க நினைத்த பெண் பிண்டத்தை—இன்னொருவன் உரிமையோடு அனுபவிக்கப்போகிறான்!

இந்த கற்பனை கோபிநாத்தின் இரத்தத்தைக் கொதிக்கவைத்தது. அவனுக்கு அளிக்காததை ஜானகி இன்னொருவனுக்கு அளிப்பதா? அவனை விட அந்த இன்னொருவன் எந்த விதத்தில் மேம்பட்டவன்?

அற்ப குணம் புற்றிலிருந்து சீறி எழும் பாம்பு போல படமெடுத்தது.

நைஜீரியா மாப்பிள்ளை நம்பும்படியாக கதையைத் திரித்துவிட வேண்டியதுதான். ஜானகியின் ஆபரேஷன் நடந்த உண்மை. அதற்கு அவள் பணம் கொடுக்காததும் ஆஸ்பத்திரி புத்தகங்கள் தெளிவாக்கக் கூடிய உண்மை. இந்த இரு உண்மைகளை ஒரு பொய்யுடன் இணைத்துவிட்டால் பொய்யே உண்மையாக மாறிவிடும்.

அவன் அவளிடம் கேட்டதை, அவள் அவனிடம் கேட்டதாக மாற்றிவிட்டால்? ஏற்கனவே முரளியிடம் அன்று ஜானகி வீட்டைவிட்டு விரைந்தபின் அவள் ஏன் அப்படி ஓடுகிறாள் என்று காரணம் சொல்லியிருக்கிறான்.

ஒரே பொய்யைத் திருப்பித் திருப்பி, அழுத்திச் சொன்ஞல், அது மெய்யாகிவிடுமே! முரளியிடம் அன்று பொய் சொன்னது இப்போது எவ்வளவு நல்லதாகிவிட்டது.

அவன் ஒரு சின்னஞ்சிறு அனுமதேயக் கடிதத்தில் எழுதும் விஷயத்தை நைஜீரியா பிள்ளை நம்பலாம். அதனுல் அவனுடைய மனத்தில் சந்தேக விதை கண்டிப்பாக ஊன்றி விடும். கல்யாணத்தைப்பற்றி மேலும் மேலும், யோசிக்கத் தூண்டும்,

ஜானகி, ஒரு கை மாறிய பொருள்தான் என்ற எண்ணம் சந்தேகம் ஊன்றிய உள்ளத்தில் எழுந்துவிடும்.

அதன் பின்?

ஜானகிக்குக் கல்யாணம் நடக்காது. நிச்சயித்த கல்யாணம் நின்றுபோனுல் அப்புறம் எந்த வரனும் எளிதில் வராது! முடிவு? ஜானகி கண்ணீரும் கம்பலையுமாக அலை பாய்வாள்! அதுதானே கோபிநாத்தும் வரும்புவது?

கோபிநாத்தின் சூழ்ச்சி அவன் கணக்கிட்ட படியே பலித்தது.

அத்தைபிள்ளை, தாலி கட்டாமலேயே நைஜீரியா திரும்பினுன்.

அதன் பிறகு ஒருநாள் கோபிநாத் கேத்திக்குச் சென்றுன். அவனைக் கண்டதும் ஜானகி தலைகுனிந்தாள்.

''உன் கல்யாணம் நின்னு போச்சுன்னு கேள்விப்பட்டேன்.''

''நிறுத்தினதே நீங்கதானே?''

''இப்பப் புரிஞ்சுதா நான் எப்படிப்பட்டவன்னு?''

''உங்களைப் போல உள்ளவர்கள் ஏழைகளுக்கு உதவாமல் இருக்கலாம்...ஆனுல் அவர்களுடைய வாழ்க்கையை குலைச்சுத்தான் ஆகணுமா?''

''ஏழை ஏழையின் ஏழ்மையோடு அடங்கிப் போனுல் ஏன் வாழ்க்கை குலையப் போகிறது?''

''உங்க லெட்டரை அவர் என்னிடம் காட்டினுர். எனக்கு ஆபரேஷன் நடந்ததான்னு கேட்டார். ஆமாம்னேன்...அது ஒரு அபார்ஷன் கேஸ்னு நீங்க எழுதிட்டீங்க... அதோடு நீங்க நிக்கலை... பீஸுக்கு பதிலா என் உடம்பை நான் கொடுக்க முன்வந்ததா எழுதினீங்க.. உங்களாலே நல்ல உபகாரம்!''

''இப்ப அப்பாவுக்கு வேலை இல்லை போலிருக்கே?''

''இல்லை. சந்தோஷமா?''

''நீ எங்கேயோ வேலை செய்து பிழைக்கிறேன்னு கேள்விப்பட்டேன்.''

''மகிழ்ச்சியா?''

''என்னுல் உன் கதையை மாத்த முடியும், ஜானகி!''

''அதுக்கு நீங்க என்ன விலை கேட்கப் போறீங்கன்னு எனக்கும் தெரியும்.''

''அப்போ சரின்னு சொல்லிட வேண்டியது தானே?''

''சொன்னு அப்புறம் உங்களுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? தெரு நாய்க்கும், யஜமான விசுவாசமுள்ள வீட்டு நாய்க்கும் வித்தியாசமில்லையா...''

''என்னைத் தெருநாய்னு சொல்றே?''

''தப்பா?''

''என்னை ஒழுக்கம் கெட்ட நாய்னு ஒருத்தி சொன்னு...இப்ப அவ பம்பாய்லே அலையறு! அதுவும் எப்படி? நான் கொடுத்த சுமையாலே......''

''நான் சுமை இல்லாமலே அலைஞ்சுக்கறேன்...''



## 1978 - பிப்ரவரி - 5

டாக்டர் கோபிநாத் அதிகாலையில் எழுந்தான்.

''நாம இன்னிக்கு கோயிலுக்குப் போயிட்டு வருவோம்,'' என்றுள் சாருமதி.

''அதுக்கு முன்னடி நான் கேத்தி வரைக்கும் போய் வருகிறேன், சாரு.''

''அவசர வேலையா?''

''ஆமாம்.'' அவன் புறப்பட்டான்.

அவன் செய்த முதல் குற்றம் அவனுடைய நடைமுறை வாழ்க்கையில் ஏற்பட்டது. அதற்குப் பிராயச்சித்தம் செய்து, சாருமதியை மீட்டுக்கொண்டு விட்டான். அவன் ஜானகி விஷயத்தில் செய்த தவறு

வெறும் நடைமுறை வாழ்க்கைத் தவறு அல்ல. புனித மான வைத்தியத் தொழிலைக் கேவலப் படுத்தும் வகை யில் செய்த குற்றம். டாக்டர் என்ற முறையில், தலை குனிய வேண்டிய தவறு. தன் தொழில் மூலம், அதில் அவனுக்கு இருந்த திறமையின் மூலம் தவறு செய்திருக் கிறான். இதற்குப் பரிகாரம் தேடி ஆக வேண்டும்?

எப்படி?

இனி அவன் வார்த்தையைக் கேட்டு, நைஜீ ரியா பிள்ளை தாலிக் கயிற்றுடன் ஓடி வருவானா? அவன் தான் அன்று பொய்க் கடிதம் எழுதினதாக இன்று அவனி டம் சொன்னால் எப்படி அந்தப் பிள்ளை நம்புவான். டாக் டருக்கும் ஜானகிக்கும் ஏதோ தொடர்பு இருக்கிறது, அவர்கள் இருவரும் சேர்ந்து நாடகமாடுகிறார்கள் என்று தானே அவனுக்கு நம்பத் தோன்றும்?

குழப்பமான நிலையில் அவன் கேத்தியை அடைந் தான்.

ஜானகி கதவைத் திறந்தாள்.

''ஓ, டாக்டரா...வாருங்கள். என்னை மறந்து போயிருப்பீங்கன்னு நினைச்சேன்.''

அவளுடைய சரளமான பேச்சு அவனை மேலும் குழப்பியது.

''உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்.''

''உட்காருங்கள்...ஆமாம் நான் ஒண்ணு கேள் விப்பட்டேன், உண்மையா?''

''என்ன?''

''உங்களுக்குக் கை சரியாயில்லை. தொழில் நடத்த முடியாமல் கஷ்டப்படறீங்கன்னு...வாஸ்தவமா?''

''ஆமாம். யார் சொன்னா?''

''ஊர்லே பேசிட்டா...அது சரி. ஏதாவது வைத்தியம் பண்ணிக்கறீங்களா, இல்லையா!''

''இது வைத்தியத்திலே குணமாற வியாதி இல்லை...''

''ஏப்படீன்னா?''

''பிராயச்சித்தத்திலேதான் குணம் ஆகணும்... உனக்கு நினைவிருக்கா, என்னை ஒழுக்கம் கெட்ட நாய்னு சொன்ன ஒரு பெண் பம்பாய்லே ஒரு சுமையோடு அலை யறான்னு நான் உன்கிட்டே வீம்பாப் பேசினேன்.''

''ஆமாம், அவளுக்கு என்ன?''

"அவள் இப்போ என் மனைவியா, நான் கொடுத்த சுமை என் குழந்தையா, இருக்கா!"

"அப்படியா?"

"அவளுக்கு இழைச்ச அநீதியிலே என் கை விழுந்து போச்சுன்னு நினைச்சேன். இப்ப அவ வந்துட்டா...ஆனு என் கை திரும்ப வரலே...அதனுலே, அதனுலே....."

"எங்கிட்டே வந்தீங்களாக்கும், டாக்டர்!"

"நான் இப்ப டாக்டர் இல்லே. ஒரு அற்பமான மனிதன்... உனக்கு தீங்கு இழைச்ச ஒரு பாவி... ஜானகி, நீதான் இப்ப என்னைக் காப்பாத்தணும்...என் கை விளங்கலேன்னு, என் வாழ்க்கையே அர்த்தமில்லாமப் போயிடும்!"

"நான் என்ன செய்யணும்?"

"என்னை மன்னிக்கணும்!"

"நான் மன்னிக்கறதாலே, உங்க கை பழைய படி ஆகும்னு நான் மனசார உங்களை மன்னிக்கிறேன்..."

"வாழ வேண்டிய உன்னை நான் புழுவா சாக அடிச்சேன், ஜானகி! ஆனு நீ மன தாராளத்தோடே என்னை மன்னிக்கிறே!"

"நான் என்னிக்குமே டாக்டராத்தான் உங்களை மதிச்சேன். இப்ப நீங்க அந்த ஸ்தானத்திலேந்து இறங்கி வர்றதைப் பார்க்க என்னுல் சகிச்சுக்க முடியலே...எனக்கு ஒரு சின்ன உபகாரம் செய்ய முடியுமா?"

"என்ன?"

"நைஜீரியாவுக்கு உங்க கையால் நடந்த உண்மையையெல்லாம், சத்தியப்பிரமாணம் செய்து கடிதம் எழுதணும்!"

"இன்னிக்கே, இப்பவே எழுதறேன்... என் கைக்கு வந்திருக்கிற ஆபத்தையும் எழுதறேன்....என் லெட்டரைப் பார்த்ததும் உன் அத்தை பிள்ளை ஓடோடி வருவான்! உன் கழுத்தில் தாலியைக் கட்டுவான்!"

"நான் என் கழுத்தில் தாலி ஏறணும்ங்கறதுக்காக லெட்டர் எழுதச் சொல்லவில்லே...என்னைப்பற்றி சந்தேகமும் அபவாதமும் அவர் மனசிலிருந்து அகலணும். அதுதான் நான் வேண்டுவது!"

கைப் பெட்டியிலிருந்து ஒரு காகிதத்தையும் பேனுவையும் எடுத்த கோபிநாத் உணர்ச்சி வேகத்துடன் எழுத ஆரம்பித்தான்.

அவனைத் தான் மன்னித்து விட்டதற்கு அடையாளமாக, ஜானகி ஒரு தட்டில் பழங்களும் ஒரு தம்ளரில் டீயும் கொண்டுவந்து அவன் முன் வைத்தாள்.

கோபிநாத் மகிழ்ச்சியோடு ஊட்டி திரும்பினான். ஆபரேஷனுக்கு ஆயத்தமானான். கடைசி நிமிடத்தில் மறுபடி கையில் வலி வந்துவிட்டது.

அவன் அதிர்ந்து போனான். பிறகு, நண்பனும் கூட்டாளியுமான முரளிக்குச் செய்த மோசடியை அவனிடம் வெளியிட்டுப் பிராயச்சித்தம் செய்தான். அதற்கும் பயனில்லை.



## 1978 – மார்ச் – 10

முரளி ரம்யாவிடம் சொன்னான். "கோபிநாத் என்னைப் போன்ற நண்பர்களையும் விட்டு வைக்கவில்லை, பார்த்தாயா, ரம்யா!" என்று.

"நிஜமாவா?"

"இந்த மூணு வருஷத்திலே என்னைக் கரெக்டாக இருபத்திரண்டாயிரம் ரூபாய்க்கு ஏமாத்தியிருக்கிறான்... ஆட்டைக் கடிச்சு, மாட்டைக் கடிச்சு மனுஷனையே கடிச்ச கதை..."

"பணத்தைத் தந்தாரா?"

"ஆமாம்...முந்தாநாள் ராத்திரி. மணி பத்து. நான் உன்னைப்பத்தியே நினைச்சுண்டிருந்தேன்....."

"இது பொய்."

"உண்மை. நீ என்னிடம் முந்தாநாள் மத்தியானம் என் பேனாவை இரவல் வாங்கி, திருப்பித் தராமல்

போயிட்டே. அதனுலே உன்னைப் பத்தி நினைக்கும் படியா யிருந்தது...அப்ப திடீர்னு தூக்கி வாரிப் போடும்படியா அவன் வந்து சேர்ந்தான்.''

''உம். அப்புறம்?''

''முரளின்னுன். என்னடான்னு கேட்டேன். நட்புத்துரோகம் செய்திருக்கிறேன்னுன். யார் அந்த நண் பன்னு கேட்டேன் நீதான்னு சொன்னுன். என்னடா துரோகம்னு கேட்டேன். ஆஸ்பத்திரிக் கணக்கிலே தில்லு முல்லு செய்ஞ்சு, உன்னுடைய வருமானத்தைக் குறைச்சுக் காட்டினேன்னுன். அப்புறம் அழ ஆரம்பிச்சான்.....''

''கணக்கை ஒழுங்கா அப்பப்ப பார்க்காம மெத் தனமா இருந்ததுக்கு நீங்கதானே அழுதிருக்கணும்...''

''ஒருநாள் தனியா அழறேன். எப்படி கோபி நாத் கணக்கை தில்லுமுல்லு செய்தான்னு விசாரிச்சேன். வந்த ஃபீஸை பாதிக் குறைச்சானும். செலவை இரட்டிப்பா எழுதினுனும்.''

''சபாஷ்! அப்ப இன்கம்டாக்ஸ்காரனையும் ஏமாத்தியிருக்கணுமே!''

''கேட்டேனே! அதையும் கேட்டேன். அப்பத் தான் சர்க்காருக்குச் செய்ஞ்ச துரோகம் அவன் மனசிலே தைச்சுது.''

''தையலைப் பிரிக்கப் போயாச்சா?''

''முந்தாநாள் என்கிட்டே இருபத்திரெண்டா யிரத்தைக் கொடுத்தான். நேத்து இன்கம்டாக்ஸ் ஆபீஸர் காலிலே விழுந்து என்னென்ன பாக்கி உண்டோ அவ்வளவையும் கட்டிடறேன்னுன்...அவனுலே இப்ப எனக் கும் தொந்தரவாப் போச்சு.''

''ஏன்.''

''இருபத்திரண்டாயிரத்திலே நானும் வரி கட்ட ணுமே!''

''பெரிய ஆள்!''

''ஆனு ஒண்ணு. கோபிநாத் எப்படி தெரிஞ்சு பாபமெல்லாம் பண்ணினுனே, அதே மாதிரி மனசார பிராயச்சித்தமும் செய்ஞ்சிருக்கான்.''

''பம்பாய்ப் பெண்ணுக்கு விமோசனம். கேத்தி பெண்ணுக்கு விமோசனம். உங்களுக்கு வரும்படி. அர

சாங்கத்துக்கு வரும்படி...பேஷ் இன்னும் ஏதாவது இருக்கா...இல்லே ஆபரேஷன் தியேட்டர்லே யாரை யாவது படுக்கவச்சுட்டு, கத்தியை எடுக்க வேண்டியது தானா?''

''ரம்யா..அவன் அக்னியிலே குளிச்சு வெளியே வர இன்னும் கொஞ்ச நாள் ஆகும் போலிருக்கு!''

''உங்களுக்கு ஞாபகம் இருக்கா?'' என்று கேட்டாள் ரம்யா திடீரென்று.

''என்ன?''

''போன அக்டோபர் நவம்பர்லே ஊட்டியிலே புயல் அடிச்சுதே.''

''ஊட்டியிலே காத்து கொஞ்சம் பலமா அடிச்சாலே புயல்மாதிரித்தான் இருக்கும்...''

''அக்டோபர் 30 அன்னிக்கு ராத்திரி எட்டு மணி. மழை பெய்ஞ்சுண்டிருந்தது. காற்று சுழல் சுழலா அடிச்சுண்டிருந்தது. நரியின் ஊளை மாதிரிச் சத்தம் வேறே...அன்னிக்கு ஒரு அம்பது வயசுக்காரி ஆஸ்பத்திரிக்குச் சொட்டச் சொட்ட வந்தாளே?''

''ஆமாம். அதுக்கென்ன? நான்தான் அவளை முதல்லே கவனிச்சேன். ஆஸ்பத்திரி டவலைக் கொடுத்து உடம்பைத் துடைத்துக் கொள்ளச் சொன்னேன்... நீ கார்லே ஓடிப்போய் ஒரு மாற்றுப் புடவைகூட கொடுத்தே...ஆமாம் அவளுக்கென்ன?''

''அவ விஷயத்திலேயும் டாக்டர் கோபிநாத் தொழில் ரீதியா பாவம் செய்ஞ்சிருக்கார்.''

''எப்படி?''

''அவளுக்கு வயத்திலே கட்டி...''

''எஸ். இப்ப ஞாபகம் வர்றது. அவ மெட்ராஸ்லேந்து வந்தா...எக்ஸ்ரே ரிபோர்ட், பயாப்ஸி ரிபோர்ட், டாக்டர் சேஷாத்திரிங்கறவருடைய லெட்டர் எல்லாத்தையும் எடுத்துண்டு அவள் வந்தா.''

''நீங்களும் நானும் அன்னிக்கு ராத்திரி அவளை ஆஸ்பத்திரியிலே விட்டுவிட்டுத் திரும்பினோம்.''

''ஆமாம்.''

''அதுக்கப்புறம், ஒரு பேஷண்ட்டுக்கு ரொம்ப

அதிகமாயிருக்குன்னு கோபிநாத் பதினொரு மணிக்கு மழையையும், காற்றையும் லட்சியம் செய்யாமே ஆஸ்பத்திரிக்கு வந்திருக்கார்...மேரி சொன்னுள்.''

''அதனுலே என்ன?''

''அந்த அம்பது வயசுக்காரி கிட்டே நீங்க என்ன சொன்னீங்க?''

''என்ன சொன்னேன்?''

''சரியான அரணை. நாளைக்கு கார்த்தாலே இன்னொரு டாக்டர் வருவார், அவர் வந்து ஆபரேஷனைப் பற்றிச் சொல்லுவார்னு அவகிட்டே சொன்னீங்க. இப்ப ஞாபகம் வந்ததா?''

''ஆமாம். ஆனு மறுநாள் நான் அவளைப் பார்க்க வேயில்லை.''

''அவளுக்கு ஆபரேஷன் நடக்கவேயில்லை. டாக்டர் கோபிநாத் அவளை விரட்டி விரட்டி அடிச்சிருக்கார். நட்ட நடு ராத்திரியிலே குளிரும் காத்தும் மழையும் பாய்ஞ்சு பாய்ஞ்சு அடிக்கறப்போ. அவளை ஆஸ்பத்திரியை விட்டே துரத்தியிருக்கார்!''

''ஏன்?''

''தெரியாது. அன்னிக்கு ஒரு பெட்கூட காலி இல்லை. இவளுக்கு இடம் இல்லைன்னு போகச் சொன்னுரோ என்னவோ?''

''அப்ப எப்படி கோபிநாத் அவள் விஷயத்தில் பாவம் செய்ஞ்சவனு இருக்க முடியும்? நர்ஸிங் ஹோம்லே இடம் இல்லேன்னு அப்புறம் வரச் சொல்லாம என்ன செய்வதாம்?''

''ஆனு அதுக்கும் ஒரு வேளை, ஒரு முறைன்னு இல்லையா? கொட்டற மழையிலா விரட்டறது.''

''இது பெரிய பாவமா எனக்குப் படலே.''

''உங்களுக்கு இருபத்திரண்டாயிரம் வந்திட்டதோ இல்லியோ. இனிமே கோபிநாத் எது செய்ஞ்சாலும் உங்களுக்கு பாவமாப்படாது.''

## 1977 - அக்டோபர் - 30

இதுவரை கண்டிராத புயலில் ஊட்டி ஆடியது. டாக்டர் கோபிநாத் ஜன்னல் கதவுகளையெல்லாம் சாத்தி

விட்டுப் படுக்கை அறைக்கு வந்தான். அன்று காலே நஞ்சே கவுடருக்குச் செய்த ஹெர்னியா ஆபரேஷன் திருப்தி கரமாக முடிந்தாலும் அவரைப்பற்றி பயம் எழுந்தது. மனிதர் மயக்கத்திலிருந்து மீள நீண்ட நேரமாயிருக்கிறது. அதன்பின்னர் அவருக்கு ஜுரம் திடீரென்று தோன்றி யிருக்கிறது. இரத்த அழுத்தத்திலும் ஒரு மாற்றம். பெரிய பணக்காரர், உருளைக்கிழங்கு வியாபாரி, அவனுடைய நர்ஸிங் ஹோமில் மண்டையைப் போட்டுவிட்டால், அவனுடைய புகழில் விரிசல் ஏற்பட்டுவிடும். அப்புறம் பல பணக்காரர்கள் அவனிடம் ரணசிகிச்சை பெற்றுக் கொள்ளத் தயங்குவார்கள். அவன் அனுயாசமாக நஞ்சே கவுடருக்கு ஆபரேஷன் செய்துவிட்டு வெற்றியுடன் தியேட் டரைவிட்டு வெளியேறியது யாருக்கும் தெரியாது. அவர் இறந்து போனது மட்டும்தான் தெரியவரும். ஜுரத்துக்கும் பிளட் பிரஷருக்கும் என்ன காரணம் என்று அவனுல் ஊகிக்க முடியவில்லை. ஜுரத்தைக் கட்டுப்படுத்துவது எளிதுதான். ஆனுல் இரத்த அழுத்தத்தை அவன் எதிர்பார்க்கவில் லையே? அதுவுமல்லாமல், ஆபரேஷன் முடிந்து ஒன்று அல் லது ஒன்றரை மணி நேரத்தில் மயக்கம் தெளிந்துவிட வேண்டும். கவுடருக்கு ஏன் ஐந்து மணி நேரத்துக்கு பிரக்ஞை வரவில்லை?

அவன் மனம் குழம்பிக்கொண்டிருக்கையில், திடீரென்று போன் அலறியது.

''டாக்டர் கோபிநாத் ஹியர்.''

''மேரி பேசறேன் டாக்டர்.''

''என்ன?''

''நஞ்சே கவுடருக்கு டெம்பரேச்சர் 103!''

''இதோ வரேன்.''

''இந்த மழையிலே நீங்க ஏன் டாக்டர் சிரமப் படணும்? நீங்க இன்ஸ்ட்ரக்ஷன் கொடுங்க, நான் கவனிச் சுக்கறேன்...''

''நோ நோ...நான் வரேன். கவுடர் ஒரு முக்கியமான பேஷண்ட். நான் வர்ற வரைக்கும் ஐஸ்பேக் வைச்சுட்டிரு!''

''யெஸ் டாக்டர்.''

குடையை எடுத்துக்கொண்டு ரெயின் கோட்டை யும் போட்டுக்கொண்டு அவன் புறப்பட்டான். நான்கு அடி நடப்பதற்குள் அவன் குடையை மடக்க வேண்டியதா யிற்று. ஊளையிட்டுக்கொண்டு தாக்கும் புயல்காற்றில்

அவன் தரையிலிருந்து தூக்கி எறியப்படுவானோ என்று தோன்றியது. குடை எப்படிக் கையில், விரித்த நிலையில் நிற்க முடியும்? அவன் நடந்தான். புயல் போதாது என்று மழையும் பொழிந்தது. முகத்தில் மழை புலிப் பாதத்தால் அறைவது போல அறைந்தது. கண்களில் ஊசி ஊசியாகக் குத்தியது. இருட்டில் கண்ணை மூடிக்கொண்டு நடப்பதும் எளிதாக இல்லை.

ஏப்படியோ தட்டித் தடுமாறிக்கொண்டு நடந்து நர்ஸிங் ஹோமை அடைந்தான். மறுநாள் காலையில் ஒரு ஆபரேஷன் இருக்கிறது. நஞ்சே கவுண்டா ஒரு பெரிய பேஷண்ட். மழை காரணமாக அவருடைய உறவினர்கள் ஒத்திப் போடச் சொன்னாலும் சொல்லலாம்.

படி ஏறுகையில் வெராந்தா பெஞ்சியில் ஒருத்தி கூனிக்குறுகி உட்கார்ந்திருந்தாள். இரு கால்களையும் மடக்கி குத்திட்டு, முகத்தை இரு முழங்கால்களினிடையே புதைத்திருந்தாள். இரு கைகளும் கால்களைச் சுற்றிக் கோர்த்த படி இருந்தன.

அவளுடைய முகத்தைப் பார்க்க முடியாமற் போனாலும், அவளுடைய ஒடிந்து போகிறாற்போன்ற உடல் தோற்றத்தைக் கண்டு, அவள் வயதானவளென்று எண்ணத் தோன்றிற்று. ஆனால் அவள் கட்டியிருந்த பச்சைப்புடவையின் வழவழப்பு அவள் இளம்பெண்ணோ என்று நினைக்கத் தோன்றியது.

கோபிநாத் அவளை அப்புறம் கவனிக்கலாம் என்ற எண்ணத்தில் நஞ்சே கவுடர் படுத்திருக்கும் அறைக்கு விரைந்தான். அவர் முனங்கிக் கொண்டிருக்க, மேரி ரப்பர் பையை அவர் நெற்றியில் வைத்து வைத்து எடுத்துக் கொண்டிருந்தாள்.

நஞ்சேகவுடரின் நாடியைப் பார்த்த பின்னர் ஒரு இன்ஜக்ஷன் கொடுக்கத் தயாரானான் கோபிநாத். நர்ஸிங் ஹோமின் சுபிட்சமான எதிர்காலம் நஞ்சே கவுடரின் உயிரில்தான் இருக்கிறது என்று அவன் நினைத்தான்.

அவன் நஞ்சே கவுடர் இருந்த அறையை விட்டு வெளியே வரும்போது இரவு மணி பதினொன்றே முக்கால். கவுடர் கண்டிப்பாக பிழைத்துக்கொள்ளுவார் என்ற நம்பிக்கை அவனுள் பிறக்க, அதுவே ஒரு சக்தியாகி எதிர்கால சுபிட்சத்தைப் பற்றிக் கனவு காண உந்தியது.

அவன் தன்னுடைய உற்சாகத்தில், பின் தொடர்ந்த நர்ஸ் மேரியின் தோளைப் பிடித்துக்கொண்டான்.

''கவுடருக்கு இனிமே க்ரைஸிஸ் இல்லே, மேரி.''

''நான் பயந்திட்டேன்...''

''நீ எதுக்குத்தான் பயப்படலே! என்னேக் கண்டு கூட பயப்படறே..''

''உங்களேக்கண்டு பயப்படாமா இருக்கணுமாஞ அவ பெண்ணுக இருக்கப்படாது!'' மேரி சிரித்துவிட்டு அவனுடைய கையைத் தன் தோளிலிருந்து விடுவித்துக் கொண்டாள்.

''வெராந்தாவிலே யாரோ ஒரு லேடி உட்கார்ந்திருக்கிருளே? யார் அவள்? விஸிட்டரா?''

''இல்லே டாக்டர். பேஷண்ட்.''

'எப்ப வந்தாள்?''

''எட்டு மணி இருக்கும். டாக்டர் முரளி அவளே எக்ஸாமின் பண்ணினுர்.''

''உம் அப்புறம்? இங்கே பெட் காலி இல்லேன்னு சொல்லலேயா?''

''அவரும் சொன்னுர். நானும் சொன்னேன்... ஆனு அவ பிடிவாதமா உங்களேப் பார்த்து, ஆபரேஷன் முடிச்சிட்டுதான் போவேன்னு உட்கார்ந்திட்டா...பாவம், சொட்டச் சொட்ட வந்தா...டாக்டர் ரம்யா கார்லே ஓடிப்போய், வீட்லேந்து தன்னேடு ஸாரியைக் கொண்டு வந்து கொடுத்தாள்.''

''ஓ. ஐ ஸீ...ஏழையா பணக்காரியா?''

''ஏழைமாதிரித்தான் இருக்கு.''

''இதுக்கெல்லாம்தான் கவர்ன்மென்ட் ஆஸ்பத்திரி இருக்கே.''

''அவ மெட்ராஸ்லேந்து வந்திருக்கா, டாக்டர். ...உங்க கையாலே ஆபரேஷன் பண்ணிக்கணும்னு வந்திருக்காளாம்...உங்க புகழ் நன்ருகவே பரவியிருக்கு.''

''என் புகழ் ஏழைகிட்டே பரவி என்ன புண்ணியம்? நான் என்ன எலக்ஷன்லேயா நிக்கப்போறேன்... ஐ வாண்ட் ஒன்லி ரிச் பேஷண்ட்ஸ்...சரி நான் அவளே விசாரிச்சு அனுப்பறேன். நீ உன் டியூட்டியைக் கவனி.''

''புயல் அடிக்கிற இந்த வேளேயிலே அவளேப் போகச் சொல்லிடாதீங்க, டாக்டர். பாவமா இருக்கு!''

''ஏழைன்ஞ அவங்களாலே இடி, மின்னல், மழை, புயல், வெய்யில் ஏன் பூகம்பத்தைக்கூடத் தாங்கிக்க முடியும்...இது பிரைவேட் நர்ஸிங் ஹோம்.

வெராந்தா பெஞ்ச்சியிலே உட்கார்றத்துக்கும் தூங்கறத்துக்கும் இது சத்திரம் இல்லே.''

மேரியால் மேற்கொண்டு ஏதும் பேசமுடிய வில்லை. டாக்டருக்கு ஏழைகளின்மீது இரக்கம் சுரந்து அவன் பார்த்தது கிடையாது. வந்திருக்கிறவளுக்கு அவர் ஆபரேஷன் செய்யாவிட்டால் வேண்டாம். ஆனால், இந்த நடுநிசியில் அவளை வெளியேற்றுமல் இருக்கலாமே. மறு நாளை காலையில் இடத்தைக் காலி பண்ணச்சொல்லலாமே!

டாக்டர் கோபிநாத் வெராந்தாவுக்கு வந்தான். மங்கிய வெளிச்சத்தில் அவளுடைய குச்சி போன்ற உடல் ஒடிந்து விழுந்த கிளைபோலத் தோன்றியது.

''ஏய், யார் நீ?''

அசதியில் கண்ணை மூடிக்கொண்டிருந்தவள் மெது வாகத் திறந்து பார்த்தாள். டாக்டரின் உருவம் அவளைத் தாக்கி இருக்க வேண்டும். ஒரு அவசரத்தில் மடக்கிய கால்களைத் தொங்கப் போட்டு விட்டு எழுந்திருக்க முயன் ருள். முடியவில்லை. மனத்தில் அவசரத்துக்கு உடல் ஈடு கொடுக்க முடியாமல் தவித்தது.

''யார் நீ?''

இப்போது அவள் நின்ருள். ஒட்டிய கன்னங்கள். ஒரு காலத்தில் பொன்னிறமாக இருந்த மேனி, இப்போது தோல் சுருங்கி பழுப்பு நிறத்தில் தள்ளாடியது. அவளு டைய முகத்தைப் பார்க்கும் எண்ணம் கோபிநாத்துக்கு இல்லை என்ருலும், அவள் அவன் முகத்தைத் தேடியதால், அவளுடைய கண்களை அவனுல் சந்திக்காமல் இருக்க முடிய வில்லை.

அந்தச் சந்திப்பு அவனுடைய நெஞ்சின் பல நினைவுத் தந்திகளின் ஒரு தந்தியைத் தொட்டது. நினைவின் குரல் அவனுடைய காதில் பட்டபோது, அது ஒரு ஓசை யாக, புயலில் ஊளை ஒலியாக, நாராசத்துடன் ஒலித்தது.

''நீங்கதான் ஆபரேஷன் செய்யற பெரிய டாக் டரா?''

முனகினுள்.

''ஆமாம். அதுக்கென்ன?''

''மெட்ராஸ்லேந்து வரேன்.''

''எதுக்கு?''

''உங்க கையாலே ஆபரேஷன் செய்ஞ்சுக்க ணும்னு ஒரு ஆசை...ராத்திரி வந்தேன். மழையிலே நனைஞ்சேன்.... இங்கே ஒரு லேடி டாக்டர்

இருந்தாங்க. அவங்க வீட்டுக்கு ஓடிப்போய் இதோ இந்தப் புடவையைக் கொண்டுவந்து, கட்டிக்கோன்னுங்க. அவங்க நன்னுயிருக்கணும்!''

''கதை எல்லாம் வேண்டாம்...இந்த இடத் திலே தங்கப் படாது...போயிடு.''

''ஆபரேஷன் செய்ஞ்சுக்க வந்திருக்கேன்....''

''சௌகரியமில்லே.''

''இன்னொரு டாக்டர் என்னைப் பார்த்தார். நாளைக்குக் காலையிலே உங்களைப் பார்க்கலாம்னு சொன் னுர். வயத்திலே கட்டி. மெட்ராஸ்லேருந்து வரேன்...''

''அங்கே ஆயிரம் டாக்டர் இருக்கிறப்போ, ஊட்டிக்கு வருவானேன்?''

''உங்ககிட்டே செய்ஞ்சக்கணும்னு ஆசை. அதான் வந்தேன்.''

''செய்ய சௌகரியம் இல்லே. இங்கேருந்து இப் படியே போனு, ஒரு பெரிய பாங்க் வரும். அங்கே தாழ் வாரம் பெரிசா இருக்கும். அங்கே போய்ப் படுத்துக் கொள்...''

''நான் ஏழை, பணம் தர வக்கில்லாதவள் னுதானே நீங்க என்னை விரட்டறீங்க...?''

''இந்தக் கேள்வி எல்லாம் அனுவசியம்.''

''நான் நிறையப் பணம் சேர்த்து வைச்சிருக் கேன்...என்னைக் பிழைக்க வைச்சா போதும்...அவ்வளவு பணத்தையும் உங்க கையிலே கொடுத்துடறேன்...''

''நான் பணத்துக்கு உழைக்கிற டாக்டர்தான். ஆனு உன் பணம் எனக்குத் தேவையில்லே...''

''ஏன்...? ஆபரேஷன் பண்ணிட்டா ஒரு வேளை நான் போயிடுவேனுேங்கற பயமா?''

''நான் எதுக்குப் பயப்படணும். உனக்கு என் னுலே ஆபரேஷன் செய்ய முடியாது.''

''நான் இதுலே செத்துப்போறதா இருந்தா லும் இங்கே சாகிறது மேல்னு படறது. அதிலே எனக்கு ஒரு திருப்தி இருக்கும்.''

''இதெல்லாம் அனுவசியப் பேச்சு...இங்கே ருந்து போயிடு.''

''நான் ரொம்ப ஆர்வமா வந்தேன். ஏமாற்ற மாய் போயிட்டுது. பணம் தந்தா நீங்க உங்க தொழிலைச் செய்ய வேண்டியதுதானே?''

''உன் பணத்தை வேறு எவன்கிட்டேயாவது கொடு. இப்ப நடையைக் கட்டு.''

''காத்து அடிக்குது. குளிருது. மழைவேற பெய்யிது.''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. மழையிலே வந்தே...மழையிலேயே திரும்பு!''

''கொஞ்சம் இரக்கம் காட்டப்படாதா?''

''யார்கிட்டே இரக்கம் காட்டணும்னு எனக்குத் தெரியும்!''

அவள் ஒரு தடவை அவனைப் பார்த்தாள். அவன் முகத்தைத் திரும்பிக் கொண்டான்.

''நான் வர்றேன் இன்னும் எத்தனை நாள் இருப்பேனோ என்னவோ...இந்த ஆபரேஷன் மூலமா நிறைய நாள் இருக்கலாம்னு ஆசைப்பட்டது தப்பு...நான் வர்றேன் ...நீ நல்லாயிரு...''

அவள் மெல்ல நடந்து படி இறங்கினாள். காற்றில் உடல் கிளை ஆடுவதுபோல ஆடியது. பத்து அடி நடப்பதற்குள் அவள் உடல் முழுவதும் ஈரமாகியது.

அவள் மழையில் குளித்துக் கொண்டே நடப்பதை அவன் பார்த்தபடி நின்றான்.

அவன் கண்கள் இமைக்கவில்லை. மனம் அயரவில்லை. அந்தக் குளிரிலும் மழையிலும் அவனுடைய நெஞ்சு வரண்டுதான் கிடந்தது.

## 1978 - மார்ச் - 10-11

முரளியிடம் சொல்லிவிட்டு வீட்டுக்குச் சென்ற கோபிநாத் சாருமதியிடம், அவன் ஏன் சென்னை செல்கிறான் என்று விளக்கவில்லை. அவளும் கேட்கவில்லை.

ஊட்டியில் பஸ் ஏறிய அவன் மேட்டுப்பாளையத்தை அடையும் போது மணி நான்கு. சென்னை செல்லும் நீலகிரி எக்ஸ்பிரஸ் புறப்பட நிறைய நேரம் இருந்தது. பிளாட்பாரத்தின் ஒரு கோடியில் ஒரு சிமெண்ட் பெஞ்சியில் அவன் உட்கார்ந்தான்.

அக்டோபர் 30 தேதி நடந்த சம்பவம் கண் முன் நின்றது. அத்துடன் கடந்து போன ஆண்டுகளும் மாதங்களும் நாட்களும் நினைவில் மோதின. பிளாட்பாரத்

தில் அங்குமிங்குமாக அலைந்து கொண்டிருந்த மனிதர்களை அவன் மறந்தான். என்ஜின்களின் ஊதல்களும் இரைச்சல்களும் அவன் காதில் விழவில்லை. அவன் தன்னுள்ளேயே ஐக்கியமாகி, சிந்தனையில் தன்னையே ஜீரணித்துக் கொண்டிருந்தான்.

❋ ❋ ❋

எவ்வளவோ பேர், பிறந்ததுமே தாயை இழக்கிறார்கள். பலர் சில காலம் தாயன்பை உணர்ந்து விட்டு அதை ஞாபகச்சின்னமாகக் கொள்ளுகிறார்கள். இன்னும் சிலர்—அதிருஷ்டசாலிகள், தாயின் அன்பையும் பாசத்தையும் நீண்டகாலம் அனுபவிக்கிறார்கள்.

ஆனால் கோபிநாத்தின் கதையே தனி. அவனுடைய தாயார் அவனை ஈன்றதுடன் நிறுத்திக் கொண்டாள். வீட்டு வேலைக்காரியிடம் வளர்ந்த அவன் தாயின் பாசத்தை உணரும் வாய்ப்பையே நான்கு வயதுவரை பெறவில்லை. அறிவு தெரிந்த நாளில் தாயார் பாசத்தைப் பொழிந்த போது அவனால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. இயல்பான, இயற்கையான உணர்ச்சிகளுக்குப் பதிலாக செயற்கையான, கட்டாயமாகத் திணிக்கப்பட்ட பாசச் செயல்களாக அவனுடைய பிஞ்சு நெஞ்சில் தோன்றின.

அவனுக்கு அவனுடைய வீடே ஒரு புதிராகவும் அதே சமயத்தில் அவனே சில பகுதிகளில் அணுக முடியாத அரணாகவும் தோன்றின. பக்கத்து, எதிர்வீட்டுப்பிள்ளைகள் அப்பா, அம்மா என்று சொல்லிக் குதூகலமாக ஓடுகிறார்கள். அப்பாக்களின் கைகளைப் பிடித்துக் கொண்டு செல்லுகிறார்கள்.

அவனுடைய அப்பா எங்கே? அவனுக்கு ஒரு அம்மா இருக்கிறாள் என்றால், ஒரு அப்பாவும் இருந்தாக வேண்டுமே? அவர் எங்கே? இக்கேள்விகள் அவனுடைய இளம் உள்ளத்தில் எழுந்தன. எப்போதாவது மத்தியான வேளைகளில், யாரும் வீட்டைத் தேடி வராத நேரங்களில் அவன் அம்மாவைக் கேட்பான். அவள் சில சமயங்களில் கத்துவாள். சில சமயங்களில் சிரிப்பாள். இன்னும் சில சமயங்களில் அவனுக்குப் புரியாத பாஷையில் பேசுவாள். அல்லது மழுப்புவாள்.

தாயாரின் அரவணைப்பு இல்லாததால்தானோ என்னவோ இதற்கு அவனுக்கு அந்தக் காலத்தில் நேரம்

கிடைக்கவில்லை என்று கோபிநாத் வயது வந்தபின் நினைத்துக்கொண்டான். சின்ன வயதிலிருந்தே அவன் எதிலும் கவனமாக இருந்தான். தன்னைப் பார்த்துக் கொள்ள தான் ஒருவனே இருப்பதாக நினைத்துக்கொண்டான்.

வீட்டிலே ஒரு திண் ண உண்டு. திண்ணைக்கு வலப்புறத்தில் ஒரு சிறு அறை. அந்த அறைதான் அவனுடைய இருப்பிடம். ரேழியில் வேலைக்காரி இருப்பாள். மத்தியானம் பதினொரு மணியிலிருந்து நாள் பூராவும் இரவு பூராவும் யாராவது ஒருவர், அவன் பார்த்து அறியாதவர் அல்லது ஒருமுறைக்கு மேல் பார்த்து மனத்துக்கு அறிமுகமானவர் ஒரு அவசரத்துடன் திண்ணையில் ஏறி ரேழிக்குள் பாய்வார். ஏன் அப்படி அவர் அவசரப்படுகிறார் என்று கோபி தன்னுள்ளேயே கேட்டுக் கொள்ளுவான். வந்தவர் உள்ளே போனதும், வேலைக்காரி திண்ணைக்கு வருவாள். கதவைச் சார்த்திக் தாழ்ப்பாளையும் போடுவாள்.

சிறிது நேரம் கழித்து உள்ளே போனவர் வெளியே வருவார். வேலைக்காரி அவரைப் பார்த்துச் சிரிப்பாள். அவர் பாக்கெட்டிலிருந்து பர்ஸை எடுப்பார். ஏன் வேலைக்காரிக்கு அவர் பணம் கொடுக்கிறார்? கேள்வி கோபிநாத்தின் மனத்தில் ஒரு புதிராக நிற்கும்.

அவனுக்குத் தினமும் பிஸ்கட்டு கிடைத்தது. சாக்கலேட் கிடைத்தது. நிறைய சொக்காய்களும் அரை நிஜார்களும் கிடைத்தன. ஆனால் கொடுக்கும் கைகளில் அணைப்பு கிடைக்கவில்லை.

ஐந்து வயதில் அவனைப் பள்ளிக் கூடத்தில் சேர்க்க அவனைப் பெற்றவள் முடிவு செய்தாள்.

முதன் முதலாக மின்சார ரயிலில் அவன் பிரயாணம் செய்தான். அன்று மாலையே அவனை மாமா வீட்டில் விட்டுவிட்டு அம்மா திரும்பினாள். அதன் பிறகு அவன் தாய் வீட்டையே பார்க்கவில்லை. அவன் பள்ளிக் கூடத்தில் படிக்க ஆரம்பித்த சில மாதங்களுக்கு அடிக்கடியும், அப்புறம், சில ஆண்டுகள் எப்போதாவதும் அம்மா வருவாள். அவனுக்குத் துணிமணிகளும் தின்பண்டங்களும் கொண்டு வருவாள். சில சமயங்களில் நெகிழ்ச்சியுடன் அவனை அணைத்துக் கொண்டு, கன்னத்தில் தன் உதடுகளைப் பதிய வைப்பாள்.

மாமா வீட்டுக்கு வந்ததிலிருந்து அவனுக்கு அம்மா தேவை இல்லாத ஒரு ஜீவனாகப்பட்டது. சுசீலா

வின் அதிகமான வாஞ்சை இதற்குக் காரணமாக இருக்க லாம் என்று கோபி பின்னால் நினைத்தான்.

அவனுக்கு இன்னொரு விஷயமும் ஆச்சரியமாக இருந்தது.

மாமா பலராமன் வீட்டில் அவரையும் மாமியையும் தவிர வேறு யாரும் இல்லை. வேலைக்காரி ரேழியில் உட்கார்ந்திருக்கவில்லை. யாரும் நினைத்த வேளையில் உள்ளே வந்து போகவில்லை. இரவு ஏழு அடித்தாலே பலராமன் வாசற் கதவைச் சாத்தி விடுவார்.

எட்டாவது வயதில்தான், தான் யாருடைய பிள்ளை என்பதை கோபி அறிந்து கொண்டான். இந்த அறிவு பிறந்த வேளையில், அவனுக்குத் தன்னைப் பெற்றவள் இறந்து மண்ணோடு மண்ணாகி விட்டதாக எண்ணமும் பிறந்தது. நாள் செல்லச் செல்ல மானசீக மாக இறந்துபோன தாயார் மீது கசப்பும் வெறுப்பும் ஏன் குரோதமும் அணைக்கவே முடியாத தீநாக்கு களாக அவனுள் கொழுத்து விட்டன. அவனைப் பெற்ற வளுக்கு உலகில் உயிர் வாழவே யோக்யதை இல்லை என்று அவன் மனம் கருவினான்.

ஆனால் அவனுடைய உணர்ச்சிகளை அறிந்து கொள்ளாத, அறிந்து கொள்ள வாய்ப்பில்லாத அம்மா வருடத்துக்கு ஓரிரு தடவையாவது பார்க்க வந்து கொண்டுதானிருந்தாள். அவன் அதிர்ஷ்டம், மாமாவுக்கு மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை ஊர் மாற்றம் வந்து கொண்டிருந்தது. சென்னையை விட்டு அவர் தள்ளிச் செல்லச் செல்ல, அம்மாவின் வருகை வெகுவாகக் குறைந்துவிட்டது.

அவனால் ஒன்றைமட்டும் மறக்க முடியவில்லை. மன்னிக்கவும் முடியவில்லை. அவன் உலகில் இருக்க யார் காரணம்? அவர் பெயர் என்ன? அவர் எங்கே என்ன செய்துகொண்டிருக்கிறார்? பள்ளிக்கூடத்தில் தந்தையின் பெயர் இல்லாமல் மாமாவின் பெயர் இருப்பது ஏன்?

அம்மாவிடம் சின்ன வயதில் கேட்டபோது பதில் கிடைக்கவில்லை. பெரிய வயது வந்தபோது அவளிடம் கேட்கவே தோன்றவில்லை. அம்மா ஏதானும் ஒரு பெயரை அவனுடைய திருப்திக்காகச் சொல்லிவைப்பாள் என்று அவனுக்குத் தோன்றியது.

அம்மா நடத்தி வந்த வாழ்க்கை இளம் வய திலேயே அவனுடைய நெஞ்சில் பதிந்து, அவளை மனமார

வெறுப்பதற்குக் காரணமாக இருந்தது. நாள் செல்லச் செல்ல வெறுப்பும் அருவருப்பும் அதிகமாயிற்றே தவிர குறையவில்லை. இப்படித்தான் பிழைக்கவேண்டும் என்று உலக நியதி இருக்கையில், எப்படி வேண்டுமானாலும் பிழைக்கலாம் என்று அம்மா தன்னைத்தானே அழித்துக் கொண்டு, சமூகத்துக்கு ஒரு களங்கமாக இருக்கிறாளே!

அவனுடைய கல்விக்கு அம்மா நிறைய பணம் தந்திருக்கிறாள் என்று அவனுக்குத் தெரியும். மாமா மூல மாக அது வந்ததால் அவனால் மறுக்க முடியவில்லை. தான் மறுத்தால் மாமா காரணம் கேட்பார். அவருடைய தங்கையைப் பற்றி, அவரிடமே அவன் பேச வேண்டி யிருக்கும். இதன் விளைவாக அவனுக்கே சங்கடங்கள் தோன்றலாம். நல்லதோர் பிழைப்புக்கு வழி சிறந்த கல்வி மூலம்தான். அக்கல்வி கிடைக்கிறது என்றால் அவன் மற்றவைகளைப் பற்றி ஏன் கவலைப்படவேண்டும்.

வாலிபப்பருவம் வந்தபோது அவனுக்கு அவனு டைய குறைகளும் நிறைகளும் சக்திகளும் பலவீனங்களும் தெரிய ஆரம்பித்தன. ஒரு பலவீனம் மட்டும் அவனு டைய மனச்சாட்சியை அடிக்கடி கிள்ளும். பிறரிடம் அவன் எதிர்பார்க்கும் நற்குணங்களை, அவன் கடைப்பிடிக்கத் தவ றுகிறான். பிறரிடம் ஒழுக்கத்தை எதிர்பார்க்கும் அவனிடம் ஒழுக்கம் இல்லை.

அவனால் பிறருடைய ஒழுக்கக் கேடுகளைக் கண்டிக்காமல் இருக்க முடியவில்லை. அதே சமயத் தில், அதே ஒழுக்கக் கேடுகளை அவனால் தவிர்க்கவும் முடியவில்லை. வாலிப வயதில் தன்னுடைய பருவப் பசிக்கு இரையாக்க எத்தனையோ பெண்களைத் தேடிப்பிடிக்க அலைந்திருக்கிறான். ஆனால், யாராவது ஒரு நண்பன் தன் னுடைய அனுபவங்களை கூறும்போது, நண்பனை அவன் கண்டபடி ஏசுவான்.

மொத்தத்தில் அவனுக்கு அவனுடைய குற்றங் கள் தெரியவில்லை. பிறருடைய பிசகுகள்தான் பன் மடங்கு பெரியதாகத் தோன்றின.

அவனுக்கு அவன் தாயார் ஒரு மாபெரும் குற்றவாளியாகப் பட்டாள். ஆனால் அவளை முதன் முத லாகக் குற்றவாளியாக ஆக்கியது தன்னைப்போன்ற ஒருவன் தான் என்பதை அவன் மறந்தான். தன்னைப்போன்ற ஒருவனால் தான் அவனே பிறக்க நேர்ந்தது என்பதையும் அவன் நினைத்துப் பார்க்கவில்லை.

அம்மாமீது கொண்டுள்ள வெறுப்பையும் குரோதத்தையும் செயல்மூலம் காட்ட அவனுக்கு வாய்ப்பே கிடைக்காமலிருந்தது.

அது கடைசியில், ஊட்டியில் புயல் அடித்த இரவன்று கிடைத்தபோது, அதைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டான். தாயார் என்கிற இரக்கம் இல்லாமல், பிள்ளை ஸ்தானத்தில் இருந்துகொண்டே அவளை வெளியே விரட்டினுன். டாக்டர் என்கிற முறையில் ஒரு நோயாளிக்குச் செய்ய வேண்டிய கடமையை வேண்டுமென்றே புறக்கணித்தான். அன்று இரவு அவனுக்கு மனத் திருப்தியும் நிறைவும் கிடைத்தன. ஆனுல் மனத்தின் ஒரு சின்னஞ்சிறு மூலையில், அம்மா வேண்டுமென்றே அவனைப் பார்க்கத்தான் சென்னையிலிருந்து ஊட்டிக்கு வந்தாள் என்ற எண்ணம் தோன்றியது. அவளை அம்மாவாக அவன் ஏற்றுக்கொள்ளாததை அவள் புரிந்துகொண்டாளா இல்லையா என்றுதான் அவனுக்குத் தெரியவில்லை. அவள் புரிந்து கொண்டிருந்தால், அவன் பல நாட்களாகத் தீட்டிய திட்டத்தின் வெற்றியை அவனுல் ரசிக்க முடியும். பிள்ளை அடையாளம் கண்டு கொண்டுதான் தன்னை நடு நிசியில் மழையில், குளிரில், புயலில் விரட்டி அடிக்கிறுன் என்று அவள் வாய்மூலமாகவாவது வெளியிட்டிருந்தால் அவனுக்கு மனநிறைவு ஏற்பட்டிருக்கும். ஆனுல் அவள் இதை வெளியிடவில்லை. விரட்டி அடிக்கப்படுகிற அந்த நிலையிலும் 'நீ நன்ரு இரு' என்று ஆசீர்வதித்துத்தான் சென்ருள்.



இப்போது மேட்டுப்பாளையம் ரெயிலடியில் உட்கார்ந்திருந்தபோது டாக்டர் கோபிநாத்துக்குத் தெளிவாக ஒன்று புரிந்தது.

அவன் ஒரே சமயத்தில் இரண்டு பாவ காரியங்களைச் செய்திருக்கிறுன். பிள்ளையாகச் செய்த பாவம். டாக்டராகச் செய்த பாவம் இன்னென்று. இக்குற்றங்

களுக்கு அவன் பரிகாரம் தேடவில்லை என்றால் விளங்காமல் போன அவனுடைய கைக்கு என்றுமே விமோசனம் இல்லை.

அவன் தாயாரைப் பார்த்தாக வேண்டும். தன் பிள்ளை ஒரு பெரிய டாக்டர் என்ற பூரிப்புடன் அவள், தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளாமலேயே, அவனைத் தேடி வந்திருக்கிறாள். அவளுடைய மனம் விண்டு சிதறும்படியாக, அவளுடைய உயிருக்கே ஹானி வரும்படியாக அவன் நடந்து கொண்டிருக்கிறான்.

அவனுடைய பாவவிமோசனம் ஒரு சாருமதியாலோ, ஒரு ஜானகியாலோ, அல்லது ஒரு நண்பனாலோ ஏற்படாது. ஏற்பட முடியாது. அவனை இந்த மண்ணில் ஈன்றவளால்தான் அவனுக்கு வாழ்வு தர முடியும். இந்த நல்வாழ்வை அவன் அவளிடம் கேட்டுத்தான் பெறமுடியும்.

அதற்கு ஒரு வழி இருக்கிறது. ஒரே வழிதான் இருக்கவும் முடியும்.



நீலகிரி எக்ஸ்பிரெஸ் சென்னை சென்ட்ரலை அடைந்தபோது மணி ஏழு அடிக்கப் பத்து நிமிடங்கள்.

இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் அவன் ஐந்து வயது வரை வளர்ந்த வீடு எங்கே இருக்கிறது என்று அவனுக்கு ஞாபகம் இருந்தது. வீட்டின் வாசலிலே எப்பவோ, யாரோ பிரதிஷ்டை செய்த விநாயகர் இருந்தார். எதிரே குளம். மூன்றாவது வீட்டுக்கு முன்னால் ஒரு வேப்ப மரம்.

வேப்பமரம் இன்னமும் இருக்கிறதோ இல்லையோ கண்டிப்பாக விநாயகரும் குளமும் இருக்கும்.

டாக்ஸியிலிருந்து இறங்கிய அவன் வாயிற் படியிலே கால் வைத்தான். உடல் நடுங்கியது. முன்னொரு காலத்தில் அசிங்கத்தின் இருப்பிடமாக, சமூகத்தின் சிரங்

காக இருந்த இடம். அவன் வெறுத்து ஒதுக்கிய இடம். உடல் நடுங்குவது இதனுல்தானே?

ஆனுல் இன்று?

அவனுடைய விமோசனத்துக்கு அருள் பாலிக்கப் போகிற இடம்!

அந்த வேலைக்காரி இன்னமும் இருக்கிருளா? ரேழியைக் கடக்கும்போது கேள்வி எழுந்தது.

ஆள் அரவமில்லாத முற்றத்தைப் பார்த்தான். மல்லிகைச் செடி ஒரு மரமாக முற்றத்தின் நடுவே வளர்ந்திருந்தது. பறிக்கப்படாத பூக்கள் மண்டிக் கிடந்தன.

வீடு திறந்திருந்தது. ஆனுல் ஏன் ஆள் அரவமே இல்லை. அதிகாலையில் இப்படித்தான் அன்றும் இருந்ததோ.

''அம்மா!'' என்று குரல் கொடுக்க அவன் விரும்பவில்லை. அவளைப் பெற்றவளை நேரில் பார்த்த பிறகுதான் அவனுடைய குரல் புறப்படவேண்டும்.

முற்றத்துக்கு வலது புறமாக இருந்த அறையினுள் தலையை நீட்டினுன். இல்லை. இடது பக்க அறை சார்த்தியிருந்தது. அதனுள் இருக்கமாட்டாள் என்று தோன்றவே, சமையலறையை நோக்கி நடந்தான். எரியாத அடுப்பு, களை இழந்து காணப்பட்டது. முந்தின நாள் துலக்கப்பட்ட பாத்திரங்கள், ஷெல்பில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒரு குடத்தில் நீர் கழுத்துவரை முட்டி நின்றது.

சமையல் வேலை இன்னும் ஆரம்பிக்கவில்லை என்று நினைத்தவனுய்ப் புறக்கடைக்குச் சென்ருன்.

மாமரம். அதற்குச் சமீபத்தில் ஒரு துளசி மாடத்தின் நான்கு முகப்புக்களிலும் அகல் விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன.

புறக்கடை வாயிலில் நின்றவன், தான் பார்த்த காட்சியில் அயர்ந்துபோய், நா எழாவண்ணம் நின்ருன்.

அவள் எலும்பும் தோலுமாக, ஒரு குச்சியை ஊன்றியவளாய், கண்களை மூடிக்கொண்டு, துளசி மாடத்தின் முன் நின்ருள்.

மனத்தின் படபடப்பு ஓரளவு அடங்கியதும்

அவன் மெதுவாக அவளை நோக்கி நடந்தான். அவனுடைய காலின் ஒலி அவளுக்குக் கேட்டிருக்கவேண்டும்.

"யாரு, காளியம்மாவா? அடுப்பைப் பத்த வைச்சு முதல்லே உலைநீரை வை. அப்புறம் கஞ்சி வைச்சாப் போதும்..."

அவனுடைய மௌனம் அவளைத் திகைக்க வைத்திருக்க வேண்டும்.

"யார் வர்றது. காளியம்மான்னு நினைச்சேனே..." அவள் திரும்பினுள். பார்த்தாள்.

"அம்மா...நான் வந்திருக்கேன்...உன் பிள்ளை கோபி வந்திருக்கேன்...கோபி வந்திருக்கேன் அம்மா... கோபி!"

"யாரு...கோபியா...என்ன சொல்றே...ஊட்டியிலே கொடி கட்டிப்பறக்கிற டாக்டரா?"

"இப்ப நான் உன் பிள்ளையா வந்திருக்கேன் அம்மா...என்னை என் தப்புக்கு மன்னிச்சுடு அம்மா."

அவன் அவள் முன் விழுந்தான். இடது பக்கத்தில் தலை, துளசிமாடத்தில் லேசாக இடித்தது. அவனுடைய உள்ளத்தின் நெகிழ்ச்சியில் மண்டையின் வலி அடங்கிப் போயிற்று.

"என்னை மன்னிச்சுடுங்கம்மா."

"என்னடா குழந்தே, என்ன சொல்றே? நீ என்ன தப்பு செய்ஞ்சே, நான் உன்னை மன்னிக்கறதுக்கு... உம்...என்னுலே நிக்க முடியலே...வா உள்ளே போகலாம்...காளியம்மா வந்ததும் காப்பி போடச் சொல்றேன்... வயசுக்கு மீறிய மூப்பு என்னைக் கொல்றதுடா, குழந்தே!"

அவள் அவன் தலையை வருட கையை நீட்டினுள்.

"நீ குனியாதே அம்மா...வா...உன்னை நான் தூக்கிட்டு போறேன்...எலும்பும் தோலுமா ஆயிட்டே... இதுக்குக் காரணம் நான்தான் அம்மா..."

அவளை அவன் தன் இருகைகளாலும் வாரிக் கொண்டான். ஒருகை மல்லிகைப்பூவாக அவள் கனத்தாள்.

அவளை முற்றத்தின் அருகே இருந்த நாற்காலியில் உட்கார வைத்தான்.

''அம்மா, அன்னிக்கு உன்னே நட்டநடு ராத்திரியிலே, ஈவு இரக்கமில்லாம புயல்னு பார்க்காம, மழைன்னு நினைக்காம விரட்டி விரட்டி அடிச்சேன்...உன்னே அம்மான்னு வாயாரக் கூப்பிடாமல் உன் மனசை நோக அடிச்சேன்.''

''நான் அம்மாதான்னு உனக்கு தெரிஞ்சுதா?''

''எப்படி அம்மா மறக்க முடியும்? உன் முகம் மறக்கலே. வயதின் மூப்பிலே உன் தோல் சுருங்கியிருக்கலாம்...ஆனு உன் வலது கையிலே நீ பச்சை குத்திட்டிருக்கியே அதை நான் மறக்கலே...புரிஞ்சிட்டுதாம்மா நான் உன்னே உதாசீனப்படுத்தினேன்...தெரியாத்தனமா செய்த பாவம்னு நினைக்காதே...நான் வேணும்னே செய்ஞ்ச தப்பும்மா...அதை தெய்வத்தாலே கூட மன்னிக்க முடியாதும்மா...நீதான் மன்னிக்கணும்...உன்னுல்தான் மன்னிக்க முடியும்...'' நடந்ததை எல்லாம் விவரித்தான்.

''பேசாம இருடா...நீ என் பிள்ளே. உன்னேப் பெத்தவள் நான். கன்னுகுட்டி உதைச்சா மாட்டுக்கு வலிக்குமோ? கோழிக் குஞ்சு பாத்திருக்கியோ கோழிக் குஞ்சு? அது தாய்க் கோழியை மிதிக்கும். மூக்காலே குத்தும். ஆனு தாய்க்கு வலிக்குமோ...நீ என்னே என்ன செய்ஞ்சுட்டே, எனக்கு வலி ஏற்பட...சாருவும் குழந்தையும் சௌக்கியமா இருக்கிறுங்களா? உன் கை விளங்கணும்னு நான் தினம்தினம் வேண்டிக்கறேன்...கோவிலுக்குப் போக உடம்பிலே வலுவில்லே... இவ்வளவுக்கும் வீட்டு வாசல்லேகூட பிள்ளேயார் இருக்கார்....அதான் தடியை வைச்சுட்டு, தினம்தினம் ஒரு அஞ்சாறு சுற்று துளசியை சுத்தறேன்...இப்ப எப்படி இருக்கு உன் கை?''

''உன் கை எம்மேலே பட்ட உடனேயே என் கை சரியாயிடுத்தும்மா...அம்மா, அம்மா, நீ என்னுேடு புறப்படறே. என்கூட இருக்கே.''

''இல்லேடா...நான் போற வழியைப் பார்த்திட்டு, வேளே எப்ப வர்றதுன்னு காத்துட்டு நிக்கறேன்.. நீ சௌக்கியமா இரு போதும்.''

''முடியாது...நீ என்கூட வர்றே...இருபத்தெட்டு வருஷமா உன்னே எனக்குத் தெரியலே...புரிஞ்சுக்க சக்தி இல்லாதவனு இருந்தேன். இப்பப் புரிஞ்சப்புறம், தெரிஞ்சப்புறம் உன்னே நான் விடமாட்டேன்

அம்மா...நான் விடமாட்டேன். இன்னிக்கே பிளேன்லே போறோம்...கோயமுத்தூர்லேந்து கார்லே போயிடலாம்... நாளையிலிருந்து உன் உடம்பு தேற என்னென்ன செய்யணுமோ அவ்வளவையும் செய்யப்போறேன்...''

''கோபி!''

''என்னம்மா?''

''உனக்கு ஒண்ணு தெரியுமா?''

''என்னம்மா?''

''பெத்த பிள்ளை பச்சைத் தண்ணியைக் கொடுத்தாலும் அம்மாவோடு வயிறு குளிர்ந்து, உடம்பு தேறிடும்பா.''

''உன்னை பன்னீராலே குளிர வைக்கிறேம்மா! இது சத்தியம்!''



## 24

## 1978 - மார்ச் - 30

''உலகத்திலே அற்புதங்கள் நடக்கறதில்லேன்னு யார் சொன்னு?'' என்று ஆரம்பித்தாள் ரம்யா.

''நான் சொல்லலே.''

''இந்தப் பத்து நாளிலே கோபிநாத் எட்டு ஆபரேஷனைப் பண்ணியாச்சு, எல்லாம் கிராண்ட் சக்ஸஸ்!''

''கை திடீர்னு விளங்காமப் போச்சு. அப்புறம் திடீர்னு சரியாப்போச்சு. இடையிலே என்னவெல்லாம் நடந்திருக்கு பார்த்தியா?''

''டாக்டர் கோபிநாத் மாறுவதற்கு என்றே ஏற்பட்ட மாதிரி இருக்கு!''

''அதை ஏற்படுத்தியது யார்?''

''நிச்சயமா நான் இல்லை!'' என்றாள் ரம்யா.

''நீயாக இருந்தால் உன் பெயர் என்னவாக இருக்கும் தெரியுமா?''

''என்ன?''

''ரம்யா அம்பாள்! தெய்வம்னு உன்னைச் சொல்லுவா!''

''அப்ப யாரு?''

''நீயும் நானும் பார்க்காத, பார்க்க முடியாத ஒரு சக்தி.''

''அதன் பெயர்?''

''புரிஞ்சுக்க முடியாத சக்திக்கு ஒரே பெயர் தான் உண்டு, ரம்யா!''

''அந்தப் பெயர் என்னன்னு எனக்குத் தெரியும்!'' என்றாள் ரம்யா.

முற்றும்




### வனவாசத்திற்குக் காரணம் சீதாபிராட்டிதான்

சீதாபிராட்டியின் சுயம் வரத்தில் பங்கு கொள்வதற்காக ஸ்ரீராம, லக்ஷ்மணர்களை விசுவாமித்திர முனிவர் மிதிலாபுரிக்கு அழைத்துச் செல்கிறார். அம் மாநகரின் வீதி வழியே நடந்து வரும் ராமனின் அழகையும், கம்பீரத் தோற்றத்தையும் அரண்மனையின் உப்பரிகையிலிருந்து நோக்கும் சீதாபிராட்டியின் மனம் ராமனை நாடுகிறது. அக்கணமே ராமனைத் தன் கணவனாக மனதில் வரிக்கின்றாள். உடனே தன் தந்தை வைத்திருக்கும் சிவ தனுசை ராமனால் நாணேற்ற முடியுமா என்ற கவலையும் தோன்றுகிறது. உடனே தன் இஷ்ட தெய்வத்தையும், வானுலக தேவர்களையும் மனதில் நினைத்துக்கொண்டு, அந்த அரசிளங்குமரன் சிவதனுசை நாணேற்றி தன்னை மணக்க அவர்கள் அருள் புரிந்தால் தான் பதினான்கு வருடம் வனவாசம் செய்வதாக பிரதிக்ஞை செய்கிறாள்.

(வாரியார் சொற்பொழிவிலிருந்து)

—ந. சுப்ரமணியன்



### ஆடம்பரம் என்னும் வியாதி

"...அடுத்தவர்களைக் கண்களால் பார்ப்பதால் பரவக்கூடிய வியாதி இது. இதன் கிருமிகள் கண்களின் வழியே மனத்திற்குச்சென்று, அங்கே முட்டைகள் இட்டுக் குஞ்சுகள் பொரிப்பதாகச் சொல்லலாம். ஆண்களுக்கு இது ஓட்டல் வாசம், சோபா செட், எலக்டிரிக் சாமான் முதலியவற்றில் தொடங்கி, தவணைக் கடனில் கார் வாங்குவது வரையில் வளரும். பெண்களுக்கோ, வெள்ளிப் பாத்திரங்களில் ஆரம்பமாகி, பட்டுப்புடவைகள், வைர நகைகள் வரையில் முற்றிவிடும். இந்த நோய் கொண்டவர்களுக்கு வருமானம் எவ்வளவுதான் வந்தாலும் பற்றாக்குறை ஒருபுறம் மூச்சைத் திணற வைத்துக் கொண்டிருக்கும்; மறுபுறம் பேராசை எனும் விஷ ஜுரம் நாளுக்கு நாள் ஏறிக்கொண்டே இருக்கும்..."

'அகிலன்' எழுதிய 'சித்திரப் பாவை' நாவலிலிருந்து.

—கே.ஜி.ஜவஹர்.

### எமனுக்கு ஒரு எமன்

சில தினங்களுக்கு முன் எங்கள் ஊர் மாரியம்மன் கோயில் திருவிழாவுக்காக சத்தியவான் சாவித்திரி நாடகம் நடைபெற்றது. அந்நாடகத்தில் வரும் எமன் தன்னுடைய தர்பாருக்கு குற்றம் செய்த சண்டாளர்களை ஒவ்வொருவராக இழுத்துக்கொண்டு வர சொன்னார்.

எமனாக வேஷம் போட்டவர் அந்த ஊரில் டீக்கடை வைத்து தொழில் நடத்துபவர். குற்றப் பட்டியலை தயாரித்து சொல்லும் சித்ரபுத்ரர் ஒவ்வொருவர் செய்த குற்றங்களை சொன்னார். எமன் அதற்கு தண்டனை வழங்கினார்.

எமன் சித்ரபுத்திரரை நோக்கி "என்னுடைய தர்பாருக்கு இன்னும் யார் வரவேண்டியது பாக்கி?" என்றார். அப்போது

சித்ரபுத்திரர், ''இந்த ஊரில் டீக் கடை வைத்துக்கொண்டு பாலில் ஒரு படிக்கு இரண்டு படி தண்ணீரை ஊற்றுபவராகிய - இப்போது இந்த மேடையில் எமனுக வேஷம் போட்டிருப்பவர் தான் வர வேண்டும்!'' என்று சொன்னூர். கூட்டத்தில் சிரிப்பொலி அடங்க அரைமணி நேரம் பிடித்தது.

—எ. எல். சண்முகம்

மாட்டுக்கு மரியாதை

நாகர்கோவிலில் இந்து சமய மாநாடு நடைபெற்றபோது சிறப்புரை ஆற்ற வந்திருந்தார் கி. வா. ஜகன்னுதன். அப்போது திருவாளர் மாட்டார் என்று மாட்டினைக் குறிப்பிட்டு அவையையே குலுக்கிட வைத்து விட்டார். ''சும்மா மாடு என்று கூறினுல் மாடுகளுக்குக் கோபம் வந்து அப்புறம் கி. வா. ஜ.வுக்கு எதிராக ஒரு மாநாட்டையே கூட்டிவிட்டால் வந்துசேரும் வம்பு. அதனுல் தான் முன் கவனமுடன் திரு என்றும் அடைமொழி சேர்த்து, ஆர். என்னும் சிறப்பு விகுதியையும் சேர்த்து திருவாளர் மாட்டார் என்று கூறினேன்'' என்ருர் வேடிக்கையாக.

—கே.உமா



நியாயமான சந்தேகம்

நர்சரியில் ஆங்கிலம் படிக்கும் மகள் கேட்டாள்: ''ஏன் டாடி? மாங்காய் என்பதற்கு மாங்கோ என்ருல் தேங்காய் என்பதற்கு தேங்கோ தானே சொல்ல வேண்டும்?''

நான் அசந்துவிட்டேன்.

—எஸ். ரஷீத்அலி.






# கடிதங்கள்

அலுவலகத்தில் பணிபுரியும் பெண், அதிகாரிகளை வசியப் படுத்திக் கொண்டு புரியும் அட்டகாசமும், அவளால் துன்பமுறும் ஊழியர்களின் நிலையையும், தெளிவுறகாட்டுகிறது ஆபீஸ் மோகினி. மற்றும் மோகினி இறுதியில் திருந்துவது நல்ல முடிவாக அமைந்து இருந்தது, நல்ல கதை.

**ஸி. வி. புருஷோத்தமன், கொடக்கல் புதூர்**

''பாவத்திற்குப் பயப்படலாம், ஆனால் பாவிகளுக்குப் பயப்படலாகாது. . . பாவிகள் ஜெயிக்கலாம், ஆனால் பாவம் ஜெயித்ததில்லை. பாவிகளின் துவக்க கால வெற்றி, இறுதிக் கால தோல்வி. . .'' என்றவாறு சீனிவாச சாமியார் கடைசியில் பேசுகிறாரே, அதுதான் கதையின் உச்சம். சமுத்திரத்திலே குளித்து முத்தெடுத்து இருக்கிறார், ஆசிரியர் சமுத்திரம்.

**கே.தெய்வசிகாமணி, கோவை—14**

மோகினி உண்மையானவளாக உலவிக்கொண்டிருந்தால், அவள் கழுத்து என் கையில் இருக்கும்.

**பி. கே. வேணி, திருமழபாடி**

'சமுத்திரத்'திலிருந்து கிடைக்கும் எல்லாச் சிப்பிகளிலுமே விலை உயர்ந்த முத்து கிடைத்து விடுவதில்லை என்பதற்கு'மோகினி' ஓர் எடுத்துக்காட்டு.

**சி. திருநாவுக்கரசு, சென்னை—8.**

சு. சமுத்திரம் அவர்கள் பெயருக்கேற்ப, இக்கதையில் சொற்கடலை (சொல்திறன்) படித்து மகிழ்ந்தேன்.

**பி. ஆர். இராமனுதன், ராச்சிலே.**

''அடியே மோகினி, ஒன்னையும் கடவுள் உலவ விட்டிருக்காருன்னு அதுலயும் ஒரு சூட்சுமம் இருக்குடி. நீ உடம்ப வச்சி முன்னுக்குவர நினைக்கிறே. நான் ஒழுக்கத்தை வச்சி முன்னுக்கு வர நினைக்கிறவ. அறைக்குள்ளே உடம்பைக் காட்டி அம்பலத்துலே திமிரைக் காட்டிடுறது ஒரு பிழைப்பா! ஆம்பிளைங்கள உடம்பைத் தொட விட்டுட்டு அதுல கிடைக்கிற உத்தியோகம் ஒரு உத்தியோகமா!'' என்ற வார்த்தைகளை அள்ளி வீசும் லீலாவின் கதாபாத்திரம் பெண் குலத்திற்குப் பெருமை சேர்க்கும் உன்னதமான படைப்பு.

**எம். காமராஜ், திருச்சி—5.**

மோகினியால் பாதிக்கப்பட்ட லீலா எப்படி சீனிவாசனை சந்தித்தாள் என்பதும், இவ்விஷயம் கலாவிற்கு எந்தவிதத்தில் தெரிந்தது என்பதும், மோகினி, உஷா—சீனிவாச சாமியார் ஆகியோரை சந்திப்பதும் எல்லாமே புரியாத கதையை ஒழுங்காக முடித்துவைக்க இழுத்து கோர்க்கப்பட்டுள்ள ஜீரணிக்க இயலாத சம்பவங்கள்.

**அண்ணு. அன்பழகன், அந்தனப் பேட்டை.**

'ஆபீஸ் மோகினி' கதையில் கதையின் மையக் கோடு மோகினி பாத்திரத்தையேதான் சுற்றி, சுற்றி வந்ததே தவிர, மற்ற பாத்திரங்களின், குறிப்பாக கணவனை சீனிவாசனின் குடும்ப பாத்திரங்களை கவனிக்கத் தவறி விட்டார் ஆசிரியர். ஆனாலும் போரடிக்காமல் சென்றது.

**எம். ஏ. அப்துல்காதர், விருத்தாசலம்**

# ஆபீஸ் மோகினி

சு. சமுத்திரம்




கண்டக்டர்கள், 'டபுள் விசில்' கொடுத்து ஓடுகின்ற காலம். பல்லவ பஸ் சக்கரவர்த்தி உதயமாகாத காலம். பஸ்கள், ஒன்றை ஒன்று முண்டியடித்து, மோதாக் குறையாய், தலைவிரி கோலமாய், தலையைத் துண்டிக்கும் கோலமாய் ஓடாத காலம். எல்லாவற்றிற்கும் மேலாக மாணவ—பஸ் ஊழியர் மகாயுத்தங்கள் தோன்றாத காலம்.

அப்போது சுடுகாடுபோல் இருந்த அடையாறு சாலையில், நாணப்பட்டு மெதுவாய் நடக்கும் கல்யாணப் பெண்ணைப்போல், மெதுவாகப் போய்கொண்டிருந்த அந்த அரசாங்க பஸ்ஸை, ஒரு சுற்றுலா பஸ் முந்த முயன்ற போது, பெண்கள் இருக்கையில், முதல் வரிசையில் அந்த பக்கமும், இந்த பக்கமும் எவரும் உட்கார முடியாதபடி நடுவில் அமர்ந்திருந்த மோகினி, "என்ன...டிரைவர்..காலேஜ் பசங்க பஸ்..நம்ம பஸ்ஸை ஓவர்டேக் பண்றதா..நீங்க அத பொறுத்துக்கிட்டு இருக்கிறதா.. சுத்த மோசம்.." என்று குரல் கேட்டதும், 'ஸ்டியரிங்கில்' தலையை வைத்துத் தூங்கலாமா என்று சிந்திப்பவர்போல் கிழட்டுமாடு மாதிரி 'அம்பேலாக' இருந்த டிரைவர், குரல் வந்த திசையை எரிச்சலோடு பார்த்தார். குரல் கொடுத்தவள், இருபது வயதுக்காரி என்பதாலும், அவளின் எழிலவான அதரங்கள் கெஞ்சுவதுபோல் பார்த்ததையும், நளினத்தோடு, நாணமுங் கொண்டதுபோல் ஒயிலாகத்

தோன்றிய கரங்கள், 'வேகமாய்..ஓட்டுங்க..' என்ற இனிமையான குரலுக்குத் தட்டாமல் தாளம் போடுவது போல் லேசாக ஆடுவதையும், அவள் கால்மேல் கால் போட்டு இருந்த காட்சியையும் பார்த்த கிழட்டு டிரை வருக்கு, உற்சாகம் பிறந்திருக்கவேண்டும். இல்லையென்றால், அவரைவிடக் கிழடுதாண்டிய, பாழடைந்த பல்லக்கு போல் தோன்றிய அந்த பஸ்ஸை, வலது பக்கமாய் ஒடித்து, இடதுபக்கமாய் நகர்த்தி, பிளாட்பாரத்தில் நின் றவர்கள் ஓடும்படியும், நடந்தவர்கள் நிற்கும்படியும், அனுவசியமாக ஓட்டியிருக்கமாட்டார். ''அங்கமுத்து... தங்கமுத்து...தண்ணிக்குப் போனாளாம்...'' என்றும், ''மெடிகல் காலேஜ் லேடி... ஒன் ஸ்டெதாஸ் கோப்பைத் தாடி,'' என்றும் கல்லூரி மாணவர்கள் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் கும்மாளமிட, கம்பீரமாகப் போய்க் கொண்டிருந்ததை அறிய சுற்றுலா பஸ்ஸை, ஓவர்டேக் செய்திருக்கமாட்டார்.

கல்லூரி மாணவர்கள், சுற்றுலா பஸ் பாகனைச் சுற்றிச் சுற்றி வந்து குரல் கொடுத்தாலும், 'ஓவர்டைம்' சம்பளம் வாங்க நினைத்த டிரைவர், ''நம்மளால இவ்வ ளவுதான் ஓட்ட முடியும்... வேணுமுன்னா நீங்க ஓட் டுங்க..'' என்று சொன்னதும் மட்டுமில்லாமல், மாணவர் கள் கேட்டதுக்கு அபராதம் விதிப்பவர்போல் வண்டியை மெதுவாய் ஓட்டினார். என்றாலும், பஸ் ஸ்டாப்பில் நின்ற அரசாங்க பஸ்ஸை முந்திக்கொண்டு, அந்த சுற்றுலா பஸ் போனபோது மாணவர்கள், தங்கள் பஸ் வெற்றி பெற்றுவிட்டதுபோல் 'டப்பா பஸ்...டப்பா.. பஸ்' என்று மோகினியின் பஸ்ஸைக் கிண்டல் செய்து, வெளியே தெரியும்படி கைகளை ஆட்டினார்கள். மோகினி, டிரைவரை தான் சம்பளம் கொடுக்கும் சொந்த டிரைவராக நினைத்த வள்போல், ''வண்டிய சீக்கிரமா எடும் தாத்தா... அந்தப் பசங்க கையை ஒடிக்கிறதுமாதிரி உரசிக் கொண்டு போங்க...பிளீஸ்... சீக்கிரமா ஸ்டார்ட் பண் ணுங்கோ...'' என்றாள். 'ஒனக்கேண்டி திமிரு...' என்பது மாதிரி இதர பெண்களும், 'சரியான ராங்கிக்காரி' என்று கிழட்டுப் பிரயாணிகளும், 'நாமும் டிரைவரை உற்சாகப் படுத்தலாமா' என்று அசல் இளைஞர்களும், இளைஞர்களாக தங்களை இன்னமும் நினைத்துக் கொண்டி ருந்த முப்பத்தைந்து வயதுக்காரர்களும், சிந்தித்து, தங்கள் சிந்தனைகளுக்கு ஏற்றாற்போல் முகபாவங்களைக்

கோணல் மாணல்களாக வைத்துக் கொண்டிருந்தபோது, 'தாத்தா' என்ற வார்த்தையைத் தகாத வார்த்தையாக எடுத்துக்கொண்ட டிரைவர், தான் தாத்தா இல்லை என்பதை நிருபிக்க நினைத்தவராய், ஆக்ஸிலேட்டரை அழுத்த, சுற்றுலா பஸ் பின்னுக்குத் தள்ளப்பட்டது. மோகினி இப்போது, மாணவ—பிரயாணிகளைப் பார்த்து, நமுட்டுச் சிரிப்புடன் 'டாடா' காட்டியபோது, இதர பிரயாணிகள் முகத்திலும் களை கொட்டியது. அவர்களும், மாணவர்களுக்கு 'டாடா' காட்டிவிட்டு, மோகினியை, பிர்லாவின் பேத்தியைப் பார்ப்பதுபோல் பார்த்தார்கள்.

ஆனால், சீனிவாசன் அவளை அப்படிப் பார்க்கவில்லை. அவள் பார்வை, தன் பக்கம் திரும்பும் போதெல்லாம், தன் ஆள்காட்டி விரலை எடுத்து நெஞ்சைத் தொட்டுவிட்டு, பின்பு அதே விரலை லேசாகத் தூக்கி, வட்டம் மாதிரி செய்து, பின்பு நேராக நீட்டி, அவள் இருக்கைக்கருகே இருந்த காலி இடத்தைச் சுட்டிக்காட்டி, கண்களால் கெஞ்சினான். அதாவது, அவளருகே, தான் வந்து அமரலாமா என்று சமிக்ஞை காட்டுகிறானாம். மோகினி, அந்த சமிக்ஞையை 'கண்டுக்காமல்' இருந்தபோது, இன்னொரு சீட்டில் உட்கார்ந்திருந்த ஒரு போலீஸ்காரர், காலி இடத்தைச் சுட்டிக்காட்டியவனை 'காலியாக' நினைத்து, கேஸ் கிடைக்கப் போகிற—அதுவும் மாதக் கடைசியில் கிடைக்கப் போகிற— பெருமிதத்தில் அவனை நோக்கி நகர்ந்தபோது, விஷயத்தைப் புரிந்து கொண்ட மோகினி 'பேசாம...அங்கேயே உட்காருங்க..' என்பது மாதிரி வலதுகையைத் தூக்கி, விரல்களை தாழ்த்தி, ஒரு அழுத்தங்கொடுத்தாள். அந்த சமிக்ஞையைப் போலீஸ்காரர் பார்த்தபடி என்பது மாதிரியும், அந்த சிவப்புத் தொப்பியைப் பார்த்தாள். சிவப்புத் தொப்பிக்கும் புரிந்திருக்க வேண்டும். இல்லையானால், தொப்பியைக் கழற்றிக் கையில் வைத்துக்கொண்டு, வேறு எதற்கோ நகரப் போனவர்போல் அவர் இன்னொரு 'ரோவில்' போய் உட்கார்ந்திருக்க மாட்டார்.

சீனிவாசனுக்கு அவளருகே உட்காரவேண்டும் போலிருந்தது. அப்படி அவன் உட்காருவான் என்று நினைத்தவள்போல், பாதி இடத்தை 'வேகன்ஸியாக' வைக்காமல் மோகினி படர்ந்து உட்கார்ந்திருந்ததன் மர்மம், போலீஸ்காரருக்குப் புரிந்தது. சாதுவான முகபாவத்துடனும், சந்தன நேர்த்தியுடனும், கொஞ்சம் நோஞ்சான்போல்

தோன்றினாலும், களைகாட்டும் நயனத்துடன் தோன்றிய சீனிவாசனை, மோகினியுடன் மனதுக்குள் ஜோடி சேர்த்து, போலீஸ்காரர் திருப்தி பட்டுக்கொண்டார்.

பஸ் மெரீனா ஸ்டாப்பிங்கில் நின்றது. முதலில் இறங்கிய சீனிவாசன், இறங்க வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல், அந்த ஸ்டாப்பில் ஏறிய ஒருத்தியின் கைக் குழந்தையின் கன்னங்களைச் செல்லமாகக் கிள்ளிக்கொண்டு, தன்னை மறந்து நின்ற மோகினியை, கண்ணடித்தான். 'இறங்கு...இறங்கு' என்பது மாதிரி, தலையை ஏற்றி இறக்கி ஆட்டினான். ஆனால் மோகினியோ, அந்தக் குழந்தை சிரிப்பதில் தன்னை மறந்து, அதன் உதடுகளை, கையால் அழுத்திக்கொண்டிருந்தாள். டிரைவர், சீனிவாசன், கையைக் காலை ஆட்டுவதைப் பார்த்தார். ''பயல் இங்கயே நிக் கட்டும்...நாம ஆக்ஸிலேட்ட்ரை அழுத்தலாமா..'' என்று கூட நினைத்தார். பின்னர் அப்படி நினைத்ததற்குப் பிரா யச் சித்தமாக, 'சிவசிவா..' என்று மனதுக்குள் சொல் லிக்கொண்டே, மோகினியைப் பார்த்து, ''பாப்பா...இங்க தானமா நீ இறங்கணும்?'' என்று கேட்டபோது, மோகினி அப்போதுதான் நினைவு வந்தவள் போல், அந்தக் குழந் தையைப் பிரிய மனமில்லாமல், அதன் தலைமுடியைத் தடவி விட்டு, இறங்கினாள்.

இருவரும், காதலர் பாதை வழியாக நடந்தார் கள். 'எவ்வளவு அழகா இருக்கு..எவ்வளவு அழகா இருக்கு' என்று சொல்லிக்கொண்டே, மோகினி, சீனிவாசனைப் பார்த் தாள். சீனி, பதில் பேசாமல் இருப்பானா? இருக்கவில்லை.

'இந்த சட்டைதானே...கெஜம் நாற்பது ரூபா ...நல்லா இல்லாம எப்படி இருக்கும்?'

'மண்ணுங்கட்டி..நான். பஸ்லே பார்த்தேனே... அந்தக் குழந்தைய சொன்னேன்...குறஞ்சுது இன்னும் ஒரு வாரத்துக்கு அந்தப் பையனை என்னால மறக்க முடியாது.'

'அந்தப் பையன் கிடக்கிறான் விடு.. இப்ப இந்தப் பையனப் பாரு..'

'நீங்க..உண்மையிலேயே பையன்தான்..இன்னும் மெச்சூரிட்டி வரல..'

'ஏன் அப்படிச் சொல்றே..'

'பின்ன என்னவாம்.. பஸ்ல நாலு பேரு பாக்றாப் போல அப்படித்தான் கையைக் கால ஆட்டுறதா..'

சீனிவாசன், 'நீ மட்டும் ஆண்பிள்ள மாதிரி ஓவர்டேக் பண்ணும்படியா டிரைவர்கிட்ட சொல்ல லாமா..' என்று கேட்கலாமா என்று நினைத்தான். அப் படிச் சொன்னால், அவள், அங்கேயே அவனை விட்டுவிட்டுப் போய்விடுவாள் என்ற 'ரியாக்ஷனை' நினைத்து, வயது வராத பையன் மாதிரி, அவளுக்கு இணையாக நடக்கப் பயந்தவன்போல், பின்னால் நடந்தான்.

இருவரும் ஒரு தோணிக்கருகே வந்து உட் கார்ந்தார்கள். காலை ஒன்றுக்குமேல் ஒன்றாக மடக்கி, இடது கையை ஊன்றி, அதில் லேசாகச் சாய்ந்துகொண்டு உட்கார்ந்த மோகினி, வலது கையால், தனனைச் சுற்றி ஒரு வட்டக்கோட்டைப் போட்டாள். சீனிவாசனுக்கு, அந்த கோட்டின் அர்த்தம் புரியும். அந்தக் கோட்டுக்கு உள்ளே, அவனோ, அவன் கைகால்களோ போகக் கூடாது என்கிற தடைக்கோடு அது.

'இன்னிக்கி இந்தக் கோட்டைத் தாண்டி வராட்டா என்பேரு சீனியில்ல..' என்று தினமும் சொல்லி, பின்னர், அவள் கண்களின் உருட்டலுக்குப் பயந்து, கிழித்த கோட்டைத் தாண்டாத அவன், அன்று பேசாமல், 'சவலைப் பிள்ளைமாதிரி' உட்கார்ந்திருந்ததில் மோகினி ஆச் சரியப்பட்டாள். சிரித்துக்கொண்டே கேட்டாள்.

'ஏன் உம்முன்னு இருக்கிங்க..என்ன வந்தது உங்களுக்கு?'

'அவனவன் காதலிச்ச மூணு நாளையில் ஒண்ணு உக்காருராங்க.. தோளோட தோள் இடிக்கும்படியா நடக்கறுங்க.. நீ என்னடான்னு..'

'சொல்லுங்க...என்னடான்னு...'

'என்னை நீ நேராவே 'டா' போடலாமே..'

'அளவுக்கு மீறிப் போனா அதுவும் போடுவேன் இல்ல..சொல்ல வந்ததைச் சொல்லுங்க...'

'நீயே சொல்லு; நாம மூணு வருஷமா பழகுறோம்... ஒரு நாளாவது என் பக்கத்துல உட்கார விடுறியா..'

'நெருப்பைப் பஞ்சு பக்கத்துல விடப்படாது..'

'எதுக்கும் பொருத்தமா பேசிடுவே..என் மனசு ஒனக்கு புரியமாட்டேங்குது. ஒன் பக்கத்துல உட்கார்ந்து சினிமாவுக்கு போகணும்னு மூணு வருஷமா நினைக்கிறேன். முடிஞ்சுதா உண்மையிலேயே..நீ ஒரு யந்திரமா இருப்பி யோன்னுகூட நினைக்கத் தோணுது..'

மோகினி, அவனை யந்திரம்போல ஆடாது

அசையாது பார்த்தாள். அந்த பார்வையில், அவன் யந்திரமயமானவன்போல் இருந்தபோது, 'அப்பா கிட்ட சொல்லிட்டிங்களா..' என்றாள் அமைதியாக. சீனிவாசன் பேசாமல் இருந்தான். மோகினி பொரிந்தாள்.

'எத்தன தடவங்க ஒங்களுக்குச் சொல்றது.. அப்பா கிட்ட சொல்லிக் கல்யாணம் பண்ணிக்கத் தைரியம் இல்லே. என் கிட்ட காட்டற கோபத்தை அவர் கிட்ட காட்டியிருந்தா நான் இப்டிக் கோபப்பட வேண்டிய அவசியம் வந்திருக்காது. இன்னைக்கு எனக்கு ரெண்டுல ஒண்ணு தெரியணும்..ஒங்களால எனக்குத் தாலி கட்ட முடியுமா முடியாதா..ஒங்களால வெட்டியா இருக்கவும் முடியாது..என்னால வெட்டியா வரவும் முடியாது. ஒரு தாலிக் கயிறு இல்லாததால நான் படுற பாடு எனக்குத்தான் தெரியும்...'

'என்ன சொல்ற...'

'சுண்டக்காய்க்கு உப்பில்லென்னு சொல்றேன்.. எங்க மானேஜர் சுந்தரத்தோட பார்வை சரியில்ல.. பாவிப்பய சொந்த பெண்டாட்டியகூட அப்டிப் பார்க்க மாட்டான்..அப்டி உரிமையோட பேச மாட்டான்.. ஒரு தாலிக் கயிறு இருந்தாலாவது மனம் மாறுகிறானான்னு பாக்கப்போறேன்...'

'நான்தான் ஒனக்குப் படிச்சிப் படிச்சிச் சொன்னேன். அவன் கூப்புடுற நேரத்துலல்லாம் ஆபீஸ் ஆபீஸின்னு போனா இப்படித்தான் நடக்கும்..'

'என்னங்க நீங்க..பையன் மாதிரி பேசுறீங்க. எங்க கம்பெனில..

என்டயர் பப்ளிஸிட்டியயே நாங்கதான் பாத்துக்கிறோம். பப்ளிஸிட்டி மினுங்கணும்னா அதுல வேல பார்க்கிறவங்க கசங்குனாத்தான் முடியும்.. ஒங்களுக்குப் புரியும் படியாவே ஒரு உதாரணம் சொல்றேன்.. நீங்க சாப்பிடுற மசால்தோசை சூடா வரணுமுன்னா தோசை போடுறவரு நெருப்பு பக்கத்துல சூடுபடாம இருக்க முடியுமா? எங்களுக்குக் கஸ்டமர்தான் முக்கியமே தவிர கஷ்டங்கள் முக்கியமல்ல.. உங்க மாதிரி அஸிஸ்டெண்ட் மானேஜர் மாதிரி உத்தியோகமுன்னா பரவாயில்ல... பவர் இல்லாத போஸ்ட்டு பப்ளிஸிட்டி வேலே.. ஆனால் அதை பவர்புல் போஸ்டாயும் மாத்த முடியும்... சும்மா சொல்லப்படாது.. அந்த ஆளு சுந்தரம் வேலயில எமன்.. அதனாலயே எனக்கு அவர்கிட்ட மரியாதை.

அந்த மரியாதையை அவன் மரியாத கெட்ட தரமா நினைக்கிறான்..'

'போகட்டும்..நீ ஏன் அவன் வீட்டுக்கும் போற..'

'என்னங்க நீங்க.. இன்னும் நான் கன்ஃபர்ம் ஆகலே.. நோயாளியான அம்மா.. ஜாதகம் தவிர எதையும் படிக்கத் தெரியாத அப்பா.. இவங்களைக் காப்பாத்துற பொறுப்பு என்னோடது.. கேஷுவல் வேலய என்னால எப்டி கேஷுவலா எடுத்துக்க முடியும்? அது போகட்டும்..இன்னிக்கி ரெண்டுல ஒண்ணு தெரியணும்.. ஒங்களால என் கழுத்துல தாலி கட்ட முடியுமா முடியாதா..சொல்லுங்க..'

'மோகினி..பிளட்பிரஷர் தொத்து வியாதியா?'

'ஏன் சம்பந்தமில்லாம உளறுறீங்க..'

'அப்பாவுக்கு இருக்கிற பிளட் பிரஷ்ஷர்ல அவர் கத்துறதுலயும் திட்டுறதுலயும் எங்களுக்கும் பிளட் பிரஷர் வந்துடும் போலிருக்கு.. அம்மாவுக்குக் கிட்டத் தட்ட வந்துட்டுது...'

'அதாவது ஒங்களால அப்பா கிட்டச் சொல்ல முடியாது. அவ்வளவுதானே?'

'பிளீஸ்..எழுந்திருக்காதே...அம்மா காதுல ஒரு நாள் போட்டேன்..அவள் அப்பா காதுல போட்டாள். அவ்வளவுதான். அவரு போட்ட கூச்சலில் என் அம்மா என் கிட்ட வந்து 'டேய்..உன்னிஷ்டமா கல்யாணம் நடந்தா இந்த வீட்ல அதுக்கு முன்னாலயோ..பின்னாலேயோ ஒரு இழவுதாண்டா நடக்கும்'னு அழுதுகிட்டே சொன்னாள். அதனாலதான் யோசிக்கிறேன்..அப்பா வாழ்க்கையில ரொம்பக் கஷ்டப்பட்டவரு. சொந்தக்காரங்களால மோசம் போனவரு.. ஆபீஸல உண்மையா இருந்ததுனால புரமோஷன் இல்லாம அழுத்தி வச்சிருக்காங்க.. இதனால எந்தப் பிரச்னையையும் தன் மானத்துக்கு விடப்பட்ட சவாலா நினைக்கிறவரு.. அதனால தான் யோசிக்கிறேன்..'

'என்னங்க நீங்க.. எங்கப்பா கூட வாழ்க்கையில ஏமாந்து போனவராம். தஞ்சாவூர்ல நிறைய சொத்து இருந்திருக்கு. அவ்வளவையும் எவள் எவளுக்கெல்லாமோ எழுதிக்குடுத்து...ரொம்ப அப்பாவி அம்மா எனக்கு விவரம் தெரிஞ்ச நாளையில இருந்து..ஒரே படுக்கைதான்.'

மோகினி, அவனையே பார்த்தாள். சிரிப்பவள்

போல் சிறிது கண்களை மூடினுள். பிறகு, முதன்முதலாக அவன் பெருவிரலை லேசாகப் பிடித்துக்கொண்டே, ''மனிதர்கள்ல நல்லவங்கன்னும் கிடையாது, கெட்டவங் கன்னும் கிடையாது..சொல்ற விதமாச் சொன்ஞ எல்லாரை யும் நம்ம..பக்கம் இழுத்துடலாம். நீங்க சரியான மண் குதிரை..'

'நான் நிலைமையைச் சொன்ன பிறகும் நீ இப்படிப் பேசிஞ எப்டி?'

'எப்டின்னு சொல்றேன் கேளுங்க..நான் பப்ளி ஸிட்டி வேலையில் இருக்கிறவள். ஆட்களை எப்படி 'கவர்' பண்றது என்கிற டெக்னிக் தெரிஞ்சவள்..ஒரு ஆளோட இமேஜை ஊதவச்சா அதுக்குள்ளே இருக்கிறத நம்ம இஷ்டத்துக்கு மாத்திட முடியும்..நீங்க ஒங்க அப்பாவோட சுபாவத்தை சொன்னது மாதிரி உங்க குடும்பத்தைப் பத்தி எல்லா விவரமும் சொல்லுங்க. அவங்கள எனக்குச் சாதகமா மாத்திக் காட்டுறேஞ இல்லையான்னு பாருங்க..ஆனுல்.. ஒண்ணு, ஒங்க அப்பா கிட்டபோய் 'அப்பா..அப்பா.. எனக்கு பிடிச்ச பெண்ணை ஒரு தடவை ஒரே ஒரு தடவ பாருங்க..அதுக்கப்புறமும் ஒங்களுக்குப் பிடிக்கலன்ஞ எனக்கு வேண்டாமுன்னு' ஒரு வார்த்த போட்டு வையுங்க..'

'டிரை பண்றேன்..'

'அதப்பத்தி எனக்குத் தெரியாது. வார வெள்ளிக்கிழமை நான் ஒங்க வீட்டுக்கு வரேன்..'

சீனிவாசன் அவள் அருகில் நெருங்கிக் கொண் டான். யாரும் இல்லாத அந்த இடத்தில், வீட்டு விவரங்களை ரகசியமாகச் சொன்னுன். மோகினியிடம், புதிய உறுதி பிறந்தது. அவளை விரும்பாத ஒருவர் இருக்க முடியுமா? பார்த்துடலாம். பாத்துட வேண்டியது தான்.

மோகினி, கால்களில் கைகளை ஊன்றிக் கொண்டே எழுந்தாள். சீனிவாசன், சற்றுத் துணிச்ச லோடு அவள் கைகளைப் பற்றிக் கொண்டு எழுந்தான். பின்னர், அப்போதே கல்யாணமாகி விட்டதுபோன்ற உரிமையில், 'இனிமே சுந்தரம் வீட்டுக்குப் போகாதே..' என்ருன்.

'அந்த மாமி நல்லவர்..சுந்தரத்தின் பையன் ஒருவன்..நாலு வயசு இருக்கும்..அவன் ஆன்ட்டின்னு கூப்பிடும்போது எனக்கு இந்த உலகமே தூசி மாதிரி தெரியும்..நான் அந்த வார்த்தய கேக்கத்தான் போறேன்.

அந்த ஆளு என்னடான்னு என் 'ஆன்ட்டி' நிலைமையை எக்ஸ்பிளாயிட் பண்ணப்பாக்குறான்.'

'எதுக்கும்...நீ...'

'நீங்க எனக்கு ஒண்ணும் சொல்லாண்டாம்.. நீங்க மட்டும் என் கழுத்துல ஒரு மஞ்சள் கயிற்ற போட்டுடுங்க .அப்புறம் பாருங்க.. அந்த சுந்தரம் என்ன பாடு படப் போறான்னு...'

மோனலிஸா புன்னகை தவழ நடந்த மோகினிக்கு, திருமணத்தைவிட, திருமணத்திற்கு அவன் குடும்பத்தினரைச் சம்மதிக்க வைப்பது, தன் திறமைக்கும், சுய மரியாதைக்கும் ஒரு பரீட்சையாக நினைத்து நடந்தாள்.

அந்தப் பரீட்சை எப்படி இருக்கும் என்பதற்குக் கட்டியங்கூறுவதுபோல், சந்திரன், அக்கினிப் பிழம்பாக, வித்தியாசமான தோற்றத்தில் தோன்றியது.




அந்தக் கார் வாசலுக்கு முன்னால் வந்த பிறகும் அங்கே நிற்க வேண்டுமென்ற அனுமானத்துடன், இருபதடி தூரத்துக்கு முன்னதாகவே சீனிவாசன் பிரேக் மீது காலை அட்டை மாதிரி உதைத்துக் கொண்டு ஓட்டி வைத்திருந்தாலும், அது என்னமோ, வாசலுக்கு அப்பால் பதினைந்தடிவரை நொண்டியடித்துக் கொண்டு நின்றது. அதுவரை அவனையும், அவனது 'இவளையும்' எதிர்பார்த்து, வீட்டுக்குள்ளேயே நின்று கொண்டிருந்தவர்கள், கார் நிற்பதைப் பார்த்ததும் வாசலுக்கு வந்தார்கள்.

பின் ஸீட்டில் இருந்து இறங்கிய மோகினி, தோளோடு சேர்ந்து முழங்கைகள் வரை, சேலையை இழுத்து விட்டுக் கொண்டபோது, வீட்டு வராந்தாவில் நின்ற கனகம்மாள், பையனின் வருங்கால மனைவியை இம்ப்ரஸ் செய்ய நினைத்தவள்போல், தன் புடவைத் தலைப்பை முழங்கைக்கு அப்பாலும் கொண்டு வர முயற்சித்து, அது முடியாமல் போகவே கைகளைப் புடவைக்குள் மடக்கிக் கொண்டாள். கல்லூரிக்காரன் சபாபதி, வழக்கத்திற்கு

விரோதமாக, சட்டைப் பொத்தான்களை மாட்டிக் கொண்டதுடன், டைட் பேண்ட் போடாமல் லுங்கி கட்டிக் கொண்டதற்காகச் சங்கடப்பட்டவன் போல், லுங்கியைக் கிழிக்கப் போகிறவன் போல் அதைத் தொடையில் அழுந்தத் தேய்த்தான். பி. யூ. ஸி. க்காரியான உஷா, காரிலிருந்து இறங்கியவளை வரவேற்பது போல், ஒரு புன்னகையை உலவ விட்டாள். கல்லூரியில் சமூக சேவை அணியில் உள்ள அவளுக்கு, காரணமில்லாமல் புன்னகை செய்வது பழகிப் போனதால், இப்பொழுது காரணத்தோடு புன்னகை செய்வது எளிதாக இருந்தது. பி. எஸ் ஸி. முடித்துவிட்டு, தனக்கு எம். எஸ் ஸி. படிக்க இடம் கிடைக்காததால் உலகில் அணுவாயுதப்போர் நடந்தாலும் அதை வரவேற்கத் துடிப்பவள் போல் தோன்றிய கமலா, முகத்தைத் தூக்கி விட்டு, பின்னுல் அதை இறக்கிக் கொண்டாள். இதுதான் அவளின் உயர்ந்தபட்ச வரவேற்பு.

மோகினி, அளவான இடைவெளியில், அழகு குலுங்க நடந்துபோய், சீனிவாசன் அவளுக்கு இணையாக நடக்க விரும்பி, நடக்க முடியாமல் முன்னுல் போயும், பின்னுல் கால்களை நகர்த்தி, அவளுக்கு ஏற்ருற்போல் 'அட்ஜஸ்ட்' செய்து கொண்டும் நடந்தான். வீட்டுக்குரியவர்கள் அனைவரும் அந்த ஜோடியை அளவெடுத்துக் கொண்டிருந்தார்கள்.

'இந்த அண்ணு சரியான விளக்கெண்ணெய்... அவளை மாதிரிதான் அழகா இருக்க முடியாது. . டிரஸ் ஸாவது ஒழுங்கா போட்டிருக்கலாம். .இவனும் இவன் தொளதொள பேண்டும். . .சகிக்கல. .' என்று சகிக்க முடியாமல், உஷா சபாபதியின் காதை மைக் மாதிரி நினைத்துக் கொண்டு பேசிக் கொண்டே போனுள்.

'என் பையன் நிறத்துக்கு இவள் கொஞ்சம் மட்டமின்னுலும் பரவாயில்லே. இவனுக்குன்னு பிறந்தவள் மாதிரியே இருக்காளே' என்று பொன்குஞ்சைப் பெற்ற கனகம் பெருமைப் பட்டுக் கொண்டாள். சிறிது 'இன்டிபரன்டாக' இருந்த கமலாகூட, மோகினியைப் பார்த்ததும் தாற்காலிகமாக எம். எஸ் ஸியை மறந்தாள்.

இருபது வயதுக்கேற்ற வளர்ச்சி. மாநிறம். என்ருலும் 'நிறமா' என்று அந்த வார்த்தையைத் தலைகீழாகப் போட்டு சொல்ல முடியாத வண்ணம், அழகைத் தேக்கி வைத்திருந்த கண்கள் அங்குமிங்கும் ஆலவட்டமிட்டபோது, அழகனைத்தும், பூமி சூரியனைச் சுற்றுவது

போல், அந்தக் கண்களைச் சுற்றுவது போன்ற பிரமையை உண்டு பண்ணும். அந்தப் பிரமையைக் கலைக்காமலும் மேலும் வலுப்படுத்தும் கூர்மையாக முடியாமல் வட்டக் கோடு போல் முடியும் மூக்கு; 'ஹேங்கரின்' மேல் பகுதி மாதிரி, வளைவது தெரியாமல் வளைந்திருந்த மேல் உதடும், அதைத் தாங்கிக் கொண்டிருப்பது போல் நேர்க்கோடு போல இருந்த கீழ் உதடும், வெண்மைப் பற்களை அடக்கி வைத்திருக்கும் அழகான ஆணவத்தைக் காட்டும் தோரணை, அந்த பௌவியமான நடையில், தன் கனபரிமாணத்தைக் குறைத்துக் கொண்டிருந்தது.

மோகினி வீட்டு வாசலைத் தாண்டி உள்ளே வந்ததும், ''வாம்மா'' என்று அன்பு கனிய வரவேற்ற கனகம்மாள், உடனே தலைகுனிய வேண்டியதாயிற்று. ஏனென்றால், அவள் மேற்கொண்டு வரவேற்பு வார்த்தை களைப் பேசப் போனபோது மோகினி இரண்டு கைகளையும் குவித்து அவள் பாதத்தைத் தொட்டதால், கனகம்மாள் குனிந்து, அவள் தோள்களைப் பற்றி நிமிர்த்தி, லேசாக அணைத்துக் கொண்டாள்.

மோகினி குடும்பத்தாரை உற்று நோக்கினாள். முதலில் மொத்தமாக, எல்லோரையும் 'பேர்ட்ஸ் ஐ வியூவில்" பார்த்துவிட்டு, பிறகு ஒவ்வொருவரையும் தனித்தனியாகப் பார்த்தாள். புன்னகை புத்திரி உஷா ஏதோ பேசப் போனாள். அதற்குள் மோகினி சிரித்துக் கொண்டே கேட்டாள்:

''நீதானே உஷா? ஏம்மா . . இங்கிலீஷ்ல குறைவா மார்க் எடுத்திருக்கியாமே. . இங்லீஷ் இண்டர் நாஷனல் லாங்க்வேஜ். .கவனிச்சுப் படி.''

அவளிடம், தன் 'இன்டலிஜன்ஸைக்' காட்டத் துடித்த உஷா, இப்போது தாழ்மை மனப்பான்மையில் தவித்தாள். 'இந்த அண்ணு சரியான முசுடு. . காதலி கிட்ட தன்னப் பத்தி பேசாம என்னப்பத்தி பேசினு என்ன அர்த்தம்?' என்று முதலில் முனகிக் கொண்டாள். பிறகு ''நான் இங்லீஷைப் பொறுத்த அளவுல. . எங்க பெரியண்ணு மாதிரிதான்,'' என்று சொல்லிவிட்டு அண்ணி யாகப் போகிறவள் சிரிக்காமல் இருந்து விடுவாளோ என்று தடுமாறியபோது, மோகினி கமலாவை நோட்டம் விட்டாள்.

''நீங்கதானே மிஸ் கமலா?''

சனியனே என்று அம்மாவாலும், மூதேவி என்று அப்பாவாலும், சிடுமூஞ்சி என்று உஷாவாலும்,

நேரடி வர்ணனையில் சிக்கித் தவிக்கும் கமலாவுக்கு, 'மிஸ்' என்ற வார்த்தை தேனாக ஒலித்தது. அந்த வார்த்தையை மிஸ் பண்ண விரும்பாதவள் போல் இன்னொரு தடவை கேட்க விரும்பினாள். அதோடு 'என் பேரு மிஸ் கமலான்னு எப்படித் தெரியும்?' என்று கூறி, தன் பெயருக்கு முன்னால், தானாகவே மிஸ் பட்டத்தைப் போட்டுக் கொண்டாள்.

மோகினி சிரித்துக் கொண்டே பேசினாள்.

''ஒங்கண்ணாவுக்கு நீங்கன்னா உயிரு. . ஆமாம். . எம். எஸ் ஸி. ஸீட் கிடைக்கலங்கறதுக்காக சரியாகக் கூட சாப்பிடாம இருக்கிங்களாமே. பரவாயில்லே. நெக்ஸ்ட் இயர்ல நான் மேடத்துக்கிட்ட சொல்லி வாங்கித் தந்திடுறேன்.''

எந்த மேடத்துக்கிட்ட என்று கேட்கப் போன கமலா, மோகினி, லுங்கிக்காரத் தம்பியை நோட்டம் போடுவதைப் பார்த்து, தன் 'டர்னுக்கு'க் காத்திருக்க விரும்பியவள்போல், அவளுக்கருகே வந்து நின்று கொண்டாள். மருமகள் தன்னைப் பற்றி விசாரிப்பதற்கு எப்படி விடையளிக்க வேண்டும் என்று வாயில் வார்த்தைகளைச் சுமந்து கொண்டிருந்த கனகம்மாள், அவள் பார்வை இளைய மகனிடம் போனதைப் பார்த்ததும், அடுப்பு இதற்கு மேல் தாங்காது என்று நினைத்தவளாய் சமையலறைக்குள் போய்விட்டாள். கணவனுக்கு ஒரு தடவை உத்தியோகத்தில் சீனியாரிட்டி கை கொடுக்காததுபோல், தன் சீனியாரிட்டியும் பயனளிக்காமல் போனதில் அவளுக்கு வருத்தந்தான்.

லுங்கிக்காரன் திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தபோது, ''டென்னிஸ் நல்லா விளையாடுவீங்களாமே. . டென்னிஸ் எப்ப வேணுமுன்னாலும் கற்றுக் கொள்ளலாம். . .ஆனால் எக்ஸாமிக்ஸை இப்ப மட்டுந்தான் கத்துக்க முடியும்,'' என்று மோகினி சொன்னாள். லுங்கிக்காரன் இன்னொரு அறைக்குள் போக முயற்சித்தபோது, ''விளையாட்டைப் படிப்பாய் நினைக்கிறதுல தப்பில்ல. . ஆனால் படிப்பைத்தான் விளையாட்டா நினைக்கக் கூடாது. நான் சொல்றது ஒங்களுக்கு புரியும்னு நினைக்கிறேன்,'' என்று அவள் மேலும் சிரித்துக் கொண்டு மேலும் மேலும் பேசிய போது, சபாபதி அண்ணனை மேலுங்கீழும் பார்த்துக் கொண்டே கண்களால் அவனைப் பிறாண்டினான். அண்ணன்காரனோ மிகப் பெரிய லட்சியத்தை எட்டிப் பிடித்து விட்டவன்போல், இரண்டு கைகளையும் பின்னால் கட்டிக்

கொண்டு, வீட்டிற்குள்ளேயே 'உலா' வந்து கொண்டிருந்தான்.

மோகினி சமையலறைக்குள் நுழைந்தாள். பால் பாத்திரத்தை இறக்கப் போன கனகம்மாவை, கொஞ்சம் வன்முறையாகத் தள்ளிவிட்டு இவள் இறக்கி வைத்தாள். "நீங்களும் இருக்கியளடி. இங்க வந்து பாருங்க.. ." என்று கூச்சல் போட்டு, இரண்டு மகள்களின் கூட்டத்தைச் சேர்க்கப் போன அவளை, 'உஷ்' என்று வாயில் விரலை வைத்து அடக்கிவிட்டு, "இப்ப இருமல் எப்படி அத்தே இருக்கு? நீங்க தினமும் சுக்கைத் தட்டிக் காப்பிபோட்டு சாப்பிடணும். ஒரு மாதத்துல இருமல் போயிடும்," என்று ஆதரவாகக் கேட்டாள். கனகம்மாவால் மகிழ்ச்சியைத் தாங்க முடியவில்லை. இந்த ஐம்பது வயதில், அவள் கணவராகட்டும், பிள்ளையாகட்டும், இப்படி ஒரு தடவை கூடக்கேட்டதில்லை. இவள், பழகிய ஐந்து நிமிடத்தில் கேட்கக் கூடியதைக் கேட்டுட்டாளே! .பெரியவனைப் பாசமில்லாதவன்னு நினைச்சது எவ்வளவு தப்பு? இவள்கிட்ட என்னோட கஷ்டத்த சொல்லியிருக்கானே!

கனகம்மா சிந்தித்துக் கொண்டு மட்டும் இருக்கவில்லை. சுக்கைத் தட்டிச் சாப்பிடச் சொன்ன மோகினியின் கன்னத்தைச் சுக்காக நினைத்து, தடவிக் கொண்டிருந்தாள். மோகினி அவளிடமிருந்து விடுபட்டுக் கொண்டே, "மாமா எங்கேத்த இருக்கார். . ." என்றாள்.

"அவர் ஒரு தனிப் பிறவி. எதையாவது ஒண்ணைச் செய்தார்னு அதையேதான் செய்துகிட்டிருப்பார் . .இடையில. .என்ன வந்தாலும். .அசைய மாட்டாரு. ."

"இப்போ என்ன பண்றார்?"

"எதையாவது பண்ணுவார். .வா, அவருகிட்ட போகலாம். கண்ணில தூசி மாதிரி இருக்கு. . தட்டி விடும்மா. ."

மோகினியும், கனகம்மாவும், வராந்தாவின் ஓரத்தை ஒட்டியிருந்த அறைக்குள் நுழைந்தபோது, அருணாசலம் 'எதையாவது பண்ணாமல்' இவர்கள் என்ன பண்ணுகிறார்கள் என்பதைக் கவனித்துக் கொண்டு நிற்பவர் போல், கதவிடுக்கில் கண்களை விட்டுக் கொண்டு நின்றார். அவர்களைப் பார்த்ததும், கட்டிலை ஒட்டிப் போட்டுக் கொண்டிருந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தார். அறுபது வயதுக்காரர். இளமையில் 'ஆடாமல்' டென்னிஸ் போன்ற விளையாட்டுக்களை மட்டுமே ஆடியதைக் காட்டும்

கட்டுமஸ்தான உடல். பனியனுடன் அவர் நின்ற தோரணை யாருடனே சண்டைக்குப் போகப் போகிறவர் போல் தோன்றியது.

மோகினி சட்டென்று குனிந்து அவர் காலைத் தொட்டாள். அவர் தூக்கி நிறுத்துவார் என்று எதிர் பார்த்தாள். அவர் குத்துக்கல் மாதிரி நின்று கொண்டே இருந்ததால், மோகினி சுயமாகவே எழுந்தாள். அவர் முகத்தை நேராகப் பார்த்தாள். அவர் முகம் உணர்ச்சி வசமாகிக் கொண்டிருந்தது. மோகினி உணர்ச்சிகளைக் கொட்டினுள்.

''காலுல ஏற்பட்ட காயம் இன்னும் ஆறலி யாமே. டயாபெடிஸ்ஸா இருந்தாலும் இருக்கப் போவுது. எதுக்கும் டாக்டர் கிட்ட 'செக்கப்' பண்ணுங்கோ மாமா. .''

அருணுசலம் பதில் சொல்வதற்கு முன்னதாகக் கனகம்மா, முந்திக் கொண்டு, ''அதை ஏன் கேக்குற? டாக் டர் என்கிற வார்த்தய கேட்டாலே எரிஞ்சி விழுறர். போன வாரம் இப்படித்தான். .'' என்று இழுத்து இழுத்துப் பேசப் போனுள்.

அருணுசலத்திற்கு அவள் பேச்சு சங்கடமாக இருந் ததோ அல்லது ஒரு சாக்காக இருந்ததோ தெரியவில்லை. ''சரி. .சரி. .உன் புகாருங்களை. . .வெளில போயி பேசு. .'' என்ருர் சிறிது கடுகடுப்புடன். மோகினிக்கு, அவர் அவ ளிடம் பேசாதது ஏமாற்றந்தான். கணவனின் இயல்பை உணர்ந்து வைத்திருந்த கனகம்மா, மோகினியின் தோளைக் கையால் தட்டி, கண்ணுல் சைகை செய்து, வெளியே வந்தாள். மோகினி, கிழவனுரை நோட்டம் விட்டுக் கொண்டே பின்னுல் வந்தாள்.

அதுவரை அவள் பிரிவைத் தாங்கியது பெரிய விஷயம்போல், உஷாவும், கமலாவும், சபாபதியும் மோகி னியை மொய்த்துக் கொண்டார்கள். சீனிவாசன், அவர் களை ஒரு தடவையும், தன்னை ஒரு தடவையும் பெருமையாய்ப் பார்த்துக் கொண்டான். அவன் இப் போது டைட் பேண்டில் இருந்தான்.

ஸ்வீட்டுகள் கொடுக்கப்பட்டன. காபிகள் குடிக் கப்பட்டன. மோகினி தான் கல்லூரியில் படித்த விதத்தை விளக்கிக் கொண்டிருந்தாள். பேச்சுவாக்கில், ''தலை என்னமா வலிக்குது'' என்று உஷா சொன்னபோது, 'அய் யய்யோ' என்று பதறிப்போய், அவள் தலையைத் தடவி

விட்டாள். கனகம்மாவின் புடவையில் இரண்டு சொட்டு காபி விழுந்தபோது, தன் இடுப்பில் செருகி வைத்திருந்த கைக்குட்டையை எடுத்துப் புடவையைத் துடைத்துவிட்டாள். எல்லோரும் அவளை ஆச்சரியமாகவும், அவளைக் கொண்டு வந்தவனை அனுவசியமாகவும் பார்த்துக் கொண்டு நின்றபோது, "அய்யய்யோ. . .நேரமாயிட்டுது" என்று சொல்லிவிட்டு, அவள் எழுந்து, சீனிவாசனைப் பார்த்தாள். அவன் வீட்டுக்குள்ளேயே காரைத் தேடுபவன் போல் அங்குமிங்கும் சுற்றிவிட்டு, வெளியே வந்து, காரைச் சரியாக வாசலுக்கு முன்னுல் அடைத்தான்.

மோகினி பிரியமில்லாதவள் போல் தயங்கித் தயங்கி வெளியே வந்தாள். கிழவர் அருணுசலம் இருந்த அறைக்குள் எட்டிப் பார்த்தாள். அவரிடம் சொல்லிக் கொள்ளலாமா என்று நினைத்து வாயைத் திறந்தவள் மூடிக் கொண்டாள். அவர் குடி முழுகிப் போனது போல் குப்புறப் படுத்துக் கிடந்தார்.

"அடிக்கடி வாங்கோ அண்ணி" என்று கமலா எதிர்கால முறையை இப்போதே முறைப்படுத்தினுள். அவள் அடிக்கடி வர வேண்டும் என்பதைக் காட்டும் அறிகுறியாக, சபாபதி சட்டைப் பித்தானை மாட்டிக் கொண்டான். மோகினி காரில் ஏறுவது வரைக்கும் பேசிக் கொண்டே போனுள்.

"கமலா, வீட்டுக்கு வாங்கோ. ஒரேடியா அடஞ்சிக் கிடந்தா போரடிக்கும்."

"உஷா, வீட்டுக்கு வாம்மா நான் இங்லீஷ் கத்துத் தாரேன்."

"வரட்டுமா அத்தே. .வரட்டுமா தம்பி!"

கார் ஸ்டார்ட்டாகியது. இப்போது முன் ஸீட்டில் உட்கார்ந்து கொண்ட மோகினி, அந்த வீட்டை ஏற இறங்கப் பார்த்தாள். பழைய காலத்து வீடானுலும் கெட்டியாக இருந்தது. மாடியில் யாரோ வாடகைக்கு இருக்கிருர்கள். கிழவி 'மேக்கப்' செய்து கொள்வது போல் பழைய காலத்தை நவீனப்படுத்தும் வகையில் வீட்டின் வெளிச்சுவரில் சுண்ணும்பு வெள்ளை நீக்கப்பட்டு 'டிஸ்டம்பர்' அடிக்கப்பட்டிருந்தது. வாசற்கதவும் மாற்றப்பட்டது போல் தோன்றியது.

அந்த வீட்டை மனதுக்குள் நன்ருகப் பதிய வைத்துக் கொண்டு, மோகினி முன் ஸீட்டில் சீனிவாசனுக்கு அருகே உட்கார்ந்தாள். "சீனன் கொடுத்து வச்ச

வன்,'' என்று சபாபதி சொல்வது அவளுக்குக் கேட்டது. அதற்குக் கமலாவும் உஷாவும் தலையாட்டுவதும் அவள் பார்வையில் பட்டது.

'டாடா', 'சீரியோக்களுடனும்' உறுமலோடும் புறப் பட்ட கார், மௌனமாக இயங்கிக் கொண்டிருந்தது. கண் இமைகளைக் கொட்டாமலே, ''ஒங்களவங்களுக்கு என் னைப் பிடிச்சிருக்குமுன்னு நினைக்கிறேன். .'' என்றாள் மோகினி.

''விஷயம் வேற மாதிரி. ஒனக்கு அவங்களப் பிடிச்சிருக்கா என்பதுதான் கேள்வி.''

''என்னங்க நீங்க. .ஒங்கப்பா எங்கப்பா இல் லியா? ஓங்கம்மா எங்கம்மா இல்லியா. . .?''

சீனிவாசனால் உணர்ச்சிப் பெருக்கில் பேச முடிய வில்லை. கார் கண்ணாடியில் நடந்தவைகளுக்கெல்லாம் உருவங் கொடுத்துப் பார்த்தான். அதில் பின்னால் வரும் வண்டி களுக்குப் பதிலாக, அவனும் அவளும் உலவிக் கொண்டிருந் தார்கள்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இருவரும் பி. ஏ . படித்துக் கொண் டிருந்ததை நினைத்துப் பார்த்தான்.

கண்டோர் சுருண்டு விழும்படி காட்சியளித்த மோகினியின் பார்வைக்காக, கல்லூரி ஆசிரியர்கள் கூட ஏங்கினார்களாம். 'அவள் திட்டினால் கூடப் பரவாயில்லை. . அதுவும் பேச்சுத்தானே. .' என்று கூட பல மாணவர்கள் 'அட்டம்ப்ட்' செய்வார்கள்.

சீனிவாசன் நினைத்துப் பார்த்துச் சிரித்துக் கொண் டான்.

சுருட்டுக் கிராப்பன் சுரேஷுக்காக, பல பெண் கள் தவங்கிடந்தபோது, அவன் இந்த மோகினிக்காக தவங் கிடந்தான். ஒரு நாள் அவன் பேச முயற்சித்தபோது, இவள் 'ஸ்டுபிட்' என்று சொல்லிவிட்டாள். அதிலிருந்து சகமாணவர்கள் அவனை 'ஸ்டுபிட் சுந்தரம்' என்றார்கள். இதே போல், ஒரு டாக்டரின் மகன்—பளபளப்பான ஆடை களுக்குள் பளபளப்பாக மினுங்கும் பையன் இவளுக்கு ஒரு காதல் கடிதம் எழுத அதை அவள் சுக்கு நூறாகக் கிழித்து, அவன் தலையில் 'பப்ளிக்காக'ப் போட்டாள். முடிவு அவன் 'பேப்பர் தலைவன்' என்று பெயர் வாங்கி னான். அவள், அந்தக் கல்லூரியில் காலெடுத்து வைப்பதற்கு முன்பு வரை, மாணவர்கள் ஒருவருக்கொருவர் 'ரெட்டை

மண்டையன்' 'பஜ்ஜி உதடன்' என்று செல்லப் பெயர்களை வைத்திருந்தார்கள். வந்ததும், இவள் அவர்களை எந்த முறையில் நடத்துகிறளோ, அந்த முறையில் பெயர் வைக்கத் துவங்கிவிட்டார்கள். இவளை மொய்த்துக் கொண் டிருந்த பெரிய இடத்துப் பையன் ஒருவனை, 'ஒனக்கெல்லாம் அக்கா தங்கை இல்லியா' என்று கேட்டாள். அன்றிலிருந்து அவன் 'அக்கா தங்கை இல்லாதவன்' என்று அழைக்கப் பட்டான்.

இப்படித் தன்னைவிட வலுவிலும் வளத்திலும் வாழ்க்கை முறையிலும் மேம்பட்ட பலரைத் துச்சமாக மதித்து விட்டு, தானுண்டு தன் வேலையுண்டு என்று இருந்த தன் மீது அவளுக்குக் காதல் ஏற்பட்டதை நினைக் கும்போது, இப்போதும் சீனிவாசன் ஆச்சரியப்பட்டான். இவ்வளவுக்கும் அவளே அவனிடம் வலியப் பேசி வசீ கரித்தாள். அவனை 'டப்பா' என்று இடுகுறிப் பெயரில் அழைத்த மாணவர்கள், அவனை அவள் காதலிக்க முடி யாது என்று திட்டவட்டமாக நம்பியதுடன் இருவர் சந் திப்பதையும், கிசுகிசு பேசுவதையும் பார்த்துவிட்டு, 'எவ னுக்கோ . .லவ் லெட்டர் கொடுக்கத்தான் இவள் இந்த டப் பாப் பையனை பயன்படுத்துகிறுள்' என்று பேசிக் கொண் டதும் அவனுக்குத் தெரியும். இந்தப் பேச்சை அவன் அவள் காதில் போட்டதும், "நீங்களா டப்பா. . இல்லை மோகன் டப்பா. . .அவனுேட அப்பா டப்பா," என்று சொன்னதுடன், சொன்னவர்களை 'டப்பாய்க்கக் கூட'ப் பார்த்தாள்.

சீனிவாசன் வாய்விட்டே சிரித்தான்.

எஞ்ஜினியராக அங்குமிங்கும் சுற்றிவிட்டு, இப் போது ஒய்வு பெற்றுச் சென்னையில் செட்டிலான அப்பா விடம், தன் காதல் விவகாரத்தை, அம்மா மூலம் தெரியப் படுத்தி, தந்தையின் வேண்டா வெறுப்பான அனுமதி வாங்கி மோகினியை வீட்டிற்குக் கூட்டி வந்திருந் தான்.

எல்லோருக்குமே அவளைப் பிடித்துவிட்டதை நினைத்துசந்தோஷப்பட்டு, தன்னை இவளுக்கு எப்படி பிடித்தது என்று சந்தேகப்பட்டும், பெருமிதப்பட்டும், பின்னர் அவள் தன்னுடன் காலம் முழுவதும் காலத்தைக் கழிக்கப் போகி றுள் என்ற கற்பனை சுகத்தில், கண்ணுக்குத் தெரியாமல்

'மோகினி' என்று சொல்லிக் கொண்டே, அவள் தோளைப் பிடித்தான். அவள் சீறினாள்.

''தொட்டுத் தாலி கட்டுமுன்ன என்னை தொடக் கூடாதுன்னு எத்தன தடவை சொல்றது?''

''அதனாலதான் இப்ப தொட்டேன். அப்புறமா தாலிய கட்டுறேன்.''

''ஆமாம். என்னைப்பத்தி நீங்க என்ன நினைச்சிருக்கிறீங்க? ஒங்க வீட்டுக்கு வந்ததுனால தொடலாமுன்னா? நான் இனிமே ஒங்க வீட்டுக்கு வரமாட்டேன்.''

சீனி நடுங்கிப் போனான். மௌனமாகக் காரை ஓட்டினான். அவள் வீட்டு முன் கார் நின்றபோது, உள்ளே ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்திருந்த அவள் தந்தை ஏகாம்பரம், வெத்திலை பாக்கு டப்பாவை மடியில் வைத்துக் கொண்டு அதை லேசாகத் தட்டிக் கொண்டு இருந்தவர், ''வாங்கோ. .மாப்பிள்ளை. .உள்ளே வந்துட்டுப் போங்க. .'' என்றார். இதுவரை அவர் அவனை மிஸ்டர் சீனிவாசன் என்று அழைத்தவர், இப்போது 'மாப்பிள்ளை' என்று சொன்னதைக் கேட்டதும், மோகினி 'உம்' மென்று உட்கார்ந்திருந்த சீனிவாசனின் விலாவில் செல்லமாக இடித்தாள். அவனுக்குப் போன உயிர் திரும்ப வந்தது. ''நீ மட்டும் என்னைத் தொடலாமா?'' என்று கேட்கலாமா என்று கூட நினைத்தான். கூடாது. சரியான வீம்புக்காரி. 'ஓஹோ. . அப்படியா. .ஒங்க வாடையே வேண்டாம்' என்று சொல்லிவிட்டு விலகக் கூடியவள்.

கீழ்ப்படிதலான டிரைவர் போல அவன் அவளுக்குக் கார்க் கதவைத் திறந்து விட்டான். இருவரும் வீட்டுக்குள் வந்தார்கள். வருங்கால மாமனாருடனும், உள்ளே இன்னொரு அறையில் எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த நோயாளி மாமியாருடனும் அரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு சீனிவாசன் வெளியே வந்தான்.

மோகினி அவன் காரை ஸ்டார்ட் செய்த வரைக்கும் அருகிலேயே நின்றாள். கார் இரண்டடி நகர்ந்த போது, அவள் நாலடி துள்ளி, ''ஜாக்கிரதையா வண்டி ஓட்டுங்கோ. உங்களுக்கு ஒண்ணுன்னா என்னால உயிரோட இருக்க முடியாது, '' என்று சொல்லிவிட்டு, அவன் பரட்டைத் தலையில் தன் கையை பதித்து விட்டு, பிறகு 'டாடா' காட்டினாள். சீனிவாசன் மகிழ்ந்து போனான்.

அவள் காட்டிய தாய்மையில் இவன் கிறங்கிப்

போனது போல், காரும் பின்னுல் வந்த சைக்கிள்கள் கூட 'ஓவர் டேக்' செய்யுமளவிற்கு, மெதுவாய் மெதுவாய் ஓடியது.

காரை ஷெட்டில் விட்டு விட்டு, அவன் பெருமையோடு வீட்டுக்குள் நுழையப் போனுன். அடிக்கடி தன்னை திறமையில்லாதவன், அசடு என்று எவரும் கேட்கு முன்னுலேயே அபிப்பிராயங்களை அள்ளித் தெளிக்கும் அப்பாக்காரர் இவன் 'செலக்ஷனை'ப் பார்த்துப் பாராட்டப் போவதை நினைத்துக் கொண்டு அவன் உள்ளே நுழைந்த போது—

முன் அறையில், அவன் தந்தை அருணுசலம் மெதுவாகப் பேசிக் கொண்டிருந்தவர், இப்போது அவனுக்கும் கேட்கட்டும் என்று நினைத்தவர் போல் கத்தினுர்.

''இந்தக் கல்யாணம் நடக்க முடியாது. . நான் உயிரோட இருக்கிற வரைக்கும் அவள் என் மருமகளா ஆக முடியாது. .''

கனகம்மாள் முகம் வெளிறியிருந்தது. கமலா கடுகடுப்போடு உதடுகளைத் துடிக்க வைத்துக் கொண்டாள். உஷா மட்டும் தந்தையிடம் நேராகக் கேட்டாள்.

''காரணம் சொல்லாமல் ஒருத்தியை வேண்டாமுன்னு எப்படி?''

''அவளைப் பாத்தா பிஞ்சில் பழுத்தவள் மாதிரி தோணுது. .அதோட ஒவ்வொருவனுடைய வீக்னஸையும் கண்டு பிடிச்சி அதைத் தனக்கு சாதகமா பயன்படுத்துற டைப். . சீனன் நல்ல நாளுலயே மந்தம். இவள் கையில பிடிச்சி கொடுத்துட்டா. அவ்வளவுதான். .''

கனகம்மாளுக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. கணவன்காரர், தனது மனம் மாறிவிடுமோ என்று தனக்குள்ளேயே பயந்து, தான் மேற்கொண்ட நிலையிலிருந்து தப்பிக்க முடியாமல் இருக்க, தன்னைச் சுற்றியே உறுதி மொழிக் கோடுகளைப் போட்டுக் கொள்வதோடு, அந்தக் கோட்டை அழிக்கவிடவும் மாட்டார் என்பது தெரிந்திருந்தும் அவள் பேசினுள்.

''பாவம். அறியாத வயது ஆசையோட பழகினுள்' அவள் பேசுவது ஒவ்வொண்ணுக்கும் அர்த்தம் கண்டு பிடிக்கிறது அபத்தம். என் வயசில இந்த மாதிரி ஒரு பொண்ண பாத்ததுல்ல. . .''

"நானும் பாத்ததுல்ல. அதனாலதான் வேண் டாங்கறேன்."

எம். எஸ்ஸி. படிக்க நினைத்த கமலா இப்போது அப்பாவை இடைமறித்தாள்.

"நீங்க சொல்றது உங்களுக்கே நல்லா இருக்கா அப்பா? ஒரு பெண்ணைக் காரணம் காட்டாமலே வேண் டாங்கறது அநியாயம். .அக்ரமம். ."

அருணாசலம் இப்போது பயங்கரமாக வெறித் தார்.

"அவளைப் பற்றி ஆயிரம் விஷயங்கள் தெரியும். அதெல்லாம் ஒங்ககிட்ட சொல்ல முடியாது. .சொல்றதும் பண்பில்ல. .மொத்தத்துல நான் உயிரோட இருக்கற வரைக்கும் அவள் இந்த வீட்டுக்குள்ள வர முடியாது."

பெண்கள் புரிந்தும் புரியாதது போல ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு நின்றபோது, சீனி வாசன் நிலைகுலைந்து போனவன் போல் வாசற் கதவைப் பிடித்துக் கொண்டான். பின்னர் நொண்டியடித்து அப் பாவை நெருங்கினான்.



## மூன்று

'சாதுவுக்குக் கோபம் வந்தால், காடு தாங்காது' என்பது உண்மையோ பொய்யோ, சீனி வாசனுக்கு வந்த கோபத்தால் அந்த வீடே தாங்க முடியாமல் கிட்டத் தட்ட காடு மாதிரி ஆகியது.

'சும்மா கத்தாதிங்க அப்பா. .நான் மூணு வருஷமா பழகி நல்லவள்னு கண்டுபிடிச்சவளை நீங்க மூணு நிமிஷத்துல. .அதுவும் சரியாக் கூடப் பார்க்காம. . ஒரு முடிவுக்கு வாரீங்கன்னா அது அர்த்தமில்லாத முடிவுதான். இது என்னோட கல்யாணம். .நீங்க வச்சிருக்கிற மிஸ் கன்ஸீவ்டு நோஷன்களுக்கு நான் எக்ஸ்பரிமெண்டாய் இருக்க முடியாது. .இந்தக் கல்யாணம் நடந்தே தீரும். . வேணு முன்னா. .பாருங்க. .'

அருணாசலம், அதிர்ந்து போனார். பரமசாது என்று நினைத்த தன் மகன் இப்படி மாறிவிட்டால். .?

இருக்காது.. அந்த மாய மோகினி மாற்றியிருப்பாள்.. கல்யாணத்துக்கு முன்னுலேயே இப்படி மாறிவிட்டான் என்ருல்..ஆன பிறகு..

கனகம்மாளுக்கு எதுவும் ஓடவில்லை. கைகளை நெறித்துக் கொண்டாள். கமலா எந்தப் பக்கம் சேரலாம் என்பதுபோல் யோசித்துக்கொண்டிருந்தாள். சபாபதி, அண்ணன் பேசுவதை ஆமோதிப்பவன்போல் அவனுக்கருகே நின்றுகொண்டான். இப்டி பேசினுத்தான் அவன் கல்யாணத்துல அவன் போராட வேண்டிய அவசியமிருக்காது.

அப்பாவை எதிர்த்துப் பேசிய உஷா மட்டும், சீனிவாசன் கைகளைப் பிடித்து, பின்னுக்குத் தள்ளி 'ஒனக்கு கொஞ்சமாவது சென்ஸ் இருக்கா அண்ணு..அவரு ஏற்கெனவே நோயாளி..தெரிஞ்சும் இப்டி பேசினு..' என்று சொன்னபோது, கனகம்மாளுக்குப் பயம் பிடித்துவிட்டது. மகன் கொடுத்த அட்டாக்கில், அவருக்கு மீண்டும் 'அட்டாக்' வந்தால்..

'ஏண்டா..நேருக்கு நேரா பேசுற அளவுக்கு தைரியம் வந்துட்டுதா..இதவிட அவரை கொன்னுருக்கலாண்டா..'

கனகம்மாள் கட்சி மாறி, கணவனுக்கு அருகே போய் நின்றுகொண்டாள். அந்தச் சமயத்திலும், எல்லோருக்கும், 'சீனு இந்த அளவுக்குப் பேசுருன்? அவனுக்கா இவ்வளவு தைரியம்' என்று நினைத்து, பிறகு அதே தைரியத்தை, திமிராகவும், தான்தோன்றித்தனமாகவும், பிறரைப்பற்றிக் கவலைப்படாத சுயநலமாகவும் பரிணுமப்படுத்திக் கொண்டார்கள். குடும்பத்தினர் இப்படி திடீரென்று பல்டி அடித்ததில், சீனிவாசன் அதிர்ந்து போனுன். பிறர் ஒப்புதல் அளித்தாலொழிய தன் முடிவு நல்ல முடிவாக இருக்க முடியாது என்று தனக்குள்ளேயே ஒரு 'காம்ப்ளெக்ஸை' தான் கொண்ட காதல் அளவிற்கு வளர்த்திருந்த அவன், சற்று நிலைதடுமாறி, தந்தையிடம் மன்னிப்புக் கேட்கலாமா என்றுகூட நினைத்தான்.

அருணுசலம் அவன் மன்னிப்புக் கேட்பதற்காக அங்கே நிற்கவில்லை. மௌனமாக, அவனை ஏற இறங்கப் பார்த்தார். தன் பையன் கொஞ்சம் கோபக்காரன்தான் என்பதில், அந்த தந்தையுள்ளம் அவரை அறியாமலே, லேசாகப் பெருமைப்பட்டுக்கொண்டது. இந்த 'விபரீத' மனேபாவத்தை நொடியில் புரிந்துகொண்ட அவர்

அதை மறைக்கும் வேகத்திலோ அல்லது மறக்கும் வேகத்திலோ, சீனிவாசனைப் பார்த்து, 'ஒண்ணுமட்டுஞ் சொல்றேண்டா..நீ மட்டும் இந்த கல்யாணத்தால அழிஞ்சி போவதாய் இருந்தாக்கூட நான் அரை குறையா சம்மதிச்சிருப்பேன்..ஆனல்..அவள்..இங்க உள்ள வந்துட்டால் வீடு ஆமை புகுந்த வீடாயிடும்..ஒன் தங்கச்சிங்க இங்கயே இருக்க வேண்டிய கட்டாயம் வந்துடும்.. அதான் வேண்டாங்றேன்.. ஒன்ன தொட்டிலிலே இருந்து எடுக்கறதுக்காகத் தலகுனிஞ்சேன்..தோளுல தூக்கி விளையாடுறதுக்காக தல குனிஞ்சேன்.. அப்போல்லாம் சந்தோஷமா தல..குனிஞ்ச நான் இப்ப நீ என் தோளுக்கு மேல வளர்ந்து உதவாக்கரையா போனதுக்காகத் தல குனியறேண்டா..அவளோடதான் வாழணுமுன்னு.. எங்களோட வாழ முடியாது. அப்புறம் உன் இஷ்டம்..' என்று சொல்லிவிட்டு, லேசாக நெஞ்சைப் பிடித்துக் கொண்டே உள்ளே போய்ப் படுத்துக்கொண்டார்.

கனகம்மாள் அவர் பின்னல் போய், கட்டிலுக்கருகே நின்ருள். அவர் காலை லேசாகத் தொட்டாள். அவர் கத்தாமல் இருந்ததால், பிடித்துவிட்டுக் கொண்டிருந்தாள்.

சற்று நேரத்திற்கு முன்பு, அண்ணனுக்காக வக்காலத்து வாங்கிய தங்கைகளும் தம்பியும் அப்பா தங்கள் பொருட்டே அவன் திருமணத்தைத் தடுப்பதாகச் சொன்னதில் அர்த்தம் கண்டு பிடித்தவர்கள்போல், அவனைக் கண்களால் ஒதுக்கினர்கள். சீனிவாசனுக்கும் மன்னிப்பு மனோபாவம், கோபரூபமானது.

'நீ மட்டும் அழிஞ்சி போறதா இருந்தாக்கூட இந்தக் கல்யாணத்துக்கு சம்மதிச்சிருப்பேன்'னு சொல்றரே.. அப்படின்னு என்ன அர்த்தம்? பெற்ற மகனை அதுவும் முதல்ல பெற்ற மகனைவிட மற்ற பிள்ளைங்கள பெரிசா நினைக்கிற ஒருவரை...அதுவும் அவங்களுக்காக மூத்தவனை விஷப் பரீட்சை செய்யுற ஒருவரை..நாம ஏன் மதிக்கணும்..மதிக்கவும் வேண்டாம்..இந்த வீட்ல மிதிக்கவும் வேண்டாம்..

சீனிவாசன் அம்மாவை மட்டும் ஒரு தடவை கனிவாகப் பார்த்துவிட்டு மௌனமாக வெளியேறினன். குடும்பத்தினர் வாசலைத் தாண்டி வந்து கூப்பிட்டாலும் கூப்பிடலாம் என்று நினைத்து, முதலில் வேகமாக நடந்தான். பிறகு கூப்பிடட்டுமே என்று நினைத்தவனாய்

ஒரு இடத்தில் நின்ருன். யாரையும் காணும். இறுதியில், திரும்பிப் பாராமல் நடந்தான். மோகினியின் வீட்டில் வந்து, காலிங் பெல்லை அழுத்திஞன்.

கதவைத் திறந்த மோகினி, சந்தோஷம் தாங்க முடியாமல் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டாள். 'பாத்திங்களா..பேசுற முறையில பேசுனு எல்லாம் சரியாயிடும். ஒவ்வொரு மனிதனிடமும் நல்லதன்மை இருக்கு. அதைத் தொடுற விதமாய் தொட்டால் அது கொடுக்கிற விதமா கொடுக்கும். என்னங்க நீங்க..சந்தோஷத்துல பேச முடியலியா.. இதுக்குத்தான் ஒங்கள சின்னப் பையன்னு சொல்றது..'

மோகினி காண்பித்த உற்சாகத்தில், அவர் தந்தை ஏகாம்பரமும் அங்கே வந்தார். வந்தது மட்டுமில்லாமல் 'வாங்க மாப்பிள்ளை..உள்ளே வாங்க..' என்ருர்.

மௌனமாக உள்ளே வந்த சீனிவாசனின் பேயறைந்த முகத்தைப் பார்த்து, இருவரும் திடுக்கிட்டார்கள். 'மாப்பிள்ள வந்துருக்காரே..என்ன விஷயமாம்..' என்று உள்ளே படுத்துக்கொண்டே, ஓலக் குரலிட்ட அம்மாவின் குரல், மோகினிக்குக் கேட்கவில்லை.

சீனிவாசன் பெரிய தியாகம் செய்துவிட்ட கம்பீரத்தில் நடந்தவற்றைக் கிட்டத்தட்ட நடித்தே காட்டி விட்டான். வார்த்தைக்கு வார்த்தை மோகினியின் முகத்தைப் பார்த்துக் கொண்டான். மோகினியைப் பற்றித் தந்தை சொன்னதை ஒன்று விடாமல் ஒப்பித்தான். அந்த ஒப்பிப்பு முடிந்ததும், ஏகாம்பரம் பெருமூச்சு விட்டு 'நீங்க அவசரப்பட்டு இப்டி வந்திருக்கக்கூடாது மிஸ்டர் சீனிவாசன்' என்ருர். இப்போது 'மாப்பிள்ளை' மலையேறிவிட்டது. சீனிவாசன் இந்த வார்த்தைப் பிரயோகத்தைப் புரிந்து கொள்ளாத போது, அந்த சமயத்தில், அந்த நிலையிலும், மோகினிக்கு, அப்பாவின் 'மிஸ்ட'ரிலிருந்து தன்னை மிஸஸ் சீனிவாசனுக்க விரும்பவில்லை என்பதைப் புரிந்து கொண்டாள்.

அவளுக்கு ஏமாற்றந்தான். சுற்றமும் நட்பும் சூழ, மாங்கல்யம் தரித்து, மணமகளாய், எஞ்ஜினியர் வீட்டுக்குப் போக முடியாமல் போனதில் வருத்தம்தான். கொஞ்ச நேரம்.

அவள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டாள். அவளைப் பிடிக்கவில்லை என்று சொன்ன அருணுசலத்தை அவள் விடப்போவதில்லை. எத்தனையோ பெரிய இடத்துப் பையன்

கள், முறைப்படி திருமணம் செய்ய முன் வராததாலும், எப்படியோ காரணம் தெரியாமல் பிடித்துப்போன சீனிவாசனை மணக்க முன் வந்த தன்னை, முறையில்லாமல் விமர்சித்த அவரை, அவள் இரண்டிலொன்று பார்ப்பது போல் மனதைக் கல்லாக்கிக் கொண்டாள். மனிதனின் ஒரு பாதியான நல்லதன்மையைத் தட்டியெழுப்பாமல், இனிமேல் மறுபாதியான கெட்ட தன்மையைத் தட்டியெழுப்பி, தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வது என்று தீர்மானித்தவள்போல், தன்னையே ஒரு முறை சாய்த்துப் பார்த்துக் கொண்டாள்.

'அப்புறம். . .மிஸ்டர் சீனிவாசன்' என்று இழுத்து இழுத்துப் பேசி, மாப்பிள்ளையாக வந்தவனை, வெறும் பிள்ளையாகத் துரத்தப்போன தந்தையை, 'அப்பா . .எனக்கு என் வாழ்க்கையை எப்படி நிர்ணயிக்கணுமுன்னு தெரியும். .நீங்க. .போய்த் தூங்குங்க. .' என்று சொன்னதும், ஏகாம்பரம், மெல்லப்பட்ட வெற்றிலையைத் துப்பிவிட்டு, மனைவி படுத்துக் கிடந்த அறைக்குப் போய்விட்டார். அவள் தன்னைப் 'பையன்' மாதிரி பார்த்த சீனிவாசனைக் கனிவாகப் பார்த்துக்கொண்டே 'இந்த. .ஸோபா . .கம். . பெட்ல. . தூங்குங்க. .தலையணை கொண்டு வாரேன். .மற்ற விஷயத்தை நாளைக்குப் பாத்துக்கலாம். . .' என்று கம்பீரமாகச் சொல்லிவிட்டு, தலையணையையும், பெட்ஷீட்டையும் எடுக்க தன் அறைக்குள் போனாள்.

ஒரு வாரம் ஓடியது.

நல்ல நாளில், நல்ல நேரத்தில், சீனிவாசன், ஒரு கோவில் சந்நிதியில் மோகினிக்குத் தாலி கட்டினான். மோகினியின் இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகள் சிலரும், அவள் தூரத்து உறவினர் சிலரும் வந்திருந்தார்கள். விஷயத்தை மற்றவர்கள் மூலமாகக் கேள்விப்பட்ட சீனிவாசனின் தங்கை உஷாவும், தம்பி சபாபதியும், திருமணத்தில் நேரடியாகக் கலந்து கொண்டார்கள். கனகம்மாள், கோவிலுக்கு வருகிற சாக்கில் அருகே, பிறருக்குத் தெரியாத இடத்தில், கண் கலங்க நின்றாள். தாலி கட்டப்படும் வேளையில் மூலவரைக் கைகூப்பித் தொழுது, மகனையும் மருமகளையும் 'கால்கை கதியாக' வைக்கும்படி வேண்டிக் கொண்டு வெளியேறிவிட்டாள்.

மோகினியின் வற்புறுத்தலின் பேரில், உஷாவும்

சபாபதியும் ரிஜிஸ்டர் ஆபீசுக்குப் போனார்கள். பழைய காலத்து கட்டிடத்தில், உயரமான மேடையில் போடப்பட்டிருந்த உயரமான நாற்காலியில் ஒன்றன் மாதிரி உயரமாக இருந்த சப்—ரிஜிஸ்டிரார், திருமணத்தைப் பதிவு செய்தார்.

இன்னொரு வாரம் ஓடியது.

மோகினி அலுவலகத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். கணவனால் கிடைத்த இன்பநுகர்ச்சியை நினைத்துப் பார்க்கும் போதெல்லாம், தனக்கு ஒரு குழந்தை பிறக்கும் என்கிற தாய்மை உணர்வே அவளை அதிகமாக ஆட்கொண்டிருந்தது. அதே சமயம், கணவன் கூறும் 'ஸ்வீட் நத்திங்கை' நினைக்கும் போதெல்லாம், அவளைப் பெற்று அவளை உதாசினப் படுத்தி, ஆமையுடன் ஒப்பிட்ட அருணாசலத்தின் மீது தாங்க முடியாத ஒருவித வெறுப்பு, கிட்டத்தட்ட ஒரு ஃபோபியாவாகவே அவளுக்கு மாறியிருந்தது. இப்படி, இன்ப சல்லாபங்களைத் தாய்மையின் எதிர்காலமாகவும் வெறுப்பின் கடந்த காலமாகவும் ஒரே சமயத்தில் நினைத்துக் கொண்டிருந்த மோகினி, அன்றும் அதே நினைவுகள், சுமையாகவும், சுமைதாங்கியாகவும் தோன்ற, கண்ணாடியில் முகத்தைப் பார்த்து, குங்குமத்தைச் சரி செய்து கொண்டிருந்த போது, குங்குமக்காரனான சீனிவாசன், லுங்கிபனியனுடன் 'மொட்டையாக' உட்கார்ந்திருந்தான்.

மகளிடம் வெற்றிலை பாக்குக்குக் காசு வாங்குவதற்காக உள்ளே எட்டிப் பார்த்த ஏகாம்பரம் 'என்ன மாப்பிள்ளை . . நீங்க வேலைக்குப் போகலியா . .' என்று கேட்டார். அவன், அதற்குப் பதில் கூறுவதற்கு முன்னதாக மோகினி, அப்போதுதான் நினைவுவந்தவள் போல், 'ஆமாம் . . இன்னும் ஒங்களுக்கு லீவு முடியலியா ?' என்றாள்.

சீனிவாசன் கம்பீரமாகப் பதில் சொன்னான்.

'லீவு போட வேண்டிய அவசியமில்லை . . வேலைய ராஜினமா பண்ணிட்டேன் . .'

மோகினி, சரி செய்ய நினைத்த குங்குமத்லதைச் சரிப்படுத்தாமலே, அவனை நிமிர்ந்து பார்த்து 'ஒங்களுக்கு எப்ப விளையாடணுமுன்னு தெரியாது . . எப்பவுமே விளையாட்டுத்தான் பையன் மாதிரி' என்றாள்.

சீனிவாசன், கம்பீரத்திற்கு கம்பீரம் சேர்த்துப் பேசினான்.

'அது என் அப்பாவின் சிபாரிசில் கிடைச்ச

வேலை ..அவரே எனக்கு இல்லன்னு ஆகும்போது அவரு கொடுத்த பிச்சக்கார வேல எதுக்கு?'

ஏகாம்பரம் இடைமறித்தார்.

'அதுக்காகப் பிச்சக்காரனு மாறுவதுன்னு தீர் மானிச்சிட்டிங்களாக்கும்..'

சீனிவாசன், பதில் பேசத் தெரியாமல் திண றியபோது, மோகினி அவனைக் கூர்ந்து பார்த்தாள். பிறகு 'அப்பாவாலதானே டிகிரி வாங்கினிங்க? அந்த சர்டிபிக்கட்டை கிழிச்சிட்டிங்களா..வச்சிருக்கிங்களா?' என்று அமைதியாகக் கேட்டாள்.

'இனுமே அந்த சர்டிபிக்கட்டை கிழிச்சா என்ன கிழிக்காட்டா என்ன..இவரு கெட்ட கேட்டுக்கு எந்தப் பய வேல கொடுப்பான்?' என்றார் ஏகாம்பரம்.

சீனிவாசனுக்கு, மனைவி கோபத்தோடு கேட் டாளா, தனது 'தியாகத்தை' மெச்சும் வகையில் கேட் டாளா என்பது புரியவில்லை. கிண்டலாகப் பேசிய ஏகாம் பரத்தை அவள் அடக்காததிலிருந்து, அவள் கோபமாகத்தான் கேட்டிருக்க வேண்டும் என்று அனுமானித்துக் கொண்டான்.

மோகினியின் உதடுகள் துடித்தன. விழிகள் வெம்மையாக மாறி, பின்பு செம்மையாயின. ஆயிரம் ரூபாய் சம்பளத்தை இவர் அலட்சியமாக விட்டுவிட்டு, லட்சியம் இல்லாமல் பதில் சொன்னா என்னர்த்தம்? நாளைக்குக் குழந்தை பிறக்கும்..நாளை இருக்கட்டும்.. இன்றைக்கு அம்மாவுக்கு மருந்து வாங்கணும்..பொங்கல் வரப்போவுது..துணிமணி எடுக்கணும்.. கேஷுவல் லேப ராக தினமும் கிடைக்கிற எட்டு ரூபாய்ல என்னத்த பண்றது..இவருகிட்ட பக்குவமா பேசி வேலையை விட் டுட்டு மானேஜர் சுந்தரத்தோட கழுகுக்கண்களைப் பார்க்காம இவர மட்டுமே பாத்துகிட்டு இருக்கணுமுன்னு நினைத்தால்..இவரு..இவரு..அட கடவுளே...

ஏகாம்பரத்தால், கோபத்தை நெஞ்சிற்குள் வைக்க முடியவில்லை. ஒரு நாளைக்கு எப்படியும் ஒரு கட்டு வெற்றிலையை குதப்பும் அவர் வாய். அது இல்லாமல் போய்விடுமோ என்கிற ஆதங்கத்தில் கத்தினார்.

'கடைசில என் மவளுக்கு சரியான முருங்க மரத்தானு கிடைச்சுது! என்ன மிஸ்டர் சீனிவாசன்.. கொஞ்சமாவது முன்னப் பின்ன யோசிச்சி பாத்திரா? பொம்பிள சம்பாதிச்சி அதுல சாப்புடுற மனுஷன் ஒரு ஆம்புளையா?'

சீனிவாசனுக்கு லேசாகக் கோபம் வந்தது. மோகினியைப் பார்த்தான். அவள் எதுவும் பேசாமல் 'கல்' மாதிரி இருந்தாள். ஏகாம்பரமோ, என்ன வெல்லாமோ பேசிக் கொண்டே போனுர். சீனி இறுதியில் வெடித்தான்.

'சும்மா கத்தாதிங்க மாமா..என்கிட்ட படிப்பு இருக்கு..ஓங்க மகள நம்பி நான் வாழல..'

'என்னய்யா..சம்பந்தா சம்பந்தமில்லாம பேசுநீரு. ஒப்பனுக்கு நீரு பிறந்தது வாஸ்தவன்னு அப்பன் மேல கேஸ் போட்டு சொத்தில் ஒரு பாகத்தக் கேளும். ஒரு பெண்ணக் கல்யாணம் பண்ணுமுன்னுல.. அவளே எப்படிக் காப்பாத்தணுமுன்னு நினேக்கிறவன்தான் மனுஷன்.. பெண்டாட்டி காப்பாத்துவாள்னு நினேக்கிறவன் மனுஷனில்ல..'

'மாமா..எனக்கும் சுயமரியாதை இருக்கு... ரோஷம் இருக்கு..'

'இத ஒப்பன்மேல கேஸ்போட்டுக் காட்டும் பாக்கலாம்..'

சீனிவாசன் மனேவியைப் பாஆர்த்தான். அவனேப் பார்க்கப் பிடிக்காதவள் போல், முகத்தை வேறுபுறமாகத் திருப்பிக்கொண்டு, 'இவரு கிட்ட ஏம்பா பேசுறீங்க.. இவரா வழக்குப் போடுவாரு? ஆளப் பார்த்தா தெரியாண்டாம்..முயல் பிடிக்கப் போற எதையோ மொகத்தப் பார்த்து தெரிஞ்சிக்கலாமுன்னு சொல்லுவாங்க.:' என்றுள்.

சீனிவாசன் முயல் பிடிக்கப் போகும் நாய் மாதிரி முகத்தை நிமிர்த்திக் கொண்டு, 'ஆல்ரைட்..என்னே நீங்க இவ்வளவு நம்பி ஓங்க பொண்ண ஒப்படைச்ச பிறகு நான் என் சொத்தை ஓங்ககிட்ட ஒப்படைக்காம இருக்கிறது நியாயமில்ல..இன்னேக்கே மிஸ்டர் அருணுசலத்திற்கு வக்கீல் நோட்டீஸ் விடுறேன்' என்று சொல்லிக் கொண்டே, வெறும் பனியனேத் துழாவி விட்டு, பின்னர் மனேவியை அர்த்தத்தோடு பார்த்தான்.

மோகினி, டிரங்க் பெட்டியைத் திறந்து, சேமித்து வைத்திருந்த ஐந்து பத்துரூபாய் நோட்டுக்களே எடுத்து அவனிடம் நீட்டிவிட்டு, 'ஆக வேண்டியதைப் பாருங்க..பேச்ச குறச்சிட்டு காரியத்துல இறங்குங்க..' என்றுள்.

சீனிவாசன் அவசர அவசரமாக உடையணிந்து கொண்டு, அவள் புறப்படும்போது புறப்படப் போகிறவன்

போல் நின்முன். இதைப் புரிந்து கொண்ட மோகினி. 'நீங்க போங்க..நான் எக்கேடும் கெட்டுப் போகிறேன்..' என்று கத்திஞள்.

சீனிவாசன் போய்விட்டான்.

அப்பாவுக்கும், பிள்ளைக்கும் இடையே கோடு கிழிப்பதுபோல் கோர்ட்டைக் கொண்டு வருவதற்காக மோகினி சிறிது வருந்திஞள். சிறிதே நேரந்தான்.

ஆமையோடு தன்னை ஒப்பிட்ட அந்த மனிதரை, கெளரவமாக குடும்பம் நடத்தி அவர்களோடு ஐக்கியமாக ஒன்றி ஒருமையுடன் வாழ நினைத்த தன்னைப் பிஞ்சில் பழுத்தவள் என்று சொன்ன அந்தக் கிழத்தை, அவர் மகனின் அசுரப் பகுதியைத் தட்டியெழுப்பிப் பழி வாங்குவதென்ற வைராக்கியத்துடன் அலுவலகம் புறப்பட்டாள்.

மாலையில் திரும்பி வந்ததும், சீனிவாசன் அவளிடம் வக்கீல் நோட்டீஸ் விடப்பட்டதை ஆதியோடந்தமாக விவரித்தான். அவள் கேட்காதது மாதிரி கேட்டாள். அவனுக்கு என்னவோ போலிருந்தது. வழக்கமாகக் கேட்கப்படும் 'நீங்க சாப்பிட்டாச்சா..என்ஞல ஒங்களுக்குப் பாவம் சிரமம்' என்கிற வார்த்தைகள் அவன் காதில் விழாதது வருத்தத்தைக் கொடுத்தது. அதேசமயம் 'உங்களால் எனக்குச் சிரமம்' என்று சொல்லாதது சிறிது மகிழ்ச்சியையும் கொடுத்தது.

ஒரே கட்டிலில் இருவரும் பிரிந்து படுத்தார்கள். இருவருக்கு மத்தியிலும், கண்ணுக்குப் புலப்படாத, அதே சமயம் துல்லியமாகத் தெரிந்த குறுக்குச் சுவரை இருவரும் பார்த்துக் கொண்டார்கள்.

பத்து பதினைந்து நாள் ஓடியது.

சீனிவாசனின் தந்தை எதிர் நோட்டீஸ் அனுப்பியிருந்தார். கோர்ட்டுக்குப் போக வேண்டுமாஞல் முதலில் ஐந்நூறு ரூபாயை எண்ணிக் கொடுக்க வேண்டும் என்று வக்கீல் சொல்லிவிட்டார்.

பணம் இல்லாமல் இரண்டு மூன்று மாதங்கள் ஓடின. மோகினி சிறுகச் சிறுகப் பணம் சேர்த்து, இருநூறு ரூபாயை கணவனிடம் நீட்டிஞள். அவன் வக்கீலிடம் போக, அவர் 'திரும்பிப் பார்க்காமல் ஓடு' என்று சொன்னதை, கணவன்காரன் மனைவியிடம் சொன்ஞன். மோகினி அவஞேடு போய் வக்கீலைப் பார்த்தாள். வக்

கில் நூறு ரூபாய்க்கே சம்மதிப்பதுபோல் தெரிந்தது. கோர்ட்டில் வழக்கு தாக்கல் செய்யப்பட்டது.

மோகினிக்கு ஒன்று புரிந்தது. இந்தப் புருஷனையோ இந்தக் கோர்ட்டையோ நம்பி வாழ முடியாது. மூன்று மாத கருவாக இருக்கும் அவள் குழந்தையை எப்படியும் ஒகோன்னு வளர்க்க வேண்டும். எப்படி?

ஏழைப் பெண் என்றவுடனே மோசமாகப் பார்க்கும் மோசக்கார ஆண்களிடம் மோசம் போகாமலே முன்னுக்கு வரமுடியும் என்பதை, ஐந்நூறு கேட்ட வக்கீல், இருநூறு ரூபாய்க்கும் ஒரு சின்ன புன்னகைக்கும் விலையாகிவிட்டதிலிருந்து புரிந்து கொண்டாள்.

பப்ளிஸிட்டி மானேஜர் சுந்தரத்திற்கும் அஸிஸ்டெண்ட் பப்ளிஸிட்டி மானேஜருக்கும் ஆகாது என்பது அவளுக்குத் தெரியும். அதோடு, சீனிவாசனின் 'கிளாஸ் மேட்டான' அஸிஸ்டெண்ட் பப்ளிஸிட்டி மானேஜர், அவள் புருஷனை, காதுக்கு கேட்கும் படியாகவே கிண்டல் செய்திருக்கிறன்.

அவனுடைய வேலையை அபகரித்துக் கொள்வதில் தப்பில்லை. எப்படி தப்பில்லை? பாவம்..அவன்..என்ன செய்வான்..என்ன வேணுமுன்னுலும் செய்யட்டும்.. சாமர்த்தியக்காரன். அதோடு ஆண்பிள்ளை.. அவனுக்கு வேற வேலை கிடைக்கும்..இன்னும் ஒரு மாதத்தில் கேஷுவல் வேலை முடிந்துவிடும். அதற்குள் கரு நான்கு மாதமாகிவிடும். பிறக்கப் போகிற குழந்தைக்கு, பிறப்பித்த தந்தைக்கு, சில்லறைச் செலவுக்கு, பிறவி எடுத்ததே நோயில் படுக்கத்தான் என்பதுபோல் இருக்கும் அம்மாவுக்கு, கோர்ட்டுக்குப் போகப் பணம் கேட்கும் கணவனுக்கு, எல்லாவற்றிற்கும் மேலான இவர்கள் வயிற்றுக்கு..எதைப் போடுவது...

மோகினி, சிந்தித்தாள். இறுதியில் அவள் முகம் இறுகியது. அஸிஸ்டெண்ட் மானேஜர் பதவியை முடிந்தால் வாங்கிக் கொள்ளவதும், முடியாது போனுல், பப்ளிஸிட்டி அஸிஸ்டெண்ட் பதவியாவது வாங்கியே தீருவது என்ற உறுதியும் தன்னம்பிக்கையும் அவள் மனதில் பிறந்தன.

கண்ணுடியில் தன் முகத்தையே உற்றுப் பார்த்தாள். பின்னர், தன் வயிற்றையும் கண்ணுடியில் பார்த்துக் கொண்டாள்.

தன் குஞ்சுகள் குதூகலகமாகத் தின்ன வேண்

டும் என்பதற்காக, கோழிக் குஞ்சைக் குறிபார்க்கும் கழு கின் பார்வை அது. பழைய தலைமைக் குரங்கால் கரு வுற்று, பின்னர் அதை விரட்டிவிட்டு, புதிதாகத் தலைமை யேற்ற 'மாற்ருன்' குரங்கிடமிருந்து, தன் கருவைக் காப்பதற்கு, காதல் விளையாட்டுக்கு இடங்கொடுக்காமலே, காதல் செய்வதுபோல் நடிக்கும் பெண் குரங்கின் பார்வை அது. தான் போட்ட குட்டிகளைத் தின்னவரும் ஆண்புலி யைக் கடித்துக் குதறத் தயாராக இருக்கும் பெண் வேங் கையின் பார்வை அது.




ஐந்தாறு டெலெக்ஸ் செய்திகளைப் பப்ளிஸிட்டி மானே ஜர் பார்ப்பதற்காக அவர் முன் ஞல் வைத்துவிட்டு பின்னர் மின் விசிறியில் சிதறிய அவற்றை ஒழுங்குபடுத்தி வைத்துவிட்டு, அதன்மேல் ஒரு பேப்பர் வெயிட் டையும் போட்டுவிட்டு, எதிரே உள்ள நாற்காலியில் உட்கார்ந்தாள் மோகினி. மானேஜர் அவளை நிமிர்ந்து பார்த்துவிட்டு, பின்னர் தன் உருவம் மிகச் சிறிய அளவில் அவள் வலது கண்ணில் பிரதிபலிப்பதை ரசித்துக் கொண்டே இருந்த போது, "எடிட் பண்ணிக்கொடுங்க ஸார்... ஹேண்ட் அவுட் பிரபேர் பண்றேன்," என்ருள்.

அது அவள் வேலை பார்க்கும் நிறுவனம். பாரதத்தின் மிகப் பெரிய கம்பெனிகளில் ஒன்று. அர சாங்க நிறுவனங்களுக்கும், இதர தொழில் நிறுவனங்களுக் கும், பாய்லர்கள், டெலிபோன் கருவிகள், யந்திரங்கள், மின்சார சாதனங்கள், பெட்ரோல் ரசாயன சுத்திகரிப் பிற்கான பிரம்மாண்டமான கருவிகள், பால் பண்ணை களுக்குத் தேவையான 'டெய்ரி' யந்திரங்கள் முதலிய வற்றை குறித்த தேதிக்குள் குறித்த முறைகளில் செய்து கொடுக்கும் கம்பெனி அது. அல்ஜீரியா, டுனிஷியா, லிபியா போன்ற நாடுகளில் டெண்டர்கள் எடுத்து, தனி யாகவும், சில வெளிநாட்டுக் கம்பெனிகளுடன் இணைந்தும்,

பல வேலைகளைப் பூர்த்தி செய்து, அந்நிய செலாவணியை அதிகமாகச சம்பாதித்துக் கொடுப்பதால், அரசாங்கத்திற்கு அது ஒரு செல்லப் பிள்ளை மாதிரி. என்ஜினியர்கள், சார்ட்டர்ட் அக்கௌண்டண்ட்கள், விஞ்ஞானிகள் முதல் கேஷுவல் லேபர் வரை, பல்லாயிரக்கணக்கானவர்கள் வேலை பார்க்கும் அந்த நிறுவனத்திற்கு நாடு நகரங்களிலெல்லாம் கிளைகள். சென்னைக் கிளையில், பப்ளிஸிட்டி செக்ஷனின் மானேஜர் சுந்தரம் பலே கெட்டிக்காரர். அடிக்கடி பத்திரிகையாளர்களை வரவழைத்து, தம் கம்பெனிகளின் சாதனைகளை விளக்குவார். நிருபர்களை பாரதம் முழுவதும் உள்ள கிளைகளுக்குக் கூட்டிச் சென்றிருக்கிறார். குறைந்தது வாரத்திற்கு ஒரு தடவையாவது, அந்த கம்பெனியின் பெயர் தமிழகப் பத்திரிகைகளில் நல்லவிதமாக அடிபடுகிறது என்றால், அதற்கு நாற்பத்தைந்து வயது சுந்தரம்தான் காரணம்.

ஒரு வாரத்திற்கு முன்பு, அவர் கம்பெனியின் சாதனைப் பட்டியல் வெளியிடுவதற்காகத் தலைமையலுவலகத்திற்கு புள்ளி விவரங்களைக் கேட்டு எழுதியிருந்தார். அங்கேயிருந்து டெலெக்ஸில் புள்ளி விவரங்கள் குவிந்தன. இவற்றிற்குக் கண், காது, மூக்கு வைப்பதோடு மேக்கப் செய்ய வேண்டியதும் அவர் வேலை. பப்ளிஸிட்டி எக்ஸிகியூட்டியாக வேலைபார்க்கும் லீலா மூன்றுமாத விடுமுறையில் போயிருந்தாள். அவள் இடத்தில் தாற்காலிகமாக நியமிக்கப்பட்ட மோகினியை சுந்தரத்துக்கு ரொம்பப் பிடித்துவிட்டது. தலை வலிக்கிறது என்று அவர் தற்செயலாகச் சொல்லியிருப்பார். பத்து நிமிடத்தில் பியூன் வந்து, ''மோகினியம்மா ஆஸ்ப்ரோ வாங்கிட்டு வரச் சொன்னாங்க,'' என்று சொல்லி, பிளாஸ்கில் இருந்து காபியை ஊற்றி, மாத்திரையை நீட்டுவான். ''அப்பா.. ஒரே டயர்டாய் இருக்கு''ன்னு சொன்னால் போதும். மோகினி அவரை வலுக்கட்டயமாக வீட்டுக்கு அனுப்பி வைப்பாள். அவர் மறுத்தால், அவர் வீட்டுக்கு டெலிபோன் செய்து, ''மாமி..மாமாவுக்கு டயர்டாய் இருக்காம். நான் போகச் சொன்னால் மாட்டேங்கிறார்... நீங்களாவது சொல்லுங்கோ,'' என்பாள். அவள் மனைவியின் மிரட்டலுக்கு பயந்தோ அல்லது வசீகரிக்கப்பட்டோ, புறப்படும்போது, ''என்னைவிட ஒங்களுக்கு ஒங்க ஒய்ப்தான் உசத்தி. .நான் சொன்னவுடனே போனா என்ன?'' என்பாள். சுந்தரம், கிறங்கிப்போவார். அந்த மாதிரி சமயங்களில், லீலா மீது படுகோபம் வரும். இவள்

வயதுக்காரிதான். ஆனால் சரியான சிடுமூஞ்சி. அவள் சிரித்து அவர் பார்த்ததில்லை. இவளை சிரிக்காமல் பார்த்த தில்லை. இன்னும் ஒரு வாரத்தில் அந்த மூதேவி வந்து, இந்த சீதேவியைத் துரத்திவிடும்.

மொத்தத்தில் மூன்றாண்டு காலமாகப் பணி புரியும் லீலா மூன்றுமாத பழக்கம் போலவும், மூன்றுமாத மோகினி மூவாண்டு சிநேகிதி போலவும் அவருக்குத் தோன்றியது. அவர் மௌனத்தில் 'ரெஸ்ட்' எடுத்துக் கொண்டிருந்ததால், மோகினிக்கு போரடிக்க ஆரம்பித்தது. டெலெக்ஸ் சமாசாரங்களை உற்று நோக்கிக் கொண்டே பேசினாள்.

''எடிட் பண்ணிக்கொடுங்க ஸார்.. அப்புறம் ஒரு விஷயம் ஸார்..நான் பேப்பர்களை உங்க கிட்ட டைரெக்டா வைக்கிறது அவருக்கு பிடிக்கல... 'என் மூலந்தான் அனுப் பணுமுன்'னு நேத்து கத்தினார்..''

''யாரு, சங்கரா? அவன் கிடக்கான் விடு. இக்நோர் ஹிம்...''

''அதெப்படி ஸார்...அவர் பார்வையே சரி யில்ல... எனக்குப் பயமா இருக்கு.''

''டோன்ட் ஒர்ரி. ஐ வில் ஷோ ஹிம் ஹிஸ் பிளேஸ்...''

''உங்கள எருமமாட்டுத்தலையன்னு வேற பியூன்க கிட்ட சொல்றார் ஸார்....''

''அப்படியா சொன்னான்! பேஸ்டர்ட்! இப்ப என்ன பண்றேன் பார்...''

''இதுக்குத்தான் ஒங்ககிட்ட நான் எதுவுமே சொல்றது கிடையாது..அவன் கிட்ட நேரடியாகக் கேட் டிங்கன்னு உங்க டிக்னிட்டிதான் ஸ்பாயிலாகும்... அதனால சமயம் வரும்போது கவனிச்சிக்குங்க...''

''சமயம் வராட்டாலும் நானே உருவாக்கு றேன். நானா எருமத்தலயன்...இவன்தான்...இவன் அப் பன்தான்...இவன் அம்மாதான்...இவனும் அந்த லீலா வும் அடிக்கிற கூத்து எனக்குத் தெரியாதுன்னு நினைக் கிறான். மாரல் டர்பிட்யூட் கீழ அவனை சார்ஜ் பண்ணலேன்னா நான் சுந்தரம் இல்ல...''

''சும்மா பேசாதிங்க ஸார்..ஒங்களுக்கு இளகின மனசு. கையில காலுல விழுந்தான்னா...மாறிடுவிங்க.''

''நானா மாறுவேன்? நானா மாறுவேன்? இல்ல...

இல்ல...அவனை மாத்திக் காட்டுவேன். வேணுமுன்னு பாரு. அவனை அந்தமான்ல போடாட்டா...''

''வேண்டாம் ஸார்...பாவம்...பிழைச்சிட்டுப் போறுன்...''

''எருமமாடுன்னு சொன்னுலும் பரவாயில்ல.. எருமத்தலையன்னு சொன்னு என்ன அர்த்தம்? அவன... அவன...''

''சும்மா பல்லக் கடிக்காதிங்க ஸார்..ஏண்டா சொன்னேமுன்னு எனக்குக் கஷ்டமா இருக்கு.''

''இந்தப் பியூன் பயலுவளுக்கு எவ்வளவு காசு அழுதிருக்கிகேன்... பெஸ்டிவல் அட்வான்ஸ் அது இதுன்னு எவ்வளவு சாங்ஷன் கொடுத்திருக்கேன்... ஒரு பயலும் அவனைத் தட்டிக் கேட்கலியா...''

''அவங்களா? எரும மாதிரி தலய ஆட்டி குரங்கு மாதிரி கையக் கால ஆட்டி ஒன்ஸ் மோர் கேக்குறுங்க.''

''என்னுல நம்ப முடியல...நேத்துகூட டெப் திரி ராமனுக்கு ஒரு ரூபாய் கொடுத்தேன்.''

''அந்த ஒரு ரூபாய்ல முக்கால் ரூபாய செலவழிச்சிட்டு மீதிக் காசுக்கு ஒங்களுக்கு எதிராவே மொட்டப் பெட்டிஷன் போட்டிருப்பான்.''

''ஓஹோ..அதுகூட நடக்குதோ...''

''இன்னும் எவ்வளவோ இருக்கு. நீங்க வெளுத்ததெல்லாம் பாலுன்னு நினைக்கிறீங்க.''

''இனிமே நினைக்கமாட்டேனே. நானு எருமைத்தலையன்...''

''ஏன் ஸார் அதையே சொல்லிக்கிட்டு.. சந்திரனப் பாத்து நாயி குலைச்சா குலைக்குது... ஆனு நான் விடறது இல்ல...இப்படித்தான் போன வெள்ளிக் கிழமை 'ஏண்டா மானேஜர் கன்னம் வீங்கியிருக்கு... ஓய்ப்கிட்ட உத வாங்குனுனுன்னு' ஏஎம், ராமன்கிட்ட கேட்டாரு...உடனே நான் 'ஏன் மிஸ்டர் சங்கர்... பாஸ் முன்னுல வெண்ணயா குழஞ்சிட்டு பின்னுல சுண்ணும்பா எரிச்சா என்ன அர்த்த'முன்னு பட்டுன்னு கேட்டேன்.''

''தேங்க்யூ. அதுக்கு அவன் என்ன சொன்னுன்?''

''வேண்டாம் ஸார், விட்டுடுங்க. அனுவசியமா கோபப்படுவீங்க. ஏற்கனவே உங்களுக்கு பிளட் பிரஷர்.''

''நோ...நோ...அவன் இப்ப என்ன சொன்

ணுன்னு சொல்லலேன்ஞதான் பிரஷர் ஏறும்...பிளீஸ்... டெல் மி.. டெல் மி..''

''இது என்ன ஸார் வம்பாப் போச்சு...'நீயே டெம்பரரி..இன்னும் ஒரு வாரத்துல உனக்கு ஓலை கிழியப் போவுது. நீ எனக்கு புத்தி சொல்றீயா'ன்னு என் மேல்...சீறினுன்... சீறிணு...சீறிட்டுப்போருன்.. விட்டுத் தள்ளுங்க...''

''நோ..நோ..ஒன்ன இங்க ரீடெய்ன் பண்ற இல்லியான்னு பாரு. இதற்காக டில்லிக்கு வேணு முன்னுலும் ஒருவாட்டி போயிட்டுவருவேன்.''

மானேஜர் காலிங் பெல்லை அழுத்தினுர். ஸ்டெனே வந்தாள். தேனும்பேட்டையில் நடக்கவிருக்கும் பிரும்மாண்டமான எக்ஸிபிஷனில், கம்பெனி ஒரு ஸ்டால் போடவிருப்பதால், திறமையாக வேலைபார்க்கும் மோகினி யின் சர்வீஸை மேலும் மூன்று மாதத்திற்கு நீட்டிக்க வேண்டும் என்று ஒரு நோட் டிக்டேட் செய்தார். பிறகு 'கீப் இட் சீக்ரட்' என்று அவளை எச்சரிக்க, அவளோ மோகினியை எச்சரிக்கையோடு பார்த்துக்கொண்டு வெளி யேறிஞள். மோகினி கண்களில் நன்றி குலுங்க, அவரை நோக்கினுள். பிறகு, ''என்னுல ஒங்களுக்கு சிரமம்,'' என் ருள். அப்படிச் சொல்லும்போது அவள் உதடுகளைக் குவித்த விதமும், உடம்பைக் குழைத்தவிதமும், நாற்பத்தைந்து வயது சுந்தரத்தை, இருபத்தைந்தில் கொண்டு வந்து நிறுத்தியது. ஆகையால், அவர் சிறிது நேரம் பேசாமல் இருந்தார். பிறகு அவளுக்கு நல்லது செய்துவிட்ட திருப் தியில் அவர் படிப்படியாக சுயமாகிக் கொண்டிருந்தார். 'பிரஷரும்' இறங்கியிருக்க வேண்டும். ஹீரோ மாதிரி பேசினுர்.

''டோண்ட் ஒர்ரி. மானேஜிங் டைரெக்டர் என் பெர்ஸனல் பிரண்ட். எப்படியாவது இன்னெரு அடிஷ னல் போஸ்ட் வாங்கி உன்னை போடுறேன். ஆனுல் இந்த ஜெனரல் மானேஜர் ஒரு சும்பன்...தலைக்கிறுக்கன். எப்டி சரிக்கட்டுறதுன்னு யோசிக்கிறேன். இல்லன்னு மேலதி காரியைத் தரக்குறவா பேசின சங்கரை இப்பவே சஸ்பெண்ட் பண்ணியிருக்கலாம்..எதுக்கும் யோசிக்கிறேன்..ஒண்ணும் முடியாம போனு லீலாவ எப்டியாவது தூக்கிட்டு உன்னை போட்டுறேன்.''

''ஒரு பொண்ணைக் கெடுத்து வர்ற உத்தியோகம்

ஒரு உத்தியோகமா? எனக்கு வேண்டாம் ஸார்.. ஆமா, லீலா சரியான கர்வியாமே..''

''அதேயேன் கேக்குற! கண்ணகின்னு நினைப்பு ..இவ்வளவுக்கும்..திறமையில ஒன் கால்தூசு பெற மாட்டா..''

''சும்மா இருங்க ஸார்.. ஒருத்திய திட்டி இன்னொருத்திய புகழ்வது எனக்கு பிடிக்காது...பிளீஸ் ஸ்டாப் திஸ் டாபிக்..''

சுந்தரம் அவளையே வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தார். இந்த சின்ன வயதிலேயே எவ்வளவு பரந்த மனப்பான்மை. எவ்வளவு விசுவாசம். உத்தியோ கத்திலேயும் பிரின்ஸிபில்ஸ் பாக்குறுன்னு.. இவ மனுஷப் பிறவியில்ல..மனுஷப் பிறவியில்ல.

தன்னிடம் அக்கறை காட்டிய மோகினிக்கு, தானும் அக்கறை காட்ட வேண்டும் என்று சுந்தரம் துடித் தார். 'ரிலாக்ஸ்' செய்பவர்போல், சுழல் நாற்காலியில் சாய்ந்து கொண்டே கேட்டார்.

''கடைசியில..ஒன் ஹஸ்பண்ட்.. அப்பா மேலே கேஸே போட்டுட்டானே?''

மோகினி பதில் சொல்வதற்குப் பதிலாக, மௌன மாகத் தலைகுனிந்தாள். பிறகு புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொண்டாள். சுந்தரம் திடுக்கிட்டார். அவர் இப்படி எதிர்பார்க்கவில்லை. அவர் ''என்னம்மா..'' என்று பதறியபோது லேசாக அழுதாள்.

''அடடே..நான் என்னமோ சொல்லிட்டேன்..நீ எதுக்கும்மா அழவுற..''

மோகினி, அவருக்குப் பதிலளிக்கவில்லை. முதலில் மௌனமாகத் தலைகுனிந்தாள். பிறகு கண்ணீர் விட்டாள். அதைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள். அவர் 'என்னம்மா...இது' என்று பதறியபோது லேசாக அழுதாள். 'அடடே, நான் என்னம்மா சொன்னேன். நீ ஏன் இப்படி அழுவுற' என்று பதட்டப்பட்டபோது சத்தம் போட்டே அழுதாள். 'இதோ பாரு. நான் ஏற்கனவே பிரஷ்ஷர்ல கஷ்டப்படுறவன். தயவு செய்து அழுகுறத நிறுத்து' என்று சொன்னபோது, அவளும் அழுகையை நிறுத்திவிட்டு விக்கி விக்கிப் பேசினாள்.

''நான் பொறந்திருக்கக் கூடாது ஸார்..நான் பாவி ஸார்..அவர்கிட்ட எவ்வளவோ சொன்னேன். 'ஒங்

கப்பாவுக்கு என்னை பிடிக்கல. நான் ஒங்க குடும்பத்துல குழப்பத்த கொடுக்க விரும்பல..என்னை மறந்துடுங்கன்னு' எத்தனையோ தடவ சொன்னேன். ஆனால் அவரு 'நீ என்னைக் கட்டிக்காட்டா கடலுல விழுந்து சாவேன்.. இல்லன்னு விஷத்த குடிப்பேன்'னுர்..ஒரு நாள் விஷப் பாட்டிலைப் பையில இருந்து எடுத்தார்.. எனக்கு ஒன்னும் புரியல...கடைசில அவரோட உயிரக் காப்பாத்துறதுக் காவ...ஊரு உலகத்தைப் பத்திப் பாராம..சம்மதிச்சேன் ..எங்க மாமா சொத்துங் கிடையாது, சுகமும் கிடையாதுன்னுட்டார். இவரு குதிச்சாரு. நான்தான், 'நீங்களும் சம்பாதிக்கிறீங்க.. நானும் சம்பாதிப்பேன்.. அவரு சொத்தை அவரே வச்சிக்கிடட்டு'முன்னேன்.. ஆனுல்.. அவரு எனக்குத் தெரியாமலே வக்கீல் நோட்டீஸ் கொடுத்து வழக்குபோட்டிருக்கார். ஏன்னு கேட்டா இதுல தலையிடாதேன்னு சொல்லிட்டாரு. அதுக்குமேல பேசினு அடிச்சிருப்பாரு. நான் என்ன ஸார் பண்றது? ஒவ்வொரு ஜனமும் என்னத்தான் தப்பா நெனக்கிது.. நான்தான் அவர மயக்கி அப்பனுக்கும் பிள்ளைக்கும் ஆகவிடாம பண்ணிட்டேன்னு கசாமுசான்னு பேசுதுங்க. நீங்களே சொல்லுங்க ஸார்..நான் என்ன ஸார் பண்ண முடியும்? நான் பாவி ஸார்..நான் பிறந்திருக்கவே கூடாது ஸார்..''

மோகினி மீண்டும் அழுதாள். மானேஜர் இப்போது அவள் தோளைத் தட்டிக் கொடுக்கத் துடித்த கைகளை அடக்கிக் கொண்டார்.

மோகினி, சொன்னதையும், அழுததையும் நிறுத்திவிட்டு, அவரைப் பரிதாபமாகப் பார்த்தாள். சுந்தரம் ஆறுதல் சொன்னுர்.

''ஆல் ரைட்...நடந்தது நடந்து போச்சி. யூ ஆர் விக்டிம் ஆப் சர்கம்ஸ்டன்ஸஸ். எதையுமே ஹார்ட்டுக்குள்ள வச்சுக்காதே...அப்படி வச்சிக்கிட்டா ஹார்ட் வெளில வந்துடும். எனிஹெள..ஒனக்கு ஒரு அருமையான புருஷன் கிடச்சிருக்கான். நீ அந்த சந்தோஷத்த நினைச்சி மற்ற கஷ்டங்களை மறந்திருக்கணும்.''

''அவரை நீங்கதான் மெச்சிக்கணும்.''

மோகினி, புருஷனைப்பற்றி சொல்லிவிட்டோமே என்று பதறிப்போய், நாக்கைக் கடித்தாள். அவள், பயந்ததுபோல், ஆசாமி, பேய்முழி விழித்தான். அவளைச் சினிமாவுக்குக் கூப்பிடலாமா என்று யோசித்தார் சுந்தரம் பிறகு நாசூக்காக, ''எனக்கு ஈவினிங்ல போரடிக்குது,'' என்றுர்.

மோகினி புரிந்து கொண்டாள். இனிமேல் இருந்தால் ஆபத்து. அவசர அவசரமாகப் பதில் சொன்னாள்.

''எனக்கு ஏன் அவர் பெர்மிஷன் வேணும் சார். ஈவினிங்ல கெஸ்ட் வராங்க. அவருடைய பிரண்ட் தில்லியில் உத்தியோகம். போன வாரம் கல்யாணம் நடந்துது. இன்னிக்கு டின்னருக்கு கூப்பிட்டிருக்கோம். 'இவர்' பெரிய புரட்சிக்காரர்னு பிரண்ட் சொல்வாரு...''

சுந்தரம், மௌனமாகத் தலையாட்டி, விடை கொடுத்தார். மோகினி வெளியே வந்தாள். வீட்டுக்குப் போகப் பிடிக்கவில்லை. சுந்தரத்தின் மீது எவ்வளவு எரிச்சல் ஏற்படுகிறதோ, அந்த அளவுக்கு கணவன் மீதும் எரிச்சல் ஏற்பட்டது. குழந்தையின் சுமை வயிற்றை அழுத்துவதை விட, அவள் நெஞ்சை அதிகமாக அழுத்தியது. நிலையில்லாத உத்தியோகத்தையும், அதை நிலைப்படுத்த சுந்தரம் கேட்கப் போகும் விலையையும், விலைமதிக்க முடியா பிள்ளையையும், கோர்ட்டுக்குப் பணங் கேட்கும் 'ராஜினுமா' கணவனையும் நினைத்து, சுமைதாங்க முடியாமல், கால் போன போக்கில் நடந்து, இறுதியில், கடற்கரையில் போய், மணிக்கணக்காக உட்கார்ந்திருந்தாள்.

இரவு மணி ஒன்பதுக்கு மேலாகியும், மோகினி வராததைக் கண்டு சீனிவாசன் புழுங்கினான். 'பேபிக்கு, வேலை இருந்திருக்கும்' என்று மாமனார் ஏகாம்பரம் சொன்னது அவன் காதில் விழாமல் போனதுக்குக் காரணம் இருந்தது.

அவன் நண்பன் டில்லிக்காரன், அவனை இளக்காரமாகப் பார்த்துவிட்டு, எட்டுமணிக்கெல்லாம் மனைவியுடன் ''போயிட்டு வாரேன்'' என்றுகூட சொல்லாமலே போனது, இவனுக்கு என்னமோ போலிருந்தது. அவன், தன்னை 'மாரேஜ் நக்ஸலைட்' என்று அடிக்கடி வர்ணிப்பதை, கடிதங்களில் எழுதுவதைப் பெருமையாக நினைத்து, தான் உண்மையிலேயே ஒரு புரட்சிக்காரன் என்று நம்பிய சீனுவுக்கு, நண்பன் பார்வையில் தான் புழுவாகப் போனதற்காக, பூச்சி போல் துடித்தான்.

வரவர, மோகினியின் போக்கு அவனுக்குப் பிடிக்கவில்லை. முதல்நாள், தன் வீட்டில் கமலா, உஷாவிடம் அன்பொழுகப் பேசியவள், கல்யாணத்திற்குப் பிறகு, அப்பாவுக்குத் தெரியாமல் அவர்கள் இங்கே வந்தபோது, இவள்

அவர்களிடம் பேசாமல் அறைக்குள் போனுள். அவர்களும் இப்போது வருவதை நிறுத்திவிட்டார்கள். மனேவியே ஆச்சரியத்தில் மூழ்கும்படி, தந்தைமீது வழக்குப் போட்டான். இவள் என்னடாவென்றுல்..சீச்சி....

எவரிடமாவது பகலில் டெலிபோன் பேசினுலும், இன்னுர் இன்னதுக்காக டெலிபோன் பேசினுர் என்று சொல்பவள், இப்போது இரவில், படுக்கையறைவரை வரும் டெலிபோன் 'கால்களே' சிரித்துக்கொண்டே பயன் படுத்திவிட்டு, இவனிடம் எதுவுமே அதைப்பற்றிப் பேசு வதில்லே. ஒரு சொத்தும் இல்லாமல் வந்து விட்டானே என்று மனேவிக்காரி நினேக்கிருள் என்று அவனுக்குத் தோன் றியது. போகட்டும்.. இன்றைக்காவது, பொழுதோடு வந்திருக்கலாம்.

பத்து மணியாயிற்று.

மோகினி வந்தாள். ''அப்பா சாப்பிட்டாச்சா.. அம்மா சாப்பிட்டாச்சா'' என்று கேட்டாள். குற்றவுணர் வில் விருந்தாளிகளேப்பற்றிக் கேட்கவில்லே. அவன் சாப் பிட்டாச்சா என்று கேட்கவில்லே.

அவன் கையில் இருந்த ஒரு காகிதக்கட்டை வலியப் பிடுங்கிக்கொண்டு, ''என்னது?'' என்றுள்.

சீனிவாசன் நிதானமாகப் பதில் சொன்னுன்.

''எங்கப்பா அடையாறு வீட்டை என் பேருக்கு மாத்தி இந்த பத்திரத்தை அனுப்பியிருக்காரு..கோர்ட்டுன்ன தும் பயந்துட்டாரு..''

இப்போது அவளுக்கு பேசுவதில் ஒரு 'இன்ட்ட ரெஸ்ட்' ஏற்பட்டது.

''அட பாவமே..மைலாப்பூர்ல இருக்கிற சின்ன வீட்டை எழுதி வச்சிருக்கலாமே? அடையாறு வீடு எவ்வளவு பெறும்?''

''ஒரு லட்சம்.''

''இது என்னடா வம்பாப் போச்சு.. அவ்வளவு பெரிய வீடு நமக்கு எதுக்கு? ஐ ஆம் ஸாரி டார்லிங் ..இன்னிக்கு எக்ஸிபிஷன் ஸைட்டை பார்க்கப் போக வேண் டியதாயிட்டுது. இதுக்குத்தான் நான் வேலேயை வேண்டா முன்னேன்..ஐ ஆம் வெரி ஸாரி..என்மேல கோபமா? வர்ற வெள்ளிக்கிழம நாம ரெண்டுபேருமா அவங்கள ஸ்டேஷன்ல போயி வழியனுப்பலாம்..அடையார் வீடு பழசா புதுசா?''

''பழசுதான். ஆனுல் புதுசுமாதிரி தோணுது.''

மோகினி அவனே ஒரு தடவை ஏற இறங்கப்

பார்த்துக் கொண்டாள். பிறகு, ''இன்னிக்கு மூணு மணிநேரமா ஸைட்லயே இருந்தோம்..இருந்தோங்கறது தப்பு. நின்னு நின்னு காலே மரத்துப்போச்சு. அடையார்ல வீடு எந்தப் பக்கம்?'' என்றாள்.

சுந்தரம் பதில் பேசவில்லை. அப்பாவைக் கோர்ட் வரை அழைத்துவிட்ட வேதனையில் தவித்துக் கொண்டிருந்தான். மோகினி, பாத்ரூம்ற்குள் போய்விட்டாள். மனைவியின் 'அன்புக்கட்டளைக்கு' மதிப்பளித்து, சிகரெட் குடிப்பதை அறவே விட்டுவிட்ட அவனுக்கு, இப்போது ஒரு சிகரெட் பிடிக்க வேண்டுமென்று தோன்றியது. பையைத் துழாவினான். காசில்லை. மனைவியிடம் கேட்க வெட்கம், பயம் எல்லாம்.

தலை கனக்க, உடல் கொதிக்க, அவன் படுக்கையில் போய் விழுந்தான். அவ்வளவுதான் அவனுக்குத் தெரியும்.

இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு அவனை உசுப்பி, அவன் மனைவி டெலிபோனை நீட்டிக்கொண்டே, ''ஓங்கப்பா ஹார்ட் அட்டாக்கில் செத்துட்டாராம். நீங்க ஒடனே போகணுமாம்..'' என்றாள்.

அவன் கை நடுங்கியதில், டெலிபோன் நடுங்கியது. தம்பி சபாபதிதான் பேசினான். அவன் பேச்சில் அழுகையைப் பிரித்து, வார்த்தைகளை எடுப்பது கஷ்டமாக இருந்தது. மேலும் விளக்கம் கேட்குமுன்னால், அவன் டெலிபோனை வைத்து விட்டான். என்றாலும், அப்பா சாகையில் 'சீனி சீனி' என்று சொல்லிக்கொண்டே செத்தார் என்று தம்பி சொன்னதை நினைத்து, தலையில் அடித்துக்கொண்டான்.

எல்லாமே கனவு மாதிரி தோன்றியது. மனைவியின் முகத்தை ஒரு குழந்தையின் குழப்பத்தோடு பார்த்தான். அவள் நகத்தைக் கடித்துக்கொண்டிருந்தாள். இறுதியில் விரக்தியில் ஏற்பட்ட உறுதி, அவன் நெஞ்சைக் கெட்டியாக்கியது. அவளைப் பார்த்து, ''வா..போகலாம்,'' என்றான்.

''நான் எதுக்கு? நீங்க போயிட்டு வாங்க..''

''என்ன பேசுறன்னு யோசித்துப் பாத்தியா.. ஒன் மாமனார் இறந்துட்டாரு..''

''அதுக்கு நான் என்ன செய்ய முடியும்?''

''ஒன்ன இறக்கச் சொல்லல..நாம ரெண்டு பேருமா போய் அம்மாவோட கஷ்டத்த இறக்குவோம்..''

''என்னக்கி என்னை மருமகளா ஏத்துக்க மாட்டேன்னு அவரு தள்ளிவச்சாரோ... அன்னைக்கே அவரை

நானும் தள்ளி வச்சிட்டேன்..என்னைப் பொறுத்த அளவுல அவரு மூணுவது மனுஷன்.. மூணுவது மனுஷங்க சாவுக்கெல்லாம் நான் போறதுல்ல..''

''நீ வாரியா இல்லியா..''

''மூணு மணிநேரமா ஸைட்ல நின்னு காலுல்லாம் வலிக்கிறது. என்னால முடியாது''

''வாரியா..இல்லியா?''

''முடியாதுன்னு..முடியாது.''

மனைவியின் கழுத்தை அங்கேயே நெறித்துவிடலாமா என்ற வேகம் வந்தது அவனுக்கு. ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, அவளை வெறித்துப் பார்த்தான். பின்னர் 'ஒன்னைக் கட்டுன எனக்கு இன்னமும் வேணும் இதுக்கு மேலேயும் வேணும்' என்று தன்பாட்டுக்குச் சொல்லிக்கொண்டே வெளியேறினான்.




சில காரியங்கள் ஆமை வேகத்தில் துவங்கி, மின்னல் வேகத்தில் முடியும். சில மின்னல் வேகத்தில் துவங்கி ஆமை வேகத்தில் முடியும். ஆனால் மோகினியின் திருமணம் மின்னல் போல் தோன்றி, மின்னல்போல மறைந்தது. அவள் கழுத்தில் தாலி ஏறுவதற்காவது, ரிஜிஸ்டர்ட் ஆபீஸ், அப்புறம் கோயில் குளம் என்று சில வாரம் ஆகியது. ஆனால் ஏறிய தாலி இறங்க அவ்வளவு நாள் கூட ஆகவில்லை.

மோகினியின் கழுத்தை நெறித்துக் கொண்டிருந்த சீனிவாசன், அவள் கழுத்தை விட்டுவிட்டு, தன் கழுத்தைக் குத்திக் கொள்வதற்காக கத்தியையோ அரிவாளையோ ஓடிக் கண்டுபிடித்து எடுத்தபோது, உள்ளே ஓடிவந்த மோகினியின் அப்பா ஏகாம்பரம் 'கொலகாரன்..கொல பண்றான்..கொல பண்றான்' என்று கத்த, அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் கூடி, அவனை 'நீயும் மனுஷனா' என்று கேட்க, தான் உண்மையிலேயே மனுஷன் இல்லை என்பதை அவர்கள் சொல்வதற்கு முன்பாகவே உணர்ந்திருந்த சீனிவாசன் மௌனமாக வெளியே போகப் போனான்.

அப்போது, ""என் பொன்ணுக்கு மூணுமாசம்.. அவளுக்கும் அவள் குழந்தைக்கும் ஒரு வழி சொல்லிட்டுப் போடா,'' என்று மரியாதைமிகு மாமனர் சொல்வதையும் பொருட் படுத்தாமல், ஹார்ட் அட்டாக்கில் இறந்து போன அப்பாவிற்காக வேகமாக இயங்கிய தன் இருதயம் இப்போது இயங்காததுபோல் இயங்க, அவன் பரிதாப மாக வெளியேறினன்.

மோகினிக்குச் சிரமம் எதும் இல்லை. ஜீவனும்சம் கோரி வழக்குப் போடப்போவதாக மறுநாளே 'வக்கீல் நோட்டீஸ்' விட்டாள். வக்கீல் இளைஞர். அவள், அவருக்கு 'பீஸ்' கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. அதோடு, தனக்கு ஏற்கனவே தெரிந்த ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் மூலம்; சீனிவாசன் அவளுக்கு ஒரு வழி செய்யவில்லை என் ருல், அவன் ஒரு 'வழியாகி' விடுவான் என்று வேறு மிரட் டப்பட்டான். மான அவமானத்திற்குப் பயந்த அம்மாவின் வேண்டுகோள்பேரிலும், வீட்டு விவகாரங்கள் கோர்ட்டுக் குப் போனல், தங்கைகள் இருவரும் வீட்டுக்குள்ளேயே இருக்க வேண்டியது வரும் என்பதை உணர்ந்ததாலும் சீனிவாசன், தந்தை தன் பெயருக்கு எழுதிக்கொடுத்திருந்த அடையாறு வீட்டுப் பத்திரத்தை அவள் பெயருக்கு மாற்றிவிட்டு, அவள் கையெழுத்துப் போட்ட விடுதலைப் பத்திரத்தை வாங்கிக்கொண்டு போனவன் போனவன் தான்.

எல்லாம் மூன்று நாட்களில் முடிந்துவிட்டன. கணவனைப் பிரிந்தாலும், அவன் நினைவைப் பெரிதும் போற் றிப் புகழ நினைத்த மோகினி, நான்காவது நாளே, அவன் கொடுத்த அடையாறு வீட்டிற்குக் குடிபோய் விட்டாள்.

தாலி கட்டிய நேரம் நல்ல நேரமாக இல்லை யென்ருலும், தாலி இறங்கிய நேரமும் அவள் அந்த வீட்டுக்குப் போன நேரமும் நல்ல நேரமாகத்தான் இருக்க வேண்டும். பப்ளிஸிட்டி மானேஜரின் வேண்டுகோள்படி, கம்பெனியின் தலைமையிடம் அவள் மூன்றுமாதம் மேற் கொண்டும் வேலையில் நீடிப்பதற்கு அனுமதியளித்தது. அதற்காக, அவள் வீட்டிலேயே ஒரு 'பார்ட்டி' கொடுத் தாள். பப்ளிஸிட்டி மானேஜர், அவரைப் பிடிக்காத மேல திகாரியான ஜெனரல் மானேஜர், பீஸ் வாங்காத வக்கீல், குடும்ப விவகாரங்களைக் கோர்ட் வழக்கென்று விடாமல் பார்த்துக் கொள்ளும் 'குடும்ப' இன்ஸ்பெக்டர்—அவர்—

இவர் என்று பலரக மனிதர்கள் குவிந்தார்கள். மோகினி யின் தந்தை ஏகாம்பரமும் ஒவ்வொருவரிடமும், ''எங்கே நீங்க வராம போயிடுவீங்களோன்னு பேபி பயந்துட்டுது. என்னைக்கூட ஒங்ககிட்ட இருந்து கையோட கூட்டிக் கிட்டு வரச் சொல்லிச்சு. நல்லவேளை வந்திட்டீங்க.. இல்லன்னா..பப்ளிஸிட்டி மானேஜர், ஜெனரல் மானேஜர், இன்ஸ்பெக்டர், வக்கீல் ஸார் (இதில் மூன்று பேர்களை நான்கு முறை அழித்துக் கொண்டார்) போய் கூட்டிக் கிட்டு வராம போயிட்டிங்களேன்னு என்மேல பாய்ஞ்சி ருப்பா..நல்லவேளை வந்திட்டிங்க,'' என்று சீவல்பாக்கைக் கொறித்துக்கொண்டு, வெற்றிலையை வாய்க்குள் வைத்துக் கொண்டு ரகசியமாக குதப்பினர். இதனால் ஒவ்வொரு வரும் தான்தான் 'சீப் கெஸ்ட்' என்று நினைத்துக் கொண் டும், இதர மூவரை 'சீப்பாக' அனுமானித்துக்கொண்டும் ஏகாம்பரத்தின் 'ரகசியத்தை' மனத்திற்குள்ளேயே ரசித் துக்கொண்டு புன்னகை சிந்தினர்கள். வெளியே இவர்களுக் காகக் காத்துக்கிடந்த டிரைவர்கள், எப்படிப் 'பச்சை யாக'ப் பேசிக் கொண்டார்கள் என்பதை சென்ஸார் செய்து கூட எழுத முடியாது.

பப்ளிஸிட்டி எக்ஸிக்யூடிவ்வான லீலாவும் மூன்று மாத விடுமுறைக்குப் பிறகு வேலையில் சேர்ந்தாள். திரு நெல்வேலியில் ஏதோ ஒரு குக்கிராமத்தில் பெற்றேருடன் மூன்றுமாத காலத்தைக் கழித்துக் கொண்டிருந்தபோது, அஸிஸ்டெண்ட் பப்ளிஸிட்டி மானேஜர் சங்கரை நினைத் துக்கொண்டே, அவனை எப்போது பார்க்கலாம் என்று துடித்துக் கொண்டிருந்தவள் அவள். இப்போது மானே ஜரிடம் திட்டுக்கள் வாங்கிக் கொண்டிருக்கும் சங்கர், லீலாவின் 'செல்லமான காதல் திட்டுக்களையும்' சீரியஸாக எடுத்துக்கொண்டு, மானேஜரை எப்படி எப்படியெல்லாம் கேட்கலாம் என்று மனதுக்குள் அடக்கி வைத்திருந் தானே, அவற்றைக் காதலிமீது அம்புகளாக்கினன். போதாக் குறைக்கு, அவனுக்கு அருகில் இருந்த நாற்காலியில் மோகினி 'டெம்பரரி கேஷுவல்' பெண்—உட்கார்ந்திருந் தாள். அது லீலாவுடைய நாற்காலி. அதன் ஜோடியான மேஜை டிராயரில், இன்னும் இவள் வைத்துவிட்டுப்போன காகிதக்கட்டுகள், சங்கரைப் பார்த்து அவள் வரைந்த படங்கள், அவற்றிற்கு அவன் கொடுத்த 'காமென்ட்கள்' உள்ளன. 'சங்கர் ஒரு திங்கர் ஹோட்டலில்' என்று

எழுதி, அவனைச் சாப்பாட்டு ராமனுகச் சித்தரித்து, அவள் வரைந்த ஓவியமும் உள்ளே இருக்கிறது. 'ந லீலா..நான் விநோதன்; இரண்டு வார்த்தைகள் ஒன்றுயின. இன்னுமா நாம் இரண்டாய் இருப்பது' என்று அவன் எழுதிய 'புதுக் கவிதையும்' அந்த டிராயருக்குள் உள்ளது.

லீலா நாசுக்காகக் கேட்டுப்பார்த்தாள். ''இந்த நாற்காலிதான் எனக்கு ராசியான நாற்காலி..மூணு வருஷமா இதில்தான் இருந்தேன். அதுல உட்காராட்டா வேலயே ஓடாது,'' என்று மோகினியிடம் சொல்லு வாள். அவள், கண்டுக்கவில்லை என்பது மட்டுமில்லை, அந்த நாற்காலியில்தான் உட்காரவேண்டும் என்பதைவிட, லீலாவை அதில் உட்கார வைக்கக்கூடாது என்பதற்காகவே காலையில் முன்னதாக வந்துவிடுவாள். ஆனல் பஸ்ஸில் இடி பட்டு ஏறும் லீலாவால் பப்ளிஸிட்டி மானேஜரின் காரில் வரும் மோகினியை முந்த முடியவில்லை.

கண்ணுக்குப் பிடித்த சங்கரிடம் சொன்னுள். அவனே இவள் கருத்துக்குப் பிடிக்காதபடி, ''கேவலம்.. நாற்காலில் என்ன வந்தது.. இதப்போய் பெரிசா எடுத்தா.. என்னர்த்தம்?'' என்றுன். இருவரும் அருகருகே உட்கார்ந்து ஒருவர் கையை ஒருவர் கிள்ளிக்கொண்டும், ஒருவர் பிரசினையை இன்னொருவர் மற்ற ஒருவருக்கும் தெரியாமல் கேட்டுக்கொண்டும், இன்பமாகக் கழித்த நாட்களை அவன் மறந்துவிட்டதுபோல் தோன்றியது. அந்த இன்பமயம் தொடர்வதற்குக் காரணமான நாற்காலி பறி போனதில், அவனையே பறி கொடுத்தது மாதிரி அவள் தனக்குள்ளே புலம்பிக்கொண்டாள். நாற்காலியைப் பிடித் தவள், பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்திருப்பவனையும் பிடித்து விடுவாளோ என்றுகூட பயந்தாள். அதற்கு ஏற் றாற்போல், மோகினியும் சங்கரிடம் சிரித்துச் சிரித்துப் பேசுவதையும், சில சமயம் 'போங்க ஸார்' என்று அவனை இடிக்கப் போவதுமாதிரி, கையைத் தூக்கிச் செல்லமாக சிணுக்குவதையும், லீலா சீரியஸாக எடுத்துக்கொண்டாள். அதேசமயம், கடற்கரையில் தன் தோள்களை லேசாகப் பற்றிக்கொண்டு சாய்ந்திருக்கும், அவனிடம், ''என்னைக் கைவிட மாட்டீர்களே?'' என்று அவள் அழாக்குறையாக கேட்கும்போது, அவன், ''ஒனக்கு என்ன பைத்தியமா.'' என்று சொல்லி, அவள் கையைப் பிடித்து அழுத்துவதை யும் நினைத்துக்கொண்டாள்.

இது போதாதென்று இன்னென்று.

அந்தக் கம்பெனி ஊழியர்களுக்காக ஒரு 'ஹவுஸ் ஜர்னல்' (சஞ்சிகை) நடத்தியது. மாத வெளியீடாக அதில், கம்பெனி ஊழியர்கள் நடத்தும் கலை நிகழ்ச்சிகள் பற்றிய போட்டோக்களும், ஊழியர்களின் கவிதை, கட்டுரைகளும், அவர்களுக்குக் கம்பெனி செய்திருக்கும் நன்மைகளும் பிரசுரமாகும். கம்பெனியைப்பற்றி பிரமுகர்கள் தெரிவித்திருக்கும் கருத்துக்கள், சின்ன எழுத்திலும், சினிமா நடிகர் நடிகைகள் சொல்வது 'போல்ட் டைப்'பிலும் வெளியாகும். இதற்கு பப்ளிஸிட்டி மானேஜர் சுந்தரம்தான் 'எடிட்டர்' என்ருலும், பத்திரிகை முழுக்க முழுக்க லீலாவே கவனித்து வந்தாள். இப்போது, மோகினியிடம் அது ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஜர்னலிஸத்தில் டிப்ளமா பெற்ற தன்னிடம் மானேஜர் மீண்டும் அதை ஒப்படைப்பார் என்று நினைத்த லீலா, ஏமாந்தாள். அவள் வேலையில் சேர்ந்தபோது துவக்கப்பட்ட பத்திரிகை அது. அவளைப் பொறுத்த அளவில் சங்கருக்கு அடுத்தபடியாக அவள் நேசிக்கும் குழந்தை அது.

அந்தக் குழந்தையை மோகினி கிள்ளிக்கொண்டிருப்பதை லீலாவால் பொறுக்க முடியவில்லை. சங்கரிடம் சொல்லிப் பார்த்தாள். அவனே, மோகினிக்கும் மேலதிகாரியான அந்த அஸிஸ்டெண்ட் பப்ளிஸிட்டி மானேஜரோ, மோகினியிடம் 'அன் அபிஷியலாக' 'ஸர்ரண்டர்' ஆகிவிட்டான். சாட்சிக்காரனைவிட சண்டைக்காரி தேவலை என்று நினைத்த லீலா, "மிஸ் மோகினி..எதுக்கும் லேஅவுட்டை நான் ஒரு தடவை பாத்துடுறேன்.. கொஞ்சம் காட்டுறீங்களா?" என்று தன் இருக்கையில் இருந்து எழுந்து அவளுக்கு முன்னால், பிச்சை கேட்பது போல் கேட்டாள்.

மோகினி அவளை ஏற இறங்கப் பார்த்தாள். லீலா உடுத்திருந்த அந்த வெள்ளை வாயில், இந்த நைலக்ஸ்காரியை என்னவோ செய்திருக்கவேண்டும். அச்சமில்லாமலும், அவசரப்படாமலும், பகட்டைக் காட்டாமலும், சிரிப்பதுபோல் தோன்றிய அவள் கண்கள், இவள் கண்களை உறுத்தியிருக்க வேண்டும். பாலீஷ் போடாமல் பளபளப்பாக மின்னிய நகங்கள், இவளைக் கிள்ளுவதுபோல் தோன்றியிருக்கவேண்டும். மெதுவாக இனிமையைப் பிரதிபலிக்கும் அவள் குரல், இவள் மனதில் கூச்சலை எழுப்பியிருக்க வேண்டும். அவள், தொப்புளுக்கு மேலே கட்டியிருந்த புடவை இவளுக்குப் புழுக்கத்தைக் கொடுத்திருக்க

வேண்டும். அவள் காலில் போட்டிருந்த செருப்புகள் இவளை அடிப்பதுபோல் வலித்திருக்க வேண்டும்.

மோகினி அவளை சிறிதுநேரம் முறைத்துவிட்டு, குட்டிபோட்ட பூனைமாதிரி முனகிக்கொண்டே பப்ளிஸிட்டி மானேஜரின் ஏர் கண்டிஷன் அறைக்குள் போன வேகத்திலேயே, ''ஸார்..நீங்க எனக்குப் பாஸா, இல்ல இந்த லீலா பாஸான்னு இப்ப தெரியணும்,'' என்று அங்கேயே கூச்சல் போட்டாள். அவள் வைத்திருக்கும் பரீட்சையில் 'பாஸாக' வேண்டும் என்று நினைத்த பப்ளிஸிட்டி சுந்தரம், விவகாரத்திற்கு பப்ளிஸிட்டி கொடுக்க வேண்டாம் என்று அவளை உட்காரச் சொல்லி, விஷயத்தைக் கேட்டார். விஷயம் தெரிந்ததும் அவள் கொடுத்த 'பிரஷ்ஷரில்' அவருக்கு பிளட் பிரஷ்ஷர் ஏறியது. பெல்லடித்து, பியூனை அனுப்பி லீலாவை வரவழைத்தார். அவளை உட்காரச் சொல்லவில்லை. உட்கார்ந்திருந்த மோகினியைச் சுட்டிக்காட்டி, ''நியாயத்தை (பத்திரிகையின் பெயர்) இவளே பாத்துக்கறப்போ நீ ஏன் அனுவசியமா இன்டர்பியர் பண்றே? நீ பாஸா நான் பாஸா? ஐ ஸே யூ கீப் குயட். டோண்ட் போக் யுவர் நோஸ்..யூ கேன் கோ நௌ..'' என்று கத்த, திருப்பிக் கத்தலாமா என்று நினைத்த லீலா, உதடுகளைக் கடித்துக்கொண்டு, நீர் சிந்தாமல் இருக்க இமைகள் நின்ற இடத்திலேயே நிறுத்தி 'பாலன்ஸாக' வைத்துக் கொண்டு வெளியே போனபோது, இளைப்பாறுபவர்போல் கத்திக் களைத்த சுந்தரம், உள்ளே இருந்தவளின் தோளில் கைபோட்டார். லீலா கீழே விழாமல் இருப்பதற்காக வெளியே வந்து மேஜையைப் பிடித்துக் கொண்டாள்.

சிறிது நேரத்திற்குப்பிறகு, தோளில் கிடந்த புடவைத் தலைப்பைச் சரி செய்து கொண்டு, அட்டகாசமாக வந்த மோகினி, அப்பாவிற்கு உற்சாகமாகப் போன் செய்தாள். ''அப்பா..வேலைக்காரியைப் பாயசம் வைக்கச் சொல்லுங்க..ஒரு நல்ல நியூஸ்..சரியான சவுக்கடி..என் கிட்டயா..முடியும்? என்னப்பத்தி இன்னும் தெரியல.. ஹா..ஹா..ஹெ..ஹே..அப்புறமா..வீட்ல வந்து சொல்றேன்..வச்சிடட்டுமா?'' என்று சொல்லிவிட்டு போனை வைத்தாள். பிறகு இன்னொரு நம்பரைச் சுழற்றினாள். ''இன்ஸ்பெக்டர் வில்லியம்ஸ் இருக்காரா..யோவ் நான் யாராய் இருந்தா ஒனக்கென்னய்யா? ஐ ஸே யு ஸிம்ப்ளி கிவ் இட் டு ஹிம்...ஹலோ... மிஸ்டர் வில்லியம்ஸா

..எங்க ஆபீஸ் கல்சுரல் அகடாமில சினிமா நடிகர் சிங்காரத்த கொண்டு வாரோம். கொஞ்சம் பாதுகாப்பு வேணும்..ஓங்க சப் இன்ஸ்பெக்டரை என் வீட்டுக்கு அனுப்புறீங்களா? என்ன. .நீங்களே வாரீங்களா. . நாளைக்கி ஈவினிங்கல வாங்க. ஏழு கான்ஸ்டபிளாவது வேணும்...ஆல் ரைட்..காலையில வந்துடச் சொல்லுங்க.''

நிரந்தரமாகாத ஒரு சாதாரண வேலையில் இருக்கும்போதே மோகினி இவ்வளவு திமிராகவும் அகங்காரமாகவும் இருப்பது எல்லாருக்குமே ஆச்சரியம் தந்தது. ஆனால் மோகினிக்குத் தெரியும், தன் அழகையும் சாமர்த்தியத்தையும் போட்டு, எந்தெந்த மேலதிகாரியை எப்படியெப்படி காக்கா பிடிக்கலாம் என்று.

லீலாதான் அவளுக்கு முதல் நம்பர் எதிரியாகத் தோன்றினாள். அவளையும் அவள் காதலன் சங்கரையும் பிரித்துவிட வேண்டும். லீலாவை நிரந்தரமாக விரட்டி விட வேண்டும்.

இந்த நோக்கத்துடன்தான் மோகினி அட்டகாசம் செய்து கொண்டிருந்தாள். ஆனால் ஆபீசில் தான் இவ்வளவும். குடும்பத்தில் நிலைமை ரொம்ப மோசம். அவ்வளவு பெரிய அடையாறு வீடு ஒரு வெள்ளை யானையாகத் தோன்றவே அதை வாடகைக்கு விட்டு விட்டுச் சின்ன வீட்டுக்குக் குடி போனாள். அப்படியும் செலவுகளைச் சமாளிக்க முடியவில்லை. உத்தியோகம் நிரந்தரமானால். . .

இதற்காகவேதான் அவள் கல்சுரல் அகாடமி என்று ஒன்றை ஆரம்பித்திருந்தாள். பல பெரிய மனிதர்கள் வந்து சந்திப்பதற்கு அது ரொம்ப வசதியான இடமாக இருந்தது.

அந்தச் சங்கத்தில் அந்த விழா இந்த விழா என்று சாவனீர் வெளியிடுவாள். ஆபீஸ் பெயரை உபயோகப்படுத்திக் கொண்டு விளம்பரங்கள் வசூலிப்பாள். ஓசியில் பல காரியங்கள் நடக்கும்.

எதற்கும் துணிந்த ஏகாம்பரமே கூடக் கொஞ்சம் திகில் பட்டார். ''ஏம்மா, ஏற்கெனவே நமக்குக் கஷ்டம். இதெல்லாம் வேறே ஏன்?'' என்றார்.

''சும்மா இருங்கப்பா. சின்ன மீனைப் போட்டுத் தான் பெரிய மீனை எடுக்கணும்,'' என்றாள் மோகினி.

''சாப்பாட்டுக்கே திண்டாட்டமா இருந்துட்டிருக்கே!'' என்று ஏகாம்பரம் நெட்டுயிர்த்தார்.




எங்கெல்லாமோ சுற்றி யலைந்துவிட்டு ஒரு நாள் மோகினி யிடமே திரும்பி வந்தான் சீனி வாசன். விடுதலைப் பத்திரம் வாங் கிக் கொண்டு போனவனுக்கு மறுபடி என்ன வேலை என்று மோகினிக்குக் கோபம் வந்தது. தொலைந்து போகிறான் என்று வீட்டில் இருப்பதற்கு இடம் கொடுத்தாள்.

கிட்டத்தட்ட பிச்சைக்காரன் மாதிரி வந்திருந்த சீனிவாசனிடம் மாமனார் ஏகாம்பரத்துக்கு எவ்விதப் பாச மும் ஏற்பட நியாயமில்லை. ''என்னய்யா, அப்பா எவ்வளவு வைச்சிட்டுப் போனார்?'' என்று வேண்டுமென்றே கிண்டல் செய்தார். சில சமயங்களில் 'மனம் விட்டுப்' பேசிச் சண்டை போட்டுக் கொள்வார்கள். மோகினி அதைப் பார்ப்பாளே தவிர, சீனிவாசனுக்குப் பரிந்து வரமாட்டாள்.

எப்படியோ இரண்டு மாதங்கள் ஓடின.

மோகினியும் சீனிவாசனும் அதிகமாகப் பேசு வதில்லை. 'அய்யோ..ஓங்க பிள்ள என்னை எப்டில்லாம் உதைக்குது..இதோ பாருங்க' என்று வயிற்றைக் காட்டிச் சொல்லத் துடிக்கும் உணர்வை வந்த வேகத்திலேயே அடக்கிக்கொள்வாள். ஏகாம்பரம் அவள் கண்முன்னாலேயே மருமகனை ஒருநாள் தனக்கு வெற்றிலைபாக்கு வாங்கிக் கொண்டுவரச் சொன்னார். மனைவிக்காரி அதை கண்டிக் காததைச் சீனிவாசன் பெரிதாகத்தான் எடுத்துக்கொண் டான். அப்பாவின் சாவுக்கு அவள்தான் எமனாக வந்த வள் என்று அவன் நினைத்ததோடு முணுமுணுக்கத் துவங் கினான்.

ஒரு நாள் மோகினி கணவனிடம் 'வலிய' வந் தாள். ஒரு ஐந்து ரூபாய் நோட்டை நீட்டி 'குங்குமப்பூ வாங்கிட்டு வாங்க..நம்ம ரெண்டு பேரையும்விட குழந்தை நிறமா பிறக்க வேண்டாமா' என்று சிரித்துக்கொண்டே

சொன்னதில், சீனிவாசனும் லேசாகப் புன்முறுவல் செய்தான் புறப்பட்டான்.

குழந்தை அழகாக இருக்கவேண்டும் என்று சதா நினைத்துக்கொண்டிருந்த மோகினி, காலையில் ஏழு மணிக்குப் போன கணவன் ஒன்பதுமணிவரை திரும்பாததைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை..

சாயங்காலம் வந்து பாலில் கலந்து குங்குமப் பூவை சாப்பிடலாம் என்று நினைத்து, மனதைத் தேற்றிக் கொண்டு, ஆபீஸ் போனாள். அதேசமயம், அந்த இடைவெளியினால் குழந்தையின் கலர் கொஞ்சம் குறையுமோ என்று கூடச் சங்கடப்பட்டாள்.

மாலை வந்தது. குங்குமப்பூ நினைவுடன் வீட்டுக்குத் திரும்பிய மோகினியின் கண்கள் குங்குமமாயின. சீனிவாசன் ஒரு நாற்காலியில் முட்டிக்கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். ஏகாம்பரம் மருமகன் சார்பில் பேசினார்.

"ஒனக்கு வாச்சவர் அஞ்சு ரூபாய் நோட்டை எவனோ பிக்பாக்கட் அடிச்சிட்டான்னு சொல்றார். குங்குமப்பூவுக்குப் பதிலா ஒரு ஸ்டார் சிகரெட்டை பிடிச்சிக்கிட்டு வாரார்... எல்லாம் ஒன்னோட தலையெழுத்து.. கண்ணைத் திறந்துகிட்டே பாழுங் கிணத்துல விழுந்திட்ட..."

மோகினி அவனையே முறைத்துப் பார்த்தாள். 'பிக்பாக்கட் அடிச்சிட்டான்' என்று அவன் சொல்லியிருந்தால் அவள் கோபம் தணிந்திருக்கலாம். ஆனால் அவனோ, 'அசால்டாக' உட்கார்ந்து, இன்னொரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான். மோகினிக்குப் பற்றி எரிந்தது. அழகான குழந்தைக்கு ஆசைப்படக்கூட உரிமை இல்லையா...பிக்பாக்கட் அடிச்சிருந்தா, அந்த முகமே காட்டிக் கொடுத்திருக்குமே? சிகரெட் குடிக்கிற பழக்கம் வந்துட்டால் இப்படித்தான்..

மோகினி பயங்கரமாகக் கத்தினாள்:

"குங்குமப்பூ இல்லாம இந்த வீட்டுக்குள்ள வரப்படாது..மொதல்ல அத வாங்கிக்கிட்டு வந்து மறுஜோலி பாருங்க..சே. கொஞ்சமாவது சொரணை வேண்டாம்..."

இந்தச் சமயத்தில் ஏகாம்பரமும் இடைச் செருகல் செய்தார்.

"இவரு அப்பன் ஒன்னை ஆமைன்னு சொன்

ணும். . இப்ப உயிரோட இருந்தா யாரு வீட்ல எந்த ஆமை புகுந்துதுன்னு தெரிஞ்சிருப்பார்.''

சீனிவாசனுக்கு சப்த நாடிகளும் துடித்தன. 'மாமா. .இதுக்கு மேல ஒமக்கு மரியாத இல்ல. இனிமே பேசினு மரியாதை கெட்டுப் போயிடும். .' என்று சொல்லிக் கொண்டே எழுந்தான். மோகினிக்கு இது அதிகப் படியாகத் தெரிந்தது. கணவனை நெருங்கி, 'பெண்டாட்டிக்குத்தான் ஒண்ணும் வாங்கிக் கொடுக்கிற வக்கில்ல. . அவள் தந்த காசையாவது திருப்பித்தர யோக்கியதை வேண்டாம்? என்னுட புருஷன்னு சொல்லிக்க உங்களுக்கு வெட்கமா இல்லே? . .' என்று கையை நீட்டிப் பேசினுள்.

பேசியவள், திடீரென்று கன்னத்தில் கைவைத்தாள். காரணம் சீனிவாசன் அவள் கன்னத்தில் பளீர் என்று அடித்துவிட்டு, இடுப்புப் பக்கத்தில், காலால் உதைத்துவிட்டு, பின்னர் செய்த தவறுக்குப் பிராயச்சித்தம் செய்ய நினைக்காதவன்போல் 'என்னடி சொன்னே. .' என்று உறுமினுன். இந்த வன்முறையைச் சிறிதும் எதிர் பாராத ஏகாம்பரம், முதலில் பிரமை பிடித்தவர்போல் சிறிது நேரம் நின்றுவிட்டு, பின்னர் 'நான் இடுப்பில எடுத்து வளத்த என் குழந்தையையாடா இடுப்பில உதைக்கிறே. . பாவிப்பயலே. .அவள் கர்ப்பிணின்னு தெரிஞ்சும் இடுப்புல உதைச்சிட்டியே. . . அபார்ஷன் ஆயிட்டா ஒங்கப்பனுடா மருந்துக்குப் பணம் தரப்போறுன்? பாழாப் போற பாவி. .' என்றுர். இதற்குள், உள்ளே படுத்துக் கிடந்த அம்மாக்காரி தட்டுத் தடுமாறி அங்கே வந்தாள்.

சீனிவாசன் வெளியேறிவிட்டான். மோகினி ஒன்றும் பேசவில்லே. கன்னத்தைத் தடவி விட்டுக் கொண்டாள். இடுப்பை இழுத்துவிட்டுக் கொண்டாள். அப்பா சொன்னதுமாதிரி அபார்ஷனுயிடுமோ. . அய்யோ. . என் குழந்த தாங்காதோ. .தங்காதோ. .அது போயிட்டா நான் மட்டும் எதுக்காக இருக்கணும்? மாட்டேன். . இருக்க மாட்டேன்.

மோகினியின் மனம் மாறியதோ இல்லேயோ, முகம் கல்லாக மாறியது. கணவன் என்ற ஒருவன் இறந்துவிட்டதாக அப்போதே அனுமானித்துக்கொண்டாள். அபார்ஷன் ஆகிவிடலாம் என்கிற சந்தேகம் விசுவரூபமெடுக்க, டாக்டரிடம் போகலாமா என்று யோசித்துக் கொண்டே ஒரு மூலேயில் குன்றிப்போய் உட்கார்ந்தாள்.

இரவு எட்டுமணி சுமாருக்கு சீனிவாசன் வந்தான். இப்போது பையில் ஒரு பாக்கெட் சிகரெட் இருந்தது. 'போனால் போகுதுன்னு வந்தேன்..வாயும் வயிறுமாய் இருக்கிறவளை அந்தரமா விட்டுப்போகக் கூடாதுன்னு வந்தேன்...இனிமேல் ஒரு தரம் இப்படிப் பேசினால் ஒனக்கும் எனக்கும் ஒண்ணும்கிடையாது' என்று சொல்லிக்கொண்டே வந்தான்.

எரிந்துவிழும் ஏகாம்பரம் இப்போது அவனை எதிர்த்துப் பேசவில்லை. காலிப் பயலிடம் என்ன பேச்சு..

மோகினி எழுந்தாள். அவன் அந்த வீட்டில் இருந்தால் தன் குழந்தை நிச்சயம் அபார்ஷனாகிவிடும் என்பதை முழுமையாக நம்பி, பெண்புலியாய்ச் சீறினாள்.

'இனிமேல் இந்த வீட்ல ஒரு நொடிகூட இருக்கமுடியாது. ஒங்கள் உதவியில்லாமலே என்னால பிள்ளையை வளர்க்க முடியும்..வளர்த்துக் காட்டுறேனா இல்லியான்னு பாருங்க..எப்ப நீங்க என்னை அடிக்கிற அளவுக்கு வந்துட்டீங்களோ அப்பவே ஒங்கள என் மனசில டைவர்ஸ் பண்ணிட்டேன்..சுயமரியாதை உள்ளவராய் இருந்தால் நீங்க போகலாம். செலவுக்கு வேணுமுன்னாலும் பணந் தாரேன்..'

சீனிவாசன் அவளையே உற்று நோக்கினான். அடிக்கப்போன கைகளை அடக்கிக்கொண்டான். மடமடவென்று அறைக்குள் போய், தன்னுடைய துணிமணிகளை ஒரு 'லெதர் பேக்கில்' புகுத்திக்கொண்டு புறப்பட்டான். போய்விட்டான்.

அன்றிரவு மோகினி தூங்கவில்லை. தலையணை உறையை மாற்றவேண்டிய அளவுக்கு அவள் அழுது தீர்த்தாள். வழக்கமாக வயிற்றில் புரண்டு 'உதைக்கும்' பிள்ளை, இப்போது நெளியாமல் இருப்பதை உணர்ந்து, இவள் தூக்கமில்லாமல் நெளிந்தாள். அந்தப் பாவி கொடுத்த அடியில் அபார்ஷன் ஆனாலும் ஆயிடுமோ..

வாரங்கள் மாதங்களாக மாறிக் கொண்டிருந்தன.

நிறைமாதக் கர்ப்பிணியான மோகினியால், வேலைக்குப் போக முடியவில்லை. சாப்பாட்டுக்கே கஷ்டமாக இருந்தது. . அப்பாக்காரருக்கு ஜாதகம் பார்க்கத் தெரியும். அவருக்கு சுக்கிரயோகம் இருந்ததோ இல்லையோ! அப்படி ஆயிட்டா ... யாருக்காக, . வாழணும்...

சினிமா யோகம், வக்ரத்தோடு வந்தது. சினிமாக்காரர்களுக்கும், கதைகளைத் திருடும் சினிமா எழுத்தாளர்களுக்கும் நேரங்காலம் சொல்லி உற்சாகப் படுத்தினர். அவர்களும் பதில் உற்சாகமாகச் சில நூறு பத்து ரூபாய்களை கொடுத்ததால் மோகினிக்கு அதிக சிரமமில்லை. குழந்தையோட ராசி என்று, அது பிறக்கு முன்பே நினைத்துக்கொண்டாள்.

குழந்தையும் பிறந்தது. கருவண்டு விழிகளுடன், பயத்தம் பருப்பு நிறத்தில் அழகாகப் பெண்குழந்தை பிறந்தது. எல்லோரையும்போல, அவளுக்கும், 'அவரை'ப் பார்க்க ஆசை வந்தது. 'இந்தக் குழந்தைய அபார்ஷனுக்கப் பார்த்தவரோடு என்ன சகவாசம்' என்று தன் ஆசையைத் தானே அடக்கிக் கொண்டாள்.

ஆனல், சீனிவாசனல் ஆசையை அடக்க முடியவில்லை. குழந்தை பிறந்த மூன்று மாதத்தில் கொஞ்சம் பணத்தோடு எங்கிருந்தோ வந்தான்.

''மோகினி, ஒருத்தருக்கு நான் கடன் கொடுத்திருந்தேன். இப்ப திருப்பித் தந்தார். இதெல்லாம் நம்ம கலாவுக்குத்தான். இனிமேல் ஒழுங்கா இருப்பேன். என்னை நம்பு'' என்றுன்.

மோகினி நம்பியிருப்பாள். அந்தப் பணத்தை நீட்டியபோது, அவன் வாயில் சாராய வாடை வீசியது. அதனுலதான் பாசமா பேசறுர் போலிருக்கு..

மோகினியின் இருதயம் கல்லாகியது. குடிகாரனை வீட்ல வச்சிருந்தா..கலாவோட குடி கெட்டுப்போகும்.. அப்பன் புத்தி அதுக்கு வந்துட்டா..வரக்கூடாது... வர விடமாட்டேன்.

மோகினி, ஆண்புலியிடம் இருந்து குட்டியைக் காக்கும் பெண்புலியாகச் சீறினுள்.

'இனிமே ஒங்க சாவகாசமே வேண்டாம்.. ஒங்க காற்று பட்டாலே கலாவுக்குக் கெட்ட புத்தி வந்துடும். என் மகளை என் இஷ்டப்படி வளர்க்கப் போறேன். இதுக்கு யார் குறுக்கே நின்னுலும் அவங்க எனக்குத் தூசி. குடிகாரன் புத்தி விடிஞ்சா போச்சு. நீங்க விடியறது வரைக்கும் இருக்க வேண்டாம்...பிளீஸ்..போயிடுங்க நமக்குள்ள ஒட்டும் கிடையாது, உறவும் கிடையாது.

சீனிவாசன் கோபமாகக் கையைத் தூக்கினுன். அந்த அடி குழந்தைமீது பட்டாலும் பட்டுவிடலாம் என்கிற பயம் தைரியமாக மாற, மோகினி தன் முகத்தில்

விழப்போன அவன் கரத்தை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டே, 'மிஸ்டர்.. என்னை நீங்க போலீஸ் வரைக்கும் துரத்த மாட்டிங்கன்னு நினைக்கிறேன்' என்ருள்.

பட்டை தீட்டிய சீனிவாசன், அதிர்ச்சி அடைந்தவனுய் வெளியேறினுன்.

ஏகாம்பரம், ''மாப்பிள்ளை! இந்தத் தடவையாவது போயிடு! முன் போலத் திரும்பி வந்துடாதே!'' என்று சத்தம் போட்டார்.

அவர் சொன்னதாலோ என்னவோ சீனிவாசன் திரும்பவேயில்லை.

**மா**தங்கள், ஆண்டுகளாயின.

கலா இப்போது மூன்று வயதுக்காரி. மோகினி எங்கே போனுலும் மகளை எடுத்து வைத்துக் கொண்டே போனுள். நான்காவது வயதில் அவளை எல். கே. ஜி. யில் சேர்ப்பதற்காக, இப்போதே 'இடம்பிடிக்கும்' வேலையிலும், எது நல்ல பள்ளிக்கூடம் என்பதைக் கண்டு பிடிப்பதிலும் ஈடுபட்டாள். பப்ளிஸிட்டி மானேஜர் சுந்தரம், லீலா லீவில் போகும்போதெல்லாம் அவளுக்குத் தற்காலிக வேலைகள் தந்தார். அடையாறு வீட்டில் இருந்து வாடகை வந்ததால், மோகினி சுந்தரத்தையோ அவர் கொடுத்த வேலையையோ சீரியஸாக எடுத்துக்கொள்ளவில்லை. 'அம்மா' என்று சொல்லும்மகளை செல்லமாக அடக்கி, அவளை 'மம்மி' என்று சொல்லவைக்கவே அவளுக்கு நேரம் சரியாக இருந்தது.

ஆனுல், குடும்ப நேரம் சரியாக இல்லை.

ஏகாம்பரத்தை விட்டு, சினிமா யோகம், கழற்றிக் கொண்டது. அங்கே, பல ஏகாம்பரங்கள் பற்பல ஜாதகக் கட்டுக்களோடு கிளம்பியதே காரணம். அதோடு, நமது ஏகாம்பரம் ஆயிரக் கணக்கில் பொய் சொன்னுல், புதிய ஏகாம்பரங்கள் லட்சக்கணக்கில் பொய் சொல்லத் துவங்கினதால் இந்த சின்னப் புளுகர்களின் பொய் எடுபடவில்லை. அதோடு, நூறுநாள் ஓடும் என்று அவர் கணித்த ஒரு படம் நூறு 'ஷோ' கூட ஓடாததால், முன்னூறு ரூபாயைத் தட்சணையாகக் கொடுத்த அந்த படத்தயாரிப்பாளர், இப்போது அந்தப் பணத்தைக் கடனுகக் கொடுத்ததாக வாதாடி, ஏகாம்பரத்தை புரட்டிக் கொண்டு இருக்கிருர்.

இந்த லட்சணத்தில், அடையாறு வீட்டில் குடியிருந்தவர்கள் நொடித்துப் போய், வாடகைப் பணம் கொடுப்

பதை நிறுத்திவிட்டார்கள். காலி பண்ணச் சொன்னல், கோர்ட்டுக்குக் கூப்பிட்டார்கள்.

மோகினி, தானும் அம்மாவும் அப்பாவும் பட்டினியாக இருக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதைப் பற்றிக் கூடக் கவலைப்படவில்லை. ஆனுல் கலா . . அவள், கண்ணுக்குக் கண்ணுக வளர்க்கும் கலாவிற்கு, கேட்டதை வாங்கிக் கொடுக்க முடியாத நிலைமை ஏற்பட்டதை, அவளால் தாங்க முடியவில்லை.

அந்த சமயம் பார்த்து, கலாவிற்கு நல்ல ஜுரம். லேசாக பிட்ஸ் வருவது போலவும் இருந்தது. 102 டிகிரியைத் தாண்டிவிட்டது. ஏகாம்பரம் ஒப்பாரியே வைக்கத் துவங்கி விட்டார். மோகினியால் அழ முடியவில்லை. கண்ணீரும் வரவில்லை. குழந்தைக்கு அருகே குத்துக் காலிட்டு உட்கார்ந்தாள். அம்மாக்காரி தட்டுத் தடுமாறி வந்து, ஈரத்துணிகளால் பேத்தியின் நெற்றியில் 'ஒத்தடம்' கொடுத்தாள்.

கலா லேசாகப் புலம்பத் துவங்கினுள். மோகினியால் தாள முடியவில்லை. டாக்டரிடம் போகப் பணமில்லை. கணவனைச் சபித்துக் கொண்டாள். ஆமை என்று எந்த நேரத்திலோ வாயைத் திறந்து, வார்த்தை பலிக்கும்படி செய்த அவன் அப்பாவை திட்டிக் கொண்டாள். காலி செய்யாமல் சண்டித்தனம் செய்யும் அடையாறு வாடகை வகையறுக்களைத் திட்டிக்கொண்டாள். அவர்களைக் காலி செய்துவைக்க ஆளில்லாமல் போன தன் அவல நிலைக்காகத் தன்னையே திட்டிக் கொண்டு, தலையிலும் அடித்துக்கொண்டாள்.

அந்தச் சமயத்தில் பப்ளிஸிட்டி மானேஜர் சுந்தரம் அங்கே வந்தார்.

எதையோ, சொல்ல வந்தவர், நிலைமையை புரிந்துகொண்டு, 'சீக்கிரமா . . குழந்தையை ஒரு டாக்டர் கிட்ட அழைச்சுப்போகலாம் . . நல்ல வேளை . . என் கார்லயே வந்தேன்' என்று அவர் சொல்லி முடிக்குமுன்னுலே, மோகினி குழந்தையைத் தூக்கி, தோளோடு சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

இருவரும் குழந்தையுடன் காரில் பறந்தார்கள். டாக்டர் குழந்தைக்கு ஒரு ஊசி போட்டு, மாத்திரைகளை

எழுதிக்கொடுத்தார். வழியில் சுந்தரம் மாத்திரைகளை வாங்கிக் கொண்டார். மோகினி தன் இயலாமையை நினைத்து, வெட்கித் தலைகுனிந்தாள். அதேசமயம், கலா லேசாகக் கண்ணை உருட்டி அவள் தோளைத் தட்டியதும், அவளுக்குத் தெம்பு பிறந்தது. சுந்தரத்தை நன்றியோடு பார்த்தாள்.

'டோண்ட் ஓர்ரி மோகினி..குழந்தைக்கு சரியாயிடும்..அப்புறம் ஒரு விஷயம்..நாளைக்கு அந்த லீலா சனியன் லீவுல போவுது..உனக்குத் தற்காலிகமாய் உத்தியோக உயர்வு தருகிறேன்."

'தேங்க் யு ஸார்...என்னால ஒங்களுக்குச் சிரமம்....'

'என்ன மோகினி நீ. நமக்குள்ள எதுக்கு பார்மாலிட்டி..நீ என்னை மூணாவது மனுஷன் மாதிரி பேசுவதுதான் பிடிக்கல. இன்னொரு விஷயம். அதிர்ச்சி அடையாதே. உன் ஹஸ்பெண்டை பம்பாய்ல பாத்தேன்.. சாராய பாட்டிலோட.. கிட்டத்தட்ட பொறுக்கியாயிட்டான்..என்னை எப்படியோ பாத்துட்டு 'டேய் நீதானடா என் ஒய்ப வச்சிக்கிட்டு இருக்கேன்'னு கேட்டான்.. நான் எப்படியோ சமாளிச்சிட்டு..தப்பினேன்.. பிக்பாக்கட் வேற அடிக்கிறானும்..நினைச்சுப் பார்க்கவே கஷ்டமாய் இருக்கு..'

மோகினியின், முகம்—முன்பு கல்போல் அடிக்கடி மாறும் அந்த அழகான முகம், இப்போது இரும்பு மாதிரி கொல்லன் உலையில் உருக்கப்பட்டு கெட்டியான இரும்பு மாதிரி இறுகியது.

வீட்டில் அவளை விட்டுவிட்டு விடைபெறப் போன சுந்தரம், அவள் தோளை லேசாகத் தட்டி, பின்பு பலமாக அழுத்தியபோது, அவள் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை.

ஏன் எதிர்ப்பு காட்ட வேண்டும்?

மகள் வாழ்வதற்காக நாம அழிஞ்சாலும் பரவாயில்ல..இனிமேல் எப்படி வேணுமுன்னாலும் வாழ்வேன்..நான் பழைய காதல் மோகினியல்ல.. மகளை வாழவைக்கப் போகிற கர்மயோக மோகினி.. அதுக்காக எந்த லெவலுக்கும் போகத் தயார். எந்த பாதையிலும் நடக்கத் தயார்..அந்த பாதையில குறுக்கிடும் எவரையும் அழிக்கத்தயார். பிறர் அழிவுலதான் நம் ஆக்கம் இருக்குன்னா அதுக்குத் தயார்... அதுக்காக... எதுக்கும் தயார்.



# ஏழு

மீண்டுமொரு முறை 'நியாயம்' சஞ்சிகையை வெளிக் கொணரும் பொறுப்பு மோகினி யிடம் வந்தது. அதை அவளிடம் சுந்தரம் கொடுத்திருந்தார். அனு பவமில்லாத மோகினி அந்த இதழைக் குட்டிச் சுவராக்கியிருந் தாள்.

ஜெனரல் மானேஜர் லீலாவைக் கூப்பிட்டனுப் பிக் கோபத்தில் குதித்தார். அட்டையில் வெளியாகியிருந்த அவருடைய படம் ஒரே கறுப்பாக இருந்தது. வாசகர்கள் அதைக் கேலி செய்து கடிதம் போட்டிருந்தார்கள்.

விரக்தியாக வந்த லீலாவைப் பார்த்ததும், வழக்கம்போல் அவர் புன்னகை செய்யவில்லை. அவள் 'குட் மார்னிங்'கிற்கு, இவர் 'நோ. .நோ. .பேட். .பேட்' என்றார்.

''கூப்பிட்டீங்களாமே ஸார். .''

''யெஸ். . இந்த இதழ் ஏன் இவ்வளவு மட்டமா இருக்கு? ஓங்களெல்லாம் ஒரே இடத்துல வைக்கறது தப்பு. இனிமே இதை மோகினிகிட்ட ஒப்ப டைக்கப் போறேன். .''

''ஸார். .இது மோகினியோட. .''

''நோ எக்ஸ்பிளனேஷன். நோ நொண்டிச் சாக்கு. .''

''ஸார். .நான் சொல்றதக் கொஞ்சம். . .''

''இதுக்கு மேல பேசினா ஐ வில் சஸ்பெண்ட் யூ. தப்பை ஒத்துக்காமல் கூடக்கூடப் பேசினா என்ன அர்த்தம்?''

''தப்புதான் ஸார். .''

''கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரமா. .ஓகே.. இனிமே நியாயத்தை மோகினி கவனிச்சுக்குவாள். . ஐ டோண்ட் வாண்ட் யுவர் ஆர்குமெண்ட். . பிளீஸ் கெட் அவுட். .ஐ ஸே யூ கெட்டவுட். .''

ஊமை கண்ட கனவு போல, மாப்பிள்ளைப் பையனைப் பற்றி அபிப்பிராயம் இருந்தாலும் அதைச் சொல்ல முடியாத ஆர்த்தடாக்ஸ் குடும்பத்தின் பெண்ணைப் போல, ஆபீஸர் ஒரு மடையன் என்று ஆதாரங்களோடு நிரூபிக்க முடியுமென்றாலும் அதை வெளியே சொல்ல

முடியாத பியூனைப்போல, லீலா வெளியே வந்தாள். ஜி.எம். 'பெர்ஸிகியூஷன் காம்ப்ளெக்ஸி'ல் தவிக்கும் மனிதர். அவள் என்ன சமாதானம் சொன்னாலும் எடுபடாது. அதோடு தன்னுடைய 'செக்ஷனில்' நடந்த தில்லுமுல்லுகளைச் சொல்லி, 'பாஸைக்' காட்டிக்கொடுக்க விரும்பாத செக்ஷனில் விசுவாசியாக இருக்க அவள் விரும்பினாள்.

அவள் போனதும் ஜெனரல் மானேஜர், ஸ்டெனோவைக் கூப்பிட்டு, மோகினிக்கு 'நியாயம்' வழங்கி, ஒரு நோட் டிக்டேட் செய்தார். ஆர்டர் வந்ததும், மோகினி டெலிபோனில் குதித்தாள். ''என் இஷ்யூவை ஜி. எம்.மே பாராட்டிட்டார் பாராட்டிட்டார்'' என்று 'குடும்ப நண்பர்'களுக்கு டெலிபோன் செய்தாள். பப்ளிஸிட்டி சுந்தரத்திற்கு கூல் டிரிங்க் வாங்கிக் கொடுத்துவிட்டு, ''என் இஷ்யூவுக்கு நீங்கதான் சார் காரணம்'' என்று கைகொடுத்தாள். சங்கருக்குக் கலர். (அதை அவன் லீலாவுக்குத் தெரியாமல் குடித்தான்.) பியூன்களுக்கு டீ. இவ்வளவும் செய்துவிட்டு லீலாவின் மேஜைமுன்னால் ஒரு 'சாக்லெட்டை' அதன் மேல் சுற்றிய ஜிகினா தாள் கிழியும்படி வன்முறையைப் பயன்படுத்தி வைத்தாள்.

இவள் வருவதற்கு முன்னதாகவே, ஜி. எம். பப்ளிஸிட்டி மானேஜரை வரவழைத்து, பழைய விரோதங்களுக்கு இதை சாக்காக வைத்து அவரை வசைபாடிய போது, சுந்தரம், ''நான் என்ன ஸார் பண்ணட்டும். . லீலா எக்ஸ்பீரியண்ஸ்ட் ஜர்னலிஸ்டாச்சேன்னு சூப்பர்வைஸ் பண்ணல ஸார். . அதோட நான் சொன்னாலும் அவள் கேக்கிறவளாய்த் தெரியல ஸார். .ஜி. எம். போட்டோவையாவது ஒழுங்கா போடும்மான்னு சொன்னா. . ஜி.எம். என்ன சூப்பர்மேனான்னு திரும்பிக் கேக்குறாள் ஸார். . அவளுக்கு சங்கர்கூடக் கொட்டம் அடிக்கவே டயம் சரியா இருக்கு ஸார். . .ஐ. .ஆம் ஸாரி ஸார். .என்னால அவளைக் கண்ட்ரோல் பண்ண முடியாது ஸார். மோகினின்னா நான் சொல்றதைக் கேட்பா ஸார். என்ன சொன்னாலும் சரிம்பாள் ஸார்'' என்று ஜி. எம்மிடம் சொல்லிவிட்டார். பழைய விரோதியான சுந்தரம், தன்னைப் புதிய முறையில் 'ஸார்' என்றதை 'ஸர்' பட்டமாக நினைத்து மகிழ்ந்து போய்விட்டார் ஜெனரல் மானேஜர். இடையில் நடந்த இந்த 'பாலிடிக்ஸ்' லீலாவுக்குத் தெரியாது. அவளுக்குக் குங்குமம் வைக்கவும், ஒழுங்காக நடந்து கொள்ளவும் மட்டுமே தெரியும்.

அவளுக்கு ஒன்றும் ஓடவில்லை. நீதிக்கு அடிக்கடி ஜுரம் வரும் என்பது அவளுக்குத் தெரியும். ஆனால் இப்படி ஓம்ரயடியாக அது செத்துவிடும் என்று அவள் நினைக்கவில்லை. விவரங்களைப் புரிந்து கொண்ட பல பியூன் கள் தங்களுக்குள்ளேயே மாநாடு கூட்டி முணுமுணுத்தார் கள். டெப்திரி ராமன் மட்டும், மோகினியும் சுந்தரமும் ஜோடியாக வெளியேறியதைப் பார்த்ததும் சிறிது இடை வெளி கொடுத்து, ஆடாமல் அசையாமல் பிணம் மாதிரி உட்கார்ந்திருந்த லீலாவைப் பார்த்துக் கொண்டே, "ஆபீ ஸருங்களுல. நூத்துக்கு தொண்ணுற்றொம்பது பேரு பொம் பிளப் பொறுக்கிங்க." என்று லேசாகத்தான் பேசினான். லீலா எதுவும் பேசுகிறாளா என்பதை அறிவதற்காக, போவது மாதிரி போக்குக் காட்டிவிட்டு, சட்டென்று உள்ளே வந்த மோகினியின் காதுகள் டெப்திரியின் வாசகங்களை நன்றாக வாங்கிக் கொண்டன.

டெப்திரி ராமன் இப்படிச் சொன்னதில் தப் பில்லைதான். ஆனால் இந்தத் தப்புக்குச் சம்பந்தமில்லாத இன்னொரு தப்பு செய்திருந்தான். அதாவது 'நியாயத்'தின் பழைய பிரதிகளைப் பழைய கடையில் விற்கும்போது கையுங் களவுமாகப் பிடிபட்டு பப்ளிஸிட்டி சுந்தரத்திடம் மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்திருந்தான். இந்தக் கடிதத்தை வைத்துக்கொண்டு, அவர் அவனை லாண்டிரி துணியை வாங்கிக் கொண்டு வரச் சொல்லுவார். ரேஷன் கடைக்குப் போகச் சொல்லுவார். ஒருநாள் மாவுகூட ஆட்டச் சொன் னாராம். மோகினி, ராமன் 'பொறுக்கித்தனமாய்' பேசி யதை சுந்தரத்திடம் சொல்ல, அவர் பழைய திருட்டை, மன்னிப்புக் கடிதத்தை ஆதாரமாகக் காட்டி, 'நோட்' போட, ராமன் 'அயோத்திக்கு' அப்பால் வனவாசியாக அனுப்பப்பட்டான். மூன்றே மூன்று நாளில் முடிந்துவிட்ட விவகாரம் அது. போன வருஷம் நடந்த திருட்டை, இந்த வருஷம் கிளப்பினால் அதற்கு என்ன அர்த்தம் என்று லேசா கச் சந்தேகப்பட்ட நிர்வாக அதிகாரியிடம் போய், மோகினி கொஞ்சம்தான் குழைந்தாள். அவர் 'காமென்ட்ஸ்' எழுதப்போனதை நிறுத்திக்கொண்டார். அவருக்கு மேலிருந்த நிர்வாக யந்திர டிரைவர்களுக்கு இந்தச் சந்தேகம் வரவே யில்லை.

லீலா தன்னைச் சுற்றி ஒரு வியூகம் வகுக்கப்படு வதைப் புரிந்து கொண்டாள். மோகினியைத் தேடிப் பல பெரிய அதிகாரிகள் வருவதும், அவள் கம்பெனியின்

'இரண்டாந்தர' அதிகாரிகள் அறையில் போய் அரட்டை அடிப்பதும், லீலாவுக்கு ஒரு 'சைகலாஜிகல் ஃபோபியா'வை ஏற்படுத்திவிட்டன. அலுவலகத்தில் படுகோழையாக மாறிப் போன சங்கரிடம், மாலையில் கடற்கரையில் ஒப்பாரி வைக்காத குறையாக அழுது தீர்த்தாள். அவன் தன்னிடமிருந்து பறிக்கப்பட்டு விடுவானோ என்று பயந்துபோய், "கல்யாணத்தை எப்போ வச்சிக்கலாம்" என்று கேட்டாள். அவனுக்கும் இப்போது இரவில் ஒரு துணை தேவை என்ற அளவுக்கு பயம் பிடித்துவிட்டது. பொருட்படுத்தக்கூடிய அளவிற்கு உறவுகாரர்கள் இல்லாதவன். அவனுக்கு அவனே மாப்பிள்ளையின் அப்பா, அம்மா, தோழன். எல்லாம் ஆக, ஆவணி மாதம் மூன்றுந்தேதி திருமணத்தை வைத்துக்கொள்ளலாம் என்று ஆடிப் பெருக்கன்று தீர்மானித்தார்கள். அந்த மகிழ்ச்சியில் திளைத்து லீலா, பெரியப்பா மகள் கல்யாணத்திற்காகப் பதினைந்து நாள் லீவில் ஊருக்குப் போய் விட்டாள்.

பப்ளிஸிட்டி மானேஜர் முகத்தில் ஈயாடாமல் உட்கார்ந்திருந்தார். மோகினியும் எதிரே ஆடாமல் உட்கார்ந்திருந்தாள். டைப்படித்த ஒரு காகிதத்தை ஒருவர் மாறி ஒருவர் படித்துக்கொண்டிருக்கும்போது சங்கர் 'புஷ் டோரைத்' தள்ளிக்கொண்டு உள்ளே வந்து "பிரிண்டர் ஸ்டிரைக் ஆர்டர் கேட்கிறார்" என்று சொன்னபோது, பப்ளிஸிட்டி சுந்தரம், "மிஸ்டர் சங்கர். ஹேவ் ஸம் மானர்ஸ். திறந்த வீட்டுக்குள்ள ஏதோ ஒண்ணு வாரது மாதிரி வந்தா என்ன அர்த்தம்?" என்று சொல்லி, கிட்டத்தட்ட அப்படி வந்த 'அது' மாதிரி அவரே 'வள்' ளென்று குரைத்தார். அங்கேயே, தன் தலையில் ஓங்கி அடித்துக் கொள்ளலாமா என்று நினைத்த சங்கர், பிறகு அது இன்டிஸிபிளினாய் எடுத்துக்கொள்ளப்படும் என்று நினைத்தவனாய், வெளியே வந்து தலையில் லேசாக அடித்துக் கொண்டான்.

உள்ளே இருந்த மோகினி, "என்ன ஸார் பண்ணலாம்?" என்றாள்.

"அதுதான் எனக்குப் புரியல. அடிஷனல் போஸ்ட் கொடுக்க மாட்டோமுன்னு வந்த பிறகு என்ன பண்ண முடியும்?" என்றார் சுந்தரம்.

"அப்படின்னா இவ்வளவு நாளும் ஸின்ஸியரா

ஓர்க் பண்ணி என்ன ஸார் பிரயோஜனம்? வரவர நாட்ல உழைப்புக்கு மதிப்பில்லாம போச்சு. தொடாதிங்க ஸார். .''

''நான் சொல்றதைக் கேளு மோகினி. இன்னும் உன் சர்வீஸ் முடிய ஒரு பதினேஞ்சு நாளு இருக்கு. அதுக்குள்ள ஏதாவது பண்ண முடியுமான்னு பாக்கலாம்.''

''விடுங்க ஸார் கையை. எனக்கு அழுகையா வருது.''

சுந்தரம், பற்றிய கையை விட்டார். மோகினி அழுது கொண்டே பேசினுள்.

''கட்டின புருஷனும் என்னைக் கையை விட்டுட்டான். நீங்களும் கையை விட்டுட்டிங்க. அனுதையா நிக்கிறேன். .இன்னும் ரெண்டு வாரத்துல...இன்னும் ரெண்டு வாரத்துல. . . .''

சுந்தரம் அவள் கண்களைத் துடைத்தார். தலை முடியைக் கோதிவிட்டார். அவளைக் கைவிடவில்லை. பிடித்துக்கொண்டார்.

''ஆல் ரைட். .நான். . நானே டெல்லிக்குப் போய் ஒரு போஸ்ட் வாங்கிட்டு வந்துடுறேன். ஒண்ணும் முடியாம போனு அஸிஸ்டென்ட் பப்ளிஸிட்டி ஆபீஸர் போஸ்ட் 'சரண்டர்' பண்ணிட்டு பப்ளிஸிட்டி எக்ஸிகியூட்டிவ் போஸ்ட் வாங்கிடுறேன். பெரிய போஸ்ட்டை சரண்டர் பண்ணுன்னு சரி. .சின்ன போஸ்ட் வாங்கிடலாம். இந்தா ஒனக்கு போன். .''

மோகினி சிரித்துக்கொண்டே டெலிபோனில் பேசினுள். மறுமுனையில் பேசியவர் புதியவர் என்ருலும், பெரிய பதவி வகிப்பவர். ஆகையால் அவரிடம் 'பழசு' மாதிரி பேசினுள். சுந்தரம் ஆச்சரியப்படுவதுபோல் புருவங்களை உயர்த்தியபோது, 'டோனை' கொஞ்சம் மாற்றிக் கொண்டாள். டெலிபோனை வைத்த வேகத்திலேயே, வெளியே வந்தாள். அங்கே இருந்தால் அவர் டெலிபோன் உரையாடலைப்பற்றி ஆயிரம் கேள்விகள் கேட்பார் என்று தெரிந்து, வேகமாக வெளியே வந்தாள்.

அஸிஸ்டென்ட் பப்ளிஸிட்டி மானேஜர் சங்கர், தலையில் கை வைத்துக் கொண்டு, அழுது ஓய்ந்தவன் போல் இருந்தான். மானேஜர் கொடுத்த அவமானத்தை, தன் மானம் ஒரு பக்கமும் கோழைத்தனம் ஒரு பக்கமுமாக அவனை அலைக்கழித்தபோது, மோகினி அவனருகே உள்ள நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, ''ஐ அம் ஸாரி ஸார்.

அவரு ஓங்களை அப்படிப் பேசியிருக்கக் கூடாது. . எனக்கு அழுகையே வந்துட்டுது. . மகா முரடனு இருக்காரே. . வாங்க காபி சாப்பிட்டு வரலாம்,'' என்றாள்.

சங்கர் அவளிடம் கொஞ்சம் இன்ட்டரஸ்ட் காட்டினான். பிறகு இருவரும் கேன்டீனுக்குப் போனார்கள்.

மோகினியின் அருகாமை தந்த ஆதரவாலும், கொஞ்ச நேரமானபடியாலும் மானேஜரின் சுடுசொல்லைப் பெரிதாக எடுக்காமல் அவன் இருந்தபோது, அவள், ''அந்த ஆள் கிடக்கார். .அது ஓங்கள நாயின்னு சொன்னதை பெரிசா எடுத்துக்காதிங்கோ,'' என்று ஞாபகப்படுத்தினாள். இப்போது அதை சங்கர் மிகப் பெரிய விஷயமாக எடுத்துக்கொண்டவன்போல் தலையில் கை வைத்துக் கொண்டே புலம்பினான்.

''எனக்கே ஒண்ணும் புரிய மாட்டேங்குது. . இப்ப ரெண்டு மூணு மாசமாத்தான் அவரு திட்ட ஆரம்பிச் சிருக்காரு. அடிக்கடி எருமைத் தலையன்கிறார். பொண்டாட்டி கிட்ட ஒத வாங்குவேங்குறார். நான் எழுதுற எல்லாத்தை யும் அடிச்சிட்டு திருப்பி எழுதச் சொல்றார். மனுஷனுக்கு ஹிஸ்டிரியா வந்திருக்குமோ?''

''விட்டுத் தள்ளுங்க ஸார். நம்ம டயம் சரி யில்லன்னா நல்லவங்களும் விரோதியாகிடுவாங்க. . ஆகாத காலத்துல. .கால்பட்டா குற்றம். . கைபட்டா குற்றம். . ஆமா. .நீங்க என்ன ராசி?''

''தனுசுன்னு தாத்தா சொல்வாரு. .''

''அதுதான் கேட்டேன். இப்ப ஓங்களுக்கு சனி எட்டாம் இடத்துல இருக்கு. .அஷ்டம சனி. .''

''அப்படின்னா.''

''அஷ்டமத்துல சனி இருந்ததுனாலத்தான் ஸ்ரீராமனே பட்டத்தை இழந்தார். . எதுக்கும் ஜாக்கிர தையா இருங்க கூடுமானவரை. ஒரு பெண்ணாலயேகூட ஓங்களுக்குக் கஷ்டம் வரலாம். .''

''ஆமாம். . இந்த ஜோஸிய சமாச்சாரம் ஓங் களுக்கு எப்படித் தெரியும்?''

''இந்த மெட்ராஸில நல்லா ஜோஸ்யம் தெரிஞ் சவங்கள விரல்விட்டு எண்ணினீங்கன்னா எங்கப்பா ஆள் காட்டி விரலு. .ஜாதக தோஷத்துக்குக் கழிப்புகூட செய் வாரு. .''

''ஐ ஸி. .மோகினி, ஓங்கப்பாவை நான் பாக்கணும். ஜாதகத்தைக் கொண்டு வரணும். எப்ப வரலாம்.''

"அப்பா கொஞ்சம் பிஸி. . பெங்களூர் கல் கத்தான்னு பறந்துகிட்டே இருப்பாரு. எதுக்கும் இன்னிக்கு ஙநட்ல வந்து பாருங்க. . அடையார்ல என்ஜினியர் பங்களா எதுன்னு குழந்ஸதகூட சொல்லும். ."

"தேங்க் யு. கண்டிப்பா வந்துடுறேன்."

"சரி காபி குடிங்க. .ஆறிடப் போவுது."

ஏற்கனவே காபி குடித்துவிட்ட மோகினி, அவன் காபி குடிக்கக் குனிந்தபோது பப்ளிஸிட்டி மானேஜரிடம் சிரித்துப் பேச சப்ஜெக்ட்' கிடைத்ததில் மகிழ்ந்துபோனுள். அவனே, "இன்னிக்கே அப்பாவை என் ஜாதகத்தை பாத்துச் சொல்லச் சொல்லுங்க" என்முன், கோப்பையின் விளிம்பைப் பற்றிய உதடுகளே விலக்கிக் கொண்டே.

மோகினி அவனுக்குத் தலேயாட்டிவிட்டு, கேன் டீன் கட்டிடச் சுவரைத் தற்செயலாகப் பார்த்தாள். அங்கே, சாம்பல்நிறம் பூத்த பெரிய பல்லி ஒன்று, ஒரு கரப்பான் பூச்சியின் பின்பக்கத்தைக் கௌவிக்கொண்டு, அதன் முன் பக்கத்தைச் சுவரில் அடித்தது. பூச்சி தப்பிப்ப தற்காகத் துள்ளும் வேகத்தில், பல்லிக்கு அதைக் கொல்லும் வேலே சுலபமாக முடிந்தது. கரப்பான் பூச்சியைப் பல்லி தின்று கொண்டிருந்ததை மோகினி ரசித்துக் கொண்டிருந்தாள்.




"வாங்கோ, வாங்கோ. நீங்கதானே மிஸ்டர் சங்கர்? வாங்கோ, ஏ பேபி. யாரு வந்திருக்குன்னு பாரு. இவ்வளவு நேரம்மு தெருவையே பாத்துப் பாத்து அவள் கண்ணு பூத்து போச்சு. .உட்காருங்கோ. பேபி வாம்மா."

மோகினியின் தந்தை ஏகாம்பரம் ஊஞ்சல் பலகையிலிருந்து எழுந்து, சங்கரை இரு கரங் கூப்பி வரவேற்றார்.

அவரால் 'பேபி' என்றழைக்கப்பட்ட மோகினி உள்ளேயிருந்து வந்தாள். அப்போதுதான் குளித்திருந்தாள். தலைமுடியைக் கோதி முடிந்திருந்தாள். "வாங்கோ" என்று வாயால் கேட்கவில்லையென்றாலும், அவள் தலையாட்டிய விதமும், சிரித்த தோரணையும் அவனைக் குடும்பத்தில் ஒருவனாக அங்கீகரிப்பது போல் தோன்றியது. சங்கர் அவளை மலைப்பாகப் பார்த்தான். அதே சமயம், அந்த வீட்டில் அதிக நேரம் இருக்க விரும்பாதவன்போல், தன் ஜாதகக் குறிப்பை நீட்டினான்.

ஏகாம்பரம் ஜாதகக் குறிப்பைத் துருவித் துருவிப் பார்த்தார். கால்மணிநேரம் குறிப்பையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, "பேபி. . நீ சொன்னது சரிதான். ." என்றார்.

மோகினி 'என்னப்பா சொன்னேன்' என்று கேட்கத் துவங்கி வாயைத் திறந்தபோது, சங்கர், "பேபி என்ன சொன்னாங்க?" என்றான். ஏகாம்பரம், அவனை விழுங்கி விடுவது போல பார்த்துவிட்டு, கடைசியில் வார்த்தைகளைக் கக்கினார்.

"பேபி, நீ சொன்னது மாதிரியே இவரு ஆயிரத்துல ஒரு பையன். கள்ளங்கபடமில்லாத மனுஷன். திருவோண நட்சத்திரத்துல பிறந்தவரு. கேப்பார் பேச்சைக் கேட்கிற புத்தி உண்டு. ஆனால் பெரியவங்க சகவாசத்தால் நல்ல நிலையை அடஞ்சிடுவாரு. தசாபுத்தி அப்டி."

சங்கரும் அவரை ஆர்வத்தோடு பார்த்தான். கேள்வி கேட்க நினைத்தான். அது தேவையில்லாமல் போய்விட்டது. அவரே கேள்வி கேட்டார்.

"நீங்க செல்ஃப் மேட் மேன். சின்ன வயசுல ரொம்ப கஷ்டப்பட்டிருக்கணும்.''

"ஆமாம்.''

"பணமுடை ஏற்படும். ஆனா அதை சாமர்த்தியமாய் சரிக்கட்டுவீங்க.''

"ஆமாம்.''

"குடும்பம், கௌரவம், ஆரோக்கியமெல்லாம் மோசமாவுறதுமாதிரி தோணினாலும் ஆகாது.''

"ஆமாம்.''

"ஆனால் ஒண்ணு. இன்னும் ரெண்டு மாசம் போகணும். ஒங்களுக்கு அஷ்டமத்தில் சனி. கேப்பார் பேச்சைக் கேக்கக்கூடாது. குறிப்பா பொம்பிளைங்க பேச்சைக் கேக்கவே கூடாது.''

மோகினி இடைமறித்தாள். சங்கர் அவள் பேச்சைக் கேட்டான்.

"மிஸ்டர் சங்கர், அப்பாவிடம் வேற எதயாவது கேக்கணுமா? கல்யாணம் காட்சி...''

"ஆமாங்க. மறந்தே போய்ட்டேன். நான் லீலாவைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன். இரண்டு மாதம் வரைக்கும் அதையும் தள்ளிப் போடணுமா?''

மோகினி அவனை ஏறிட்டுப் பார்த்தபோது, ஏகாம்பரமும் ஜாதகக் குறிப்பிலிருந்து தலையை நிமிர்த்தி விட்டு, அழுத்தந்திருத்தமாகப் பேசினார்.

"இப்டி கேட்டால் உடனே சொல்ல முடியாது. பொண்ணோட பிறந்த குறிப்பு இல்லன்னாலும் பெரியவளான குறிப்பு வேணும். ஒங்ககிட்ட இருக்கா?''

சங்கர் மென்று விழுங்கினான். பிறகு, "லீலா இப்ப ஊரில் இல்லே. இன்னும் நாலு நாளில வந்துடுவா. கேட்டு வாங்கித்தாரேன்,'' என்றான். மோகினி இப்போதும் இடைமறித்தாள்.

"அப்பா, ஒங்களுக்குப் பிறந்த தேதி சொன்னா போதாதா?''

அவர் "போதும்'' என்றார். சங்கர், "எனக்குத் தெரியாதே,'' என்றான். உடனே மோகினி உபகாரம் செய்யத் துடித்தவள்போல், "லீலாவோட சர்வீஸ் ரிஜிஸ்ட்டரைப் பார்த்தா தெரியுமே,'' என்றாள். அவள் அவசரம் அவனுக்குத் தெரிய நியாயமில்லே.

சங்கர் தந்தையையும், மகளையும் பார்த்தான். அவன் உட்கார்ந்திருந்த நாற்காலியின் பின்சட்டத்தைப்

பிடித்துக்கொண்டு, அவன் முதுகில் கைவிரல்களைப் பட்டும் படாமலும் 'தற்செயலாக' வைத்துக்கொண்டு, அவனை இடிக்கக்கூடிய தூரத்தில் நின்றுகொண்டு, கருணை சொட்டப் பார்த்த மோகினியைப் பார்த்ததும், அவனுக்குக் காலமான தன் அம்மாவின் ஞாபகம் வந்துவிட்டது. அவள் தாய்மையின் உருவமாய், அவனைக் குழந்தையைப் பார்ப்பதுபோல் பார்த்தாள். "முருகா, இந்த பிள்ளைக்கி நல்ல வழி காட்டப்பா" என்று தனக்குத்தானே சத்தமாக பேசிக்கொண்ட அந்தக் கிழவர், வெறுங் கிழவராகத் தெரியவில்லை. சாட்சாத் அவன் தாத்தாவே அங்கே இருந்ததுபோல் தோன்றியது.

"நாளைக்கே லீலாவோட பிறந்த தேதிய சொல்லிடுறேங்க. பொருத்தம் பார்த்துச் சொல்லணும்" என்றான்.

"நாளைக்கி நான் பிஸியாச்சே. டெப்டி செக்ரட்டரி ரமணனுக்கு பொண்ணு பார்க்கிறாங்க. நான் போகணுமே."

"அப்படியெல்லாம் சொல்லப்படாது. எப்டியாவது பாத்துடணும்"

"அப்பா, ஒங்களுக்கு என் 'காலீக்கை' விட ரமணன் உசத்தியாயிட்டானே?"

சிறிய மோகினி, சினந்தணிந்தவளாய், சங்கரைப் பார்த்து, "நீங்க இவருகிட்ட காட்டாதிங்க ஸார். இவரு சரியான கிராக்கு. எதையும் மறைத்துப் பேசத் தெரியாது. ஒண்ணு கிடக்க ஒண்ணு சொல்லிட்டா அப்புறம் லீலா துடிக்கிறத என்னால பார்க்க முடியாது. அப்பா, இவரோட பொருத்தத்தை நீங்க பார்க்கக் கூடாது. ஆமாம், சொல்லிட்டேன்," என்றாள்.

சங்கர் இப்போது மன்றாடினான்.

"அதெப்டி? ஆணைப்பட்ட துரியோதனனே சகாதேவங்கிட்ட ஜோஸ்யம் கேட்டபோது நான் கேட்கக் கூடாதா?"

"சும்மாருங்க சங்கர். இவரு எதையாவது உளறி லீலாவை நீங்க கட்டிக்க முடியாம போயிட்டா? லீலா பொறுத்துக்குவாளோ என்னமோ, என்னால முடியாதம்மா. நானும் பொண்ணுதான்."

சங்கர் அவளை சமாதானப்படுத்தினான்.

"மிஸ் மோகினி, நீங்க இன்னும் குழந்தையாவே இருக்கிங்களே. காதல், வாழ்க்கையிலே ஒரு பகுதி. வாழ்க்கை, காதல்லே ஒரு பகுதியில்லை. லீலாவைக் கட்டிக்

காம அவள் காதலை நினைச்சி வாழ்ற இன்பம் அவளைக் கட்டி அப்புறம் கலாட்டாவை நினைச்சு வாழ்ற துன்பத்தைவிட சுக மானது.''

''பாத்தியாளாப்பா? இவரு பேசினு நாம பதிலே பேச முடியாது. நான் சொன்னது ஞாபகமிருக்கா, ரொம்ப இன்டலிஜென்டா பேசுவார்.''

ஏகாம்பரம் மகள் சொல்வதை ஆமோதிப் பதுபோல் தலையை ஆட்டிவிட்டு, ''சங்கர்—லீலா. அருமை யான பெயர் பொருத்தம். எதுக்கும் நாளைக்கு சாயங் காலம் வாங்க. நல்லா பாத்து சொல்லிடுறேன்.''

''என்னப்பா ஒரேடியாய் பேசிக்கிட்டு... மிஸ்டர் சங்கர், இன்னைக்கி நீங்க நம்ம வீட்லதான் சாப்பிடணும்.''

''வேண்டாங்க.''

''என்ன் ஸார் நீங்க! பேபி எவ்வளவு ஆசை யோட கூப்புடுது. முகத்துல அறையுறதுமாதிரி வேண்டா முன்னு என்னர்த்தம்? பேபி, நீ எதுக்கும்மா கலங்குற?''

''விடுங்கப்பா அவரை. நம்ம வீட்ல அவரு சாப் பிட்டா கௌரவம் போயிடும்.''

மோகினி 'கோபப்பட்டுக்கொண்டு' உள்ளே போய்விட்டாள். அவளைச் சமாதானப்படுத்த அப்பாக் காரர் போனார். அவர்கள் இருவரையும், சாப்பிட்டு சமா தானப்படுத்த, சங்கரும் பின்னாலேயே போனான்.

சங்கர் மறுநாள் சாயங்காலம் வரவில்லை. காலையிலேயே வந்தான். லீலாவின் பிறந்த தேதியையும், மாத வருட விவரங்களையும் சொன்னான். மோகினியும் ஜடையைத் தோள் வழியாக மார்பில் தொங்கவிட்டுக் கொண்டு அதைப் பின்னிக்கொண்டிருந்தாள். பிறகு ஜல் ஜல் சலங்கையுடன், சந்தன நிறச் செருப்புடன், அவள் மோகினி மாதிரியே அப்பாவின் அருகிலும், அவன் அருகிலும் மாறிமாறி நின்றுகொண்டும், நகர்ந்து கொண்டும் இருந்தாள்.

ஏகாம்பரம் சிறிதுநேரம் குறிப்பைப் பார்த்துவிட்டு குடி முழுகிப் போவதுபோல் தலையில் கைவைத்தார். ''முருகா! அப்பா வாயில நல்ல வாக்கு வரணும்'' என்று மோகினி சங்கருக்குக் கேட்கும்படியாகச் சொல்லிக்கொண்டு, கன்னத்தில் போட்டுக்கொண்டாள். சங்கரால் பொறுக்க முடியவில்லை.

''சும்மா சொல்லுங்க ஸார்.''

''என் வாயால எப்டிங்க சொல்றது?''

''பரவாயில்ல ஸார். என்னால எதையும் தாங்கிக்க முடியும்.''

''லீலாவுக்கு களத்திர ஸ்தானம் சரியில்ல.''

''அப்டின்னு?''

''புருஷனோட வாழ்ற பாக்கியம் இல்லே. அவள் இரண்டாந்தாரமா வாழ்க்கைப்பட்டாதான் புருஷனும் உருப்படுவான். அவளும் உருப்படுவாள். ஏற்கெனவே ஒங்களுக்கு அஷ்ட மத்தில சனி.''

மோகினி பரபரப்பானள். துடியாய்த் துடித்துத் தவியாய்த் தவித்தாள்.

''என்னப்பா நீங்க, தோஷம் கீஷம் கழிச்சா சரியாயிடாதா. இது ஒரு பொண்ணோட பிரச்னே, யோசிக்காம பேசாதிங்க.''

''நான் நாலேயும் யோசிச்சிட்டுதான் சொல்றேன். மனுஷன் உத்தியோகத்துல பொய் சொல்லலாம். வியாபாரத்தில் பொய் சொல்லலாம். ஆனல் ஜாதகத்தில பொய் சொல்லப்படாது. சொன்ன வாயில கறையான் அரிக்கும். எனக்கும் இவரு மனசுல நினேச்சவளேப் பண்ணிக்கணுமுன்னுதான் ஆசை. அதுக்காக பொய் சொல்லி இவரு அவளேப் பண்ணி அப்புறம் துள்ளத்துடிக்க செத்துட்டா, அந்த பழிபாவம் விடுமா? இல்ல விடுமான்னேன். இல்ல, நீதான் என்னே இந்த வீட்ல இருக்க விடுவியா?''

சங்கரால் எதுவுமே பேச முடியவில்லே. பித்துப் பிடித்தவன்போல், அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். தேனிலவுக்குப் புறப்படும் வேளேயில், மணமகள் விபத்துக்காளாகும் கோரக்காட்சியைப் பார்க்கும் மணமகன் போல் துடித்துப்போனன். நினேத்துப் பார்க்கவே முடியாதது, நிதர்சனமாகிவிடுவதுபோல் தோன்றியதால் அவன் அந்த நிதர்சன நிலேயிலிருந்து மாறுபட்டவன்போல், ஆகாயத்தில் தலேகீழாக மிதந்து கொண்டிருப்பவன் போல் இருந்தான். திறந்திருந்த கண்களே இருள் மூடுவதுபோல் தோன்றியது. அவன் முன்னல் இருந்த இருவரும் நிழல்கள் போலவும், சில சமயம் இரும்பு யந்திரம் போலவும் தோன்றினர்.

மோகினிக்கும் அழுகை வந்தது. கண்களேத் துடைத்துக்கொண்டாள். ''பாவம் லீலா ... பாவம் லீலா...'' என்று வாய் முணுமுணுத்தது.

''என்னப்பா, நீங்க சுத்த மோசம். மிஸ்டர் சங்

கர், இவரு சொல்றது தப்பாக்கூட இருக்கலாம். எதுக்கும்..இன்னொருவர் கிட்ட காண்பிங்க. சும்மா கிடங்கப்பா, ஒங்க வாயில விழுந்த யாரு உருப்பட்டா?... இப்டித்தான் கணேஷன் சுந்தரியைக் கட்டினு கேன்ஸர் வருமுன்னிங்க. அவன் அவளைக் கட்டி கடைசியில கேன்ஸர் கட்டியில் செத்துப்போனான். இனிமே யாரையும் நான் இங்கே கூட்டிக்கிட்டு வரப்போவதில்ல.''

''என்ன பேபி. நான் கெட்டதை சொல்றதா ஏன் எடுத்துக்கிற? உண்மை கசப்பா இருந்தாலும் சொல்லவேண்டாமோ? ஜோதிடமுன்னு சோர்ந்து போகப் போறவனை திடப்படுத்துறதுன்னு அர்த்தம். நான் நல்லத காட்டி கெட்டத விடச் சொல்றேன். இவரைப் பாரேன். இன்னும் ரெண்டு வருடத்துல கார் வாங்கப்போறார். பங்களா கட்டப் போறார். தமிழ்நாடு முழுவதும் பிஸினஸ் மேக்னட் யாருன்னு சங்கர்னு சொல்லப்போவுது. இது நடக்கத்தான் போவுது. இவ்ளவு அருமையான ஜாதகன் பத்துப் பொருத்தத்துல ஒரு பொருத்தங்கூட இல்லாத ஒரு பொண்ணைக் கட்டுறதுனால அழிஞ்சி போயிடுவார் என்கிற உண்மையை சொல்லாட்டா நான் அழிஞ்சி போயிடுவேன். ஜாதகம் நெருப்பும்மா. அதுகிட்ட விளையாடக் கூடாது. மகான்கள், தரிசனம் பண்ண வந்தவங்கள்ல கிறுக்கன் மாதிரி தற்செயலா வேடிக்கை பார்க்க வந்தவனைப் பிடிச்சு இழுத்து திருநீறு பூசுவாங்க. பக்திமான்களைக்கூட கண்டுக்க மாட்டாங்க. ஏன் தெரியுமா?''

''ஏன்?...''

''அந்தக் கிறுக்கன் பூர்வ ஜென்மத்துல புண்ணியம் செய்து அந்தப் புண்ணியம் இந்த ஜென்மத்தில அவருக்கு வராதபடி ஏதோ ஒண்ணு தடயா இருக்கும். அந்தத் தடையை உடைக்க வேண்டியது மகான்களோட கடமை. இதுமாதிரி இவரு பூர்வ ஜென்மத்தில செய்த புண்ணியம் சனி முடிஞ்சதும் வரணும். அதுக்குத் தடையா இருப்பதை உடைக்க முடியாவிட்டாலும் உருட்டவாவது செய்யணுமில்ல?''

மோகினி சமாதானப்படாமல், கோபமாகப் பேசினாள். கார்வாங்கப் போகும் சங்கருக்கும் கொஞ்சம் தெம்பு வந்தது. மோகினி தனக்காக அப்பாவைத் திட்டுவதை, தன் பொருட்டு அந்த வீட்டில் குழப்பம் நடப்பதை சங்கர் விரும்பவில்லை. ''வாரேங்க'' என்று சொல்லிவிட்டு,

மேற்கொண்டு பேசாமல் எழுந்து, வெளியேறினான். அவனை அந்தக் கோலத்தில் தனியாக விட முடியுமா? அந்தப் பழிபாவம் வேறயா? மோகினி அவனைத் தனியாக விடாமல், பஸ் நிலையம் வரைக்கும் பக்கத்திலேயே தோளுக்குத் தோளாகத் துணையாக நடந்தாள்.

ஒரு வாரம் ஓடியது.

ஊரிலிருந்து திரும்பி வந்த லீலா சங்கரை நேருக்கு நேர் பார்க்கவே நாணப்பட்டாள். கல்யாணப் பெண்ணாயிற்றே. வெட்கம் பிடுங்கித் தின்னாதா! வீட்டில் எவ்வளவு அமர்க்களம்! அம்மாவும் அப்பாவும் அத்தை மகனைக் கட்ட வேண்டும் என்று சொல்ல, இவள் ''சங்கர் தான் எனக்கு அத்தைமகன். வேறு யாரையும் ஏறெடுத்துப் பார்க்க மாட்டேன்,'' என்று சொல்லிவிட்டாள்.

ஆனால் சங்கர் அவளைப் பார்த்தும் பாராதவன் போல இருந்தான். அவள் காத்திருப்பாள் என்று தெரிந்தும் அவன் கடற்கரைக்குப் போகவில்லை. மறு நாள், எள்ளுங்கொள்ளுமாய் நின்ற லீலாவை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. லீலாவுக்கு ஆச்சரியமாகவும், அதிர்ச்சியாகவும் இருந்தது. தனியாகப் பேச சந்தர்ப்பம் கொடுக்காமலே, மானேஜரிடம் போய்விடுவான். அலுவலகம் முடிவதற்குக் கால் மணி நேரத்திற்கு முன்னதாகவே வெளியே போய் விடுவான்.

லீலாவுக்கு அன்பு ஆத்திரமாகியது. ஒருநாள் வழக்கம்போல் முன்னதாகப் போனவனின் பின்னாலேயே போனாள். ''சங்கர்!'' என்று உரக்க கத்தினாள். திரும்பிப் பார்த்தவனால் ஓட முடியவில்லை. எதிரே ஆட்கள். வேறு வழியில்லாமல், அவளுடன் புல்வெளியில் ஒதுங்கினான்.

''சங்கர், எனக்கும் சுயமரியாதை உண்டு. ஒங்களுக்குக் கல்யாணத்துல இஷ்டமில்லன்னா நான் வற்புறுத்தப் போறதில்ல. ஆனால் காரணம் தெரிஞ்சிக்கலாமா? ஏன் பேசமாட்டேங்கிறீங்க? பிளீஸ். பேசுங்க.''

''லீலா, நினைக்கிறது நடக்காம போகையில எவ்வளவு வருத்தமாய் இருக்கு தெரியுமா? சந்தர்ப்பம் செய்த சதியில் நான்...நான்...''

"வசனம் பேசவேண்டாம். விஷயத்த சொல்லுங்க."

"ஜாதகப் பொருத்தம் நமக்கு சாதகமா இல்லே."

"எனக்கு யார் ஜாதகம் பாத்தான்னு தெரியும். டெப்திரி சொன்னான். அவளைப்பற்றித் தெரிஞ்சிருந்தும் அவன் அப்பன் சொன்னதை நீங்க நம்பினீங்கன்னா அந்த ராட்சசி வலையில் விழுந்திட்டிங்கன்னு அர்த்தம்."

"லீலா, பிறத்தியார இப்டி பேசுறது எனக்குப் பிடிக்காத விஷயம்."

"அவள் பிறத்தியார் இல்ல. நான்தான்: கடைசியா ஒண்ணு கேக்குறேன். ஒங்களுக்குக் கல்யாணத்துக்கு சம்மதமா? இல்லியா?"

"ஒன்னக் கட்டிக்கிட்டு நான் கேன்ஸர்ல சாகணுமா?"

"கேட்ட கேள்விக்கு இதுதான் பதிலா?"

"நான் கேன்ஸர்ல சாவுறதவிட ஒனக்குக் கல்யாணம் பெரிசாயிட்டுதா.."

லீலா அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள். பின்னர் தன்னையும் பரிதாபமாகப் பார்த்துக்கொண்டாள். கேன்ஸர் யார் உருவில் இருக்கிறது என்று அவளுக்குப் புரிந்து விட்டது. அதை ஒழிக்கப் போகிறவள்போல் ஆவேசமாக ஓடினாள்.

மோகினி அப்போது டெலிபோனில் யாரிடமோ, "அதான் அதான். .ஹே. .ஹே. .ஹே. .ஹே. ." என்று அட்டகாசமாகச் சிரித்துக்கொண்டிருந்தவள், டெலிபோன் பட்டன்களை அமுக்கி, 'காலை' கட் செய்துவிட்டு, காளிமாதிரி தன்னைப் பார்த்து முறைத்துக்கொண்டு நின்ற லீலாவைப் பார்த்து, அசந்து போய்விட்டாள். அவள் கத்துவதற்கு முன்னதாக, அவள் கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறை. லீலாவைத் தடுக்க ஆளில்லயா என்று மோகினி திரும்பிப் பார்த்தபோது, பிடரியில் ஒரு அறை. எப்படியோ "அய்யய்யோ.. அய்யய்யோ" என்று அவள் கூச்சல் போட்டதும், பப்ளிஸிட்டி சுந்தரம் ஓடி வந்தார். லீலாவின் கையை முதல் முறையாகப் பிடித்துத் தள்ளிவிட்டார். பலதடவை பிடிக்கப்பட்ட மோகினியின் தோளைத் தொட்டு, அவளையும் தள்ளிவிட்டார். மோகினி, நிலை

குலைந்து நின்றாள். அழவும் முடியவில்லை. அழாமலும் இருக்க முடியவில்லை. சுந்தரத்தால் பொறுக்க முடியவில்லை.

''ஏய் லீலா, ஒனக்கு சஸ்பென்ஷன் வாங்கிக் கொடுக்கறேனா இல்லியான்னு பாரு!''

லீலா அந்த மனிதரைப் புழுவைவிடக் கேவலமாகப் பார்த்தாள்.

''சும்மா மிரட்டாதிங்க. ஒங்கள யோக்கியன்னு நினைச்சேன். நீங்க சந்தர்ப்பம் கிடைக்காததால யோக்கியனா இருந்திருக்கிற அயோக்கியன்னு இப்போ தெரிஞ்சிக்கிட்டேன். ஒங்க கிட்ட எனக்கென்ன பேச்சு? அடியே மோகினி, நீ வாழப்போன குடும்பத்த கலைச்சிட்டே. பரவாயில்ல. ஆனால் வாழ்ந்துகிட்டு இருக்கிற குடும்பத்த கலைச்சிடாதடி. தெய்வம் நின்னு கேக்குண்டி. ஒன்னயும் கடவுள் உலவ விட்டிருக்காருன்னா அதுலயும் ஒரு சூட்சுமம் இருக்குடி. ஒன்மூலம் எத்தன பொம்பிள பொறுக்கிப் பேர்வழிகள் பொறுப்பான உத்தியோகத்தில இருக்காங்கன்னு உலகத்துக்குக் காட்டத்தான் உன்னை வச்சிருக்காருடி. ஆனா இது நெடுநாள் நிக்காதடி. நீ உடம்ப வச்சி முன்னுக்கு வர நினைக்கிறே. நான் ஒழுக்கத்த வச்சி முன்னுக்கு வர நினைக்கிறவள். அறைக்குள்ள உடம்பக் காட்டி அம்பலத்துல திமிரைக் காட்டுறது ஒரு பிழைப்பா! ஆம்பிளைங்கள உடம்பைத் தொடவிட்டுட்டு அதுல கிடைக்குற உத்தியோகம் ஒரு உத்தியோகமா. காசுக்காக விபசாரத்தைச் செய்றவளை மன்னிச்சிடலாம். ஆனால் ஒன்னப்போல கெளரவத்துக்காக மானத்தை விக்றவளைக் கடவுள் மன்னிக்க மாட்டாருடி. தூ...''

மோகினி கன்னத்தில் விழுந்த லீலாவின் எச்சிலைத் துடைத்துக் கொண்டிருந்தபோது, அவள் வேகமாக வெளியேறினாள். இதற்குள் பெரிய கூட்டம் கூடிவிட்டது. அனைவருக்கும் லீலாமீது அனுதாபம்தான். அவள் மோகினி மீது துப்பும்போது தாங்களும் பங்கு கொடுக்க நினைத்தார்கள். என்றாலும், வயிற்றுக்குப் போராடும் அவர்கள், அலுவலக அதிகாரிகள் மத்தியில் 'துப்புக்கெட்டவர்களாக' காட்டிக்கொள்ள விரும்பவில்லை. சிலர் வெளியே ஓடிச் சென்று லீலாவிடம் ''பிரமாதம்! பிரமாதம்! இப்படித்தான் பண்ணணும்'' என்றார்கள். எதிரே சங்கர் அவளுக்கு வழி விடுவதுபோல் ஒதுங்கிக் கொண்டான்.

லீலா அந்த எறும்பு மனிதர்களைப் பார்த்துக் கொண்டே, தலைவிரி கோலமாகப் போய்விட்டாள். மூன்று

நாளில் லீலாவின் ராஜினுமா தபாலில் வந்தது. ஒரு மாதத்தில் மோகினி பப்ளிஸிட்டி எக்ஸிகியூட்டிவ் ஆகி விட்டாள். நடந்துபோன மாச்சரியங்களை நினைத்து சற்று தயங்கிய ஜெனரல் மானேஜர், மோகினி 'நியாய'த்தில் தன் படத்தை நியாயமான அளவுக்கு மேலேயே அட்டையில் போட்டு, 'புன்னகை சிந்தும் எங்கள் தலைவர்' என்று தலைப்பும் போட்டதில், சரியாகிவிட்டார். அவர் மடமடவென்று எழுதிய கடிதத்தாலும், டிரங்க்கால்களாலும், டெலெக்ஸ் செய்தியாலும், மோகினிக்கு லீலாவின் வேலை கிடைத்துவிட்டது

சங்கர் புதிய மோகினியின் ஆதரவில் பழைய லீலாவின் பிரிவுத் துயரைத் தாங்கிக்கொண்டான். ஆனால் நிரந்தரமான வேலை கிடைத்ததும், அவள் பழைய மோகினியானாள். அவனை உதாசீனப்படுத்தினாள். பப்ளிசிட்டி மானேஜரிடம் திட்டுக்கள் வாங்கிக் கொடுத்தாள். போதாக் குறைக்குப் பியூன்களும், மோகினி விரோதிகளான இதர பெண்களும் "லீலாவின் வாழ்க்கையைக் கெடுத்திட்டீங்களே" என்று அவனைக் குற்றஞ்சாட்டினார்கள்

"அத்தான், நீங்கள் செய்தது நியாயமா? சொல்லுங்கள் அத்தான் சொல்லுங்கள்" என்று லீலா தன்னிடம் கண்ணீர்விட்டுக் கதறுவாள் என்று எதிர்பார்த்த சங்கருக்கு, அவள் அப்படி வாதாடாதது மட்டுமில்லாமல், ஆளே அகப்படாததால் பெரிய அதிர்ச்சி.

சங்கர் கிட்டத்தட்டப் பைத்தியமாகிவிட்டான். நாற்காலியில் கண்ணிமைகளை இமைக்காமலே கால்மணி நேரம் உட்கார்ந்திருப்பான். பிறகு கண்களை மூடிக்கொண்டு இருப்பான். தானாகச் சிரிப்பான். தனக்குள்ளே திட்டிக் கொள்வான். அவசரமாக வருகின்ற 'டெலெக்ஸ் மெஸேஜுகளை' அப்படியே வைத்திருப்பான். மானேஜரும் அவனைத் திட்டுவதில்லை. உறைக்காதவனைத் திட்டித்தான் என்ன பிரயோசனம்?

விவகாரம், ஜெனரல் மானேஜர் வரைக்கும் போனது. ஒரு காலத்தில் சுறுசுறுப்பாக விளங்கிய அந்த இளைஞன், வெட்டப்போகிற கிடாமாதிரி, பரக்கப் பரக்க விழித்துக்கொண்டு பித்துப் பிடித்தவனாய் மாறியிருந்ததால் அவன்மீது நடவடிக்கை எடுக்க ஜி. எம்.முக்கு விருப்பமில்லை தான். ஆனால் "போங்க ஸார். ரெண்டு பேரு செய்யுற வேலையை நான் எப்படி செய்யறதாம்" என்று மோகினி தன்னிடம் பரிதாபமாகக் கெஞ்சுவதையும் அவரால் மிஞ்ச

முடியவில்லே. ''சங்கர் நடிக்கிறுன் ஸார். சாப்பிடத் தெரியுது, டிரஸ் பண்ணத் தெரியுது. வேல மட்டும் பார்க்க தெரியா தாக்கும். யாருக்கு பிராப்ளம் இல்லே? ஒங்களுக்கில்லேயா? எனக்கில்லேயா?'' என்று அவள் சொன்னபோது, அவர் யோசித்தார். ''இந்த போட்டோ பிளாக் சரியில்லே,'' என்று அவர் சொல்லும்போது, ''ஒங்களுக்கு என்னேத்தான் விரட்டத் தெரியும். ஆனுல் இந்த சங்கரை மட்டும் நீங்க கண்டுக்க மாட்டீங்க. பயம். பேரு மட்டும் ஜெனரல் மானேஜர்! போங்க.'' என்று சொல்லி அவர் தலேயை அவள் கோதி விட்டதும், ஜி. எம். மால் மேற்கொண்டு கண்டுக்காமல் இருக்க முடியவில்லே. தான் ஜி. எம் என்பதைக் காட்டத் துடித்தார். வார்னிங் மெமோவை அவள் கண் முன்னுலே டிக்டேட் செய்து அவள் கண் முன்னுலே கையெழுத்துப் போட்டு விட்டார்.

அதற்குள் எதிர்பாராத ஒன்று நடந்துவிட்டது.

ஜி. எம். மின் 'மெமோவைக்' கொடுக்கப்போன பியூன், சந்தேகம் ஏற்பட்டு சங்கரின் வீட்டுக்கதவைப் பலவந்தமாக திறந்து பார்த்தான்.

சங்கர் செத்துக் கிடந்தான்—தற்கொலே!

விஷயத்தைக் கேள்விப்பட்ட பப்ளிஸிட்டி மானேஜர் சுந்தரம், மோகினியிடம் சொல்லாமலே அவன் அறைக்கு ஓடினுர். ஆசாமி, தற்கொலேக்கான காரணத்தை எழுதி, அதில் தன் பெயர் இருந்தால் என்ன செய்வது என்ற பதறியவராய், அப்படி ஏதாவது காகிதம் இருந்தால் அதை அகற்ற வேண்டும் என்பதற்காக ஓடினுர். சிலர் அவர் படபடப்பை அன்பின் அடையாளமாகப் பாசத்தின் சின்னமாக பாவித்துக் கொண்டார்கள்.

மோகினி பேசவில்லே. அவளுக்குக் கொஞ்சம் உறுத்தல்தான். அவள் காதுபட ஊழியர்கள் 'பச்சையாக'ப் பேசிக்கொண்டு போவது அவளுக்கே கேட்டது. ''தூக்குப் போட்டு சாக வேண்டியவளே சாகாம இருக்கையில இவர் ஏன் செத்தார்?'' என்று சிலர் கூறுவது கேட்டது. சிறிது சத்தமாகப் பெசிய கிளார்க் குமாரை மட்டும் அவள் மனதுக்குள் குறித்துக் கொண்டாள்.

டெலிபோன் அடித்தது.

நடுங்கிய கைகளோடு அவள் டெலிபோனே எடுத்தபோது, ''அஸிஸ்டண்ட் பப்ளிஸிட்டி மானேஜர்

வேலை இனி உனக்குக் கிடைச்சிடும் போலிருக்கே!'' என்று ஏகாம்பரம் சந்தோஷமாகக் கத்தினார்.



## ஒன்பது

காலம் இருபதாண்டுகளைக் கழித்தது. அந்த இடைவெளி பாதிக்கப்பட்டவர்களுக்கு இருபது யுகங்களாகவும், பாதிப்பு கொடுத்தவளுக்கு இருபது நிமிடங்களாகவும், கழிந்தது. காலவீச்சும், மோகினி வீச்சும் கூட்டாக சேர்ந்து, பப்ளிஸிட்டி மானேஜர் சுந்தரத்தையும், பழைய ஜெனரல் மானேஜரையும் குப்பைகளைத் தள்ளுவது மாதிரி தள்ளிவிட்டது.

இன்றைய பப்ளிஸிட்டி மானேஜர் மோகினி, ஏர் கண்டிஷன் அறைக்குள் என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தாள்.

எதிரிகளே இல்லாததால் அவளுக்கு கடந்த ஓராண்டு காலமாக போரடித்துக் கொண்டிருந்தது. எதிர்ப்பாளர்கள் எதிரிகளாக முடியாது. வலுவான நிலையில் இருந்த அவளை யாரும் பகைத்துக் கொள்ளவில்லை. அதோடு, அவள் தயவில் வேலைக்குச் சேர்ந்த ஜால்ராக்களை ஒற்றர்களாக வைத்து, எதிர்ப்புச் சக்திகளை வேவு பார்த்து வருகிறாள். அவர்கள் 'எதிரிகளே இல்லை' என்று சொன்னபோது, இவள் கண்ணாடியில் முகம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பியூன் கொடுத்துவிட்டுப் போன காகிதத்தைப் பார்த்தாள். வனிதா பார்க்க வந்திருக்கிறாளாம். 'ஏண்டி. என்னைப் பார்த்ததும், விரு விருட்டுன்னு ஹேன்ட்பாக்கை ஆட்டிக்கிட்டு, திமிரா நடப்பியே? இப்ப என்னடி ஆச்சு? ஒன்ன மாதிரி எத்தன பேர எத்தன தடவ பார்த்திருப்பேன். முளைச்சு மூணு இல விடல. ஒன் திமிரை என்கிட்டேயே காட்டினேல்ல. பாரு, பாரு. .'

மோகினி உடனடியாக அவளைக் கூப்பிடவில்லை. அரைமணி நேரம் காக்க வைத்தாள். இன்னும் காக்க வைத்திருப்பாள். ஆனால் வெளியே வேலை இருந்தது. காலிங் பெல்லை அழுத்தினாள்.

ஒடுங்கிப் போய் மூலேயோடு மூலேயாக நின்று கொண்டு மேற்கொண்டு நடக்கலாமா கூடாதா என்று வனிதா தயங்கியபோது, "வா. .வனிதா. உட்கார்," என்முள் மோகினி.

"பரவாயில்ல. .நிக்கிறேன் மேடம். ."

மோகினி அவளேக் கட்டாயப்படுத்தவில்லே.

"என்ன விஷயம்? எப்டி இருக்கிற? அப்பா சௌக்கியமா? கல்யாணம் எப்போ? வில்லியம்ஸின் மகன் ராஜனே நீ கல்யாணம் பண்ணிக்கப் போறியாமே? ராஜன் நல்ல பையன். புளியமரம்தான் பிடிச்சிருக்கே, கங்ராசுலேஷன்."

"அது புளியமரம்தான் மேடம். அதுலதான் நான் தூக்குப் போட்டுச் சாகணும்."

வனிதாவால் கண்ணீரை அடக்க முடியவில்லே. தோள் மறைய மூடியிருந்த புடவை முனேயை எடுத்துத் துடைத்துக் கொண்டாள். அந்த இருபது வயதிலும் ஒரு கிழவிக்குரிய விரக்தியுடன் நின்று கொண்டிருந்தாள். கம்பியிலிருந்து எடுத்துப் போடப்பட்ட முல்லேக் கொடி போல, துவண்டுபோய் நின்முள். மோகினியை நிமிர்ந்து பார்த்தாள். மீண்டும் கண்ணீர் விட்டாள்.

மோகினி துடித்துப் போனுள்.

"அய்யய்யோ, ஏம்மா அழுவுற. . நானிருக்கேன். அழாதேம்மா. என்ன விஷயம்? விஷயத்த சொல்லு . நானிருக்கேன். அழாதே."

வனிதா அமைதியாகப் பேசினுள். ஆனுல் அழாமல் இருக்க முடியவில்லே. மோகினியும் அவசரப்படுத்தினுள்.

"அழாதம்மா, விஷயத்த சொல்லு. எனக்கும் கொஞ்சம் வெளில வேல இருக்கு."

வார்த்தைகளுக்கு இடையே வரும் கால் புள்ளிகள் போல் அவள் பேசியபோது, அழ வேண்டிய சந்தர்ப்பங்கள் பல வந்தன.

"நீங்கதான் என்னேக் கரை யேத்தணும். ராஜனேட அப்பா வில்லியம்ஸ் ஒங்களுக்கும் தெரிஞ்சவர் தானே. அவரு முதல்ல எங்க கல்யாணத்துக்குச் சம்மதிச்சாரு. வெளியூருக்கு 'கேம்ப்' போயிட்டு வரும் போதெல்லாம் எது வாங்கிக் கொண்டு வந்தாலும், ரெண்டு வாங்கிக் கொண்டு வருவார். ஒண்ணு அவரோட மகளுக்கு, இன்னென்று எனக்கு. 'நீ எனக்கு மகள்'னு சொல்லுவார். அப்படிச் சொன்னதன் அர்த்தம் இப்பதான் புரியுது. ராஜன் என்னேக் கட்டிக்கக் கூடாதாம். அவங்க ஜாதியில

எந்தப் பொண்ண வேணுமுன்னாலும் அவர் கட்டிக் கலாமாம். ஆனால், என்னை. . என்னை. .''

வனிதாவால் தன்னைக் கட்டுப்படுத்த முடிய வில்லை. விம்மல்கள் வெடிகளாக வந்தன. கீழே விழாமல் இருப்பதற்காக, நாற்காலி ஒன்றைப் பிடித்துக் கொண்டாள்.

மோகினியும், துடித்துப் போனாள்.

''அழாதேம்மா. அழாதேம்மா. எதுக்காக ராஜன் அப்பா இப்டி மனம் மாறிட்டார்? நம்ப முடிய லியே?''

''என் கேரக்டர்ல அவருக்கு சந்தேகமாம். அதோட வேற ஜாதியாம். எந்தக் குடிகெடுப்பாளோ, அவர் கிட்ட இல்லாததும் பொல்லாததுமா சொல்லிட்டாள். நான் ஒங்களத்தான் மலைபோல் நம்புறேன். உங் களுக்கு என்னைப் பத்தி தெரியும். நான் அப்டிப்பட்ட வளா? என்னை வேண்டாமுன்னு சொன்னாகூட பரவா யில்ல. என் கேரக்டர பத்தி சொன்னா. .என்ன மாதிரி அர்த்தம்? ஒங்களுக்கும் ஒரு பொண்ணு இருக்கு.''

''ராஜன் என்ன சொல்றான்? நல்ல பையனாச்சே. நம்பிக்கை துரோகம் பண்ணமாட்டானே. .''

''அவரு ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணிக்கலாம்னு சொல்றார். நான்தான் பொறுக்கும்படி சொல்லியிருக்கேன். அவங்க மாமி மனசு மாறும் வரைக்கும் காத்திருக்கலாமுன்னு சொல்லியிருக்கேன். நான் ஒங்களத்தான் மாமி நம்பியிருக் கேன்.''

''டோண்ட் ஒர்ரி. நீ என்னை நெக்ஸ்ட் வீக்ல வந்து பாரு.''

வனிதா போய்விட்டாள். மோகினி போனை எடுத்தாள்.

''ஹலோ. .மிஸ்டர் வில்லியம்ஸ்? குட் மார் னிங். என்ன? குரல் கரகரப்பா இருக்கா? ஆமாம். இப்ப ஒங்களுக்கு அப்டித்தான் தெரியும். நோ, நோ. சும்மா ஜோக்குக்குச் சொன்னேன். அதிருக்கட்டும். நம்ம ராஜன் வனிதாவை ரிஜிஸ்டர் கல்யாணம் பண்ணிக்கப் போறானாமே ஹா. .ஹா, ஹோ ஹோ ஹோ! நீங்க ஒங்க பையன் தலையில் தட்டி வைங்க. அந்தப் பெண் ரொம்ப மோசம். ராஜன் அவளுக்கு நாலாவது கை. ஆமாம். அதான், அதான். அப்புறம் ஒரு விஷயம். எங்க கலா எம். ஏ படிக்க மாட்டேங்கறா. . அது என்னவோ தெரியல. நீங்க சொல்லிப் பாருங்க. நான் சொல்லிப் பார்த்துட்டேன்.

ஏதாவது பதில் பேசினுத்தானே? என் முகத்தப் பார்த்தே பேச மாட்டேங்கரு. எனக்கே புரியமாட்டேங்குது. நான், அவள் மேல உயிரயே வைச்சிருக்கேன். ஒங்களுக்கே தெரியும். அவளைப் புரிஞ்சிக்கவே முடியல. வச்சிடட்டுமா?. . அந்த வனிதா விஷயம்...அதை வளர விடாதீங்க...''

மோகினி புன்னகை செய்து கொண்டாள். தன் எதிரிகளை எப்படியெல்லாம் ஒழித்திருக்கிறோம் என்பதை எண்ணி அவளுக்கே பெருமையாக இருந்தது...

அஸிஸ்டெண்ட் பப்ளிஸிட்டி மானேஜர் பதவி காலியானபோது கம்பெனி ஒரு போர்டை அமைத்து, இன்டர்வியூ மூலம் திறமையான ஒருவரை நியமிக்கத் தீர்மானித்தது. அந்த விஷயம் சுந்தரம் மூலம் மோகினிக்குத் தெரிந்தது. அந்தச் சமயம் பார்த்து, மானேஜிங் டைரெக்டர் கிர்தா சிங், சென்னைக்கு 'டூர்' வந்தார். அவர் வரப் போகிறுர் என்று மோகினியின் எதிரிகளுக்கும் தெரிந்தது. அவர்கள் வாயில்லாப் பூச்சிகள்தானே தவிர, கையில்லாப் பூச்சிகள் அல்ல. அவர் டில்லியிலிருந்து புறப்படுவதற்கு முன்பாக மொட்டைப் பெட்டிஷன்கள் பறந்தன. மோகினி தன் கவர்ச்சியை மூலதனமாக வைத்துப் பலரைக் கைக்குள் போட்டிருக்கிறுள் என்று ஆதாரங்களோடும், ஆதாரப்படுத்த முடியாத கையெழுத்துக்களுடனும், குவிந்த மொட்டை மனுக்களைப் பார்த்த கிர்தா சிங் தன் மோவாயைத் தடவிவிட்டுக் கொண்டார். சபார்டினேட் பெண்களையெல்லாம் காதலிகளாக நினைக்கிற டைப் அவர். சிரித்துக் கொண்டே வந்தார். அவர் வந்ததும் 'குட்மார்னிங்' போட்ட மோகினி, 'குட் நைட்' போடாமல் அவருடனேயே ஓரிரவைக் கழித்ததாகக் கேள்வி.

பப்ளிஸிட்டி சுந்தரத்திடம் மதுரையில் தன் பெரியம்மா மகள் இறந்து விட்டதாகச் சொல்லி மோகினி ஒரு வாரம் லீவு போட்டுப் போயிருந்தாள். அலுவலக விஷயமாக டில்லி போன சுந்தரம், கிர்தா சிங்கின் அறைக்குள் நுழைந்தபோது, மோகினி அவர் எதிரே சிரித்துக்கொண்டே இருப்பதைக் கண்ணுரக் கண்டு, வயிருர எரிந்தார். கிர்தா சிங் ''மிஸ்டர் சுந்தரம், கொஞ்சம் வெளில இருங்க'' என்று சொன்னுர். திரும்பிப் பார்த்த மோகினி திடுக்கிட்டாளே தவிர, சுந்தரத்திற்கு வணக்கம் சொல்லவில்லை—அவர் வணக்கம் சொல்லியும்.

மறுநாள் மோகினி அஸிஸ்டெண்ட் பப்ளிஸிட்டி ஆபீசராகவும் ஆனுள். சுந்தரத்திற்கு எதிரியாகவும்

மாறினாள். புதிய பொறுப்பில் சேர்ந்த ஆறு மாதத்தில், ஒரு பியூனை எதற்கோ விரட்டினாள். அவன் மதுரைக்கு டிரான்ஸ்பர் கேட்டுக் கிடைக்காமல் போன சமயம். சண்டை போட்டால்தான் டிரான்ஸ்பர் வரும் என்பதை உணர்ந்திருந்த அவன், ''என்னம்மா குதிக்கிற. ஒன் வண்டவாளத்தை தண்டவாளத்துல விடணுமா?'' என்றான். உடனே மோகினி கத்த, பியூன் திருப்பிக் கத்த. சத்தங்கேட்டு உள்ளேயிருந்த சுந்தரம் வெளியே வரும்போது, காரியத்துக்காகச் சண்டை போட நினைத்த பியூன் இப்போது சண்டையை மட்டுமே ஒரு காரியமாக நினைத்துக் கொண்டு, கிட்டத்தட்ட அவளை அடிக்கப் போய்விட்டான். அவன் அஞ்சாதவன். யூனியன் லீடர். ஆண்களை அடித்துப் பழகியவன். என்னதான் தனக்கு வேண்டாதவளாக இருந்தாலும், ஒரு ஆபீஸர் அதுவும் பெண் ஆபீஸர், பியூனிடம் அடிபடக் கூடாது என்று நினைத்த சுந்தரம், ''அவனுக்கு சரிசமமா நீ பேசலாமா?'' என்று சொல்லிவிட்டு, பழைய சகவாசதோஷத்தில் அவள் கையைப் பிடித்து,கொஞ்சம்—கொஞ்சம்தான்—தள்ளினார். மோகினிக்கு ஏற்கெனவே ஒரு சந்தேகம்—அவர் சொல்லித்தான் பியூன் சண்டைக்கு வருகிறான் என்று. ஆகையால் கத்தினாள். பயங்கரமாகக் கத்தினாள்.

''அய்யய்யோ! இந்த அநியாயத்தைக் கேட்க ஆளில்லையா? இவர் எப்படி என்னைத் தொடலாம்? பொண்ணுன்னா ஒங்களுக்கு இளக்காரமா? நான் என்ன ஒங்க பொண்டாட்டியா? ஒரு பொண்ணு வயித்துப் பொழப்பிற்காக வேலைக்கு வந்தால் அவளை என்ன வேணுமின்னாலும் பண்ணிடலாமுன்னு நினைச்சிட்டீங்களே. எதுக்குய்யா என்னைத் தொட்டே? அப்பா கூட என்னைத் தொட மாட்டார். நீ எப்டிய்யா தொடலாம்? கேக்க ஆளில்லங்கற தைரியந்தானே. யாருமே இல்லாத அனாதைங்கறதுக்காக கையைப் பிடிச்சி இழுக்கிறதா. ஒன்கிட்ட எப்டிய்யா நான் தனியா வேலை பார்க்க முடியும்? இதக் கேக்க யாருமே இல்லியா?''

''ஏனில்லே?'' என்று சொல்லிக் கொண்டே ஜி.எம். வந்து சேர்ந்தார்.

பப்ளிஸிட்டி சுந்தரத்திற்குக் கைகால் மட்டுமல்ல. வாயும் ஓடவில்லை. போதாக்குறைக்குக் கூட்டம் வேறு. எல்லோருக்கும் அவர்கள் முன்னாள் உறவுகள் தெரியும். ஆனால் யாரும் வாய் திறக்கவில்லை. பியூன் கூட ரெண்டு பேரில் யார் ஒழிந்தாலும் சரிதான் என்று நினைத்து வாளாவிருந்தான்.

மோகினி, தன்னை பியூனின் உதவியோடு சுந்தரம் பலவந்தமாகக் கெடுக்கப் பார்த்தார் என்று புகார் கொடுத்தாள். 'அவள் எனக்கே சொந்தம்' என்று நினைத்த ஜி. எம். அவள் புகாரை 'பார்வர்ட்' செய்தார். பப்ளிஸிட்டி சுந்தரத்தின் உத்தியோகப் பல்லைப் பிடுங்க வேண்டும் என்றும், இல்லையானால் அவர் தன்னோடு வேலை பார்க்கும் மோகினியை எந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்வார் என்று சொல்ல முடியாது என்றும், ஒரு கடிதத்தைப் புகாரோடு இணைத்தார்.

மோகினி தனக்கு நேர்ந்த அவமானத்தைச் சொல்லிச் சொல்லி அழுதுகொண்டிருந்தாள்.

அவள் மட்டுமா?

பப்ளிஸிட்டி சுந்தரமும் அழுதார். சஸ்பென்ஷனை எண்ணி அழுதார். ஒரு ராட்சசியை உருவாக்கி, தானும் ஒரு ராட்சசனாக மாறிவிட்டதற்காக அழுதார். பிறகு ஒரு புழுவாய்ப் போனதற்காக அழுதார். சங்கருக்கும் சேர்த்து அழுதார். பின்னர் அஸிஸ்டெண்ட் மானேஜராக 'ரிவர்ட்' செய்யப்பட்டு பம்பாய்க்குப் போனதற்காக அழுதார்.

அவர் அழட்டும். ஜெனரல் மானேஜராவது அழாமல் இருந்திருக்கலாம். அதுதான் இல்லை.

சுந்தரம் போனதும் மோகினியை ஏகபோக உரிமையோடு நினைத்த அவர், மோகினிக்குப் பல சலுகைகள் வழங்கினார். அவளுக்குத் துணி துவைத்துப் போட்ட பெண்களும், லாண்டிரித் துணியை வாங்கிக் கொண்டு வருபவர்களும் முறையே பியூன்களாகவும் கிளார்க்குகளாகவும் மாறினார்கள். அவளுடைய 'உயிர்' நண்பர்கள், அந்தக் கம்பெனி கடனுக்குக் கொடுத்த யந்திரங்களால், தொழிலதிபர்களாகக் கூட மாறினார்கள்.

ஒரு நாள்—

வேர்க்க விறுவிறுக்க ஜி. எம். மின் அறைக்குள் நுழைந்த மோகினி, "அப்பாப்பா. .என்ன வெயில்! பஸ்ஸைப் பிடிச்சு வரு முன்னெ போதும் போதுமுன்னு ஆயிட்டுது," என்றாள் ஜாக்கெட் துணிக்குள் ஊதிக்கொண்டே.

ஜி. எம். மனசு இளகிய மனசு.

"டாக்சில வர்ரதுதானே. ."

"எப்டி ஸார் முடியும் . .நீங்க வந்தா கம்பனி பணம் கொடுக்கும். நான் வந்தால் நானுல்ல கொடுக்கணும்."

"நான் சொந்தக் கார்லயே வந்துடுறேன். ஆபீஸ் கார் ரிப்பேர். ஒரு மாதம் வரைக்கும் டாக்சில வா. நான் வந்ததா வவுச்சர் போட்டுக்கலாம். எதுக்காக நீ பாவம் இப்படி கஷ்டப்படணும்."

மோகினி கஷ்டப்படவில்லை. தினம் டாக்சியில் வந்து வவுச்சர் கொடுத்தாள். மானேஜர் தான் வந்ததாகக் கையெழுத்துப் போட்டார். ஸ்கூட்டர் நம்பரையும், போலிஸ் வேன் நம்பரையும் டாக்ஸி நம்பர்களாக வவுச்சரில் காட்டிவிட்டு, அந்த நம்பர்களையும் தேதிகளையும் தன் டயரியில் குறித்துக் கொண்டு, அப்படிக் குறித்துக் கொள்ளும் போது, ஒரு கிராமியப் பாடலைப் பாடிக் கொள்வாள் மோகினி.

"துள்ளாதே துள்ளாதே ஆட்டுக்குட்டி—
என்கிட்ட இருக்குது சூரிக்கத்தி"

ஜி. எம். முக்கு அவள் மீது கொஞ்சம் அலுப்புத் தட்டியது. பல பெரிய இடத்து நண்பர்கள் அவளை அவர் பப்ளிக்காக கீப் பண்ணுவதைக் கண்டித்தார்கள். கல்யாண மான மகள்கள் ஏறக்குறைய அடிக்கிற அளவுக்குப் போய் விட்டார்கள். மனைவிக்காரி ஒருநாள் அலுவலகத்தில் வந்து அவரும் மோகினியும் பேசிக்கொண்டிருக்கும்போது, குறுக்கிட்டுத் திட்டினாள். ஆகையால் ஜி. எம். 'ஜாக்கிரதை யாக' காதல் செய்ய நினைத்தார். அதற்காக, பிறர் அவரை யோக்கியன் என்று சொல்ல வேண்டும் என்பதற் காக, சில சமயம் கடுமையாகப் பேசிவிட்டு, மோகினியைப் பார்த்து, தனிமையில் சிரித்துக்கொள்வார். 'முட்டாள்கள்! நான் ஒன்னைத் திட்டுறதா நிஜமாவே நினைக்கிறாங்க' என்று அவர் சிரிக்கும்போது, மோகினியும் அந்த முட்டாளை நினைத்துச் சிரித்துக்கொள்வாள்.

என்றாலும், அவளுக்குப் பல இடங்களிலிருந்து டெலிபோன் கால்கள் வருவதும், அவரே 'ஆபரேட்டராக' செயல்பட வேண்டியிருப்பதும் அவருக்குப் பிடிக்கவில்லை. மோகினியிடம் கொஞ்சம் வாலாட்டினார். அப்போது கம்பெனி யின் யந்திரம் ஒன்றைக் கடனுக்கு வாங்கி, சக்கைபோடு போட்ட மோகினியின் தோழர் ஒருவர், தவணைக் கடனை அடைக்காமல், 'போக்கு'க் காட்டிக்கொண்டிருந்தார். ஆத்திரப்பட்ட ஜி. எம். மோகினி சொல்லியும் கேளாமல் கோர்ட் மூலம் சம்பந்தப்பட்ட யந்திரத்தை 'அட்டாச்' செய்தார். "நீங்க கடனடைக்க வேண்டாம். நான் ரைட் ஆப் வாங்கித்தறேன், என்று அவர்களுக்கு வாக்குக் கொடுத்

திருந்த மோகினி, தான் சொல்லிக் கேளாத ஜி. எம்மை கிர்தா சிங்கைக் கொண்டு கேட்க வைத்தாள்.

ஆம். 'டாக்ஸி' நம்பர்கள், மொட்டைப் பெட்டி ஷன்களாக கிர்தாசிங்கிற்கு ஓடின. விவகாரம் பெரிதாகியது. ஜெனரல் மானேஜர், பப்ளிஸிட்டி மானேஜராக 'ரிவர்ட்' செய்யப்பட்டு, கல்கத்தாவிற்கு மாற்றப்பட்டார். இதற்கு மேல் விவகாரம் பெரிதாகாமல் போனதற்குக் காரணம், மோகினி அதற்குமேல் அதைப் பெரிதாக்க விரும்பவில்லை. ஒருவேளை அவளும் மாட்டிக்கொண்டால்!

அப்புறம், ராமசாமி என்ற பெயர் கொண்ட ஒருவர் ஜெனரல் மானேஜராக வந்தார். ஆசாமி நேர்மையானவர். ஒழுக்க சீலர். ஆனல் சமூக பிரக்ஞை இல்லாமல் குடும்ப பிரக்ஞையை மட்டுமே குறியாகக் கொண்டவர். இதனுல் பயந்தாங்கொள்ளியானவர். அவரின் நேர்மையில் மகிழ்ந்துபோன ஊழியர்கள், "மோகினி மோசமானவள். பலருக்கு உலை வைத்தவள்," என்று வரலாற்று ஆதாரங்களோடு சொன்னபோது, அவர்கள் நினைத்ததுபோலவே அவரும் 'சிவ சிவ' என்று சொல்லி முகத்தைச் சுழித்தார். அவர்கள் அவரை 'உஷாராக' இருக்கச் சொன்னார்கள். இருந்தார்.

மோகினி அவர் அறைக்குள் வந்தவுடனேயே, அந்த மேலதிகாரி எழுந்து நிற்பார். அவள் நீட்டிய இடத்திலெல்லாம் கையெழுத்துப் போட்டார். ஒரு சமயம் மட்டும் மறுத்துவிட்டார். அதற்காக, அவரை கிர்தாசிங்கிடம் சொல்லிக் கிளப்பலாமா என்று மோகினி யோசித்துக் கொண்டிருந்தபோது, அவளுடைய பாலிடிக்ஸ் பிடிக்காமல் ராமசாமி டில்லிக்கே உத்தியோகத்தை மாற்றிக்கொண்டு ஓடி விட்டார்.

இப்போது வந்திருக்கும் ஜெனரல் மானேஜர் ஆதிமூலம் சாது. பிறர் மனம் நோகப் பேசி அறியாதவர். 'நீங்க செய்தது தப்பு' என்பதற்குப் பதிலாக, 'நீங்க செய்தது கம்ப்ளீட்டா சரின்னு எனக்குத் தோணல' என்று தோன்றுவதை நாகரீகமாகச் சொல்வார் அவர். ஆனல் நோயாளி. பிறர் தவறு செய்தால், தன்னை வருத்திக்கொள்ளும் தியாகி.

ஆனல், அவர் நல்ல பையன் என்று கருதுகிற அஸிஸ்டண்ட் பப்ளிஸிட்டி மானேஜர் ரகுமணிக்கு, மெமோவுக்குமேல் மெமோவாக அவள் கொடுப்பது மட்டும் பிடிக்கவில்லை. ஒரு நாள் அவள் ஒரு ஃபைலோடு வந்து.

எதையோ காரணங்காட்டி, ரகுமணியை 'சஸ்பெண்ட்' செய்ய வேண்டும் என்றுள். முகத்தைப் பிராண்டும் ஈயைக் கூட மெதுவாகத் துரத்தும் ஆதிமூலம் ''ஐஸே ஐஸே'' என்று வாயில் மட்டும் அடித்துக்கொண்டால் பரவாயில்லே. அந்த ஃபைலே எடுத்து, கிழேயும் எறிந்துவிட்டு, தன் தலேயிலும் அடித்துக்கொண்டார்.

அவ்வளவுதான்.

ஆதிமூலத்திற்குப் பைத்தியம் என்றும், அதனுல் தான் தலேயில் அடிக்கடி அடித்துக்கொள்கிருர் என்றும், மோகினி தன் வேவுப்படை மூலம் ஒரு செய்தியைப் பரப்பிவிட்டாள். நண்பர்கள் அவரை 'டிரான்குலேசர்' சாப்பிடுங்கோ என்றுர்கள். ஒருவர் சைக்கியாட்ரிஸ்ட் ஒருவரை அவர் வீட்டுக்கே கூட்டிவந்தார். இப்போது ஆதிமூலம் தான் பைத்தியமில்லே என்பதை எப்படி நிரூபிக் கலாம் என்பதற்காகச் சிந்தித்துச் சிந்தித்து, பைத்தியம் பிடிக்கும் நிலேயிலேயே இருக்கிருர்.

இப்படி எத்தனே வெற்றிகள் மோகினிக்கு!

ஆனுல் அவளால் முழுமையாகத் திருப்திப்பட்டுக் கொள்ள முடியவில்லே. மகள், இந்த பதினெட்டு வயதில், வய துக்கேற்ற வளர்ச்சியுடனும், வளர்ச்சிக்கேற்ற பருவ மினுமினுப் புடனும், அந்த மினுமினுப்புக்கேற்ற திரட்சியுடனும், அழகு மொத்தமாக உருவெடுத்ததுபோல் இருப்பதில் அவளுக்குப் பெருமைதான். ஆனுல், அவள் அம்மாவை மதிப்பதாகத் தெரியவில்லே. விவரம் தெரியும் வயதுவரை, 'மம்மி மம்மி' என்று பூனேக்குட்டி மாதிரி தன்னேயே சுற்றி வந்தவள், விவரம் தெரியத் துவங்கிய வயதிலிருந்து விலகிப்போனதை நினேக்கையில், பெற்ற மனம் வெறுமையான பிரசவ வேதனேயால் துடித்தது.

இந்தக் கலாவுக்குப் பத்து வயதிருக்கும்போது, மோகினிக்கு அமெரிக்காவில் ஒரு வேலேக்கு வாய்ப்பு ஏற் பட்டது. பெற்ற மகளேப் பிரிந்திருக்க முடியாது என்பதற் காக ஆயிரக் கணக்கில் சம்பாதிக்கக் கூடிய அந்த வேலேயை மறுத்து விட்டாள். கலாவுக்கு, பன்னிரண்டு வயதான போது, 'மம்மி நானும் பிரபா மாதிரி கார்ல போகணும்' என்று ஒரே ஒரு தடவை சொன்னதுக்காக, மோகினி பலதடவை, ஜி. பி. எப். போட்டும், பலரிடம் கடன் வாங் கியும், இருக்கிற நகை நட்டுகளே விற்றும், அம்பாஸிடர் கார் ஒன்றை வாங்கினுள். பின்னுல் மகள் நகை நட்டுக ளுடன், கணவனேவிட ஒரு 'பிடி' அதிகமாக விளங்க

வேண்டும் என்பதற்காக, குருவி சேர்ப்பதுபோல் சேர்த்தும் சில கம்பெனிகளுடன் அண்டர்ஹேண்ட் டீலிங்ஸ் வைத்துக் கொண்டும், கிட்டத்தட்ட அறுபது சவரன் நகைகளைச் செய்து வைத்திருக்கிறாள். மகளை எப்படியும் ஒரு ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைக்கு கட்டிவிட வேண்டும் என்பது, மோகினியின் நெடுநாள் கனவு. 'ஒன் அந்தஸ்துக்கு ஐ. ஏ. எஸ் பையன்தான் மாப்பிள்ளையாய் வரணும்' என்று ஏகாம்பரம் எதேச்சையாக சொன்னதை சீரியஸாக எடுத்துக் கொண்டு, அந்த லட்சியத்திற்காகவே பலரிடமும் ரகசிய மான 'தலைக்குனிவுகளுக்கு' ஆளானவள். அதோடு பப்ளிஸிட்டி சுந்தரம், ஜெனரல் மானேஜர் போன்ற பலரைத் தீர்த்துக் கட்டியதற்கு அடிப்படைக் காரணம், மகள் நன்றாயிருக்க வேண்டும் என்ற அவளது தாய்மை உணர்வே.

ஆனால் கலா—

அம்மாவிடம் பேசுவதே இல்லை. உண்டு—இல்லை என்ற பதில்தான். அதுவும் தலையாட்டுமூலம். முன்பாவது பாட்டிமூலம் தூதனுப்புவாள். இப்போது பாட்டி செத்ததுடன், அந்த 'தூதும்' செத்துவிட்டது. மகள் கெட்டுப் போய்விடக்கூடாது என்பதற்காக, மோகினி அவளிடம் நேரடியாகவே 'ஒனக்கு ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை பார்த்திருக்கிறேன். ஒண்ணுகிடக்க ஒண்ணு பண்ணிடப்படாது' என்று சொன்னபோது, மகள்காரி 'நான் கெட்ட கேட்டுக்கு ஐ. ஏ. எஸ். ஹஸ்பெண்ட் வேண்டியதுதான்' என்று முகத்திலடித்ததுபோல் கூறினாள். 'ஒண்ணுகிடக்க ஒண்ணு பண்ணிட்டியாடி?' என்று அம்மாக்காரி கேட்டபோது, 'ஒன்னை மாதிரி என்ன நினைச்சியா' என்று பட்டென்று திருப்பிக் கேட்டாள். அதிலிருந்து, மோகினி பேச்சைக் குறைத்துக்கொண்டாள். பாசத்தைக் குறைக்க முடியவில்லை.

இன்னொரு கூத்து.

ஒரு வருடத்திற்கு முன்பு, அப்பாவைப் பெற்ற தாத்தாவின் படத்தை, எங்கேயோ கிடந்த ஒரு தகர டப்பாவுக்குள் இருந்து எடுத்த கலா, அந்தப் படத்தை 'என்லார்ஜ்' செய்து, கோல்டன் கலர் பிரேம் போட்டு, தன் அறையில் மாட்ட வேண்டும் என்று அடம் பிடித்தாள். மோகினி முதலில் மறுத்தாள். மகள்காரி சாப்பிட மறுத்தாள். கடைசியில் மோகினியே அந்த 'கர்மத்தை' என்லார்ஜ் செய்து, மகளின் அறையில் மாட்டினாள்.

பிறரை வளைத்துப் பிடிக்கும் தான், மகளுக்கு

வளைந்துபோவதை மோகினி சிலசமயம் தான் அடிப்படையில் நல்லவள் என்பதற்கு அத்தாட்சியாகவும் எடுத்துக் கொண்டாள். இருந்தாலும், எம். ஏ. வில் சேரச் சொன்னால் 'நான் கெட்ட கேட்டுக்கு...' என்கிறாள். 'நடந்து போகாதே. காரை எடுத்துக்கொண்டு போ' என்றாலும் 'நான் கெட்ட கேட்டுக்கு...' என்கிறாள். 'நகைகளை போட்டுக்க' என்றாலும் 'நான் கெட்ட கேட்டுக்கு.' இவள் என்ன கெட்டாள்? இவளுக்காகக் கெட்டது நான்தானே. இவள் போனவருஷம் மூன்றுநாள் கல்லூரி சார்பில் பிக்னிக் போன போது, துடித்துப்போனது நான்தானே. பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லுதான்.

மோகினி குழம்பிப் போனாள். போதாக் குறைக்கு, உடம்பெல்லாம் நமைச்சல். சொறிகிற இடத்தில் செதில் செதிலான கறுப்புப் படைகள். டாக்டரிடம் காட்ட வேண்டும். எங்கே காட்ட முடிகிறது. மகளைப்பற்றிய கவலையிலேயே உடம்பைப் பற்றின கவலை மறந்து விடுகிறதே!

மோகினியின் சிந்தனையோட்டத்தை, மேற்கொண்டு தடுக்கும்வகையில் டெலிபோன் மணி அடித்தது. டில்லியில் இருந்து ஒருவர்—பெரிய ஆபீஸர்—எஸ். டி. டியில் பேசினார். அவள் மகள் கலாவுக்கு அவள் கார்ப்பரேஷனிலேயே பப்ளிஸிட்டி எக்ஸிகியூட்டிவாக வேலை கிடைத்திருக்கிறதாம்.மோகினி எப்பொழுதோ சொல்லி வைத்திருந்ததுஇப்போது நடந்துள்ளது. ஆர்டர் வரப்போகிறதாம். அப்ளிகேஷனை ஆர்டர் வந்தவுடனேயே முன்தேதி போட்டு அனுப்பிடணுமாம்.

மோகினிக்கு கொஞ்சம் தெம்பு பிறந்தது. வேலையில் சேர்ந்து விட்டால் மகள் மனதில் மாறுதல் ஏற்படும், அதோடு மகளோடு பழகுவதற்கு நிறைய சந்தர்ப்பம் வரும். புரிந்து கொள்வாள். எல்லாம் புதிய டைரக்டரின் அருள்.

எப்படியும், அஸிஸ்டெண்ட் பப்ளிஸிட்டி ஆபீஸராக இருக்கும் இந்த ரகுமணியை 'காலி' செய்துவிட வேண்டும். இவனும் இவன் கிருதாவும்! இவன் இடத்தில் கலாவை வைக்க வேண்டும். அப்புறம் நாமே ராஜினமா செய்துவிட்டு அந்த 'பிளேஸில்' மகளை அமர்த்தவேண்டும். முடியுமா? ஏன் முடியாது?



# பத்து

கலா வேலையில் சேர்ந்த ஒரு வாரத்திலேயே 'புத்தி'யைக் காட்டிவிட்டாள். மகள் வேலையில் சீக்கிரம் தேர்ச்சி பெறவேண்டும் என்ற ஆசையில், 'கலா..டெலக்ஸ் மெஸேஜ்களை எடிட் பண்ணிட்டியா..சீக்கிரம் கொண்டு வா..' என்று உள்ளே ஏர்கண்டிஷன் அறையில் இருந்து குரல் கொடுத்தாள். அப்படிக் குரல் கொடுத்ததற்கு, மகள் இந்த 'சல்ட்ரி சம்மரில்' வேர்த்துக் கொட்டிக் கொண்டிருக்காமல், தனது 'குளுகுளு' அறைக்குள் வந்து இருக்கவேண்டும் என்பதும் ஒரு காரணம். மோகினி எதிர்பார்த்ததுபோல் நடக்கவில்லை. கலா வெளியே இருந்து கொண்டே குரல் கொடுத்தாள்.

'ஏஎம் டேபிள்ல வச்சிருக்கேன். மிஸ்டர் ரகுமணி ஆபீஸ் விஷயமா வெளிய போயிருக்கார். அவர் செக் பண்ணி அனுப்புவார்..'

'எனக்குத் தெரியும். நான் சொல்றேன். எடுத்துக்கிட்டு வா..'

'ஐ அம் ஸாரி மேடம்..எதுவுமே பிராப்பர் சேனல்ல வரணும்..'

மோகினி துடித்துப்போனுள். மகள் வராமல் போனதற்காக அல்ல. மேடமாமே..ஆபீஸர் என்கிற அந்தஸ்துக்காக அப்படி கூப்பிடுருளா அல்லது அந்தஸ்தில்லாத அம்மா என்கிறதுக்காக அப்படிக் கூப்பிடுகிருளா..

சிறிது பொருமிய மோகினி, பெற்ற மகள் வெயிலின் பிடிமானத்திலும் தான் மட்டும் ஏர்கண்டிஷன் அறையிலும் இருக்க மனமில்லாமல், ஏதோ ஒரு சாக்கில் டெலிபிரிண்டர் பக்கம் வந்து நின்று கொண்டாள்.

இன்னொரு நாள்.

கலா கொஞ்சம் தாமதமாக வந்தாள். அம்மாவின் காரில் அவள் வருவதில்லை. ஒரு முறை தாய்க்காரி காரில் ஏறும்படி சொன்னதுக்கு, 'நீ எங்கெல்லாமோ சுத்திட்டு வருவே. நம்மளால முடியாது' என்று முகத்தில் அடிக்காமல் அடித்தாள்.

ஆகையால், பஸ்ஸில் இடியாடுகளுக்கிடையே

தாமதமாக அலுவலகம் வந்தாள் கலா. உள்ளே அம்மா வின் அறைக்குள் ரகுமணி மன்றுடுவதையும், 'மேடம்' எகிறுவதையும் சத்தத்தால் உணர்ந்து, நிஜமாகவே ஒற் றுக் கேட்டாள். ரகுமணி பிச்சைக்காரன்போல் கெஞ்சிக் கொண்டிருந்தாள்.

'மேடம்..நான்..ரொம்ப,.ரொம்பக் கஷ்டப்பட்ட குடும்பத்துல இருந்து வந்தவன்..பலருடைய தயவுல.. டிரக் வண்டில உட்கார்ந்து..தெருவிளக்குல படிச்சு.. முன்னுக்கு வந்தவன்..யார் செய்த புண்ணியத்துலயோ யூ. பி. எஸ்ஸில் செலக்ஷனுகி இந்த வேலைக்கு வந்திருக் கேன்..இன்னும் புரபேஷன்கூட 'டெர்மினேட்' ஆகல.. நீங்க இதுவரைக்கும் பத்தொன்பது மெமோ கொடுத் திட்டிங்க..எனக்கு..வேலை போயிட்டா என் குடும்பமே தெருவுல நிக்கும்..தங்கைக்கு இப்பதான் கல்யாணம் ஆகப் போவுது..தயவுசெய்து கையால் வேணுமுன்னுலும் அடிச்சிடுங்க..ஆனுல் மெமோவால மட்டும் அடிச்சிடாதிங்க.. பிளீஸ் ஹேவ் மெர்ஸி..!'

'டோண்ட் டாக் நான்சென்ஸ். பத்துமணிக்கு ஆபீஸ். பத்தேகாலுக்கு வந்தா என்ன மீனிங்? நீ எக்ஸ்பிளனேஷன் எழுதித் கொடுத்துத்தான் ஆகணும்..'

'இருபதாவது தடவையா மெமோ வாங்குனு இருபத்தொண்ணுவது தடவை டிஸ்மிஸ்தான் வரும்.. மேடம்..தயவுசெய்து இரக்கங் காட்டுங்க..ஈவினிங்ல.. அதிக நேரம் வேலை பாத்திருக்கறது..ஒங்களுக்கே தெரியும்.'

'பிளீஸ் கம் வித் எக்ஸ்பிளனேஷன். டோன்ட் வேஸ்ட் மை டைம்.'

இறுதியாகச் சொன்னவள்போல் மோகினி, தலையைக் குனிந்து ஒரு ஃபைலை எடுத்தபோது 'எக்ஸ் கியூஸ் மீ மேடம்..' என்ற குரலைக் கேட்டுத் தலை நிமிர்ந் தாள். கலா, ரகுமணியின் அருகே நின்றுகொண்டு, 'நானும் லேட்டா வந்தேன். ஏஎம் வந்த பிறகுதான் வந்தேன். எனக்கும் மெமோ கொடுங்க' என்றுள்.

மோகினிக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. 'ஒனக்காகத் தானடி அவருக்கு மெமோ கொடுக்கிறேன்' என்று சொல்ல முடியவில்லை. 'ஐ ஸே..யூ போத் கெட் அவுட்!' என்று கத்தினுள். இருவரும் ஜோடியாக வெளி யேறியதைப் பார்த்து, அவள் வயிறு எரிந்தது. மேற் கொண்டும் ஏதாவது கத்தியிருப்பாள். அதற்குள் வாயில்

நமைச்சல். கீழுதட்டில் சன்னங் சுரேர் என்றிருந்த படை யில் வலி.

மாலையில் அலுவலகத்தை விட்டு மோகினி வெளியே வந்தபோது, ரகுமணியும் கலாவும் பஸ் நிலை யத்தில் நின்றிருந்தார்கள். காரை அங்கே நிறுத்தி, மனங் கேட்காமல் 'ஏறிக்கோ' என்று சொன்னபோது, கலா 'நோ. தேங்ஸ்..கொஞ்சம் வேல இருக்கு' என்றாள். என்ன வேலை.. அதுவும் ஒரு ஸோஷியல் ஸ்டேட்டஸ் இல்லாத இந்த ரகுமணிப் பயலோட..?

மாலையில் கறுவிக்கொண்டே போன மோகினி மறுநாள் செருமிக்கொண்டே தன் அறைக்குள் போனாள். வில்லியம்ஸின் மகன் ராஜனைக் காதலிக்கும் வனிதா எதையோ பேசுகிறாள்..ரகுமணியும்..கலாவும் அவளுக்கு அனுதாபத்தோடு காதுகளை கொடுத்துக் கொண்டிருந் தார்கள்.

வனிதா சுதாரித்துக்கொண்டு மோகினி கூப்பிடு முன்னாலே அவள் அறைக்குள் போனாள். 'மேடம்..' என்று அவள் பேசுவதற்கு முன்னதாகவே, 'ஐ அம் ஸாரி வனிதா.. மிஸ்டர் வில்லியம்ஸ் முடியாதுன்னுட்டார். ராஜனுக்கு வேற இடத்துல பெண் பார்த்தாச்சாம். ஐ அம்..ஸாரி..நீயும் அவன் ஐ.ஏ.எஸ். என்பதற்காக நச்சரிக்கப்படாது.. விரலுக்குத் தக்க வீக்கம் வேணும். ஓகே. ஐ அம் பிஸி..'' என்றாள்.

வனிதா மோகினியைச் சிறிது நேரம் வெறித்துப் பார்த்தாள். அந்த கண்களின் உஷ்ணம், 'மேடம்'த்தை சுட் டெரித்திருக்க வேண்டும். தலைகுனிந்து கொண்டாள். வனிதா வெளியேறி விட்டாள் என்பதைக் காலடிச் சத்தத்தால் உணர்ந்துகொண்ட மோகினி, போலீஸ் அதிகாரியான வில்லியம்ஸுக்கு டெலிபோன் செய்து, வனிதாவைப்பற்றி மீண்டும் இல்லாததும், பொல்லாததுமாக வத்தி வைத்த போது கலா, உள்ளே வந்தாள். அவள், டெலிபோன் உரை யாடலைக் கூர்ந்து கேட்டாள். மோகினி பரிபாஷையில் பேசி டெலிபோனை வைத்தபோது, ''யாருக்கும்மா.. டெலிபோன் பண்ணினே.. அங்கிள் வில்லியம்ஸ்ஸிற்கா?'' என்றாள்.

மோகினி புளகாங்கிதம் அடைந்தாள். இடை யில், அம்மா என்று சொல்லிவிட்டாளே மகள்! இன்னொரு தடவை அப்படி அழைக்க வேண்டும் போலிருந்தது.. கலாவும் குழைந்து பேசினாள்.

'அங்கிள் மகன் ராஜா..நேத்து பார்த்தேன். சப்–கலெக்டராக இருக்கானும்..நல்ல அழகா இருக்கான்..'

'அதுமட்டுமில்லடி. நீன்னு அவனுக்கு உயிரு..'

'அப்படியா..குட் நியூஸ்..அம்மா, நான் அங்கிள் வில்லியம்ஸிற்கு போன் பண்ணட்டுமா?'

'நீ திருந்திடுவேன்னு எனக்குத் தெரியும்..'

மோகினி டெலிபோனைச் சுழற்றப் போனுள். அதற்குள் இரண்டு புறங்கைகளிலும் நமைச்சல்..

கலா அம்மாவைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே டயலைச் சுழற்றினுள்.

'அங்கிளா..நான் கலா பேசுறேன்..யூ ஆர் கரெக்ட்.. காரணத்தோடுதான் டெலிபோன் செய்கிறேன்..மம்மி வனிதாவைப் பற்றி சொன்னது சுத்தப் பேத்தல்..வனிதா டீஸன்ட் கேர்ல். மம்மிக்கு என்னை ஒங்க பிள்ளைக்கு கொடுக்கணுமுன்னு ஆசை. அதனலதான் அப்படி பேசிட்டுது. அது ஒருக்காலும் நடக்காது..வனிதாவை கட்டிக்க ராஜனுக்கு கொடுத்து வச்சிருக்கணும்.'

கலா டெலிபோனை வைத்துவிட்டு, அம்மாவைப் பார்த்தாள். அவள் முகம் பேயறைந்ததுபோல் கிடந்தது.

மோகினி கத்தினுள்.

'ஒனக்காக வாழ்றவளை ஏண்டி கொல்லாம கொல்லுற..ஒன்னல உபகாரந்தான் இல்லே..உபத்திரமாவது இல்லாம இருக்கக் கூடாதா!'

'உபகாரம் இல்லேன்னு சொல்ல முடியாதம்மா.. நீ மட்டும் என் அம்மாவா இல்லாம இருந்திருந்தா வனிதா இந்நேரம் ஒன் கழுத்த நெறிச்சி..கொன்னுருப்பாள். என் முகத்துக்காக உன் முகத்த விட்டுட்டாள்..'

'ஏண்டி, தெரியாமத்தான் கேக்குறேன். நான் பெற்ற பொண்ணு ஒரு ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைக்கு வாழ்க்கைப் படணுமுன்னு நினைச்சுதான் நான் வனிதாவை 'கட்' பண்ணேன்.. இது புரிஞ்சும் நீ என்னை ஓட ஓட விரட்டுற என்னடி அர்த்தம்..'

'எனக்கு கல்யாணம் பண்ணிக்கத் தெரியும்..'

'எனக்கும் தெரியுண்டி.. உப்புக்குப் போருத ரகுமணிப்பயல நினைச்சிக்கிட்டு இருக்கிறே. இவ்வளவு நாளும் நீ நல்லா இருக்கறதுக்காக அவனைக் கெடுக்கப் போனேன்..இனிமேல் நீ கெட்டுப்போகக் கூடாதுங்றதுக்காகவே அவனை தீர்த்துக் கட்டப்போறேன்..'

'அதையும் பார்த்துடலாம்... நீ எனக்கு

நன்மை செய்யுறதா இருந்தா அவருக்குத் தீமை செய் யாதே. அப்புறம் ஒன் இஷ்டம்..

'கல்யாணம் ஆயிரங்காலத்துப் பயிருடி..'

'அதை ஒன் வாயால சொல்லாதம்மா..'

'ஏண்டி..நீ பேசுறது உனக்கே நல்லா இருக்கா?'

'நீ ஆயிரம் சொல்லு. நான் ராஜனைப் பண் ணிக்க முடியாது. அவரு ஒருவேளை எனக்கு அண்ணன் முறையா இருக்கலாம்.'

'நான்..உன் தாய்டி..'

'அதை ஏன் திருப்பித் திருப்பிச் சொல்றே..நீ சுமக்கும் போது மட்டும் கஷ்டப் பட்டிருப்பே. நானோ நீ சுமந்ததாலேயே இப்பவும் கஷ்டப்படுறேன்..'

'பச்சையாவே சொல்லேண்டி. நான் தாசி தான். மகளை வாழ வைக்கிறதுக்காக உடலை வித்த வள்தான். அதனாலதாண்டி சொல்றேன். ஒரு தாசிக்கு தாண்டி கற்போட மகிமை தெரியும். நீ ரகுமணியோட சுத்துறதை நிறுத்தித் தொலை. . பெத்த வயிறு எரிய விடாதடி. . நான் வாழ்றதே உனக்காகத்தான். நீ நல்லா வாழ்றத பார்க்கிறதுக்காகத்தாண்டி. . இது சத்தியமான வார்த்தை. நம்பு. .'

அம்மா சொல்வதை நம்புவது போல் கலா அவளை அனுதாபத்தோடு பார்த்தாள். பிறகு, தன் அழு கையை அடக்கிக் கொள்வதற்காக வெளியேறினாள். அதை உதாசீனமாகக் கருதிய மோகினி, திடீரென்று 'மேடம்' மோகினியானாள். எல்லாம் இந்த ரகுமணிப் பயலாலே. .நான் பெற்ற பொண்ணின் மனசிலே கலகத்தை பரப்பி ட்டான். . என் மகள் வாழணுமுன்னா. .அவனை அழிச் சாத்தான் முடியும். .

மோகினி ஆவேசம் வந்தவள் போல் டில்லிக்கு 'கால்' போட்டாள். எதிர் முனையில் கிடைத்த பதிலால் திருப்தியடைந்தாள். பேசிய வேகத்திலேயே ஸ்டெனோ வைக் கூப்பிட்டு, ஒரு 'கான்பிடன்ஷியல்' கடிதத்தை 'டிக் டேட்' செய்தாள். பிறகு, ஸ்டெனோவிடம் டில்லிக்கு ஒரு பிளேன் டிக்கட் ரிசர்வ் செய்யச் சொன்னாள்.

பத்து பதினைந்து நாட்கள் ஓடின.

ரகுமணி ஒரு கற்றை பேப்பர்களையே வெறித்

துப் பார்த்துக் கொண்டு, கன்னத்தில் கை வைத்தவாறு இருந்தான். மோகினி டில்லிக்குப் போயிருப்பதால் இந்த மாதிரி விவரத்தை அவன் எதிர்பார்த்ததுதான். இருந்தாலும் அவன் மீது 'சார்ஜ் ஷீட்' வந்ததும் அவன் கலங்கிப் போனான்.

'ஏன் ஒரு மாதிரி இருக்கிங்க. .' என்று கேட்டுக் கொண்டே கலா வந்தாள். அவன் கையில் இருந்த கடிதக் கற்றைகளைப் பிடுங்கிப் படித்தாள்.

'அட கடவுளே. என்குயரி நடக்கப் போவுதா?'

'என்னை. டிஸ்மிஸ் பண்ணணுமுன்னு முன்னால தீர்மானிச்சு பின்னால என்குயரி போட்டிருக்கிறாங்க. . உங்கம்மா லேசுப் பட்டவங்களா. .'

'டோண்ட் ஒர்ரி ரகு. . .எங்கம்மாவுக்குப் பட்டாத்தான் தெரியும். அந்த லெவலுக்குப் போகவேண்டாமுன்னு நினைச்சேன். முடியாது போலிருக்கு. .'

'எந்த லெவலுக்கு?'

'அது இப்போ உங்களுக்கு தெரிய வேண்டியதில்ல. உங்க உத்தியோகம் போகாது. அதுக்கு நானிருக்கேன். . . .''

'ஐ ம் ஸாரி கலா. அம்மாவா நானா என்கிற நிலைமை ஒனக்கு வந்திருக்க வேண்டாம். .'

'நோ நோ. அம்மாவா நீங்களா என்கிற நிலைமையா இருந்தால் நான் அம்மா கட்சிதான். . பெத்தவள விட நீங்க பெரிசில்ல. .ஆனால் இது அப்படி அல்ல. அதர்மமா தர்மமா என்ற நிலைமை. நான் தர்மத்தின் கட்சி. .ஆல் ரைட். கடவுள் விட்ட வழி. .'

ரகுமணி அவளை ஆச்சரியத்தோடு பார்த்தான். அந்த முகத்தைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு ஆறுதலாக இருந்தாலும், 'டிஸ்மிஸ்' பயத்தை அடியோடு டிஸ்மிஸ் செய்ய முடியவில்லை.

டில்லியில் இருந்து மோகினி திரும்பி விட்டாள். இன்னும் ஒரு மாதத்திற்குள் என்குயரி. கண் துடைப்புக்கள் முடிந்து விடும். ரகுமணி டிஸ்மிஸ் ஆவான். கலாவும், அவனை மறந்துவிடுவாள். அல்லது மறக்க வைக்க வேண்டும்.

வீட்டில் மகளை நேருக்கு நேர் பார்க்கக் கூச்சப் பட்ட மோகினி அவளைப் பார்க்காமலே அலுவலகம் வந்தாள். தான் இல்லாத இந்த எட்டு நாளில், மகளுக்கும் ரகு மணிக்கும் ஏதாவது 'ஏடா கூடமாய்' நடந்திருக்குமோ

என்று கூடப் பதறினாள். வாதத்தில் படுத்த படுக்கையாகக் கிடந்த ஏகாம்பரத்திடம் ஜாடையாகப் பேசிப் பார்த்தாள் ரகுமணி வந்தானா என்று. அவர் இல்லை என்று தலையாட்டியதும், நிம்மதி. பரம நிம்மதி.




மோகினி சரியாகப் பத்து மணிக்கு அலுவலகம் வந்தாள். ரகுமணியைக் காணவில்லை. உடனே ஸ்டெனோவிடம் ஒரு மெமோ அடிக்கச் சொல்லிவிட்டு, ஸ்டெனோக்காரி ஏதோ பேச வந்ததைப் பொருட்படுத்தாமல் தன் அறைக்குள் போனாள்.

அங்கே ஆஜானுபாகுவான ஒரு மீசைக்காரர் உட்கார்ந்திருந்தார். தான் வருமுன்னாலே மூன்றாவது மனிதர் உட்கார்ந்திருப்பது, அதுவும் தன்னைப் பார்த்த பிறகும் எழுந்திருக்காமல் இருப்பது அவளுக்கு பிடிக்கவில்லை.

“மிஸ்டர், நீங்க வெளிலேயே உட்கார்ந்திருக்கலாம்.”

வந்தவர் அசரவில்லை.

“என்ன பண்றது. உள்ள இருக்கறவங்கள வெளில நிறுத்துறதுக்காக நான் சமயத்துக்குத் தக்கபடி எங்க உட்காரணுமோ அங்க உட்காரணும். அது என்னோட கடமை. அதுக்காக சம்பளம் வேற கொடுக்கிறாங்க. நீங்கதானே மிஸ் மோகினி? ஒங்களுக்கு கலான்னு ஒரு பொண் இருக்குல்ல...”

மோகினி அவரை ஏற இறங்கப் பார்த்தாள். அவர் அவளை உற்றுப் பார்த்தார். பிறகு மடமடவென்று பேசினார்.

“மிஸ் மோகினி. நான் சிபிஐ இன்ஸ்பெக்டர். ஒங்க கார்ப்பரேஷன் நடத்துற ‘நியாயம்’ பத்திரிகை பிரிண்டர்கிட்ட நீங்க செகரட்டரியா இருக்கிற சபாவுக்கு பிளாக்குங்க செய்திருக்கீங்க. சாவனீர் அச்சடித்திருக்கீங்க, சபாகிட்ட இருந்து பணம் வாங்கியிருக்கீங்க, ஆனால் பிரிண்டர்கிட்ட கொடுக்கல...அதோட பிரிண்டர் கணக்குல

சாவனீரை பிரிண்ட் செய்றதாவோ பிளாக் செய்ததாவோ பேக்டரில விவரம் இல்ல. இது பத்து வருஷமா நடக்குது. பிரிண்டருக்கும் பத்து வருஷமா காண்ட்ராக்ட் கிடச்சிக்கிட்டு வருது. இரண்டாவது, குரோம்பேட்டையில அப்பா பேருக்கு ஒரு வீடு கட்டியிருக்கீங்க. அண்ணுநகர்ல அம்மா பேருக்கு ஒரு வீடு. ஒங்க மகள் கலாவுக்கு அறுபதாயிரம் ரூபாய்வரைக்கும் நகை போட்டிருக்கிங்க. இது டிஸ்பிரபோர்ஷனேட் இன்கம்... மூணுலட்சம் ரூபாய் முதலீடு செய்து நீங்க ஒரு சினிமாப் படம் வாங்கி எடுக்கிறதாயும் கேள்வி. ஒங்க கார்ப்பரேஷன் யந்திரங்கள நீங்களே இன்னொருவர் மூலம் வாங்கி அதிக லாபத்துக்கு விற்கிறதா ரிப்போர்ட் வந்திருக்கு. பிரிண்டர் வீட்டைச் சோதனை போட்டோம். நீங்க பிளாக் செய்றதுக்கு எழுதின லட்டருங்க கிடச்சுது. 'நியாயம்' பத்திரிகைக்காக கோட்டாவுல கிடச்ச நியூஸ்பிரிண்டை ஒங்க சாவனீருக்குப் பயன்படுத்தினதுக்கு பிரிண்டர் வீட்ல வச்சிருந்த கணக்கு விவரம் கிடச்சிருக்கு. நாளைக்கு சாஸ்திரி பவனுக்கு வாங்க. மேற்கொண்டு விசாரணை நடத்தணும்.''

மோகினி வெலவெலத்துப் போனுள். உடனே சமாளித்துக் கொண்டு குழைந்தாள். நாற்பத்தைந்து வயதில், இருபத்தைந்து வயது பெண்போல் அவள் குழைந்தது இன்ஸ்பெக்டருக்கு எரிச்சலைக் கொடுத்தது.

''ஒங்க பெயர் என்ன இன்ஸ்பெக்டர்?'' என்று குழைந்தாள் மோகினி.

''எங்களுக்குப் பெயர் முக்கியமல்ல. பெயர் பண்றவங்கள பிடிக்கிறதுதான் முக்கியம்.''

''ஆல் ரைட். ஒங்க எஸ். பி. யாரு? ஐவில் ஸ்பீக் டு ஹிம்.''

''இந்தா பாரும்மா. இன்ஸ்பெக்டர்கிட்ட எஸ்.பி யப்பற்றியும், எஸ்.பி. கிட்ட டி.ஜி. யைப் பற்றியும் பேசுறது பழைய டிரிக். ஒங்கள பல வருஷமா 'வாச்' பண்ணி இப்போதான் எவிடென்ஸ் கிடச்சிருக்கு. குற்றத்தை ஒப்புக் கொண்டால் டிபார்ட்மெண்ட்டுக்கு ரிப்போர்ட் பண்ணுவோம்... அவங்க லைட்டா தண்டனை கொடுப்பாங்க. வீணு இன்ஃப்ளுயன்ஸ் பண்ணப் பார்த்தால் ஒங்கள சஸ்பெண்ட் பண்ணச் சொல்லி எழுதுவோம். கோர்ட்ல வழக்குப் போடுவோம். அப்புறம் ஒங்க இஷ்டம். ஆல்ரைட். நாளைக்கி நீங்க காலையில பத்து மணிக்கு சாஸ்திரி பவனுக்கு ஆஜராகணும்.''

சி. பி. ஐ இன்ஸ்பெக்டர் போய்விட்டார்.

கலா உள்ளே வந்தாள். அம்மாவைப் பார்த்து நேரிடையாகவே கேட்டாள்.

'கெடுவார் கேடு நினைப்பார்னு சொல்றதன் அர்த்தத்தைப் புரிஞ்சிகிட்டியாம்மா? இப்ப எப்டி இருக்கு? இப்படித்தானே பிறத்தியாருக்கு இருந்திருக்கும். நினைச்சிப் பார்த்தியா? நல்ல வேளை. என்னால ரகுமணி தப்பினரு...'

'உன் வேலையாடி...'

'ஒன்னை ஒன் மகளைத் தவிர வேறு யாரால ஜெயிக்க முடியும்மா? அதுக்காக நீ பெருமைப்பட்டுக்கலாம். மானேஜர் சுந்தரம், லீலா, அப்பா, வனிதா எல்லாரும் இப்படித்தான் புழுங்கியிருப்பாங்க. இப்பவாவது புரியுதா?'

'இந்தச் சமயத்துல ஊர்க்கதையாடி பேசறே...'

'என்னை மன்னிச்சுடும்மா. ஒரு பொண்ணோட கதை குடும்பக் கதையாத்தான் இருக்கணும். இப்ப நான் சொல்றது உன் கதைதான். அது ஊர்க்கதையா போனதுக்கு நீதான் காரணம். ஒருத்திக்குக் குடும்ப ஸ்டேட்டஸ்தான் முக்கியமே தவிர, ஸோஷியல் ஸ்டேட்டஸ் முக்கியமல்ல. ஒன்னோட சோஷியல் ஸ்டேட்டஸ்ல என்னோட குடும்ப ஸ்டேட்டஸ் நாசமா போயிட்டு தம்மா...'

'நான் ஒன்னை சுமந்து பெத்தவடி...'

'நீ என்னை சுமந்து பெத்த பாவத்தை நான் இப்ப சுமந்துகிட்டு இருக்கேனே. சொல்லி வேறு காட்டணுமா? கல்யாண வீடுகளில் என்னோடு ஆசையா பேச வர பெண்ணுங்க நான் இன்னார் மகள்னு தெரிஞ்சதும் கிண்டலா பேசறத என்னால தாங்க முடியலம்மா...'

'ஆயிரம் நடக்கட்டும். அவ்வளவும் ஒனக்காகத் தான் நான் செய்தேன். இதை மறந்துடாதடி.'

'அத புரிஞ்சிக்கிட்டதாலதான் ஒன்கூட நான் இருக்கேன்.'

மோகினி முதல் தடவையாக உண்மையிலேயே அழுதாள். மகளின் கரத்தை, 'விட்டுவிடாதே' என்பது மாதிரியும், 'விடமாட்டேன்' என்பது மாதிரியும் பிடித்துக் கொண்டாள்.

பயந்தாங்கொள்ளியும் நீதி தவறுதவருமான ஜெனரல் மானேஜர் ஆதிமூலம், ஸி. பி. ஐ கேஸ் என்றதும் பயந்துவிட்டார். ஆழமான நீருக்குள் விழுந்த நீச்சல் தெரியாதவன், மீட்க வருபவனைப் பயத்தில்

பலமாகக் கட்டிக்கொள்வதுபோல், இவரும் தனக்கேற்பட்ட பயத்தில் எல்லோரையும் இறுக்கிப் பிடித்தார். எல்லா ரிக்கார்ட்களேயும் இன்ஸ்பெக்டரிடம் கொடுத்துவிட்டார். மற்றவர்களானுல் டிபார்ட்மெண்ட்டுக்குக் கெட்ட பெயர் வரக்கூடாது என்பதற்காக மழுப்பிப் பார்ப்பார்கள். இவரோ தனக்குக் கெட்ட பெயர் வரக்கூடாது என்பதற் காகவும், அதிகப்படியான பயத்தாலும், தினமும் ஸி.பி.ஐ இன்ஸ்பெக்டரின் நடவடிக்கைகளுக்கு நேர்முக வர்ணனே கொடுத்து, மேலதிகாரிகளுக்குக் கடிதம் எழுதினுர். இவ ருடைய நமைச்சல் தாங்க முடியாமல், மோகினியை மானேஜிங் டைரெக்டர் 'சஸ்பென்ட்' செய்தார்.

உத்தியோகத்தில் 'சஸ்பெண்டும்' உடல்நிலேயில் சஸ்பென்ஸுமாகத் தவித்த மோகினியைப் பார்க்க, அன்று அவளுடைய தோழி காமாட்சி வந்திருந்தாள். காமாட்சி பெர்ஸனல் மானேஜராக, அதே கார்ப்பரேஷனில் இருப்பவள். மோகினியால் ஆரம்பகாலத்தில் 'டிரெயினிங்' கொடுக்கப் பட்டு, அதனுல் இப்போது இந்த நாற்பத்தைந்து வயதிலும் கணவனிடம் 'சந்தேக உதைகளே' வாங்கிக் கொள்பவள்.

தோழியின் உடல்நிலேயைப் பார்த்த காமாட்சி, அவளே ஒரு லேடி டாக்டரிடம் கூட்டிக்கொண்டு போனுள். சென்னே நகரிலேயே பேர்பெற்ற ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட் அவள்.

மோகினியின் முகத்தை அழுத்தமாகப் பார்த்த லேடி டாக்டர் உஷா, சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு, "நான் அபார்ஷன் கேஸ் பார்க்கிறதில்லேயே," என்ருள்.

காமாட்சி திகைத்தாள்.

"என்ன டாக்டர். என்ன சொல்றீங்க? நான் நமச்சலில் தவிக்கிறதா சொன்னேனே அது இவங்கதான். ஆபீஸர்..."

உஷா அவளிடம் பேசவில்லே. மோகினியை உற்று நோக்கினுள். மோகினியும் தன் கணவனின் தங்கையை அடையாளம் கண்டுகொண்டு முகத்தைத் திருப்பிக் கொண் டாள். ஆனுல் உஷா விடவில்லே. மாஜி அண்ணியைப் பார்த் ததில் ஏகப்பட்ட ஆத்திரம்.

"என்ன மிஸ். மோகினி, அடையார் வீடு எப்டி இருக்கு? என் சின்ன வயசில் பரீட்சை சமயத்துல டிஸ்டர் பன்ஸ் இல்லாம இருக்கறதுக்காக...நான் ஆசையோடு அங்கே தான் போய்ப் படிப்பேன்...வீடு இப்ப எப்படி இருக்கு?"

மோகினியின் உதடுகள் துடித்தன. ஏதோ பேசப்

போனுள். அவளால் கையை ஆட்டாமல் பேச முடியாது. ஆனுல் பேசப்போன சமயத்தில், நமைச்சல் ஏற் பட்டதால், கையை ஆட்ட முடியவில்லை. அதனுல் பேசவும் முடியவில்லை.

"என்ன மிஸ் மோகினி! சௌக்கியமான்னு ஒரு வார்த்தை கேட்க மாட்டேங்கிறீங்களே. நீங்க கேட்கா விட்டாலும் நான் சொல்றேன். சபாபதி இப்போ ஐ.பி.எஸ் ஆபீஸர். கமலாக்கா புருஷன் ஐ.ஏ.எஸ். ஒங்க கார்ப்ப ரேஷன்ல மானேஜிங் டைரெக்டரா வரப்போருரு. இன் ெனுரு அண்ணன் சீனிவாசன்... ஆல் ரைட். நீங்க கேட் காதபோது நான் எதுக்கு சொல்லணும். உடம்புக்கு என்ன பண்ணுது?"

காமாட்சிக்கு விஷயம் லேசாகப் புரிந்தது. மோகினி மீது கொஞ்சம் வெறுப்பும் ஏற்பட்டது.

உஷா மௌனமாக மோகினியின் கன்னத்தில் இருந்த கறுப்புத் திட்டுக்களைப் பார்த்தாள். பிறகு, 'ஐ ஆம் ஸாரி. நான் டாக்டர் என்கிறத மறந்து சீனிவாசனின் சிஸ்டரா நடந்துக்கிட்டேன். பயப்படாதீங்க மிஸ் மோகினி. என் உணர்ச்சிய டிரீட்மெண்ட்ல காட்டமாட்டேன். சொல் லப்போனு சீனி காணுமப் போனதற்காக, உணர்ச்சிகளைக் கொட்டிக் கொட்டி, கடைசில உணர்ச்சியே இல்லாம போயிட் டேன். அந்த ரூமுக்குள்ள போறீங்களா, என்னன்னு பார்க்கலாம். ப்ளீஸ்..." என்ருள்.

மோகினி எழுந்திருக்கவில்லை. உஷாவையே மௌனமாகப் பார்த்தாள். இருபது ஆண்டுகளுக்கு முன்பு பாவாடை தாவணியோடு இருந்த 'அவளையும்' இப்போது ஸ்டெத்தாஸ்கோப்பிற்கு வெளியே தெரிந்த மங்கல நாணுடன் இருந்த இவளையும் ஒப்பிட்டுக் கொண்டாள். "பெரியண்ணு எங்கேம்மா இருக்கார்," என்று கேட்க வந்த வார்த்தைகளை அடக்கிக்கொண்டாள். எழுந்து அமைதி யாகப் பேசினுள்.

"இன்னெுரு நாளைக்கு வரேம்மா. நேரமாயிட் டுது. அப்பாவ போயி கவனிக்கணும். நிச்சயமா உன்கிட்ட டிரிட்மெண்ட் எடுத்துக்கிறேன்..."

வாசல் வரைக்கும் போய்விட்ட மோகினியையும், அவளைப் பின் தொடர்ந்த காமாட்சியையும், 'ஒன் மினிட்' என்று சொல்லி, அவர்களைத் திரும்பிப் பார்க்க வைத்து விட்டு, உஷா இருக்கையிலிருந்து எழுந்திருக்காமலே பேசினுள்:

"மிஸ் மோகினி. ஒங்களுக்கு வந்திருக்கிறது

ஸீரியஸ் டிஸீஸ் மாதிரி தோணுது. டாக்டருங்களுக்கே தெரியாம ஆயிரம் நோய் இருக்கு. அதனுல ஒரு யோசனே சொல்றேன். ஊத்துக்கோட்டைக்கு மேற்கே புத்தூர் பக்கத்துல...நாராயண வனமுன்னு ஒண்ணு இருக்கு. அதுக்கு ரெண்டு மைலுக்குக் கிழக்கே கோனேன்னு ஒரு சின்ன நீர் வீழ்ச்சி. அங்க ஒரு யோகி இருக்கார். யோகாசனத்தால் சுகமாக்குருர். அதோடு மூலிகை மருந்தும் கொடுக்கிருர். தியானம் செய்து திருநீறும் கொடுக்கிருர். அவர் கை பட்டா ஒங்க நோயில்லாம் பறந்துடும். சில டாக்டர்களே கூடத் தங்க நோய்களத் தீர்க்க அங்க போயிருக்காங்க. ஒங்களுக்கு இஷ்டமிருந்தா அங்க போயிட்டு இங்க வாங்க...இல்லாட்டாலும் வாங்க...ஓகே.''

காமாட்சி உஷாவிற்குக் கையாட்டி விடை கொடுக்க, மோகினி முதுகைச் சொறிந்துகொள்ள, இருவரும் வெளியே வந்தார்கள். நீண்ட மௌனம். காரில் ஏறியதும், ''நீயும் அந்த யோகியைப் பார்க்க வாயேன்,'' என்ருள் மோகினி.

''ஒன்னேட இவ்வளவு வந்ததுக்கே என் ஹஸ்பண்ட் உதைச்சாலும் உதைப்பாரு. அங்க வந்தால் அவ்வளவு தான்...மோகினி, நாளேக்கே நீ போ. என் டிரைவரை அனுப்புறேன்...நாளேக்கே போ...''

''நான் இன்னும் தீர்மானம் பண்ணலே...''

வீட்டிற்கு வந்த மோகினி, மகள் இன்னும் ஆபீசிலிருந்து வரவில்லேயா என்பது மாதிரி வீட்டை நோட்டம் விட்டாள். காணவில்லே. அலுவலகத்திற்கு டெலிபோன் செய்தாள். தூக்கிவாரிப் போட்டது.

அலுவலகத்திற்கு ரகுமணியும் கலாவும் அன்று வரவில்லேயாம். பதறிப்போனுள். மகளே இனிமேல் பார்க்க முடியாதோ என்று நினேத்தபோது, அவள் தலே சுழன்றது.

போலீஸ் சூப்ரின்டெண்ட் வில்லியம்ஸிற்குப் போன் செய்தாள். அவர், 'கண்ட்ரோல்' ரூம் வழியாக விசாரித்து, திருப்பதி பக்கம், ஒரு கார் போன வேகம், சந்தேகத்தை உண்டுபண்ணுவதாய்த் தகவல் வந்ததென்று கூறினுர். பின்னர், அவர் சொன்ன ஆறுதல் வார்த்தைகள் அவளுக்கு கேட்கவில்லே.

கடவுளே, என் மகளே என்னிடம் கொடுத்துவிடு. ரகுமணியோடு கொடு. நானே முன்னுல் நின்று வனிதாவுக்கு ராஜனேக் கட்டி வைக்கிறேன். கடவுளே, முருகா... ஈசுவரா, என் பெண்ணே என்கிட்ட கொடு. என்கிட்ட

கொடு. என் ராசாத்தியை நான் பார்ப்பனு? என் கண்ணுக்குக் கண்ணை என்னுல் பார்க்க முடியுமா?

திடீரென்று டெலிபோன் மணி அடித்தது.

மறுமுனையில் இருந்து டாக்டர் உஷா பேசினுள்.

'கவலைப்படாதீங்க மோகினி. ஓங்க மகள், நான் சொன்னேனே கோனைக்கு, அங்கதான் போயிருக்காள். அதுவும் உங்களுக்காக. உங்க நன்மைக்காக. சாமியாரைப் பார்க்கப் போயிருக்காள். என்கிட்ட உங்ககிட்ட சொல்லச் சொன்னுள்...'

மோகினியின் கண்களில், இன்ப நீரும், துன்ப நீரும் சேர்ந்து பொங்கின. மகளே அவளை நல் வழிப்படுத்த, தகப்பன்சாமியாக மாறி... அன்பிற்குள் தண்டனையை வைத்து, தண்டனைக்குள் அன்பை வைத்து... பெற்று வளர்த்துப் பேரிட்ட மகளை அப்போதே பார்க்கத் துடித்தாள். ஒருவேளை உஷா சொல்வது மாதிரி இல்லாமல் உஷாவிடமே பொய் சொல்லிவிட்டுக் கலா எங்கேயாவது கண்ணுக்கெட்டாத இடத்திற்குப் போயிருப்பாளோ என்றும் நினைத்துப் பதறினுள்.

பொழுது புலரும் முன்னுலேயே, காமாட்சியின் டிரைவரோடு அவள் புறப்பட்டாள்.

சென்னை—திருப்பதி சாலையில் புத்தூருக்கு அருகே சாலையிலிருந்து இரண்டு கிலோ மீட்டருக்கு தெற்கே, ஒரு பள்ளத்தாக்கு. சாலையை ஒட்டிவரும் ஆற்றைக் கடந்து ஒற்றையடிப் பாதை வழியாக ஒரு கிலோ மீட்டர் நடந்தால், கோனையின் ஞான வாசனையை நுகரலாம். அங்கு மிங்கும் மரங்கள் பந்தலிட அவற்றினின்று உதிர்ந்த பூக்கள் கம்பளிப் பூச்சிபோல் கண்ணைப் பறிக்கும். அவற்றில் கால் படக்கூடாது என்று நம்மை ஜாக்கிரதையாக நடக்க வைக்கும் ஒருவித மோனம்...

நிசப்தமான அந்தச் சோலைவெளி பரவெளி போல், ஆன்மாவை அடையாளங்காட்டும் அடைக்கல வெளிபோல் அங்கே இறைவன், ஏகனுவும், அநேகனுவும் இருக்கிருர் என்பதைக் காட்டும் ஞானவெளிபோல், 'நம்பினுர் கெடுவதில்லை' என்பதைக் காட்டும் 'ஆட்கொள்ளும் வெளிபோல்' இறைவனின் அபிலாஷைகள் இங்கேதான் சிருஷ்டிக்கப்படுகின்றன என்பதுபோல விளங்கும் 'சிருஷ்டி வெளிபோல்' 'இங்கே...வந்தால் எல்லா வினையும் போகும்' என்பதைக் காட்டும் உபதேச வெளிபோல், கல்

லாமலே ஞானம் கற்கலாம் என்று இயம்பும் ஆன்ம வெளி போல், புராணத்தில் சொல்லப்படும் கைலாய வெளிபோல் காட்சியளித்தது.

அந்தச் சோலைவெளி முடியும் மலையடிவாரத்தில், எப்போதும் வற்றாத நீர்வீழ்ச்சி. அதற்கு மேற்குப் பகுதியில் உள்ள சிறு குகையில், விபூதி குங்குமத்திற்கு பிரகாசம் கொடுப்பதுபோல் விளங்கும் லிங்கம். அருவியின் சத்தம் பக்தர்களுக்கு 'ஓம்' என்று சொல்வதுபோல் ஒலிக்கும். நீர்வீழ்ச்சியில் 'நமச்சிவாய நமோ' என்று சொல்லிக்கொண்டு, விஷயம் தெரிந்தவர்கள் குளிப்பதைப் பார்ப்பதிலேயே ஒருவித பரமானந்தம் இருப்பதுபோல் தோன்றும். 'எல்லாம் இங்கேயே துவங்குகின்றன. எங்கெல்லாமோ சுற்றிப்போய் இங்கேயே முடிகின்றன' என்பதுபோல் அசாத்தியமான நிசப்தமே ஒரு மொழி... குரங்குகள் அங்குமிங்குமாக மரங்களில் தாவும் ஓசை தன் முன்னால் விழும் பூக்களை அர்ச்சனையாக ஏற்றுக்கொண்டு, குடித்துவிட்டுக் குளிப்போர்க்கும், ஞானப்பாலை குடிப்பதற்காகக் குளிப்போர்க்கும் ஒன்றாய், பலவாய், இருப்பதாய், இல்லாததாய், கல்லாய், கடவுளாய் விளங்கும் அந்த லிங்கத்தைப் பார்த்துக்கொண்டே அருவியில் குளித்தால், சராசரி வாழ்க்கையில் சுற்றும் நேரத்தைக் குளிக்கும் நேரமாகவும், குளிக்கும் நேரத்தை சுற்றும் நேரமாகவும் வைத்துக்கொள்ளலாமே என்று மனம் பலவாறாய் ஞானத்தில் குளிக்கும்.

லிங்கக் குகைக்கு எதிர்த்தாற்போல் இருந்த மலைத்திட்டில் ஒரு சிறிய ஆசிரமம். ஆசிரமத்திற்கு முன்னால் பெரிய வெளி. சாமியாரின் வேண்டுகோளுக்கிணங்க, காட்டிலாகாவினரே அந்தக் கரடுமுரடான மலைப்பகுதியைச் சமப்படுத்தி இருந்தார்கள். அந்த வெளி முழுவதும் சாணத்தால் மெழுகப்பட்டிருந்தது. மற்றபடி எந்தவித ஆர்ப்பாட்டமோ ஆரவாரமோ இல்லாத ஆசிரமம் அது. வெளி திண்ணையில், மூலிகை மருந்துகளை அரைப்பதற்காக கல்லாலான 'கலுவம்' இருந்தது.

அன்று கிருத்திகை.

ஆசிரமத்தில் பல பக்தர்கள் மொய்த்துக்கொண்டிருந்தார்கள். சாமியார் அவர்களுக்கு மத்தியில் உட்கார்ந்திருந்தார். பக்கத்தில் ஹார்மோனியம் வாசித்துக்கொண்டு, வெள்ளாடை கட்டிய பெண்; இருவருக்கும் நாற்பத்தைந்து வயதிருக்கும். சாமியாருடைய உடம்பு அடங்கியும், அடக்கப்

பட்டும், ஒடுங்கியும், விளங்கியும், உடும்புபோல் இறுகியும் இருந்தது. புருவமத்தியில் திரிசூலம் போன்று ஒன்றோடொன்று சங்கமமாகும் மூன்று கோடுகள்; தாடி, நீளமாக இல்லை. வெள்ளை வேட்டிதான். காவியல்ல...சாமியார் 'சித்தாசனத்தில்' அமர்ந்திருந்தார்.

கோனைக்குக் காரிலேயே வருவதற்கு மலைப்பாதை ஒன்று உண்டு. தெய்வ பக்தரான வள்ளியப்பன் என்பவர், சித்தூர் கலெக்டராக இருக்கும்போது பொதுமக்களின் வேண்டுகோளின் பேரில் போடப்பட்ட சாலையாம். மோகினி அந்தப் பாதை வழியாகக் காரில் வந்தாள். டிரைவர் மேடான பகுதியில் காரை நிறுத்தினார். மோகினி இறங்கி வந்தாள்.

சாமியார் பத்தாண்டுகளுக்கு முன்னர் இங்கே தன் மனைவியுடன் வந்து தங்கிவிட்டார் என்றும், விபூதி வரவழைப்பது, தகடுகள் எழுதுவது, கழிப்புச் செய்வது போன்ற ஜிகினா சித்துக்களை வெறுப்பவர் என்றும், அடிக்கடி வெளியூருக்கு தம்பதியினர் பஜனைக்குப் போவார்கள் என்பதும், இவர்கள் கைபட்டு இதுவரை எந்த நோயும் தீராமல் போனதில்லை என்றும், பிறர் பேசுவது அவள் காதில் அடிபட்டது. குறுக்கு வழியில் முன்னுக்கு வந்த அவள், இப்போதும் தனக்கு வந்த நோயைக் குறுக்கு வழியில் தீர்க்கலாம் என்றும், சஸ்பென்ஷனை ரத்து செய்யச் சாமியாரிடம் தாயத்து வாங்கலாம் என்றும் வந்திருந்தாள். அவள் நடந்து கொண்டிருந்தபோது, வடலூர் வள்ளலாரின் பாடலைச் சாமியார் சுதிநயத்துடன் பாடினார். அவர் மனைவி, சுதியில் அவர் குரலை அடக்காமல் அடக்கி வாசித்தாள்.

'காச மேகங் கடும்பிணி சூலைமோ காதிய யாற்றந்து
கண்கலங்கஞ் செய்யும் மோசமே நிசமென்று...''

மோகினி ஆசிரமப் படிக்கட்டுகளில் ஏறியபோது, சாமியாரைப் பார்த்துத் திடுக்கிட்டாள். சந்தேகமில்லை. அவளுக்குப் பரிச்சயமான ஒவ்வொரு அங்கங்களையும் சாமியாராக—சீனிவாசனாகப் பார்த்தாள். பக்கத்தில் யார்? லீலாவா...ஆம்....இவளால் ஒட்டப்பட்ட லீலாதான். இன்று பலருக்குத் துன்பத்தையோட்டும் துணையாக இருக்கிறாள். சீனிவாசனுக்கும் துணை...

அவர்களுக்கருகே அமர்ந்திருந்த கலாவையும்,

ரகுமணியையும் பார்த்ததும் அவள் கண்களில் ஆனந்த நீர் சொறிந்தது.

சாமியாரின் குரல் கணீரென்று ஒலித்தது. பிராணுயாமம் செய்த அவர் குரலொலி பிசிறில்லாமல், அருவியின் ஒலிபோல், பிரபஞ்சத்தைத் தட்டுவதுபோல், பஞ்சபூதங்களை ஒரு பூதமாக்குவதுபோல், முதியவனின் முதிர்ச்சியுடன், குழந்தையின் நளினத்துடன் ஒலித்தது. அவர் பேசப் பேச, மோகினி தன் காதுகளில் படர்ந்துள்ள கறுப்புப் படைகளை பிடித்துவிட்டுக் கொண்டாள்.

''பாவத்திற்குப் பயப்படலாம். ஆனல் பாவிகளுக்குப் பயப்படலாகாது. குடும்பம் என்ற சுயநல வட்டத்தைப் பெரிதாக நினைத்து, பாவிகளின் தீவினைகளை மீண்டும் கண்டிக்காமல் இருப்பவர்களும், பாவத்தின் பங்குதாரர்களே. பாவிகளை எதிர்த்துப் போராட வேண்டும். இதனுல் பாவிகளை, பின்னுளில் வரும் ரோகங்களிலிருந்து நாம் மீட்டவர்களாகிறோம். பாவத்திற்கு எதிரான போராட்டமே புண்ணியம். பாவிகளை எதிர்க்கும் செயலே பக்தியாகும்.

பாவிகள் ஜெயிக்கலாம். ஆனுல் பாவம் ஜெயித்ததில்லை. ஜெயித்ததுபோல் தோன்றும் பாவிகளுக்கு, இறுதி நாள் பயங்கரமாக இருக்கும். அவர்களை நாம் மீட்க வேண்டாமா? ஆகையால் அன்பர்களே, குடும்ப வட்டத்தை உதிர்த்து, சமூக வட்டத்தைப் பெரிதாக வரையுங்கள். பாவிகளிடமிருந்து அப்பாவிகளைக் காப்பதே ஈசுவரனுக்கு செய்யும் யாகமாகும். பாவிகள் செயலை சகித்து, அதர்ம வினையின் கணக்கைப் பெரிதாக்க வேண்டாம். பிறர் வயிற்றில் அடிப்பவர்களைத் தடுப்பதே, ஈசுவரனுக்குச் செய்யும் நைவேத்யம். அக்கிரமத்திற்கு எதிரான போரே ஆண்டவன் விரும்பும் அர்ச்சனை. பாவிகளின் துவக்கக்கால வெற்றி, இறுதிகால தோல்வி. பாவ எதிர்ப்பாளர்களின் துவக்கக்கால தோல்வி, இறுதி கால வெற்றி. பாவிகளால், இந்தப் போராட்டத்தில் பழிவாங்கப்பட்டால், அதுவே மிக மிகப் பெரிய வெற்றி.

தர்மம் என்பது, ஏதோ நீ செய்யக்கூடிய பெரிய தியாகமல்ல. அது, நீ ரோகத்தில் விழாமல் இருக்க உனக்கு நீயே செய்து கொள்ளும் ஒரு தற்காப்பு யக்ஞம். நீ போராடினுலும் போராடாவிட்டாலும் ஆண்டவன், சதா

கவனிக்கிறார். கர்மவினைகளைக் கணக்கெடுத்து விடையேறு பாகன் விடைதருகிறான்.

பாவிகள் கர்மவினைகளை அனுபவிக்காமல், போக மாட்டார்கள். இந்தக் கலியுகத்தில் நாம் செய்த தீவினைகளை இந்த ஜென்மத்திலேயே நாம் அனுபவித்தாக வேண்டும். ஆங்காங்கே செய்த புண்ணியங்களினால், கர்ம வினைப் பயனை கழிக்க முடியாது. ஈடுகட்ட முடியாது.''

மோகினி, மகளைக் கட்டிப் பிடித்து அணைக்கத் துடித்த கரங்களை ஒன்றோடொன்று சேர்த்துக் கட்டிக் கொண்டு, பேசாமல், ஆசிரமத்தின் நுழைவாயிலிலேயே நின்றாள். லீலா அவளை அடையாளம் கண்டு கொண்டது போலத் தோன்றியது. 'தெய்வம்போல் இருந்த என்னவரை நீ பிணமாக்கினாய். நானோ பிணம்போல் இருந்த உன்னவரைத் தெய்வமாக்கியிருப்பதைப் பார்த்தாயா?' என்று அவள் சொல்லாமல் சொல்வதுபோலவும் தோன்றியது. அதே சமயம், 'ஒன்னையும் கடவுள் உலகத்துல உலாவ விட்டிருக்காருன்னா அதுலயும் ஒரு சூட்சுமம் இருக்குடி... ஒன் மூலம் எத்தனை பொம்பளைப் பொறுக்கிப் பேர்வழிகள் பொறுப்பான உத்தியோகத்துல இருக்காங்கன்னு காட்டத் தான் உன்னை வச்சிருக்காரு' என்று ஒரு காலத்தில் லீலா இயலாமையில் சொன்ன வார்த்தைகள், முளைக்காமல் போகும் என்று அலட்சியமாக முடக்கிப் போடப்பட்ட வார்த்தை வித்துக்கள், இப்போது கருவேல மரங்கள்போல, அவற்றின் முட்கள்போல, மோகினியைக் குத்தின.

'இவ்வளவும் செய்துட்டு நமக்கு அங்கே போக என்ன யோக்கியதை இருக்கு' என்று நினைத்தவள்போல், மோகினி நின்ற இடத்திலேயே நின்றபோது, தற்செயலாக எழுந்த லீலா அவளை அடையாளம் கண்டு கொண்டாள். குழந்தை மாதிரி ஓடிவந்து, மோகினியை கட்டிப் பிடித்து அணைத்தவாறே அவளை ஆசிரமத்திற்குள் அழைத்துக் கொண்டு போனாள்.

பேசிக் கொண்டிருந்த சாமியார், பேச்சைச் சிறிது நிறுத்திவிட்டு, அபயகரம்போல் கையைக் காட்டிவிட்டு, மீண்டும் பேசினார்.

'ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்க ஒவ்வொரு ஜீவனுக்கும் யோக்கியதை உண்டு. சொல்லப்போனால், ஒருவன் பாவியாவதில், அவனை அல்லது அவளைப் பாவியாக உருவாக்குவதில், சமுதாயத்திற்கும் பங்குண்டு.

'இருபது பேரை ஏற்றிச் செல்லும் படகு. இருபத்தொன்றுவது ஆளை ஏற்றிச் செல்லும்போது கவிழ்கிறது என்றால், அதற்கு அந்த இருபத்தோராவது ஆள் மட்டும் காரணமல்ல. ஏற்கனவே இருந்த இருபது பேரின் பளுவும் காரணம். இதுபோலத்தான் பாவமும் பாவிகளும். சிலர் பாதிப் பாவிகளைச் சந்திப்பதற்காக முழுப் பாவிகளாகிறார்கள். ஒரு சிலர், முழுப் பாவிகளால் முழு ஞானிகளாகிறார்கள். பாவமும், புண்ணியமும் சமுதாய கன பரிமாணத்தின் எடைக் கற்கள். தனி மனிதனின் காரண—காரியங்கள் அல்ல.''

சாமியார் பேச்சை முடித்துவிட்டு மோகினியைப் பார்த்து லேசாகச் சிரித்தார். அந்தச் சிரிப்பில், கணவன் என்கிற பூர்வாசிரம சீனிவாசனின் துயர ரேகையும், மகானாக மாறிய இப்போதைய சீனிவாச சாமியாரின் ஞானத் தெளிவும் ஒருங்கே தோன்றின.

சாமியார் கொடுத்த திருநீறை லீலா பய பக்தியுடன் வாங்கி மோகினியின் உடம்பு முழுவதும் தேய்த்தாள். அந்த அன்புப் பெருக்கில் விம்மிய மோகினி, சாமியாரை நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டாள். செதில் செதிலாக இருந்த அவள் கன்னங்களில், திருநீறு வெண்மையைக் கொடுத்துக் கொண்டிருந்தது.

ரகுமணியுடன் அமர்ந்திருந்த கலா, அவனையும் அழைத்துக்கொண்டு அம்மாவின் அருகில் வந்து அமர்ந்தாள். அம்மாவின் கன்னங்களில் வழிந்த நீரைத் தன் புடவைத் தலைப்பால் துடைத்துவிட்டு, தன்னை அணைத்த அம்மாவைத் தானும் அணைத்துக் கொண்டாள்.

எல்லாம் தெரிந்தும், ஒன்றும் தெரியாததுபோல் விளங்கும் பஞ்ச பூதங்களில் ஒன்றான வாயு, 'கோனே' மரங்களில் மெல்லிய பூங்காற்றாய்ப் படர்ந்தெழுந்து, அனைவரையும் சுகமாகத் தடவிக் கொடுத்தது.

முற்றும்

# நடுவில் எழுந்த சுவர்

## மணியன்

## 1

விடியற்காலை நேரம். அதை அறிவிப்பதற்காக எழுந்து கூவிய கோழி, சென்னிமலைக் கவுண்டர் எழுந்து வந்து நின்ற காட்சியைப் பார்த்ததும் சத்தம் போடாமல் கூடைக்குள் புகுந்து கொண்டது.

கவுண்டர் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு கிளம்பினார். ரப்பர் டயரில் செய்த அழுத்தமான செருப்பு, மடங்கி மடங்கிச் சத்தமிட்டபடித் தொடர்ந்து சென்றது. வழியில் ஒரு காட்டாமணக்குக் குச்சியை ஒடித்து எடுத்துக்கொண்டு, கடைவாயில் அதன் நுனியை வைத்துக் கடித்தபடி நடந்து போனார்.

காலைக் காற்றில் புளிய மரங்கள் மெதுவாக அசைந்து கொண்டிருந்தன. கவுண்டரின் பெரிய மாடி வீடு, கிராமத்துக்குச் சற்று ஒதுக்கமாகவே இருந்தது. அங்கிருந்து அவருடைய கம்பங் காட்டுக்குப் போகக் கிராமத்தின் வழியாகத்தான் நடந்து போக வேண்டும்.

''கும்புடறேனுங்க...''

—துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு, உடம்பைக் கூனலாக வளைத்து ஒரு கும்பிடு போட்டுவிட்டு, மாட்டை ஓட்டிக்

கொண்டு போனான் குடியானவன். விடியற்காலையிலேயே போய்க் கிணற்றடியில் மாட்டைப் பூட்டி வைத்தால், கவலை மாடுகள் தண்ணீர் இறைக்கவும், அதைச்சுற்றி இருக்கும் கால் ஏக்கரா பூமியில் மட்டும் பயிரிட்ட நெல்லுக்கு நீர்ப்பாயவும், வசதியாக இருக்கும்.

குடிசை வாசல்களில் யார் யாரோ கட்டிலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். கால் தூக்கங்கள், சாலையில் 'புர்' என்று ஓடிய கோயம்புத்தூர் பஸ்ஸின் சத்தத்தைக் கேட்டதும் விழித்து, இளம் வெயிலின் கூச்சத்தில் கண்ணை இறுக்கிக் கொண்டன. அவினாசியில் சொசைட்டி கிடங்கில் உரம் வாங்கிக் கொண்டுவரப் புறப்பட்ட மாட்டு வண்டிகளின் மாடுகள், தலையைச் சாவதானமாக ஆட்டிக்கொண்டு, தூங்கி வழிந்து ஊர்ந்து கொண்டிருந்தன.

கவுண்டர் கம்பங்காட்டில் இறங்கிச் செல்லத் தொடங்கினார். அவருடைய கண் ஒருமுறை சுற்றிப் பார்த்து, கருகரு வென்று வளர்ந்து காற்றில் வாளிப்புடன் அசைந்தாடிக் கொண்டிருந்த பயிரைத் திருப்தியுடன் கண்டு அடங்கின.

காட்டை ஒட்டினாற்போல நெல்லை உலர்த்தவும், புழுக்கவும், சிமெண்ட் தரை போட்ட விசாலமான முற்றம் விரிந்து கிடந்தது. அதை ஒட்டினாற்போல நெல்லைப் புழுக்கும் இயந்திரம், நெருப்பை எரிமூட்ட அடுக்கடுக்காகக் கட்டிவைத்த உலர்ந்த கம்பங்கட்டைகள் எல்லாமே அவர் கண்களில் பட்டன.

அங்கே ஏறி அந்தத் தரையை ஒரு முறை, காட்டாமணக்குக் குச்சியால் பல்லைத் தேய்த்தபடி சுற்றிப் பார்த்தார் கவுண்டர். ஓர் இடத்திலும் சிறு நெல்மணிகூடச் சிந்தவில்லை. தேய்த்துக் கழுவிவிட்டது போல அந்த இடம் பளிச்சென்று இருந்தது. அதை ஒரு முறை சோதித்துக் கண்டுகொண்டதில் அவருடைய மனம் நிறைவு கண்டது. முகவாயின் மூன்று நாள் தாடியை ஒரு வினாடித் தடவி விட்டுக்கொண்டார். ரங்கூன் கமலத்தில் அடுப்புக் கட்டிப்போட்டக் கடுக்கனை ஒரு முறை ஆசையாக இழுத்துவிட்டுக் கொண்டார்.

பல் தேய்த்து முடித்து, தோட்டத்தை ஒரு முறை சுற்றிப் பார்த்துவிட்டு, வீட்டுக்குத் திரும்பினார். பால் சேர்க்காத வரக்காப்பி ஒரு செம்பு நிறையக் காத்துக் கொண்டிருந்தது. பளபளவென்று தேய்த்த சாண் உயரப் பித்தளைத் தம்ளரில் அதை விட்டுச், சூட்டை ரசித்தபடி மெதுவாக அருந்தினார். படியேறி மாடிக்குப் போனார். அங்கே திறந்த வெளியில் உட்கார்ந்தபடி சுற்றிலும் தெரிந்த கிராமத்தையும் சாலையையும் ஒரு நோட்டம் விட்டார்.

அவருக்கு அன்று கோயம்புத்தூருக்குப் போகவேண்டும் என்ற ஞாபகம் வந்தது. கலெக்டர் ஆபீசிலிருந்து அவருக்கு அழைப்பு வந்திருந்தது. கடன் பத்திரம் கொடுத்து அரசாங்கத்துக்கு நிதி திரட்டுகிறார்கள். அவருடைய பங்குக்கு ஐயாயிரம் ரூபாய்க்குப் பத்திரம் வாங்கவேண்டும். முடியாதென்றால் விடமாட்டார்கள். நிலத்துக்கு வரி, உரம் வாங்க பர்மிட், நெல் விலைக்குப் போட — இப்படி ஒவ்வொன்றுக்கும் அங்கேதான் போயாக வேண்டும்.

வட்டி கிடைக்கிற பத்திரம்தான். ஆனால் அது என்ன வட்டி? மாதம் நூற்றுக்கு இரண்டு ரூபாய் வட்டி கொடுத்துப் பணம் வாங்கிக்கொண்டு போக ஆள் இருக்கும்போது, வருடத்துக்கு நூற்றுக்கு எட்டேகால் ரூபாய் வட்டி கொடுக்கிறார்கள்? நஷ்டம்தான் அந்த முதலீடு. ஆனால் அரசாங்கத்தை எதிர்த்துக் கொள்ள முடியாதே? பணம் பத்திரமாக இருக்கும். பன்னிரண்டு வருடங்களுக்குப் பிறகு திரும்பி வரும். அதுவரையில் பெட்டிக்குள் அந்தக் 'கெட்டிக் காகிதங்களை' ஜாக்கிரதையாக வைத்துப் பூட்ட வேண்டியதுதான்.

திரும்பி வருகிற பணம்! ஜாக்கிரதையாக இருக்கக்கூடிய கடன்! அப்படித் திரும்பி வராத பணம்கூட இருக்கிறதா? அவர் கடன் கொடுத்து அதை வட்டியுடன் திரும்பக் கொடுக்காமல் போய்விட்டவன் யாராவது அந்தச் சீமையில் உயிருடன் இருக்கிறானா? உயிருடன் இருக்க முடியுமா?

அந்தச் சம்பவம் நினைவுக்கு வந்தது....

புதிதாக இரண்டு மாடுகள் வாங்கச் சின்னான் அவரிடம் இரண்டு வட்டிக்குக் கடன் வாங்கிக்கொண்டு போனான். நகையோ, பாத்திரமோ அடமானம் இல்லை. நிலத்தை நம்பிக் கொடுத்த கடன்தான். ஆறு மாதத்தில், பயிர் அறுவடையானதும் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்று நிபந்தனை.

சின்னானுக்கு நல்ல காலம் இல்லை. கிணற்றில் நூறடி ஆழம் வரையில் பாறையை உடைத்துத் தோண்டியும் தண்ணீர் கிடைக்கவில்லை. வாங்கின மாட்டில் ஒன்று சீக்குப்பிடித்துச் செத்துப் போய்விட்டது. பயிர் விளையவில்லை. ஆறு மாதத்தில் வட்டியைக் கூடக் கொடுக்க முடியவில்லை.

இதே மாடி முற்றத்தில்தான் அவனைக் கொண்டுவந்து நிறுத்தியிருந்தார் கவுண்டர். பயத்தில் அவன் மிரண்டு போயிருந்தான். கவுண்டர் என்ன கேட்பாரோ என்ற கலக்கம். கால்கள் பின்னிக்கொண்டு நடுங்கின.

'பேசாமல் நிலத்தை எனக்கு எழுதிக் கொடுத்துவிடு சின்னா! உனக்குக் கையில் இன்னும் இரண்டாயிரம் கொடுக்கிறேன். வாங்கிக்கொண்டு கிராமத்தை விட்டுப் போய்விடு. எங்கேயாவது டீக்கடை வைத்துப் பிழைத்துக்கொள். நிலம் போன பிறகு உன்னால் இந்த ஊரில் மானத்தோடு வாழமுடியாது' என்று சொல்லிவிட்டு மீசையைப் புறங்கை விரலால் தடவிக் கொடுத்துக் கொண்டார்.

'சாமி! இன்னொரு தவணை கொடுங்க. எப்படியாவது எப்பாடுபட்டாவது கடனை ஒரு பங்கு அடைச்சிடுவேன். என் மேலே நம்பிக்கை வையுங்க. நான் ரொம்ப மானி. என்னாலே இந்த அவமானத்தைத் தாங்க முடியாது' என்று கெஞ்சினான் சின்னான்.

'உனக்கு ஏதுடா மானமும் வெட்கமும்? அது இருந்தால் இப்போது என் கடனை, வட்டியும் முதலுமாகத் தலையை அடகு வைத்தாவது கொண்டுவந்து கொடுத்துவிட மாட்டியா? இன்னொரு தவணை கொடுத்தா செத்த மாடு பிழைக்குமா? விளையாத புஞ்சை விளையுமா? நாளைக் காலையிலே இங்கே வந்துவிட

வேணும். வண்டியிலே என்னோடு வந்து நிலத்தை ரிஜிஸ்தர் பண்ணிக் கொடுத்துடத் தயாரா வந்து சேரவேணும். தவறினு என்ன நடக்குமோ, எனக்குத் தெரியாது' என்று சொல்லிக் கறுவிக்கொண்டார். அவருடைய கண்கள் அறை மூலையில் சுவரில் மாட்டி வைக்கப்பட்டிருந்த நீளத்துப்பாக்கியின் மீது ஒரு முறை உயர்ந்து அடங்கின.

துண்டை எடுத்து இடுப்பில் கட்டிக்கொண்டு சின்னுன் ஒரு தடவை நெடுஞ்சாண்கிடையாக நீள விழுந்தான். கவுண்டரின் காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுதான். தரையில் உடம்பு சோம்பிப் புரண்டது. கவுண்டர் அசையவில்லை. குத்துக்கல் மாதிரி உட்கார்ந் திருந்தார். சின்னுனுக்கு மயக்கம் போட்டுவிட்டது. இரண்டு ஆட்களாகத் தூக்கிக்கொண்டு போய் வண்டியில் ஏற்றி அவனை வீட்டில் விட்டுவிட்டு வந்தார்கள்.

கவுண்டர் வைத்த குறி தப்பாது. துப்பாக்கியால் சுட்டால் — மேலே தூக்கிப்போட்ட காசைக் கீழே இறங்குகிற வேகத்தில் அவரால் சுட்டுத்தள்ள முடியும். அப்படி ஒரு கணக் கான குறி. சின்னுன் விஷயமும் அப்படித்தான். மறுநாளே இரண்டு ஆட்கள் அவன் வீட்டுக்கே போய்க் காவலாகக் கூடவே இருந்து ஆளை மடக்கி வண்டியில் ஏற்றிக்கொண்டு வந்துவிட்டார்கள்.

ரிஜிஸ்திரார் ஆபீசில் கதறிக்கொண்டே கைநாட்டுப் போட்டான் சின்னுன். கவுண்டர் நாணயம்தவறவில்லை. சொன்னபடி இரண்டாயிரம் ரூபாயை அவன் கையில், கவரில் போட்டுக் கொடுத்து விட்டார். மீந்துபோன ஒற்றை மாட்டை விலைக்குக் கொடுத்தால் வாங்கிக் கொள்வதாகவும் சொல்லி அனுப்பினர்.

மறுநாள் காலையில் அவர் அந்தப் பக்கம் காலாற நடந்து போனபோது சின்னுனின் வீட்டு வாசலில் கூட்டம் கூடி இருந்தது. அவனுடைய மனைவி வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு புலம்பிய வண்ணம் உட்கார்ந்திருந்தாள். கவுண்டருக்கு விஷயம் தெரிந்தது. தொடர்ந்து அந்தப் பக்கம் போகாமல் திரும்பி விட்டார்.

சின்னுன் ராவோடு ராவாகக் கொல்லையில் மரத்தில் தொங்கிவிட்டான்!

கொஞ்ச நேரம் என்னவோபோல இருந்தது. அப்புறம் சரிப்படுத்திக் கொண்டு விட்டார். அவர் என்ன செய்ய முடியும்? அவர் திருப்பிக் கேட்டதெல்லாம் அவர் கொடுத்த கடன் தொகையைத்தான்! அவனுடைய உயிரையா கேட்டார்? மானியாக இருந்தால் வாங்கின கடனைத் தவணை சொல்லாமல் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். உயிரைப் போக்கிக் கொள்ளுவதில் எந்த மானம் பிழைக்கப் போகிறது?

கவுண்டருடைய பணம் நல்ல பணம். கெட்டியான இரும்புப் பெட்டியில் பூட்டுப் போட்டுப் பத்திரமாக வைத்த பணம். அது வீண் போகவில்லை. சின்னுனுடைய நிலத்தை மில் கட்டச் சர்க்காரில் வாங்கிக் கொண்டார்கள். மதிப்புப் போட்ட தாசில்தார் நல்ல மனிதர். பெரிய மனிதர்களிடம் மரியாதையாகப் பழகத் தெரிந்தவர். கவுண்டரை வீட்டிலேயே

வந்து பார்த்துக் கையெழுத்து வாங்கிக் கொண்டார். மளமள வென்று காரியத்தை முடித்துப் பணத்தைக் கையோடு கொண்டு வந்து வீட்டில் கொடுத்துவிட்டுத்தான் போனார். இத்தனைக்கும் அவருக்குக் கொடுத்த அன்பளிப்பு முந்நூறு ரூபாய்தான்!

செலவுகள் போகக் கையில் ஆறாயிரத்து நூறு ரூபாய் கிடைத்தது. சின்னான் கொடுக்கவேண்டிய கடனும் வட்டியுமாக சேர்ந்து இரண்டாயிரத்து ஐந்நூறு கூடத் தேறுது. ஆகமொத்தம் லாபகரமான வியாபாரம்தான். சின்னான் உயிர் போனதுதான் ஒரே நஷ்டம். அது அவனாகப் போக்கிக் கொண்டதுதானே?

நாய் விற்ற காசு குரைக்குமா என்ன? அந்த ஆறு யிரத்து நூறு ரூபாய் பாங்கில் வட்டிமேல் வட்டியாகச் சேர்ந்து இன்று பத்தாயிரம் ரூபாயை எட்டிவிட்டது. அவரைப் பொறுத்த வரையில் அது ராசியான பணம்தான். அவருக்கு ஒரு குறைவும் வரவில்லையே?

மறுபடியும் கோயம்புத்தூருக்குப் போகவேண்டிய ஞாபகம் வந்தது. டெபுடி கலெக்டரின் முகம் நினைவில் தெரிந்தது. பொல்லாத மனுஷன் அவர். கூப்பிட்டனுப்பியபடி போய்ப் பத்திரத்தை வாங்கிக்கொண்டு திரும்பி வந்துவிட வேண்டியது தான். ஐயாயிரம் ரூபாய்! முதலுக்குப் பழுதில்லை. வட்டி நஷ்டம் தான். என்ன செய்ய முடியும்?

பஸ்ஸுக்குப் போகத் தயாராகி விட்டார் கவுண்டர். இடுப்பில் பழைய ஜரிகைக் கரை வேட்டி. இடுப்பில் பணம் வைக்கக் கூடிய பை வைத்து பெல்ட்டு. மேல் கோட்டு, அதற்குமேலே விசிறி மடிப்புத்துண்டு எல்லாவற்றையும் எடுத்து வைத்தாகிவிட்டது. கிளம்ப வேண்டியதுதான். அந்தத் தலைவலி நெற்றிப் பொட்டை லேசாகத் துருவ ஆரம்பித்தது.

நெற்றியின் இருபுறமும் அதன் எதிரொலியைப்போல நரம்புகள் புடைத்தெழுந்தன. மேலே உடையணிந்து கொண்டு புறப்படத் தோன்றாமல் சாய்வு நாற்காலியில் சரிந்து கொண்டார் கவுண்டர்.

''காளீ!'' என்று குரல் கொடுத்தார்.

யாரும் அவர் குரலைக் கேட்டதாகத் தோன்றவில்லை. காளி, தோட்டத்தில்இல்லை. இருந்திருந்தால் இந்நேரம் ஓடிவந்திருப் பான். கனவைக் கலைத்துக்கொண்டு எழுந்திருப்பதைப் போலச் சாய்வு நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தார். இன்னும் நெற்றியில் வலி இருந்தது.

''காளி!'' — மறுபடியும் அவருடைய குரல் ஹாலில் எதிரொலித்தது.

''அப்பா இல்லீங்க...'' என்று சொல்லிக்கொண்டே வந்து நின்றாள் வள்ளி. பன்னிரண்டு வயது இருக்கலாம் அவளுக்கு. ஆனால் வயதுக்கு மீறிய வளர்த்திதான். வயதுக்கு வராதப் பெண்ணாக இருந்தாலும் பருவப்பூரிப்புக்குக் குறைவில்லை. பாவாடை சட்டைதான் போட்டுக் கொண்டிருந்தாள். திண் ணென்று நெருக்கமாகக் கட்டின ஜவந்தி மாலையைப்போல உடலில் ஒரு திண்மை தெரிந்தது. கறுப்பு நிறம்தான் என்றாலும், முகத்தில் தனியாகக் குறுகுறுத்த களை மினுமினுத்தது.

''தலைவலிங்களா?'' என்று அவள் கிட்டே வந்து கேட்டாள். முதுகிலிருந்து முன்னால் வந்து புரண்ட தலைப்பின்னல் அவள் மார்பின் மீது உராய்ந்து ஆடிற்று. 'நான் மருந்து தேய்த்து விடட்டுமா?' என்று பார்ப்பது போன்ற தோற்றம். கண்களில் கனிவு குழைய அருகில் வந்து நின்றாள்.

வாழைக்குருத்து போன்ற இளமையும், மென்மையும் தெரியும் கை, நீண்டு, அவருடைய நெற்றியைத் தொட வந்தது. பிறகு சற்றுத் தயங்கிப் பின்வாங்கிற்று. மீண்டும் நீண்டு அவரைத் தொட்டுப் பார்க்கத் துடித்தது. அவருக்குச் சிரிப்பு வந்தது. ''நீ என்ன வயசுப் பிள்ளையா? என்னைத் தொடக்கூடாதா? உன்னைவிட முப்பது வயது பெரியவன் நான்'' என்று சொல்லிக் கொண்டே நிமிர்ந்து அவளைப் பார்த்தார். அவள் அவரை நேராகப் பார்க்கக் கூச்சப்பட்டுக் கொண்டே ஒதுங்கினாற்போல நின்றாள்.

''மருந்தைக் கொண்டுவரவா?'' என்று ஈரக்கையைப் பாவாடையில் துடைத்துக்கொண்டே உள்ளே போனாள். தலைவலி மருந்தை எடுத்துக்கொண்டு வந்து அதை லேசாகத் தொட்டு நெற்றியில் சீராகத் தேய்த்தாள். அந்தப் பிஞ்சு விரல் மெத்து மெத்தென்று விழுந்தது. அந்த விரலுக்கு அழுத்தம் கொடுக்கக் கூட வள்ளியால் முடியவில்லை. அதற்காக உதட்டை மடித்துக் கொண்டு கன்னத்தை உப்ப வைத்துக்கொண்டு தேய்த்தாள். கவுண்டருக்கு அதைப் பார்க்கவே வேடிக்கையாக இருந்தது.

''இந்தா பிள்ளே! இங்கே தேய்'' — என்று கையை இழுத்து நெற்றியின் பக்கவாட்டில் வைத்துக்கொண்டார். வள்ளியின் கையில் இருந்த கண்ணாடி வளையல் குலுங்கிற்று. கிராமத்தில் திருவிழா வந்தபோது கவுண்டர் அவளுக்கு முழுசாக ஒரு ரூபாய் எடுத்துக் கொடுத்திருந்தார். ஆண்டுக்கு ஒரு முறை வரும் அந்த விழாவுக்கு அவர் ஒரு ரூபாய் கொடுப்பதுண்டு. அதில், அவள் அந்த ஆண்டு வாங்கிக்கொண்ட வளையல்தான் அது.

''இப்போ தேவலைங்களா?'' என்று சொல்லிவிட்டு வள்ளி தனது கண்ணாடி வளையல்களைக் கவனமாக மேலே இழுத்து விட்டுக்கொண்டாள். அவை உடைந்துபோனால் போனதுதான். கவுண்டர் மறுபடியும் பணம் கொடுக்க மாட்டார். அவளாக வாங்கிக்கொள்ளவும் கையில் காசு கிடைக்காது.

'கையிலே காசு இல்லே — கையிலே வளை இல்லே!' என்று திரும்பத் திரும்ப மனத்துக்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டாள். அதுவே அவளுக்கு ஒரு வேடிக்கையாக இருந்தது. கவுண்டர் கண்களை மூடிக்கொண்டு விட்டார். கொஞ்ச நேரத்தில் தலைவலி தெளிந்துவிடும்.

''காப்பி கொண்டாறவா?'' என்று மெதுவான குரலில் கேட்டாள். அவருடைய தலை ஆமோதிப்பாய் அசைந்தது. மப்புப் போட்ட வானத்தில் பளீரென்று அடிக்கிற வெயிலைப் போலக் கொஞ்சம் கவலையுடன் இருந்த வள்ளியின் முகத்தில் புன்னகை அரும்பிற்று. பாவாடையைச் சற்று உயர்த்திப் பிடித்துக்கொண்டு மெதுவாக அறையிலிருந்து வெளியே வந்து, தோட்டத்தில் உள்ள தனது குடிசையை நோக்கி ஓடினாள்.....

கவுண்டர் கோயம்புத்தூருக்குக் கிளம்பி விட்டார். அவருடைய பையை எடுத்துக்கொண்டு அவருக்காகக் குடையைப் பிடித்தபடி கூடவே நடந்து வந்தான் காளி. அவர் சொல்லும் பேச்சு ஒவ்வொன்றுக்கும் தலையைச் சற்றுக் குனிந்து கையால் வாயை மூடியபடி பதில் சொல்லிக்கொண்டு வந்தான்.

அவிநாசிக்குப் போவதானால் கவுண்டர் வண்டியைப் பூட்டிக்கொண்டு வரச் சொல்லுவார். காளியும், மாட்டைத் தவிடும் தண்ணீரும் காட்டித் தயார் செய்து, வண்டி மெத்தையைக் கட்டி போட்டுக் காலையிலேயே சரிப்படுத்தி வைத்துக்கொண்டு நிற்பான். கோயம்புத்தூர் பஸ் நிற்குமிடம் பெரிய வீட்டிலிருந்து அரை மைல் தூரம்தான். அதற்காக வண்டியைப் பூட்டிக்கொண்டு வருவது அனாவசியச் செலவு என்று கவுண்டருக்குத் தோன்றும். கேட்டால் கூட கோபிப்பார். அதனால்தான் குடையும் கையுமாக வந்தான்.

கிராமத்தை ஒட்டினாற்போல இருவரும் சாலையில் நடந்து வந்தார்கள். மரத்தடியில் ஏழெட்டுச் சிறுவர்கள் ஒரு வயதான மனிதனைக் கேலி செய்து சிறு கல்லால் அடித்துச் சீண்டித் துன்புறுத்திக் கொண்டிருந்தார்கள். அந்த மனிதன் சீறி அவர்கள் மேல் பாய வரும்போது ஒதுங்கிக் கொள்வார்கள். அந்த மனிதனின் உடம்பில் காயம் படும். குபீர் என்று ஒரு சிரிப்பு அவர்களிடையே எழும். மீண்டும் எழுந்து அவன் அவர்களைத் துரத்துவான். அவர்கள் மறைந்து நின்று கல்லால் அடிப்பார்கள். ஓணானை, வாலில் நூலால் கட்டி வைத்துச் சீண்டிச் சீண்டித் துன்புறுத்துவதைப்போல அந்தக் காட்சியும் தெரிந்தது.

''யாருடா அது காளி?''

''பக்கத்து ஊரு வெள்ளையப்பனுங்கோ... ஒரு வருச மாவே அவனுக்கு மூளை சரியில்லே... இங்கே சாலை ஓரம் வந்து பஸ்ஸுக்காகக் குந்திக்கிட்டிருப்பான். அந்தப் பையனுங்க அவனை இப்படிச் சீண்டிவிட்டு வேடிக்கை பார்க்கிறது வழக்கம். இன்னிக்கும் அப்படித்தான்!''

''பைத்தியம் புடிச்சவன் இங்கே பஸ்ஸுக்கு வருவானேன்?'' என்று கேட்டார் கவுண்டர்.

''பைத்தியம் புடிக்கக் காரணமே, ஆசையாகக் காப்பாற்றி வைச்ச மனைவி ஓடிப்போயிட்டதுதான்.. போறவ அவன் சேர்த்துவைச்ச பணம் அவ்வளவையும் கட்டிக்கிட்டு ஓடிட்டா. மனைவி புறப்பட்டுப்போன பஸ்ஸை இங்கே பார்க்க வர்றதா அவனுக்கு ஒரு பிரமை!'' என்று சொன்ன காளிக்கு, அப்புறம்தான் 'ஏன் அப்படிச் சொன்னோம்?' என்று ஆகிவிட்டது, கவுண்டரின் முகம் போன போக்கைப் பார்த்ததும்!

# 2

திரும்பி வரும்போது மாலை வெயில் விழுந்து விட்டது. புளியந்தோப்புகளுக்கு அருகில் மேய்ச்சல் முடிந்து செம்மறியாடுகள் கூட்டங்கூட்டமாகத் திரும்பிக் கொண்டிருந்தன. சாலையோரம்

டீக்கடையில் 'காஸ்' விளக்கைக் கொளுத்தி விட்டார்கள். தோசையும் குழம்புமாக மணத்த வாசனை பஸ்ஸிலிருந்து வருப வர்களைக் கவர்ந்து இழுத்துக் கொண்டிருந்தது.

சென்னிமலைக் கவுண்டர் குடையை மடக்கிக் கக்கத்தில் வைத்துக்கொண்டு நடந்தார். ஒரு சுருட்டைப் பற்றவைத்துக் கொண்டு, யோசனையாக நடந்தார். அன்றைப் பொழுதுக்கு ஐயாயிரம் ரூபாய், கடன் பத்திரத்துக்குக் கொடுக்க வேண்டியதாகி விட்டது. கலெக்டரின் அலுவலகத்தில் சில்லறைச் செலவுகள் ஏழெட்டு ரூபாய்க்கு மேல் ஓடிவிட்டது. சீதாராம விலாஸ் சாப்பாடு இரண்டு ரூபாய். பஸ் செலவுகள் அதற்கு மேல். இடுப்பில் பெல்ட்டைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார். அந்தப் பையில் இரண்டு ரூபாய் சில்லறைதான் பாக்கி இருக்கும்.

அதை அவர் வெளியில் காட்டிக் கொள்ள மாட்டார். பெல்ட் பையில் இரண்டாயிரம் ரூபாய் இருந்தாலும், இரண்டே ரூபாய் இருந்தாலும் அவருடைய நடை ஒரே மாதிரிதான் இருக்கும். வெளியே போகிறோமே என்று கையில் பத்து ரூபாய் கூடுதலாக எடுத்துக்கொண்டு போகமாட்டார். அவசியத்துக்கு மேல் எவ்வளவு பணம் இருந்தாலும் அதற்கேற்றபடி செலவும் இருக்கும். அது அவருக்குத் தெரியும்.

காளி வாசலில் உட்கார்ந்துப் புகையிலைக் கட்டுகளை அடுக்கி வைத்துக் கொண்டிருந்தான். பவானியிலிருந்து லாரி நாளைக்கு வரும். கட்டுக்களை நிறுவை செய்து வண்டியில் ஏற்றி அனுப்பி, பணத்தை வசூல் செய்து, ரூபாய் நோட்டுக்களைப் பீரோவில் அடுக்கும் வரையில் அவருக்கு நிம்மதி இராது. டிரைவரும் கிளீனருமாகச் சேர்ந்து இரண்டு ரூபாய் 'பக்ஷீஸ்' வாங்கிக் கொண்டு போவார்கள். காளிக்கு அதுவும் இல்லை. அவனுடைய வேலையில் அதுவும் ஒரு பங்கு. அதற்கென்று தனியாக எதும் அவர் கொடுப்பதில்லை.

இளஞ்சூடாக வெந்நீர் போட்டு வைத்திருந்தாள் வள்ளி. கொல்லைப்புறம் தொட்டிக்கு அருகில் நின்று, உச்சந் தலைக்கு மட்டும் அரைக்கரண்டி எண்ணெய் வைத்துக்கொண்டு பொறி பறக்கத் தேய்த்துவிட்டுக் கொண்டு, வெந்நீரை எடுத்து எடுத்து ஊற்றிக் கொண்டார். பஸ்ஸில் வந்த அலுப்பும், வழியில் நடந்த சலிப்பும் மறைந்து சோர்வு அடங்குவது போல இருந்தது.

இரவு தனியாகச் சமையல் இல்லை. நீர் கொட்டின சோறும், மாவடுவும், சுண்டை வற்றல் குழம்பும்தான். சாப்பிட்டு விட்டு இரண்டு ஈரோட்டு ரஸ்தாளிப் பழமும் சாப்பிட்டுவிட்டு மொட்டை மாடிக்கு வந்து துண்டை விரித்துப் படுத்துக் கொண்டார். சற்றைக் கொருதடவை தவழ்ந்து வந்த காற்று, உடம்பைச் சுகமாக ஒற்றி எடுத்தது. வீட்டில் இரண்டே விளக்குத்தான். கீழே ஹாலில் ஒன்று, மாடியில் படுக்கையறையில் இன்னொன்று. மற்ற இடங்களில் பல்புகள்இருக்கும். அவர் ஏற்றுவதில்லை. அவசியம் என்ன?

தூரத்தில் டூரிங் டாக்கீசிலிருந்து சினிமாப் பாட்டு காற்றில் மிதந்து வந்தது. ஆணும் பெண்ணுமாக மாறி மாறிப் பாடும் சிருங்கார ரசம் கொட்டும் பாட்டு. அவ்வளவு தூரத்தில் சொற்கள் புரியவில்லை. மெட்டு மட்டும் கேட்கச் சுகமாக இருந்தது.

'முருகா' என்று சொல்லி ஒரு தடவை மார்பைத் தடவி விட்டுக் கொண்டார். இரட்டைக் குரலும், பாட்டில் தெரிந்த சுவையும் மனத்தில் சாம்பல் மூடிய தணலை ஊதிவிடுவது போல இருந்தது.

அவருடைய புஜங்களைப் பிடித்து அழுத்திவிட ஒரு மனைவி அங்கே இல்லை. அவர் அப்படி மல்லாந்து படுத்திருக்கும் போது மார்பில் விரலை வைத்துத் தடவி, தனிமையில் தயங்கும் துணிச்சலில், இருள் ஒளிக் கலவையின் மறைவில், நாணம் மின்னி நெளியத் தன்னை இழக்கும் ஒரு பெண்ணின் உடல் சுகம் - அப்பா! அதை அனுபவித்து எத்தனை ஆண்டுகளாயிற்று?

அம்மணி!

குட்டை நீரில் மீன் துள்ளுவதைப்போல, அவள் பெயரைச் சொன்னதுமே மனம் துள்ளி விழுந்தது. அவள் கலகல வென்று சிரிப்பது மீண்டும் காதில் கேட்பது போல இருந்தது. பின்னலை எடுத்துக் கட்டிய அழகும், பின்கழுத்தின் பளபளப்பும், பருவப் பொலிவும் அழுத்தமும், தோளின் சரிவும், அங்கக் குழைவு மாகத் திண்ணென்று இளமை மெருகுடன் இங்கேதான் முழங்காலைக் கட்டிக்கொண்டு அருகே அமர்ந்திருப்பாள். வேனிற்காலத்துப் புழுக்கத்தைச் சமாளிக்க மேற்புடவை மட்டும்தான். சட்டை கூடக் கழன்று கட்டில் மீது கிடக்கும். முழங்காலைக் கட்டிய கைகளுக்கடியில் பொங்கிப் பூரிக்கும் இளமை, மாவிலைகளின் நடுவில் கனிபோல மெருகு காட்டும்.

சிவப்புப் பட்டுப் புடவை. அதை அவள் எடுத்துக் கட்டிப் பின்புறம் கொசுவம் விட்டுக்கொண்டு நடக்கிற அழகே தனியாக இருக்கும். 'கிட்டே வா... உனக்குத் தலைக்கு மல்லிகைப்பூ வாங்கியாந்திருக்கேன்' என்று சொல்லிக் கூப்பிட்டு அவரே அவளைப் பின்புறமாக அணைத்துத் தலைப்பூவை அழகாகச் செருகி விடுவார். அவருடைய கைவிரல்கள் ஆசையாக அவளுடைய முதுகைத் தடவிக் கொடுக்கும். அந்த மேனியின் குளுமை படியச் சேர்த்து இழுத்துக் கட்டிக் கொள்ளுவார்.

அம்மணி அவருக்குச் சொந்தக்காரப் பெண்தான். தூரத்து உறவு முறைதான். அவருக்கும் அவளுக்கும் பத்து வயது வித்தியாசம். மடியில் அவளை உட்காரவைத்துக் கொண்டு கேட்பார்: 'நீ எதுக்காக என்னைக் கல்யாணம் கட்டிக்கிட்டே? என்னைப் பார்த்தா? என் பணத்துக்கும் சொத்துக்கும் ஆசைப்பட்டா?' என்று முகத்தைத் திருப்பிக் கேட்பார். கைகள் அவளைப் பரிவுடன் அணைக்கும்.

'நகையும் பணமும் இப்படிக் கட்டி அணைச்சுக் கிட்டிருக்குமா?' என்று சொல்லி அவருடைய கன்னத்தில் கிள்ளுவாள் அம்மணி. அவள் அதிகம் படித்தவள் அல்ல. ஆனால் வயசுக்கு மீறிய தைரியம்தான். அவள் குரல் கேட்டாலே அவர் குழைந்து விடுவார். அவருடைய கோபமெல்லாம் வெளியேதான். வீட்டுக்கு வந்தால் அவள் முன்னிலையில் பெட்டிப்பாம்பாக அடங்கி விடுவார்....

தூக்கம் வரவில்லை. காளி, வேலையை முடித்துக்கொண்டு படுத்துவிட்டான். குடிசையில் அவன் படுத்துறங்குவது குறட்டைச் சத்தத்தில் தெரியும். அவருக்கும் குறட்டைவிடுகிற பழக்கம் உண்டு. அம்மணியால் அவருடன் படுத்து நிம்மதியாகத் தூங்க

முடியாது. பாதி இரவில் அவரை உலுக்கி எழுப்பி 'வெளியே போய்ப் படுங்க...! என்னால் தூங்கவே முடியலே' என்று சலித்துக் கொள்வாள். அவள் மடிமீது விழுந்திருந்த காலே விலக்கிக் கொண்டு, ஒரு சோம்பல் முறித்துப் புரண்டு படுத்துக் கொள்வார் கவுண்டர்.

அவளுக்கு நாகரிகமாக இருக்க ரொம்ப ஆசை. பவுடர், சாந்து, கண்மை என்று விதம் விதமாக வாங்கிக்கொள்ள ஆசை. ஆனால் அவர் பணம் கொடுக்கமாட்டார். 'சும்மா மஞ்சள் தேய்ச்சுக்குளி புள்ளே! அது போதும். உனக்குத்தான் உடம்பு பவுன் கணக்கா மின்னுதே...? அழகு இல்லாதவங்கதானே அப்படியெல்லாம் வாங்கி அழகு பண்ணிக்கணும்?' என்று சொல்லிவிடுவார்.

ஆண்டுக்கு இரண்டு தடவைகள் புதுப்புடவை வாங்கிக் கொள்வதுடன் சரி. அதுவும் மொடமொடவென்ற கைத்தறிப் புடவைதான். விதம் விதமாகக் கோயம்புத்தூரில் பெண்கள் கட்டிக்கொள்ளும் புடவைகளைப் பார்த்து அதைப்போல வாங்கிக் கொள்ளவேண்டும் என்று விரும்புவாள். விலைகூட விசாரித்து வைத்திருப்பாள். அவரிடம் சமயமறிந்து, நயமான நெருங்கின பொழுதில் சொல்லிக் கெஞ்சுவாள். அவர் அவளிடம் வாங்கிக் கொள்ள வேண்டியதை வாங்கிக் கொண்டுவிடுவார். அவளுக்குத்தான் கேட்டது கிடைக்காது.

'அந்தப் புடவையெல்லாம் உனக்கு வேண்டாம் புள்ளே! அது பட்டணத்துச் சிங்காரிகள் கட்டிக்கிறப் புடவை. கண்ணாடிக் கணக்கா உடம்பெல்லாம் தெரியும். அப்புறம் அதை மறைக்க உள்ளே ஒரு பாவாடை, உள்ளே ஒரு சட்டை இப்படிக் கூடிக்கிட்டே போகும். உன் அழகை யார் பார்க்க வேணும்? நான் தானே? இந்தப் புடவையை நீ கட்டிக்கிட்டி நடக்கிற அழகு எனக்குப் போதும்' என்று சொல்லி அவள் கன்னத்தை நிமிண்டி விடுவார்.

ரொம்பச் சொல்லி, அவளுடைய பொழுது போக்கிற்காக ஒரு ரேடியோ பெட்டி வாங்கி வைத்திருந்தார். அதை அவர் மட்டும்தான் வைப்பார். அவள் தொட்டுத் திருகக்கூடாது. பாட்டு கேட்கிற வேளை அவருக்குத் தெரியும். அந்த நேரத்தில் அவர் வைக்கும்போது, அவள்கூட உட்கார்ந்து கேட்பாள். பாட்டு கேட்டபடி காரியங்களைச் செய்வாள். சினிமாப்பாட்டு அவளுக்கு ரொம்பப் பிடிக்கும். அவளே மெதுவாகப் பாடிக் காட்டுவாள். ரேடியோவில் கேட்கிற அளவு நயமாக இராது. ஆனால், அவ்வளவு தூரம் அவள் கற்றுக் கொண்டிருப்பதே அவருக்கு ஆச்சரியமாக இருக்கும்.

எப்போதாவதுதான் அவர்கள் சினிமா பார்க்கப் போவார்கள். அதுவும் டூரிங் டாக்கீஸில்தான். கோயம்புத்தூருக்குப் போய் சினிமா பார்க்கவேண்டும் என்று அவளுக்கு ஆவலாக இருக்கும். ஆனால், அவர் சம்மதிக்கமாட்டார். 'இரண்டுரூவா டிக்கட் வாங்கிப் படம் பார்க்க நாலு ரூவா செலவு பண்ணி பஸ்ஸில் போயிட்டு வரவா? அதெல்லாம் வாணும்!' என்று சொல்லி விடுவார். 'ஒரு சாயங்காலம் ஒரு ராத்திரி—இரண்டு படம் பார்த்திட்டாப் போச்சு' என்று சொல்லி அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டு தொங்குவாள். அவர் மசியமாட்டார். 'அதெல்லாம் உடம்புக்கு ஆகாது' என்று சொல்லிவிடுவார்.

அதுவும் உண்மைதான். அவர் அதிகம் படிக்கவில்லை. அதனால் கண்ணுக்கு அதிகம் வேலை இல்லை. சினிமா பார்ப்பதுகூட அபூர்வம்தான். இரவு வேளையில் கண்விழிப்பது இல்லை. அதனால் தானோ என்னவோ அந்த வயதிலும் கண்பார்வை பளிச் சென்று இருக்கிறது. இருட்டில் யாராவது நின்றால்கூட அடையாளம் கண்டு சொல்லிவிடுவார்.

நிலவு பால் தெளித்தாற் போல ஒளிர்ந்தது. உள்ளே விளக்கொளியில் வெறும் கட்டில் தெரிந்தது. படுக்கை, காலியாகக் கிடந்தது. அங்குதான் அம்மணி ஒருக்களித்துப் படுத்துக்கொண்டிருப்பாள். அவளுடைய தோள் குழைவும், சரிவும், உறையிலிட்ட கத்தியைப் போலப் புடவைக்குள் உடலின் விறுவிறுப்பும், இடுப்பின் அழகை எடுத்துக்காட்டும் ரவிக்கை முடிச்சும்...

அவர் சில சமயம் பிரமித்துப் போவார். இப்படி ஒரு அழகும் செருக்கும் தேகவாகும் கொண்ட பெண் அவருக்கா சொந்தம்? அந்தக் கட்டான உடலும், அதில் கிடைக்கும் தாங்க முடியாத இன்பமும் அவருக்கென்றே கிடைத்த சொத்தா? இருட்டில் அவள் உடல் அழகின் மேல் அவர் பார்வை திருட்டு வெள்ளோட்டம் விடும்.

கைகள் மேனி முழுவதும் விளையாடத் துடிக்கும். அவள் சிணுங்கிக்கொண்டே ஒதுங்கி அவரைக் கெஞ்ச வைப்பாள். அவருடைய கல்மனத்தையும் கசிய வைத்து, அவளுக்கு ஆசையாக இருக்கும் இரண்டொன்றை அவள் பிடுங்கி வாங்கிக்கொள்ளுவது அதைப்போன்ற இரகசியமான சிருங்கார வேளைகளில்தான்.

கட்டான இளமையும், அழகும் அவளுக்கு இருந்தன. அவளுக்கு முறுக்கான இளமைதான். சரியான ஜோடிப் பொருத்தம்தான். கல்யாணத்தின்போது பெரியவர்கள் பத்தும் பெற்றுப் பெருவாழ்வு வாழவேண்டும் என்றுதான் வாழ்த்தினார்கள். ஆனால், அப்படி ஒன்றும் நேரவில்லையே? மணம் செய்து கொண்டு ஆறு ஆண்டுகளாகியும் வயிறு திறக்கவில்லை. சென்னிமலை முருகனுக்கு நேர்ந்து கொள்ளாத வேண்டுதல் இல்லை. அவள் எடுத்துக்கொள்ளாத விரதம் இல்லை. ஜோசியம் பார்த்தவர்கூட நல்லவிதமாகத்தான் சொன்னார். ஆனால் எதுவும் நடக்கவில்லை. அவருக்கு அவளும், அவளுக்கு அவரும்தான் குழந்தையாக இருந்தார்கள்.

அந்த ஏமாற்றத்தில் தாம்பத்திய இன்பம்கூடச் சோர்வாகத்தான் இருந்தது. விளைச்சல் இல்லாத நிலத்தில் வெற்றாகப் பாடுபடுவதைப் போல ஒரு சலிப்புத் தட்டிற்று. ஆசையாக மார்பிறுகப் புல்லும் வேளைகளிலும் அவளுக்கு ஏதோ ஒரு மனக்குமுறல்தான் மிஞ்சும். விரல்களை ஒதுக்கிவிட்டுத் திரும்பிக் கொள்வாள். அவர்களுக்கென்று ஒரு குழந்தை? அப்படி இருந்திருந்தால் அவளும் அவருக்கென்று இருந்திருப்பாளோ? அப்படி அமையவில்லையே?

புதிதாக வாங்கிய மனையில் கட்டிடம் கட்டி ஒரு மில் ஆரம்பிக்கத் திட்டம் போட்டிருந்தார். அந்தப் பக்கம் கிராமங்கள் எதிலுமே நெல்லை அறைக்கும் மில் இல்லை. ஒன்று ஆரம்பித்தால் நிச்சயமாகப் பணத்தைக் கொண்டு வந்து கொட்டும். உட்கார்ந்த இடத்தில் சம்பாதிக்கலாம். கிடைக்கிற தவிட்டில் சிறு பண்ணையே வைக்கலாம். நாலு எருமைகள் வைத்துக் கொண்டால் பால்

பண்ணை நடத்திக் காசு சேர்க்கலாம். ஒன்றுக்கொன்று சாதகமாக முதல், குட்டி போடும்.

அப்படி மில் ஆரம்பிப்பதற்குத்தான் கோயம்புத்தூரிலிருந்து அந்த வாலிபனை வரவழைத்தார். சங்கரனுக்கு அதைப் போல மில்களில் வேலைசெய்த அனுபவம் உண்டு. அவனை வைத்துக் கொண்டு மில்லைத் தொடங்கிவைத்து, அவரே கொஞ்சம் நாட்கள் கூட இருந்து வேலையைக் கற்றுக்கொண்டுவிட்டால், அப்புறம் அவனிடம் சொற்பத்தொகை கையில் கொடுத்து அனுப்பிவிடலாம். அதுதான் அவருடைய திட்டம். அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் அவனிடம் ரொம்ப ஜாக்கிரதையாகவே பழகினார்.

சங்கரன் அவரைவிட நாலைந்து வயது சிறியவன். அவனுடைய பேச்சு, எளிமை எல்லாமே அவருக்கு ரொம்பப் பிடித்திருந்தன. காசை அனாவசியமாக விரயம் செய்யமாட்டான். விலைக்கு வாங்கவேண்டிய பொருளை வாடகைக்கு வாங்குவான். வாடகைக்குக் கிடைப்பதை நயமாகப் பேசிச் செலவில்லாமலே கொண்டு வந்து உபயோகித்துத் திருப்பிக் கொடுத்துவிடுவான். நாலு சட்டைதான் அவனுக்கு. ஆனால், எப்போதும் பளிச்சென்று இருப்பான். சோப்புச் செலவுகூட அதிகம் இல்லை.

அந்த வீட்டில் அவர்களோடுதான் தங்கியிருந்தான். காலையிலேயே எழுந்து கட்டிட வேலையைக் கவனிக்கப் போய்விடுவான். காலையில் அவரோடு இருந்து சிற்றுண்டி சாப்பிடுவதுகூட இல்லை. 'உங்களுக்கு ஸ்நானம் சீனம் எல்லாம் தேவை. அப்புறம் பூசை முடித்துச் சாப்பிடவேண்டும். அவ்வளவு நேரம் நான் காத்துக் கொண்டிருந்தால் வேலை தவக்கப்பட்டுப் போய்விடும். நான் பார்த்துக்கொள்ளுகிறேன்' என்று சொல்லிவிட்டுக் கிளம்பிப்போய் விடுவான்.

பண்டிகை நாட்களில்தாம் மதியச் சாப்பாட்டுக்கு அவருடன் வீட்டில் அமர்ந்து சாப்பிட வருவான். மற்ற நாட்களில் வேலை நடக்குமிடத்திலேயேதான் சாப்பாடு. அலுமினிய டிபன் பாக்ஸில் சோற்றைப் பிசைந்து வைத்து அனுப்புவாள் அம்மணி. அந்தச் சாப்பாட்டை இரவு, இலையில் உட்காரும்போது பக்குவமாக வருணித்துப் பாராட்டுவான் சங்கர். அவனுடைய ரசனையும் அதை அவன் தனக்காக வெளிப்படுத்தும் சாமர்த்தியமும் கவுண்டரையே வியக்கச் செய்யும்.

அவர் வேலையாக வெளியூர் போக நேர்ந்தால் சங்கரன் கட்டிட வேலை நடக்கும் இடத்திலேயே தங்கிவிடுவான். அவர் திரும்பி வரும் வரையில் வீட்டுக்கே வரமாட்டான். 'என்ன தம்பி நீ என்ன அந்நியமா? நான் இல்லாட்டிப்போனா என்ன? நீ வளக்கம் போல வந்து சாப்பிட்டு நிம்மதியாகப் படுத்துத்தூங்கிட்டுப் போக வேண்டியதுதானே?' என்று அவர் கடிந்து கொள்வார். அவன் பதில் சொல்லாமலே சிரித்துக்கொண்டு ஒதுங்கிப்போய் விடுவான்.

வேலை நடக்கும் இடத்திலேயே ஒரு சிறு கொட்டகை இருந்தது. படுக்க ஒரு மரப்பெஞ்சு இருந்தது. அவனுக்கு அவசியமான சாமான்களை ஒரு சிறு பெட்டியில் அங்கே வைத்துக் கொண்டிருந்தான். அங்கேயே கிணற்றடியில் குளித்துவிடுவான். அங்கேயே சாப்பாடு. அங்கேயேதான் தூக்கம்!

'எனக்கு அந்த இடமே போதும்! நீங்க தப்பா நினைச்சுக்குவீங்களேன்னுதான் இங்கே வீட்டுக்கு வரவேண்டி இருக்குது. எனக்கென்ன ஒண்டிக்கட்டை!' என்று சொல்லிக் கொள்வான். அவனுடைய ஒட்டுதலும் மனப்பக்குவமும் கவுண்டருக்குப் பிரமிப்பாக இருந்தது. அவரே கூடஇருந்து சாப்பிடச் செய்வார். அம்மணியை அவனுக்குக் கவனித்துப் பரிமாறச் சொல்லுவார்.

அனுவசியமாக அம்மணி, அவர்கள் பேசும் இடத்துக்குக் கூட வரமாட்டாள். தலைநிமிர்ந்து பேசமாட்டாள். அவள் வீட்டில் இருப்பதும்கூட கால்மெட்டி அசைவில் எழும் ஒலியிலிருந்துதான் தெரியும். அவர்கள் கண் காண வருவதும், காது கேட்கச் சிரிப்பதும்கூட இல்லை. 'என்ன அம்மணி? நம்ம சங்கரன்தானே! உனக்கு ஏன்ன ஆனாலும் அசாத்திய வேற்றுமைதான் போ' என்று கவுண்டர் செல்லக் காய்ச்சலாகக் காய்வார். அவள் தலையைக் குனிந்து கொண்டு அந்தண்டை போய்விடுவாள்.

சிலசமயம் சங்கரன் வேடிக்கையாகப் பேசுவான். அது அவள் காதில் விழுவது 'க்ளுக்'கென்று சிரிப்பு கேட்பதிலிருந்து தெரியும். அவள் முகத்தில் தெரியும் சிரிப்பைக் கவுண்டர் இரகசியமாகக் கவனிப்பார். அப்புறம் அவளுடன் தனியாக இருக்கும் வேளையில் அவரும் அதையே ஒரு வெறிக்களிப்புடன் சொல்லி, வேகமாகக் கிசுகிசுவென்று பேசுவார். சங்கரன் வந்த பிறகு அவருடைய சிருங்கார விளையாட்டுகளுக்குக்கூட ஒரு சொகுசு வந்துவிட்டது.

சங்கரன் எப்போதாவது திருப்பூருக்குப் போவான். அவருக்குப் பனியன் வாங்கிக்கொண்டு வருவான். காசு வாங்கிக் கொள்ளமாட்டான். அம்மணிக்கு ஏதாவது வாங்கிவருவான். அதையும் அவளிடமே கொடுப்பான். நேரடியாகப் பேச்சு இல்லை. அதைச் சாக்கிட்டுப் பழகும் நோக்கமும் இல்லை. அந்தக் கண்ணியமும் பெருந்தன்மையும் அவருக்கு ரொம்பப் பிடிக்கும்.

மில் கட்டிடம் வளர்ந்து முடிந்துவிட்டது. மிஷினைக் கூட வாங்கிப் பொருத்தியாகிவிட்டது. வேலையைத் தொடங்க எல்லாமே தயாராகிவிட்டது. உறவுக்காரர்களை அழைக்கச் சென்னிமலைக் கவுண்டர், ஈரோட்டுக்குப் புறப்பட்டுப் போனார். 'திரும்பி வர நாலு நாட்களாகும். ஜாக்கிரதை! வீட்டில் பணம், நகை, நட்டு எல்லாம் இருக்குது. கவனமாக இரு' என்று சொல்லி அம்மணியை எச்சரித்துவிட்டுப் போனார்.

அவர் திரும்பிவந்தபோது வீடு பத்திரமாக இருந்தது. நகை, நட்டு, பணம் எல்லாம் அப்படியே இருந்தது. எதுவுமே காணமற் போகவில்லை — அம்மணியைத் தவிர! வாசல் பூட்டி இருந்தது. உள்ளே வந்து பார்த்தபோது மேசைமேல் ஒரு கடிதம் வைத்திருந்தது. அது பறக்காமல் இருக்க மேலே ஒரு கல்லையும் வைத்திருந்தாள். அதைப் பார்க்க அவருடைய நெஞ்சில் கல் வைத்தது போலத்தான் இருந்தது.

'எனக்கு உங்க பணம், சொத்து எதுவும் வேண்டாம். உங்களோடு இத்தனை வருடங்கள் வாழ்ந்தேன். எனக்கு நீங்கள் போட்ட சோற்றுக்கும், தங்கக் கொடுத்த நிழலுக்கும், உடம்பால் உழைத்தாயிற்று. உடம்பையும் நீங்கள் அனுபவித்தாயிற்று.

உங்களுக்காகவே வாழ்ந்தேன். இனிமேல் எனக்காக வாழ வேண்டும் என்று ஒரு ஆசை எனக்கு வந்தாயிற்று. இனிமேல் அதை அணை போட்டுத் தடுக்க என்னால் முடியாது.

நான் கிளம்பிப் போகிறேன். நீங்கள் எனக்கு வாங்கிக் கொடுத்தப் புடவை, நகை எல்லாம் அப்படியே பத்திரமாக இருக்கிறது. நான் கட்டினப் புடவையுடன் வெளியேறிப் போகிறேன். உங்களுக்கு இஷ்டமானப் பெண்ணைக் கட்டிக்கொண்டு சௌக்கியமாக இருங்கள். அதிருஷ்டம் இருந்தால் அவளுக்காவது ஒரு குழந்தை பிறக்கட்டும். நான் எனக்கு இஷ்டமானவருடன் போகிறேன். என்னைத் தேட வேண்டாம்... நான் போனது உங்களுக்கு அப்படி ஒன்றும் பெரிய நஷ்டம் இல்லை...'

அம்மணி சங்கரனுடன் ஓடிப்போய்விட்டாள். இரண்டு பேரும் அவர் கண்ணை மறைக்க, அத்தனை நாட்களும் பேசிய விதமும், பழகிய முறையும், பவ்வியமாக நடந்து கொண்டதும், அடக்கமாக வாழ்ந்ததும் – எல்லாமே ஒரு நாடகம்! அவருடைய பணம் பத்திரமாக இருந்தது. பெயர்தான் பறிபோய்விட்டது. அவரால் தலை தூக்க முடியவில்லை. கட்டின மில்லைத் தொடங்காமல் அப்படியே செலவழிந்த பணத்துக்கு விற்றுவிட்டார்...

நடந்ததையெல்லாம் நினைத்து ஒருமுறை பெருமூச்சு விட்டார் கவுண்டர். ஆசையாக களைப்பாற்றின மனைவியை ஓடிப்போக விட்டுவிட்டுப் பைத்தியமாக நின்றவனைக் காலையில் பஸ் ஏறும்போது பார்த்த ஞாபகம் வந்தது. நல்ல வேளையாக அவருக்கு அப்படிப் பைத்தியம் பிடிக்கவில்லை!

# 3

கவுண்டர் காட்டின் கரைமேட்டிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தார். சாலையோரம் புளியமரங்களில் நீளநீளமான புளியம்பிஞ்சுகள் அசைந்து கொண்டிருந்தன. பாவாடையைத் தூக்கிச் செருகிக்கொண்டு, நீண்ட தொரட்டிகளால் சிறுமிகள் புளியம்பிஞ்சுகளை அடித்து வீழ்த்திக் கொண்டிருந்தார்கள். குடை அத்திமரத்தின் நிழலில் பையன்கள் செதுக்குமுத்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

வள்ளியும் அதைப் போல விளையாட்டுத் தனமாகக் குதிப்பதைக் கவுண்டர் பார்த்திருக்கிறார். கயிற்றை இரு கைகளிலும் நுனியில் பிடித்துக்கொண்டு 'தம் தம்' என்று உயரே எழும்பிக் கால் சிக்காமல் குதிப்பாள். சிறு பெண்ணானாலும் கட்டுக்கடங்காத வளர்ச்சி அவளுக்கு. அப்படி அவள் குதிக்கும்போது அழகு முன்னும் பின்னுமாகக் கண்ணைப் பறிக்கும்.

காட்டுக்கு அவள் ஆடுகளை ஓட்டிக்கொண்டு வரும் அழகே தனியாக இருக்கும். அவற்றுக்கு நடுவே மான்குட்டியாகத் துள்ளித் துள்ளி மூலைக்கு மூலை ஓடுவாள். முழங்கால்வரை உயர்த்தியப் பாவாடையும், அதன் கீழே தெரியும் கால்களின் கடைந்தது போன்ற அமைப்பும் பார்வையைக் கவர்ந்து இழுக்கும். இத்தனைக்கும் அவள் பன்னிரண்டு வயதுப் பெண்தான். இன்னும் பருவ அழகு பூரணமாகப் பொலியவில்லை.

நாட்கள் செல்லச் செல்ல அந்தத் துள்ளு நடைக்கும், குறும்புப் பார்வைக்கும் புது அர்த்தங்கள் தெரிய ஆரம்பித்து விட்டன. திடீரென்று ஒரு உயரம் வந்துவிட்டது. உடம்பில் அந்தப் பழைய சோற்றின் ஊறலுக்கும் ஒரு சதை பிடித்துக்கொண்டு விட்டது. கல்லுரலுக்கு முன்னால் அமர்ந்து மாவாட்டினாலும், குனிந்து வீட்டுத் தரையைப் பெருக்கினாலும் தனி அழகு குலுங்கும்.

வள்ளி அதைப் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. ஏனெனில் அவளுக்குத் தன் வளர்ச்சியைப் பற்றிய உணர்ச்சியே இல்லை. அவள் தந்தைக்கு அவள்தான் மகனும்கூட. ஆண்பிள்ளைகள் செய்கிற காரியங்களைக்கூட அவளே அலட்சியமாகச் செய்வாள். பசுமாட்டின் பாலைக் கறப்பாள். குதிரில் உயரே ஏறி நெல்லைக் கொட்டுவாள். ஏணியை வைத்துக்கொண்டு ஏறி நின்று சுவருக்கு வெள்ளையடிப்பாள்.

'காளி! இந்தா, உன் பெண்ணிடம் கொடு' என்று ஒரு தடவை அவர் திருப்பூரிலிருந்து வாங்கிவந்த இரண்டு மேலாடைத் துணிகளைக் கொடுத்தார். 'இதெல்லாம் எதுக்குங்க?' என்று அறியாத பாவனையில் கேட்டான் காளி. அவருக்குச் சிரிப்பு வந்தது. அவனால் தன் பெண்ணை, அப்பனாகத்தான் பார்க்க முடிந்தது. அவளையும் ஒரு சிறுவனைப் போலவே தான் எண்ணிக் கொள்ள முடிந்தது. அதனால்தான் அவளுடைய பருவப்பூரிப்பு அவன் கண்களை உறுத்தவில்லை. ஊரில் உள்ள காளைகளின் கண்ணில் படாமல் இருக்குமா?

அந்த மேலாடைகளை மாற்றி மாற்றி மிகுந்த பெருமையுடன் அணிந்து கொள்வாள் வள்ளி. கவுண்டருக்கு மதிய நேரத்துக்குச் சாப்பாடு கொண்டுவந்து காட்டில் உள்ள வீட்டுத் திண்ணையில் இலைபோட்டுப் பரிமாறுவாள். அவள் தலையில் வட்டமாகச் சுருண்டு சும்மாடாக மாறி இருந்த துகில் அப்போது அவள் தோளில் துண்டு போலத் துவண்டு மாலையாக ஆகும். கவுண்டர் ஒரு கணம் அசந்து போய் நிற்பார். கனியவும் முடியாமல் காயாகவும் புளிக்காமல் இருந்த அழகு அது.

பிற்பகல் அங்கேயே தங்கியிருந்து ஆப்பம் வார்த்துக் கொடுப்பாள். சுக்கு மல்லிக் காப்பி போட்டுக் கிளாஸில் ஊற்றிக் கொடுப்பாள். வாங்கி உறிஞ்சிக்கொண்டே அவள் மேலாடைத் தலைப்பில் செய்கிற விஷமங்களைச் சுவாரசியமாகப் பார்ப்பார் கவுண்டர். இடுப்பில் செருகியிருந்த சுருக்குப் பையிலிருந்து அவள் பாக்குத் துண்டத்தை எடுத்து வாயில் அடக்கிக் கொள்ளும்போது அந்தச் சின்ன இடையில் கொஞ்சுகிற அழகைப் பார்ப்பார்!

'சாமி என்ன அப்படிப் பார்க்குறீங்க? பாக்கு வேணுமா?' என்று கேட்டுக் கையை நீட்டுவாள் வள்ளி. கவுண்டர் ஒரு துண்டை எடுத்து வாயில் போட்டுக் கொள்ளுவார். மரத்திலிருந்து பறித்துப் பசுமை சாய்வதற்குள் பச்சைத் தோலைச் சீவித் துண்டுப் போட்ட பாக்கு அது. அதன் துவர்ப்பே அலாதியாக இருக்கும். வள்ளியின் கனியாத இளமையிலும் அப்படி ஒரு ருசி தெரியும் கவுண்டருக்கு. அதை விளையாட்டாக ரசிப்பார்.

மாலை வேளைகளில் சில சமயம் அவர் காலாற நடந்து போகும் போது வள்ளி கூடவே துணைக்கு வருவாள். கால்கள்

பூமியில் பதிந்து நிற்காது. சலங்கை கட்டிய இளம் கன்றைப் போலப் பாதங்கள் கொலுசு சத்தத்துடன் குதிபோடும். ஆங் காங்கே சிறுபொருட்களைப் பார்த்தாலும் வியப்பில் சின்ன விழிகள் பளிச்சிடும். கிணற்றில் தண்ணீர் இறைப்பவர்கள் பாட்டில், பார்வை லயித்துப் போய் நின்று விடும்.

அவளை அழ வைப்பதுகூட அவருக்கு வேடிக்கைதான். அவளுடைய சுருக்குப் பையை மறைத்துவிடுவார். குஜ்ஜிலிப் பொட்டுக் கிண்ணத்தை ஒளித்துவிடுவார். அவள் கலங்கி அழுவது அவருக்கு வேடிக்கையாக இருக்கும். ஒன்றும் இல்லாவிட்டால் ஓசைப்படாமல் கிள்ளிவிட்டு அழவைப்பார். அது வலிக்காத செல்லக் கிள்ளுதான். பால் சதையில் விரல்கள் மெதுவாகப் பதிய சுவாரசியமாகப் அனுபவித்துக் கிள்ளுவார்...

குடையும், கையுமாக வரப்பில் நின்று அவர் வேலை வாங்கிக் கொண்டிருப்பார். சாப்பாட்டுப் பாத்திரங்களைக் கூடை யில் அடுக்கி வைத்து விட்டு வீட்டுக்குப் போகக் காத்துக் கொண் டிருப்பாள் வள்ளி. அவளுக்குப் பொழுது போகாது. செங்காவிக் கட்டியால், தரையில் கோடு போட்டுப் பாண்டி ஆடுவாள். காலை உயர்த்திக் குதித்துக் குதித்துப் பாண்டி ஆடுவாள். அப்போது அவளுடையச் சின்ன இடை கதைகள் சொல்லும். பழைய மோரைப்போல அந்த அங்க அசைவுகளில் ஒரு விறுவிறுப்பான ருசி தெரியும்.

சனிக்கிழமை கவுண்டருக்கு எண்ணெய்க் குளி நாள். அன்று காலையில் எழுந்து நீராகாரம் சாப்பிட்டுவிட்டு மனையில் உட்கார்ந்து கொண்டு, நிதானமாக வால் கரண்டியிலிருந்து எண் ணெயை எடுத்துத் தலையிலும் உடம்பிலும் தடவிக் கொள்ளுவார். கசடுகூட வீண் போகாமல் மார்பிலும், புஜத்திலும் தடவிக் கொள்ளுவார். அவருடைய கறுப்புக்கும் எண்ணெய்ப் பசைக்கும் பிரமாதமாக ஜொலிக்கும். பின் வராந்தாவில் அந்தக் கோலத் திலேயே இடுப்பில் கோவணத்துடன் உலவுவார்.

அவர் அப்படி நடப்பதைப் பார்த்துக்கொண்டே வள்ளி வீடு பெருக்குவாள்; பாத்திரங்களைத் தேய்ப்பாள். அவருக்குச் சுடு தண்ணீர் போடுவாள். சீயக்காயை விழுதாக அரைத்து வைப் பாள். சினிமாப்பாட்டை முணுமுணுத்துக் கொண்டே அவருடைய வேட்டி, மேல் துண்டு எல்லாவற்றையும் கொடியில் கொண்டு வந்து உலர்த்துவாள்.

அவரை உட்கார வைத்து முதுகுக்கு எண்ணெய்த் தேய்த்து நீவிவிடுவதும் வள்ளிதான். முதுகுக்குச் சீயக்காய் தேய்த்து விடுவதும் அவள்தான். அந்த நேரங்களில் கூச்சமே இராது. பொம்மையுடன் விளையாடுவதைப் போலத்தான் இருக்கும். இடுப் பில் விரல்படும்போது சிரிப்பு முட்டிக்கொண்டு வரும். 'இந்தா புள்ளே! சிரிப்பு மூட்டாதே' என்று பல் தெரியச் சிரிப்பார். அந்தக் கறுப்புக்கும் வெள்ளைக்கும் பொருத்தமான காட்சியைப் பார்த்து அவளுக்கு இன்னும் அதிகமாகச் சிரிப்பு வரும்.

வாய்க்குள் சிரித்துக் கொண்டே சீயக்காயை எடுத்து அப்படித் தேய்ப்பாள். இளஞ்சூடாக இருக்கும் வெந்நீரை எடுத்துச் சுகமாக மெதுவாக முதுகில் ஊற்றித் தேய்ப்பாள். மேல்மூச்சு வாங்கப் 'போதுமா சாமி' என்று எதிரே வந்து நிற்பாள்.

சாயங்கால மஞ்சள் வெயில், நீரின் மேல் விழுந்து முலாம் பூசி அலையாடுவதைப் போல, அந்தச் சோர்விலும், வியர்வை பூத்த நெற்றியிலும் ஒரு அழகு பசுமையாகத் தெரியும்.

திடீரென்று ஒருநாள் அவள் முதுகு தேய்ப்பது நின்று விட்டது. மாலை வேளையில் துணைக்கு நடந்து வருவது நின்றுவிட்டது. சாப்பாடு போடும்போது அவரைத் தொடுகிற சுவாதீனம் நின்று போய்விட்டது. அது, அவள் மேலாடை அணியத் தொடங்கி ஒரு ஆண்டு கழிந்தப் பருவம்.

அவருக்கே புரிந்துவிட்டது. காளியிடம் கேட்கவில்லை. அவனே மூன்றாம் நாள் வள்ளியை மஞ்சள் நீராடிக் குளிக்கச்சொல்லி புதுப்பாவாடையும், மேலாடையும் அணியச் சொல்லி, தலை நிறையப் பூவுடன், அவருடைய காலில் விழுந்து வணங்கச் செய்தான். 'புள்ளைக்கு ஆசீர்வாதம் பண்ணுங்க.. அவ வயசுக்கு வந்துட்டா—' என்று இளகும் குரலில் சொன்னான். வள்ளியின் தாயை ஒரு நிமிடம் நினைத்துப் பார்த்துக் கொண்டான் போலிருக்கிறது.

அப்புறம் இரண்டு ஆண்டுகள் கழிந்துவிட்டன. இப்போது வள்ளிக்குப் பதினைந்து வயது. பண்டிகை நாட்களில் புடவை கூடக் கட்டிக் கொள்ளுகிறாள். பின்புறம் கொசுவம் வைத்துக் கட்டிக்கொண்டு அவள் நடப்பதைப் பார்க்கும்போது வேடிக்கையாகக்கூட இருக்கிறது...

கவுண்டர் பெருமூச்சுவிட்டார்.

சிறுமிகள் புளியங்காயை அடித்து மூட்டை கட்டிக் கொண்டு போய்விட்டார்கள். பையன்கள் குச்சியும், கையுமாக ஆடுகளை விரட்டிக்கொண்டு திரும்பிவிட்டார்கள். பிற்பகல் சாப்பிட்ட ஆட்டுக்கொழுப்புக் குழம்பும், ஏரு வறுவலும் ஏப்பமாக எதிர்த்து வந்தது. வள்ளியின் சமையலில் ஒரு பக்குவம் வந்துவிட்டது, அவள் அழகுக்கு ஒரு பக்குவம் வந்துவிட்டதைப்போல.

கிணற்றுத் தண்ணீரிலேயே குளித்துவிட்டு, ஈரவேட்டியை இடுப்பில் கட்டிக்கொண்டு, கவலை மாடுகளை ஓட்டிக்கொண்டு போகிற குடியானவனைப் பார்த்தார் கவுண்டர். பின்னாலேயே குடியானவப்பெண் கலயமும் கூடையுமாக நடந்துபோகிற சொகுசையும் பார்த்தார். நாள் முழுவதும் உழைப்பு. மாலை வேளையில் இப்படி ஒரு சிருங்காரம். இரவு சாப்பாடு முடிந்து அலுப்புத்தீர அனுபவிக்கும் சரசம். எவ்வளவு நிம்மதியான, ரசித்துச் சுவைக்கிற வாழ்க்கை அவர்களுடையது? அவருக்கு ஏன் அப்படி ஒரு வாழ்க்கை அமையவில்லை? பணம் இருக்கிறது. மரியாதை மதிப்பு எல்லாம் இருக்கிறது. ஆனால், அனுபவிக்கத்தான் கொடுத்து வைக்கவில்லை.தோளில் மார்பு பதிய அம்மணி பின்னால் வந்து அணைத்த சுகம் நினைவுக்கு வரும்போது நெஞ்சில் அலை புரளுகிறது. தூக்கம் கலைந்து உடம்பும் அலைபாய்ந்து புரளுகிறது. சங்கரன் பிடியில் அவள் இருப்பாள் என்ற நினைப்பு வந்தால் உடம்பு கொதிக்கிறது. நெஞ்சு சுடுகிறது...

பெரிய மனசு வந்து கவுண்டர் காளிக்குக் கொஞ்சம் வசதி செய்து கொடுத்துவிட்டார். அவன் பெயருக்கு ஒரு ஏக்கரா புன்செய் எழுதி வைத்துவிட்டார். ஒட்டிய தோட்டத்தில் இருந்த ஓலை வேய்ந்த குடிசைக்குக் கள்ளிக்கோட்டை ஓடு போட்டுக்

கொடுத்துவிட்டார். பொங்கல் பண்டிகைக்கு ஒரு சரிகைக்கரை போட்ட வேட்டியும், மேல்துண்டும்கூட எடுத்துவைத்தார். அதை வாங்கிக்கொண்டபோது காளிக்குத் தாங்காத பெருமை.. சிரிப்பில் பல், கோடிக்குக் கோடி தெரிந்தது.

வள்ளிக்கும் இரண்டு பட்டுச் சேலைகள் கொடுத்தார். அம்மணி விட்டுவிட்டுப்போன சேலைகள்தாம். பீரோவில் அவற்றைப் பார்க்கும்போது வயிற்றெரிச்சலாக இருந்தது. வள்ளியாவது மகிழ்ச்சியுடன் கட்டிக்கொள்ளட்டுமே? தேங்காய் முடி, மஞ்சள், வெற்றிலைப்பாக்கு, பூவுடன், தட்டை அவர் கையில் கொடுத்துத் தரையில் விழுந்து வணங்கினாள் வள்ளி.

''பூவும் மஞ்சளுமாகக் கணவனோடு ரொம்ப நாள் இருக்கவேணும்.''

பளீரென்று முத்துப்பற்கள் தெரியச் சிரித்தாள் வள்ளி. அதில் நாணமும் கொஞ்சம் கலந்திருந்தது. முகத்தில் வெட்கமும் சந்தோஷமும் குழம்பி நின்றன.

''சாமி கிண்டல் பண்ணக்கூடாது'' என்றாள் கால் நகத்தால் தரையைக் கீறிக்கொண்டே.

''இதுலே கிண்டல் என்ன வள்ளி? வயசுப்புள்ளே நீ... காலாகாலத்துலே கல்யாணம் நடக்கணும். குழந்தை குட்டிகள் பெத்துக்கணும். நான் பார்க்கணும். உன் அப்பனைப் போல, என்னைப் போல எல்லோரும் ஒத்தை மரமா நிக்கணுமா வள்ளி?''

கேட்கும்போதே அவளுக்குக் குரல் குழைந்தது. என்னென்னவோ நினைவுகள் நெஞ்சில் கீரலாக விழுந்தன. அம்மணியின் உடற்கட்டுக்கும் நிறத்துக்கும் அவளுக்கு ஒரு பெண் பிறந்திருந்தால் அழகாக இருந்திருப்பாள். அவருக்குக் கொடுத்துவைக்கவில்லை. அவளுக்குக் குழந்தை பிறக்காமலா இருக்கும்? அந்தக் கொள்ளை அழகை அனுபவிக்காமல் சங்கரன் சும்மா விட்டு வைத்திருப்பானா?

அந்தரங்கம் என்று வந்துவிட்டால் அம்மணி கூச்சமே படமாட்டாள். கையைப் படுக்கை ஒட்டில் தலையணையாக வைத்துக் கொண்டே அவரிடம் இழைந்து பேசுவாள். ஒரு குழந்தை வேண்டும் என்று அவளுக்குக் கொள்ளை ஆசை. அது மனத்திலிருந்து பிய்த்துக் கொண்டு வரும்போது வெட்கமறியாது. அழகை விளம்பரப் படுத்துகிறவள், நாட்டியமாடுகிறவள் — இவர்களைப்போல அவள் கூச்சமும் எங்கேயோ மறைந்துவிடும். அந்த அழகுக்கும் அப்படி ஒரு துணிச்சல் பொருத்தமாகவே—கவர்ச்சியாகவே இருக்கும். அவர் அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லையே...? அந்த மடி, இப்போது சங்கரனுக்கல்லவா சொந்தம்?

''வீட்டுக்குப் போகலாமா சாமி?'' என்று வந்து நின்றான் காளி. இருள் விழுந்துவிட்டது. இருவருமாகக் கிளம்பினார்கள். வழியில் டூரிங் டாக்கீசில் உரக்கப் பாட்டுக் கேட்டுக் கொண்டிருந்தது. மின்சார விளக்குகள் தோரணமாகத் தொங்கின. இன்னும் கூட்டம் சேரவில்லை.

''புதுசாப் படம் வந்திருக்கு சாமி. வள்ளிகூடப் போவணும்னு சொன்னா...'' என்றான் காளி, தலையைச் சொறிந்து கொண்டே.

''முன்னுலேயே சொல்லியிருக்கப்படாது? சீக்கிரமாகக் கிளம்பி வந்திருக்கலாமே?'' என்ருர் கவுண்டர் இடுப்பு பெல்டைத் தடவிக்கொண்டே.

''என்ன அவசரம் சாமி? எட்டுமணிக்குத்தானே ஆட்டம். வீட்டுக்குப் போய் சோறு தின்னுப்புட்டுக் கிளம்பலாம். வள்ளித் தயாரா இருப்பாள்'' என்ருன் காளி. பார்வை ஜாடையாகக் கவுண்டரின் கையை கவனித்தது. கவுண்டர் பெல்ட்டில் இருந்த பையைத் துழாவி இரண்டு ரூபாயும் இரண்டு கால் ரூபாய்களையும் எடுத்துக் கொடுத்தார்.

''டிக்கட்டுக்கு வச்சுக்க! வள்ளிக்குக் கலர் வாங்கிக் கொடு'' என்ருர்.

வீட்டுக்கு வந்து அரிக்கேன் விளக்கை எடுத்து வைத்துச் சாப்பிட்டு, கதவைத் தாழிட்டுக் கொண்டு வள்ளியுடன் கிளம்பி விட்டான் காளி. வாசலில் அவள் இறங்கிப் போவதைக் கவனித்தார் கவுண்டர். வாய் நிறைய வெற்றிலேயும், கொண்டை போட்ட கூந்தலில் கதம்பமுமாகப், புதுப்புடவை மொடமொடக்க நடந்து போனுள் வள்ளி. கணுக்காலில் இருந்த கொலுசு, நடையின் துள்ளலில் பாட்டுப் பாடிற்று.

அவருக்கும் சினிமா பார்க்க ஆசைதான். அம்மணியுடன் சென்று எப்போதாவது சினிமா பார்ப்பது உண்டு. உள்ளூரில் அந்தக் கூட்டத்துக்கு நடுவில் உட்கார்ந்து பார்ப்பது மரியாதை இல்லே என்று இப்போது அவருக்குத் தோன்றியது. மீறிப் போனுலும் அவர்களோடு உட்கார முடியாதே? தனியாக அப்படி உட்கார்ந்திருக்கச் சினிமாவுக்குப் போவானேன்? மொட்டை மாடியில் துண்டை விரித்துப் படுத்துக் கொண்டிருந்தால் போதுமே!

**பு**கையிலே விற்ற பணம் வந்திருந்தது. கட்டுக்கட்டாக எண்ணி பாங்கில் போடப் பையில் வைத்துக் கொண்டிருந்தார் சென்னிமலேக் கவுண்டர். தூணேரம் கையைக் கட்டிக்கொண்டு நின்றபடி தலேயைக் குனிந்து கொண்டிருந்தான் காளி.

''காளி! உனக்கு ஒரு யோசனே...!''

'என்ன...?' என்று கேட்பதைப் போல நிமிர்ந்து பார்த்தான் காளி.

''உன் பெயரிலே இரண்டாயிரம் ரூபாய் பணம் பாங்கில் போட்டு வைக்கப் போறேன். நீ என் கூட வா. நான் ஏற்பாடு செய்யுறேன். இப்பவே போலாம்'' என்ருர் கவுண்டர்.

''எனக்கு எதுக்குங்க அதெல்லாம்? ஐயாகிட்டே இருந்தா எனக்கும் இருந்தமாதிரிதான்; அதுபோதும்...''

''அப்படி இல்லே காளி. நீ பணம் போட்டு வச்சுக்கணும். மவ வளர்ந்துகிட்டு வரா. அவளுக்கு ஒரு கலியாணம் கார்த்தின்னு செய்யவேண்டாமா..? அதுக்குப் பணம் வேண்டாமா? இப்பவே ஆரம்பிச்சாத்தான் நாலேஞ்சு வருசத்திலே பணம் சேரும். நீ கையெழுத்துக்கூட போடவேணும். கைநாட்டு போதும். நான், கூடக் கையெழுத்துப் போடுறேன்.''

''அதெல்லாம் வாணுங்க.. என்னை நினைச்சு நீங்க உங்க கணக்கிலேயே வச்சுக்குங்க... வேளை வர்றப்போ உங்க கையிலிருந்தே வாங்கிக்கிறேன். வள்ளிக்கிட்டே உங்களுக்கில்லாத அக்கறையா? நானு அவளைக் காப்பாத்தப் போறேன்? நான் உழைச்சுப் பிழைச்சுக்குவேன். இந்தக் கட்டை எம்பது வயசுவரை சாயாது'' என்று சொல்லிவிட்டு ஒதுங்கிக்கொண்டான் காளி. கவுண்டரும் அதற்கு மேல் வற்புறுத்தவில்லை.

இருந்தாலும் பணம்போடும்போது 'இது காளியின் கணக்கு' என்று மானசீகமாக எண்ணிக் கொண்டார். வள்ளிக்குக் கல்யாணம் என்று வரும்போது அவன் கையில் தொகையாகவும், கடனுகவும் கொடுக்க வேண்டி இருக்கும். உடல் உழைப்பிலேயே பணத்தைத் திருப்பிவிடுவான் காளி. அந்த உரம் செறிந்த உடலுக்கு இன்னும் எத்தனையோ ஆண்டுகள் உழைக்கக்கூடிய வலு இருந்தது.

அவர் அப்படித்தான் எண்ணிக் கொண்டிருந்தார். காளிக்கும் ஓர் அசாத்தியமான தன்னம்பிக்கை இருந்தது. ஆனல், கடவுள் அப்படி நினைக்கவில்லையே...!

தோட்டத்துக் கிணற்றைத் தோண்ட வெடி வைத்துக் கொண்டிருந்தார்கள். அடியில் கெட்டியான பாறை, கொஞ்சம் கொஞ்சமாகத்தான் தகர்க்க வேண்டியிருந்தது. காளி கூடவே இருந்து வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

அந்த வெடிச் சற்று எதிர்பாராமல் முன்னதாகவே வெடித்துவிட்டது. சிதறித்தெறித்த பாறை, உயரே பறந்து வந்தது. வெடியைக் கவனிக்க வந்த காளியின் மண்டையில் வேகமாக வந்து தாக்கிற்று. 'குபுகுபு'வென்று இரத்தம் பொங்க அங்கேயே காளி வெட்டிய மரமாய்ச் சாய்ந்துவிட்டான்.

திருப்பூருக்கு வண்டியில்தான் போட்டுக்கொண்டுபோக வேண்டியிருந்தது. கவுண்டர் கூடவே போனர். வழியிலேயே ஏகமாக இரத்தச் சேதம். ஆஸ்பத்திரியில் இரண்டுநாட்கள் சுயநினைவில்லாமல் கிடந்தான். விடியற்காலை நேரத்தில் திடீரென்று தலை தொங்கிவிட்டது.

உடலை எடுத்துக் கொண்டு கிராமத்துக்குத் திரும்பி வந்தார் கவுண்டர். அவருக்கே நெஞ்சு பொறுக்கவில்லை. குமுறிக்குமுறி அழுதார். வாயில் துண்டை வைத்து மூடிக்கொண்டாலும் விம்மல் தெறித்து வந்தது. நிமிர்ந்து பார்க்கவே தெரியவில்லை.

''சாமி! எங்கப்பன் என் தலையிலே கல்லைப்போட்டுப் புட்டுப் போயிட்டானே...'' என்று அலறிக்கொண்டே வந்து அவர் மீது சாய்ந்துவிட்டாள். துக்கம் பொங்கிய வேகத்தில் உடம்பு அலை அலையாக எழுந்து அடங்கிற்று. கண்ணீர் வடிந்த கன்னங்கள் இரண்டையும் தடவிக்கொடுத்தார். முதுகைத் தடவிக்கொடுத்து, மாலையாக மார்பில் துவண்ட உடலை ஆறுதல் சொல்லி அணைத்தார்.

''நான் பார்த்துக்குறேன் வள்ளி. உனக்கு ஒரு சங்கடமும் வராது. நான் இருக்கிறேன் வள்ளி'' என்று சொல்லி முகவாயைத் தூக்கி முதுகில் தட்டி, ஆறுதலாக மனசைத் திறந்து கொட்டினர் கவுண்டர்.

''சாமி! நீங்க இத்தனைப் பிரியம் வச்சிருக்கீங்கன்னு எனக்குத் தெரியாது. இப்பத்தான் தெரிஞ்சுது அது. உங்களுக்கு இத்தனை நாளா அதைக் காண்பிக்கத் தெரியலே, இப்போ இப்படிக் காண்பிக்கிற மாதிரியாச்சே? அட தெய்வமே?!'' என்று பொங்கிப் பொங்கி அழுதாள் வள்ளி.

கவுண்டரின் கண்களிலிருந்து நீர்த்துளி உருண்டது. அந்தத் துளியில் அவருக்கு வள்ளி இழந்துவிட்ட உலகம் அவ்வளவும் தெரிந்தது. ''உனக்கு இனிமே நான்தான் எல்லாம்'' என்று சொல்லிக் கொண்டார். குலுங்குகிற முதுகை, தலையைத் தடவிக் கொடுத்தார். அந்த உள்ளங்கை, அவர் வாயால் சொல்லுகிற சமாதானத்தையும் மிஞ்சி அன்பைப் பொழிந்தது...

# 4

கொஞ்சம் கொஞ்சமாக வள்ளி, அந்தத் தனி வாழ்க்கைக்குப் பழகிக் கொண்டுவிட்டாள் பங்களாவின் பின்புறம் தனி வீட்டில், அப்பாவின் நினைவே துணையாகக் குடி இருக்கவும் சாப்பிடவும், தூங்கவும் தன்னைப் பழக்கப்படுத்திக்கொண்டுவிட்டாள். காளி மறைந்து போனதிலிருந்து அவன் உயிரைவிட்ட ஒவ்வொரு வெள்ளிக்கிழமையன்றும் மாடத்தில் விளக்கேற்றி வைத்துக் கும்பிடுவாள். அவன் கடைசியாகப் படுத்துக் கொண்டிருந்த இடத்தில் தினமும் குனிந்து தரையை ஒற்றிக் கொள்வாள். அப்பனின் நினைவாகச் சுவரில் காவிப்பொட்டு வைத்துக்கொண்டு வருவாள். ஒவ்வொரு வெள்ளிக்கிழமைக்கும் ஒவ்வொரு பொட்டு...

இருபது பொட்டுக்கு மேல் ஓடிவிட்டது. காளி மறைந்து போய் ஐந்து மாதம் நழுவிவிட்டது. அந்தத் தனிமையும் அவளுக்கும் பழக்கமாகிவிட்டது. கவுண்டர் மனைவி போனபிறகு எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்பது அவளுக்கு இப்போதுதான் புரிந்தது. ஒரு துணை இல்லாத வாழ்க்கை என்ன வாழ்க்கை? வெறிச்சோடிப் போன நினைவுகள் மட்டும் இருந்துகொண்டு, அவற்றைக் கைகூட்டி வைக்கும் வாய்ப்பு இல்லாத வாழ்க்கை, பயங்கரமானதுதான்.

கவுண்டருக்காவது இளமை முடிகிற பருவம். அவளுக்கு இனிமேல்தான் எல்லாமே பாக்கி இருந்தது. அந்த இளமையையும், அழகையும் எப்படிப் பத்திரமாகக் கட்டிக் காப்பது? நினைத்தாலே பயமாக இருந்தது. வெளியே போகாமல் இருக்க முடியவில்லை. பிறருடன் சேர்ந்து வேலை செய்யாமலும் இருக்க முடியவில்லை. அவளுடைய அழகும் வாளிப்பும் அப்படிப் போகும்போது ஒவ்வொருவரையும் கவர்ந்து இழுப்பதுபோல அவளுக்குத் தோன்றிற்று. அதுவே அவளுக்குப் பயமாகவும் இருந்தது.

கழனியில் இறங்கி நாற்றுப் பிடுங்கிக் கொடுத்தால்கூட வேலை செய்யும் ஆள் கைவிரலைச் சேர்த்துப் பிடித்துதான் வாங்குகிறான். கூலி கொடுக்கிறபோது மேஸ்திரி உள்ளங்கையைத் தொட்டுத்தான் பணத்தைக் கொடுக்கிறார். சேற்றில் இறங்கி வேலை செய்யும்போது, புடவை நுனியை இடுப்பில் செருகிக் கொண்டு நடந்தால் முழங்காலுக்கு மேலே தெரியும் காலின் சதைப்

பிடிப்பையே எல்லாரும் கவனிக்கிறார்கள். அவளுக்குப் பயமாக இருந்தது. சுற்றிலும் தயாராக நின்றுப் புலியாக விழுங்கிவிடுமோ என்று அஞ்ச வைக்கிற உலகம்.

புழுக்கின நெல்லைக் களத்துமேட்டில் காயப்போட்டுவிட்டு, காய்ந்த நெல்லை மூட்டையாகத் திரட்டிக் கட்டி வைப்பாள். வண்டியில் ஏற்றுகிற ஆள் ஒற்றையாகத்தான் வருவான். 'மூட்டையை ஒரு கை பிடி புள்ளே!' என்று கூப்பிடும்போது மறுக்க முடியாது. மூட்டையை ஏற்றுகிற சாக்கில் அவன் கையையும் சேர்த்துப் பிடித்துக் கொள்வான். சில சமயம் மேல் புடவை நழுவி விழுந்துவிடும். விம்மி நிற்கும் அங்கங்களைக் கண் கொட்டாமல் பார்ப்பான். உடல் முழுவதும் ஊசி குத்துவது போல இருக்கும். மூட்டை ஏறுகிற வரை மேல் புடவையைச் சரிசெய்து கொள்ளவும் முடியாது. அவளுக்கு ஒரே அருவருப்பாக இருக்கும்.

அன்று பகல் முழுவதும் வேலை செய்து தீர்ந்த பிறகு குளத்துத் தண்ணீரில் அமிழ்ந்து குளித்தால் உடம்பு ஒரு நிதானத்துக்கு வரும் என்று கிளம்பினாள். தண்ணீரில் இறங்கினாள். சேலையை அவிழ்த்துக் கசக்கிக் கரையில் வைத்துவிட்டு, பாவாடையை மட்டும் மார்புக்குமேல் தூக்கி இறுக்கிக் கட்டிக் கொண்டு குளிக்க ஆரம்பித்தாள். கழுத்துவரை தண்ணீரில்தான் இருந்தது. கூச்சப்படுவதற்கு ஒன்றுமில்லை. கரையிலோ குளத்திலோ ஆண்கள் யாரும் இல்லை. அந்த சுதந்திரமே அவளுக்குச் சுகமாக இருந்தது.

மஞ்சள் துண்டை எடுத்து முகத்திலும், தோளிலும், மார்பிலும் நிதானமாகத் தேய்த்துக் கொண்டு குளித்து நிமிர்ந்தாள். தண்ணீர் அலை அலையாக மோதி அவளைத் தழுவிக் கொடுத்தது. மேலே வானத்தில் கருடன் சுற்றிற்று. தண்ணீருக்கு மேலே எழுந்து கையை உயரத் தூக்கிக் கும்பிட்டு 'கிருஷ்டா' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டாள். அந்த ஒரு நொடி அவளை யாரோ கவனிப்பது போல ஓர் உணர்ச்சி உடம்பில் பாய்ந்து ஓடிற்று.

ஒரு திகிலுடன் சுற்றிலும் பார்த்தாள். தண்ணீரில் யாரும் இல்லை. குளக்கரையிலும் யாரும் இல்லை. சற்றுத்தள்ளிப் புளிய மரம் ஒன்றின் அருகில் ஒரு சைக்கிள் நின்றது. அதை ஓட்டினாற் போலக் கையில் காமிராவுடன் ஒரு வாலிபன் நின்றுக் கொண்டிருந்தான். அந்த வாலிபன் அவளையே முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தான். கண்ணிமைக் கூடக் கொட்டவில்லை.

அவளுக்கு ஆத்திரத்தில் தைரியம்கூட வந்துவிட்டது. 'பொம்பளைங்க குளிக்கிற இடத்தில் ஆம்பிளைகளுக்கு என்னய்யா வேலை?' என்று எழுந்து வந்து சண்டை பிடிக்க நினைத்தாள். தண்ணீருக்குமேலே எழுந்ததும்தான் அவன் மறுபடியும் படம் பிடிப்பது தெரிந்தது. சட்டென்று தண்ணீரில் அமுங்கிக் கழுத்துவரை மறைத்துக் கொண்டு, வாய் நிறையத் தண்ணீருடன் அவனை நோக்கித் துப்பினாள்.

அவனுக்கு என்னவோ போல ஆகிவிட்டது. முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு, சைக்கிளைத் தள்ளிக்கொண்டு போய்விட்டான். அப்புறம் அவளுக்குக்கூடத் கொஞ்சம் பரிதாபமாகவே இருந்தது. கரைக்கு வந்து கூந்தலைத் துவட்டிக்கொண்டு, சேலையைக் கட்டிக்கொண்டதும் சுற்று முற்றும் பார்த்தாள். அவன்

சாலையில் சைக்கிளில் போய்க் கொண்டிருந்தான். அவளைத் திரும்பி பார்க்கவே இல்லை. சற்று ஏக்கமாகவே இருந்தது....

அவள் இளமையும் மெருகும் எல்லாரையுமே காந்தமாகக் கவர்ந்து இழுக்கிறது. அப்படி ஒரு ஆசை தோன்றும்போது, மானம் வெட்கம் எதுவும் இல்லை. பெரியவர், சிறியவர் என்ற வித்தியாசம் இல்லை. கல்யாணம் ஆனவர், ஆகாதவர் என்ற பேதமும் இல்லை. கல்யாணமான ஆள்தானே என்று அவளால் துணிந்து யாரையும் தொட முடியவில்லை. அவள் கையைப் பிடிக்கும்போதே விரல்கள் என்னென்னமோ இரகசியம் பேசின.

பெரிய மேஸ்திரியை அவள் தகப்பனுக்கு மேலேதான் நினைப்பாள். அவருக்கு மீசைகூட நரைத்துப் போய்விட்டது. அவளை 'வாவா குழந்தை' என்று ஆசையாகப் பிடித்துக் கட்டிக் கொள்வார். 'குறும்புக்காரப் பொண்ணு' என்று மடியிலே கிள்ளுவார். படுத்துக்கொண்டு 'எனக்குக் காலே வலிக்குது; கொஞ்சம் பிடித்து விடேன்; கால் மேலே ஏறி மிதியேன்' என்பார். அதெல்லாம் சரிதான். அவள் பிடித்துவிடும்போது, கண் ஏன் கொட்டாமல் அலையாடும் மார்பையே பார்க்கிறது? மிதிக்கும்போது கால் கெண்டையை, ஆடு சதையைத் தடவிக் கொடுக்கிறது? எத்தனை வயதானால் என்ன? பெண் சபலம் ஓய்வதில்லை...

கவுண்டரிடம் அவளுக்குத் தடை எதுவும் இல்லை. அவரிடம் மறுப்பில்லாமலே பழகுவாள். மறுபடியும் முதுக்குக்கு எண்ணெய்த் தேய்ப்பதும், சீயக்காய் தேய்த்து வெந்நீர்விட்டு உருவி விடுவதும் ஆரம்பமாகிவிட்டது. சாயங்கால வேளைகளில் அவர் காலாற நடக்கும்போது அவளையும்கூட அழைத்துக்கொண்டு போவார். அதுவும்கூட அவளுக்குத் தப்பாகத் தெரியவில்லை. சின்னவயதில் கன்னுக்குட்டி மாதிரி துள்ளிக்கொண்டே போவாள். இப்போது வயது வந்து பெண்ணுக்கேற்ற அடக்கம் வந்திருந்தது. அவ்வளவுதான் வித்தியாசம்.

கவுண்டர் அவளிடம் வேலை விவகாரத்தைப் பற்றிப் பேசுவார். நிலம் நீச்சைப்பற்றிப் பேசுவார். மறைந்து போன காளியைப் பற்றிப் பேசுவார். அம்மணியை நினைவுகூர்ந்து பேசுவதே இல்லை. வள்ளியினுடைய கல்யாணத்தைப் பற்றியும் பேசுவதில்லை. அவள் தந்தை உயிரோடு இருந்தபோது எத்தனையோ தடவைகள் குறிப்பிட்டிருக்கிறார். இப்போது ஏனோ அந்தப் பேச்சையே எடுப்பதில்லை.

அன்று அவர்கள் காலாற நடந்துபோனபோது எதிரே ஒரு கல்யாண ஊர்வலம் வந்தது. கழுத்து மாலையோடு கையில் கொண்டைக் கிளியுடன் அந்தப் பெண் நடந்து வந்தாள். கூந்தலை அழுந்தவாரி இடையிலே பூ தைத்துவிட்டிருந்தார்கள். சின்னப் பெண்தான். அந்த வயசுக்கு மீறிப் புசுபுசுவென்று பட்டுப்புடைவை கட்டி இருந்தார்கள். மேளக்காரன் பின்னாலே தட்டு தட்டாகப் பெண்கள் பூவும், பட்சணமும், மஞ்சளும் வெற்றிலைபாக்கும் ஏந்திய படி நடந்தார்கள்.

அந்தப் பெண்ணுடன் நடந்து வந்த மணமகனுக்கும் வயது அதிகமில்லை. தலைகாணி உறைமாதிரி அந்தப் பட்டுச்சட்டை அவன் உடம்புக்குப் பொருந்தவேயில்லை. தலையிலே குல்லாயும்,

கழுத்திலே மாலையும், நெற்றியில் அகலச் சாந்துப் பொட்டுமாக அவனைப் பார்த்தால் பொம்மை நடந்து வருவதைப்போல இருந்தது.

அந்தப் பெண் தலைநிமிரவே இல்லை. அவளுக்கு ஒரே கூச்சம். கால் விரலைப் பார்த்துக்கொண்டே நடந்தாள். சிரிக்கக் கூடப் பயந்து கொண்டு, அந்த வாலிபனிடம் தன்னை முழுசாக ஒப்படைக்கப் போகும் அனுபவத்தை நினைத்துக் கொள்பவளைப் போல ஒரு கிலியுடன் நடந்தாள். ஆனால் அவன் முகத்தில் ஒரு சந்தோஷ ஒளி வீசிற்று. 'இவள் எனக்குத்தான். என்னிடம்தான் இவள் தன்னை ஒப்படைக்கப் போகிறாள்' என்று எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்வதைப் போலத் தோன்றிற்று.

அவர்களை அப்படிப் பார்த்தபோது, வள்ளிக்கு மனத்தில் அந்த ஆசை தலை காட்டிற்று. அவளுக்கும் அதைப்போன்ற ஒரு வாழ்வு என்றாவது ஒருநாள் கிடைக்குமா? அதைப்போல மாலையும் கழுத்துமாக நின்று அவளும் ஒருநாள் தன் உள்ளத்தையும், உடலையும் ஒரு வாலிபனுடன் ஒப்படைக்க முடியுமா? எல்லாரும் ஆசைப்படுகிறார்கள்? ஆனால், ஆசைப்பட்டது நடந்து விடுகிறதா? அம்மணிக்கு என்ன குறைச்சல்? கணவன் இல்லையா? வசதிகள் இல்லையா? அனுபவிக்க வாய்ப்பு இல்லையா? எல்லாவற்றையும் விட்டு விட்டு எந்த சுகத்தைத் தேடிக்கொண்டு சங்கரனுடன் ஓடிப்போனாள்? கவுண்டரிடம் கிடைக்காதது எதை அவனிடம் கண்டாள்? அவள் அவனுடைய அன்புக்குப் பாத்திரமாக இருக்கலாம். மனைவியாக வாழமுடியுமா? வைப்பாட்டி வாழ்க்கைத்தானே அது?

சென்னிமலைக் கவுண்டரும் அந்த ஊர்வலத்தைப் பார்த்தார். அந்த மணப்பெண்ணையும் கவனித்தார். அவருக்குச் தெரிந்த இடம்தான் அது. அந்தப் பெண் சிறு குழந்தையாக உடம்பில் ஒன்றுமே இல்லாமல் மண்ணில் ஓடி விளையாடியதிலிருந்து அவருக்குத் தெரியும். காலம் எவ்வளவு விரைவில் ஓடி விட்டது. கல்யாணம் என்கிற கயிற்றில் அவளை இப்போது கட்டிப் போட்டாயிற்று. வாழ்க்கையில் எப்படியோ ஓர் உறுதி கிடைத்து விட்டது.

எல்லாருக்கும் அப்படி ஓர் உறுதி கிடைக்குமா? அந்தக் கல்யாணம் என்ற பந்தம் எதற்காக? சமைத்துப் போடவா? அவருக்குச் சமைத்துப்போட வள்ளி இல்லையா? உடல் சுகம் அனுபவிக்கவா? அம்மணியைச் சங்கரன் தட்டிக்கொண்டு போய்விட்டானே? அவன் அனுபவிக்காத சுகமா? கல்யாணமா செய்து கொண்டான் அவன்? அதை நினைத்துப் பார்க்கும்போது எல்லாமே போலியாகத் தெரிகிறது. சாட்சியாக வருகிற இவ்வளவு பேரும், நாளைக்கு ஆசி கூறப்போகும் அத்தனை பேரும் வேடிக்கைப் பார்க்க வந்த கூட்டமாகத்தான் தெரிகிறது. நாளைக்கு அவரும் போவார். பத்து ரூபாய் மொய் எழுதிவிட்டு வருவார். அந்த வேடிக்கை பார்க்கிறக் கூட்டத்தில் அவரும் ஒருவர்தான்.

பக்கத்தில் கூடவே வந்து கொண்டிருக்கிற வள்ளியைத் திரும்பிப் பார்த்தார். அவளுக்கு மணம் செய்து கொள்ள வயசாக வில்லையா? வளர்ச்சியில், அழகில், பக்குவத்தில் என்ன குறைச்சல்? நன்றாக விலைபோகக்கூடிய பண்டம்தான். கட்டிக் கொள்கிறவன் கொடுத்து வைத்திருக்கவேண்டும். அவளுக்கு ஏன் அந்த ஆவல் கைகூடி வரவில்லை. அவளுக்கு ஆசை இல்லாமற்போகுமா?

கவுண்டர் நினைத்ததைப்போலவே வள்ளியும் எண்ணிக் கொண்டே நடந்தாள்.

என்னைப் பார்த்துப் பரிகாசமாகக்கூடக் கவுண்டர், எப்போ கல்யாணம் கட்டிக் கொள்ளப்போறே?' என்று கேட்கவில்லை. அவள் என்ன, சிறு குழந்தையா, 'எனக்குக் கல்யாண மெல்லாம் வேண்டாம்' என்று பிகு பண்ணிக் கொள்வதற்கு? அவள் என்ன விவரம் தெரியாத பெண்ணு? 'எதுக்காகக் கல்யாணம் செய்துக்க வேணும்?' என்று கேட்பதற்கு?

இருவருமே பேசவில்லை. தத்தம் யோசனையுடன் இரு வருமே நடந்து போய்விட்டார்கள்.

பனியில் கவுண்டருக்குச் சளி பிடித்துவிட்டது. இருமலும் சளியுமாகத் திண்டாடிப் போனார். காலையிலிருந்தே ஜுரமும், உடம்பில் கூண்டாகக் கட்டிக்கொண்டுவிட்டது. குடிசைகளி லிருந்து வரும் ஓசைகள் எங்கோ ஒலிப்பதுபோலக் கேட்டது. ஜுரத் தால் காது அடைத்துக் கொண்டு கண்கள் ஜிவுஜிவு என்று எரிச்சல் பற்றிக் கொண்டு கஞ்சிகூடச் சாப்பிடப் பிடிக்காமல் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தார் கவுண்டர்.

வள்ளிதான் மருந்து கொண்டுவந்து கொடுப்பாள். உள்ளுக்கு மாத்திரை கொடுப்பாள். நெற்றிக்குத் தைலம் தேய்ப் பாள். கஞ்சி போட்டுக், கஷாயம் போட்டு வேளாவேளைக்குக் கொடுப்பாள். பாத்திரத்தைக் கழுவி வைத்துவிட்டு வாசற் கதவோரம் உட்கார்ந்திருப்பாள் வள்ளி. டாக்டர் தூக்கத்துக்கும் சேர்த்து மருந்து கொடுத்துவிட்டாரோ என்னவோ... கண்கள் அமட்டிற்று.

''கண்ணை மூடிக்கிட்டுப் படுத்திருங்க! நல்லாப் போர்த்தி விடறேன்'' என்று போர்வையை நன்றாக இழுத்துக் கழுத்துவரை யில் போர்த்திக் காலிரண்டையும் தூக்கிப் போர்வையின் அடியில் விட்டு, ''கொஞ்சம் கீழே போயிட்டு வந்துடறேன்; நல்லாத் தூங் குங்க'' என்று இறங்கிப்போய்விட்டாள் வள்ளி.

வள்ளி புறப்பட்டுப்போய்விட்டாள். கண்ணைத் திறந்தால் வெளிச்சமாக இருந்தது. உள்ளுக்குள்ளே ஏதோ கூசிற்று. அதனால் நீர் மல்கும் இமையை அழுத்தி மூடிக்கொண்டு படுத்திருந்தார். அம்மணி ஓடிப்போன பிறகு அவர் மறுமணம் செய்து 'கொள்ள வில்லை. அப்போதே யார் யாரோ சொன்னார்கள். 'இளமையா இருக்கிறவரைக்கும் ஒண்ணும் தெரியாது. சுகம் எங்கேயோ எப் படியோ கிடைக்கும். உடம்பு நல்லா இருக்கிற வரைக்கும் எதுவும் தெரியாது. எங்கே வேணு சாப்பிடலாம். எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனா உடம்புன்னு கீழே படுத்தா என்ன செய்யப் போறீங்க? ஒரு சம்சாரம் மாதிரிக் கூட இருந்து யார் செய்வாங்க? அதைப்போலக் கஞ்சி கொடுத்து, மருந்து கொடுத்து செய்ய யார் கிடைப்பாங்க?' — அவர் அந்தப் பேச்சைப் பொருட்படுத்தவில்லை. இப்போது தெரிவது போல இருந்தது. வள்ளி இருக்கிறாள். ஏதோ செய்கிறாள். எத்தனை நாளைக்கு இருப்பாள்... அப்புறம் யார் செய் வார்கள்?

அம்மணி விட்டுவிட்டுப் போன பிறகு அவருக்கே ஒரு தாழ்வு உணர்ச்சி ததும்பிக் கொண்டிருந்தது. 'நீ ஒரு ஆண்பிள்ளை

இல்லை. உன்னால் ஒரு பெண்ணைத் திருப்திப்படுத்தி, சுகம் கொடுக்க முடியவில்லை. உன்னுடைய பலவீனம்தான், பலத்தைத் தேடிக் கொண்டு அவளை ஓடச் செய்துவிட்டது' என்று யாரோ இடித்துச் சொல்வதைப் போல இருக்கும். தனக்குள்ளே அதைப் பலமாக மறுத்துக் கொள்ளுவார். 'எனக்கும் ஆண்மை இருக்கிறது. ஒரு பெண்ணை வெற்றி கொள்ள, சுகம் தந்து திருப்திப்படுத்த என்னாலும் முடியும், எனக்கென்ன குறைச்சல்?' என்று கேட்டுக் கொள்ளு வார். ஆனால் அதைக் காட்டிக்கொள்ள வாய்ப்பே எழவில்லை. அவர்தான் மறு மணம் செய்து கொள்ளவே இல்லையே?

அம்மணி இருந்திருந்தால்...? அவரை வளைய வளைய வரு வாள். அவருக்குக் காய்ச்சல் என்றால் அவள் குழந்தையாக மாறி விடுவாள். பக்கத்திலிருந்து நெற்றியைத் தொட்டுக், காலைத் தொட்டு, முந்தானையால் ஒற்றி, மேலே சாய்ந்து அணைத்து, தாய்க்கோழிக் குஞ்சைக் காப்பது போலச் சுற்றிச்சுற்றி வருவாள். அந்த அணைப்பிலும், ஓர் இதம் இருக்கும். சுகம் தரும் அணைப்பு அல்ல அது. 'ஐயோ இப்படிப் படுத்திருக்கிறீர்களே?' என்ற ஆற்றாமை தெரிகிற அணைப்புத்தான்.

அவ்வளவு அன்பாக இருந்தவள் எப்படிக் கண்காணாமல் ஓடிப்போனாள்? அந்த வீட்டிலேயே, அந்த கட்டிலிலேயே அவர் களுடைய சல்லாபங்கள் நடந்திருக்குமா? — நினைக்கும்போதே உடல் பற்றி எரிந்தது. அவர், அவளுக்குத் துரோகம் செய்யவில்லை. அவள் செய்துவிட்டுப் போய்விட்டாளே! வாழ்க்கையில் கட்டுப் பாடு, நியாயம், நெறி இவற்றுக்கெல்லாம் என்ன மதிப்பு இருக்கிறது? எத்தனை ஆண்டுகள் ஆனாலும் இந்த நினைப்பு வரும்போதெல்லாம் உடம்பு சுடுகிறது. அதுவும் இதைப்போல மெய்யாகவே உடம்பு சுடும் வேளையில் அந்தத் தாபம் இன்னும் அதிகமாகத் தெரிகிறது.

மூன்று நாள் தொடர்ந்து ஜுரம் இருந்தது. படிப்படி யாக இறங்கிவிட்டது. அன்று காலையிலிருந்தே ஜுரம் இல்லை. வாய்கூடக் கசக்கவில்லை. கஞ்சிக்குப் பதில் சோறு வேண்டும்போல இருந்தது. வள்ளி, புனர்பாகம் செய்து கொண்டு வந்திருந்தாள். காரமாக வைத்த ரசமும், துவையலும், உப்பு நாரத்தங்காயும் நாக்கிற்கு ருசியாக அமைந்தன. அன்று பூராவும் ஓய்வுதான். ஆனால், தூக்கம் வரவில்லை. உடம்பில் தெம்பு திரும்பிவிட்டது. எழுந்து சாயங்காலம் நடந்துவிட்டு வரலாம் போலத் தோன்றிற்று. வள்ளி தான் வேண்டாம் என்று தடுத்துவிட்டாள்.

வீட்டிலேயே நாள் பூராவும் இருந்தது, உடம்பை நிமிர்த்தி இருந்தது. நிற்கவும் நடக்கவும் துடிக்கிற உணர்ச்சி. உடம்பை லேசாக வியர்த்தது. சட்டையைக்கூட கழற்றிப்போட்டு விட்டு, வெளியே நிலா முற்றத்தில் படுத்துக் கொண்டிருந்தார். இரவு ஒன்பது மணி இருக்கும்.

பால் கஞ்சியை எடுத்துக்கொண்டுப் படியேறி வந்தாள் வள்ளி. அவருக்குச் சோறு சாப்பிடவேண்டும் என்றே ஒரு வேகம். இரண்டு மூன்று தம்ளர் பிடிவாதம் பிடித்துக்கொண்டே குடித்தார். பிறகு துணியை விரித்து நிலா வெளிச்சத்தில் படுத்துக்கொண்டு விட்டார். வள்ளி படி இறங்கிப் போய்விட்டாள். அவர் உடம்பில் ஒரு விதமான உணர்ச்சி எழுந்து விம்மிக் கொண்டிருந்தது.

கொஞ்ச நேரம் கழித்து மீண்டும் மாடிக்கு வந்தாள் வள்ளி. அந்த நேரத்தில் அவள் அங்கே வருகிற வழக்கம் இல்லை. ஒன்பது மணிக்கு வந்ததே கஞ்சி கொடுக்க வேண்டிய கட்டாயத்துக்குத்தான். இல்லாவிட்டால் சாயங்காலமே அவருடைய சாப்பாட்டை எடுத்துவைத்துவிட்டு அவள் போய்விடுவாள். அப்புறம் காலையில்தான் கண்ணிற்படுவாள்.

வள்ளி கைப்பிடிச் சுவர் ஓரமாக நின்று கொண்டிருந்தாள். நிலாவொளியில் அவள் உருவம் நிழல் வடிவமாகத் தெரிந்தது. இளமையின் கட்டுறுதியும், கோப்பான உடல் அமைப்பும் அந்த ஒளியில் மலரிதழைப் போல வழவழவென்று தெரிந்தது. உடம்பை ஒட்டியது போன்ற சேலை, அந்த அமைப்பை மெருகிட்டுப் பூரிப்பாய்க் காட்டிற்று.

''மருந்து கொண்டு வரட்டுமா சாமி...?''

''வேண்டாம். எனக்கு உடம்பு நன்றாக ஆகிவிட்டது. தொட்டுப் பாரு''

அவள் திரும்பிப் பார்த்தாள். அந்த அழகான வடிவமும் இளமை முதிராத செங்கனிப்பருவத்தின் ருசியும், பார்வையில் தெரிந்த ஆதரவும் அவரைத் தூண்டின. மார்பில் ஏதோ படபடவென்று பொங்கிற்று. அவள் அருகே வந்தாள். மண்டியிட்டு அமர்ந்து நெற்றியைத் தொட்டாள். தலைமயிரைக் கோதிவிட்டாள். மார்பைத் தொட்டு சற்று அழுத்தினாற்போல விரலால் தடவிவிட்டாள்.

''ஜுரம் இல்லை. ஆனாலும் நீங்க இப்படித் திறந்த வெளியிலே படுத்துக் கொள்ளக்கூடாது. அதுவும் சட்டை இல்லாமல்! உள்ளே போய்க் கட்டிலில் படுத்துக் கொள்ளுங்க சாமி'' — அவள் சொன்னதோடு நிற்கவில்லை. அவரை எழுப்பினாள். கைத்தாங்கலாக அழைத்துக் கொண்டு போய்க் கட்டிலில் படுக்கவைத்தாள். அந்தப் பிடியும் விரலின் லேசான அழுத்தமும் அவரை என்னவோ செய்தன. ஜுரம் இருந்தபோது தெரியவில்லை. இப்போது தனியாகத் தெரிந்தது. இது வேறுவிதமான ஜுரம்.

அவர் படுத்துக் கொண்டதும் அவள் அருகில் அமர்ந்தாள். போர்த்திவிடப் படுக்கையின் காலடியில் இருந்த போர்வையை எடுத்தாள். அவருடைய கை கூசிக்கொண்டு அவள் காலைப் பற்றிப் பிடித்தது. லேசாகச் சற்று அழுத்தி ஏதோ ஒரு இரகசிய ஆசையை அடையாளம் காட்டிற்று. அவள் அந்தப் பிடியை அப்புறப்படுத்தவில்லை. ஆனால், அவள் கண்ணில் மட்டும் ஒரு புது மருட்சி தெரிந்தது. அந்த மருட்சி தெளிய அவர் விடவில்லை. அவள் இடையில் கையைக் கொடுத்து அருகே இழுத்துக் கொண்டார். அவளும் விழக் காத்திருந்தவளைப் போலக் காலடி நழுவி அவருடைய மார்பின் மீது சாய்ந்துவிட்டாள்.

அவள் கண்களில் முழுப் பயம் இல்லை. அந்த அணைப்பில் முழு வேட்கையும் இல்லை. அவர் பிடியை விட்டிருந்தால் அவள் எழுந்து ஓடியிருப்பாள். பிடியில் இருந்தவரை தன்னை விடுவித்துக் கொண்டு ஓடும் வேகமும் இல்லை. வீணைத் தந்தியில் விரல்கள் விளையாடுவதைப் போல அவள் உடல் முழுவதும் அவர் விரல்கள் ஓடின. அந்த இளமையின் கட்டுறுதியை ஒவ்வொரு அணுவாக ரசித்தன.

அவளையும் அந்த ஆசையும் வேகமும் கவ்விக்கொண்டு விட்டது. முதலில் இருந்த மறுப்பும், தயக்கமும் மெல்ல மெல்ல மாறிவிட்டன. அவருடைய அணைப்பை, அந்த நெருக்கம் தந்த சுகத்தை அவளுடைய உடல் விரும்பி ஏற்றுக்கொண்டது. உலக மெல்லாம் தூங்கும் வேளையில், அவளும் அவருடைய பிடியில் கண்ணை மூடிக் கொண்டு குழந்தையாகிவிட்டாள்.

அவருடைய மடியில் கிடந்தவளின் உடல் முழுவதும் உணர்வு துள்ளிக் கொண்டிருந்தது. தலையிலிருந்து கால்வரை அந்த உணர்ச்சி துடிதுடித்துப் பரவி அடங்கிற்று. அவருடைய பிடியும் அணைப்பும் தளரவில்லை. அவளும் அதிலிருந்து விலகிப்போக வில்லை. அந்த உணர்ச்சியின் வெள்ளம் வடிந்து ஓயும்வரை அங் கேயே அவருடன் இருந்துவிட்டாள். களைப்பிலும் ஒய்விலும் கண்கள் அழுந்தி, அவர் தூங்கியது ஞாபகம் இல்லை.

காலையில் கண்ணைத் திறந்தபோது அவள் அவரைத் தட்டி எழுப்பிக் கொண்டிருந்தாள். கவுண்டர் கண்ணை விழித்துப் பார்த்தார். இப்போது அவருக்குக் கண்ணைக் கூசிற்று. இது மெய்யாகவே தோன்றிய கூச்சம்தான். அந்தப் பெண்ணை நிமிர்ந்து பார்க்கத் தைரியம் இல்லை. புஜத்தில் சுவாதீனமாகப் படிந்த அவளுடைய விரல்களைப் பார்த்தார். பார்வை அப்படியே அவள் தோள்வரை உயர்ந்தது. அவள் அங்கப்பூரிப்பை, சிலை வடிவமாகச் செதுக்கிய இடையை, கடைந்தெடுத்தக் கால்களை ஒருமுறை பார்த்துத் தாழ்ந்தது.

''எழுந்து பல்லை விளக்குங்க சாமி''

இன்னும் சாமியா? இது என்ன மரியாதை? அவர், அவளிடம் அடிமையாகித் தன்னிலை இழந்த பிறகு? அவளுக்கு அவர் உறங்கிய படுக்கையில் சமமாக இடம் கொடுத்து, அந்த உடலையும் அழகையும் ஆண்டு அனுபவித்துவிட்டப் பிறகு, அவருக்கு எங்கிருந்து வந்தது உயர்வான ஓரிடம்?

பல்லைத் தேய்த்துவிட்டு வந்தார். அவள் கொண்டு வந்த காப்பியைத் தலையைக் குனிந்து கொண்டே வாங்கிப் பருகினார். நாற்காலியில் உட்கார்ந்தார். அவளுடைய கை அவருடைய தலை மயிரைச் சுவாதீனமாகக் கோதிவிட்டுக் கொண்டிருந்தது. அவரை அவள் பார்த்த பார்வையில், இப்போது பழைய பயம் எதுவும் இல்லை. ஏதோ ஒரு சுவாதீனம்தான் தெரிந்தது. அவர் நிமிர்ந்து பார்த்ததும் சிரித்தாள். அந்தக் கண்ணில் ஒரு கேலி பளபளத்துக் கொண்டு நின்றது. அவள் அவரைப் பார்த்துப் பயந்து வெட்கித் தலை குனிந்த நாட்கள் உண்டு. இப்போது கவுண்டர் அவளுக்கு முன்னால் வெட்கப்பட்டுத் தலையைக் குனிந்து கொண்டார்...

# 5

கவுண்டர் வீட்டில் இல்லை. முற்பகல் நேரத்து இறுக்கம். உடம்பை வாட்டிற்று. வள்ளி வீட்டைப் பெருக்கி முடித்துவிட்டுத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு குளிக்கிற அறைக்குப் போனாள். புடவையை அவிழ்த்துவிட்டு அண்டா நீரை எடுத்து உடம்பில்

விட்டுக்கொண்டாள். அண்டா முழுவதும் தீர்ந்து போகிற வரையில் தளித்துவிட்டுத் தலையை நன்ருகத் துவட்டிக் கொண்டாள்.

வேறு புடவையை உடுத்திக் கொள்ளுமுன் நிலைக் கண்ணுடியில் தன்னை ஒரு முறை பார்த்துக் கொண்டாள். தேய்த்துக் கழுவிவிட்டச் செப்புச் சிலை மாதிரி இருந்தது அந்த உடம்பு. அந்த வடிவிலும் அச்சிலும் ஒரு மாறுதலும் இல்லை. அழகான உணர்ச்சிகள் மாறி மாறி மின்னுகிற முகத்தில் கொஞ்சம் வெட்கம் தெரிந்தது. அந்த இரவு வேளை ஞாபகத்துக்கு வந்தது. கவுண்டர் தூங்கும்போது துணைக்குப் படுத்திருப்பது போன்ற ஒரு நினைவு தெம்பையும் கிளர்ச்சியையும் கொடுத்தது.

வெகுநாட்களாகத் திறக்காமலே வைத்திருந்த அம்மணியின் துணி பீரோவைத் திறந்து காட்டி "உனக்குப் பிடித்த புடவை எதுவானுலும் எடுத்துக்க" என்று சொன்னுர் கவுண்டர். அவளுக்கு வியப்பாக இருந்தது. அவர் ஆளுகிற பெண்ணுக்கு உரியதுதான் அந்தத் துணிமணிகள். அதை அவளுக்குக் கவுண்டர் கொடுக்கிருர் என்ருல் என்ன அர்த்தம்? முதல் தடவையாக அவரைப் பயம் இல்லாமல் நேர்ப்பார்வையாக நிமிர்ந்து பார்த்தாள். 'இந்தப் புடைவை எனக்குச் சொந்தம். இந்த உடம்பு ஐயாவுக்குச் சொந்தமா?' என்று கேட்பதைப்போலப் பார்த்தாள்.

கவுண்டருக்கு அவளை அப்படிப் பார்க்கத் தைரியம் இல்லை. முகத்தைத் திருப்பிக் கொண்டார். இரவில் இருட்டில் எப்படியோ ஒரு தைரியம் வந்துவிடுகிறது. அழகை அனுபவிக்கும் துணிச்சல் கண்களுக்கு வந்துவிடுகிறது. ஆனுல் பகலில் அதை நினைக்கவே தயக்கமாக இருக்கிறது. அப்போது நடந்தவை, பார்த்தவை, பேசியவை எல்லாமே விரசமாகப் படுகிறது. இத்தனைக்கும் கவுண்டருக்கு ஒன்றும் புதிது இல்லை. ஏற்கனவே அம்மணி கொடுக்காத சுகத்தையா வள்ளி கொடுத்து விட்டாள்? வள்ளிக்குத்தான் அந்த அனுபவம் புதிது. அவளுக்குத் தெரியாத இரகசியம் ஒன்றுமில்லை. ஆனுல் அந்த அனுபவம் புதிதுதான்.

அவளுக்கு அவர் என்ன இடம் கொடுத்தார்? அம்மணிக்கு இருந்த உரிமையும் மதிப்பும் அவளுக்கு இருக்குமா? அவர் மனத்தில் அவளுக்குப் பங்கு இருக்குமா? படுக்கையில் பங்கு பெற்றதுடன் முடிந்துவிடுமா? தானுகப் பார்த்து ஆசைப்பட்டு ஆண்டதுடன் அந்த வெறியும் தணிந்துவிடுமா? அல்லது அதற்கு அவள் வாழ்க்கையிலும் ஓர் அர்த்தம் இருக்குமா?

வள்ளியால் இவற்றைத் தீவிரமாகச் சிந்திக்க முடியவில்லை. ஆனுல் அவருடைய வாழ்க்கையில், வீட்டில் அவளுக்கு ஓர் உயர்வான இடம் கிடைத்துவிட்டது மட்டும் புரிந்தது. அதன் அடையாளம்தான் அப்படி அவளுக்குக் கிடைத்த அந்தப் புடவையும். அந்த பீரோவைத் திறந்ததும் 'எது வேண்டுமானுலும் எடுத்துக்க' என்று சொன்னதும், 'இனிமேல் என் வாழ்க்கையில் உனக்குத்தான் இடம், இதெல்லாம் உனக்குத்தான்' என்று உணர்த்துவதைப் போலத்தான் இருந்தது.

வள்ளி புடவையை மாற்றிக்கொண்டு வெளியே வந்தாள். கூந்தலை எண்ணெய் இட்டு, அழுந்த வாரிக்கொண்டு, நெற்றிக்குக் குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டாள். உள்ளூர

அவள் மனத்தில் ஒரு பெருமை மிதந்தது. சமையலறையில் வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்து விட்டாள். அதே வேலைதான். அதே இடம் தான். ஆனால் அவ்வளவு நாட்களும் அதை ஒரு பணிப்பெண்ணாகத்தான் இருந்து செய்ய முடிந்தது. இப்போது, ஓர் உரிமையுடன் அதிகாரத்துடன் அல்லவா செய்ய முடிகிறது?

இப்படிக் குளிப்பதைப்போல, இப்படிச் சாப்பிடுவதைப்போல, அதுவும் ஒரு நடைமுறையாகப் பழக்கமாகி விட்டது. முதலில் இருந்த கூச்சம், பயம், கலக்கம் எதுவும் அப்புறம் இல்லை. கவுண்டரிடம் தன்னை அப்படி விட்டுக் கொடுப்பதையும் மனமாரச் செய்கிற பணிவிடையைப் போலவே எடுத்துக் கொண்டாள். அந்த நேரத்தில் அவருக்கு வாலிபம் திரும்பிவிடும். அவருடைய பிடியில் அவள் துள்ளுவதை விளையாட்டாக ரசிப்பார். விதம் விதமாக நிறுத்திவைத்து அழகு பார்ப்பார். அவர் அப்படித் தன்னைப் போற்றிப் போற்றி அனுபவிப்பதை அவள் ஒரு பெருமையாகக் கருதிக் கொள்ளுவாள். அவருக்கு வாய்க்கு ருசியாக விதம் விதமாக உணவு சமைத்துப் போட்டு மகிழ்வதைப்போல, அவர் தன்னிடம் எப்படி ஈடுபட்டாலும் அதற்கு விட்டுக் கொடுப்பதையும், ரசனையுடன் ஏற்றுக் கொண்டாள்.

அந்தப் புதிய வாழ்க்கைக்கு முதற்படியாக அமைந்ததே, அவர் அவளை வேலைக்கு அனுப்பாமல் நிறுத்திவிட்டதுதான். ‘இனி மேல் உனக்கு இங்கேதான் வேலை வள்ளி’ என்று சொல்லிவிட்டார் கவுண்டர். அதுவரை அவளை ‘ஏ புள்ளே!’ என்று அழைத்துக் கொண்டிருந்தவர் பெயர் சொல்லிக் கூப்பிட்டதும் அவளுக்கு வேடிக்கையாக இருந்தது. ஒரு நமுட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டாள்.

அந்தப் புது அனுபவம் தொடர்ந்து கொண்டிருந்தது. வாரங்கள் முடிந்து மாதங்களும் கழிய ஆரம்பித்து விட்டன. வள்ளியின் உறவில் கவுண்டருக்கும் ஒரு புது மெருகு கிடைத்து விட்டது. உள்ளூர ஒரு தெம்பு பிறந்துவிட்டது. தன்னுடைய ஆண்மைக்கு, வலிமைக்கு ஓர் அடையாளமாக, சான்றாக அவரால் வள்ளியைத் திருப்தியுடன் பார்க்க முடிந்தது. அவரை விட்டு அம்மணி ஏன் ஓடினாள்? அவரைவிடச் சங்கரன் எந்த விதத்தில் உயர்ந்தவன்? பணம், வசதி, அந்தஸ்து எல்லாவற்றிலும் அவருக்கு ஈடு கொடுக்க லாயக்கில்லாதவன் அவன். இருந்தும் எதற்காக அவனுடன் அம்மணி ஓடிப்போனாள்? இதற்குத் தானே? இந்த ஒன்றில் அவரைவிட அவனிடம் ஓர் உயர்வைக் கண்டதனால்தானே?

இப்போது அது பொய்யாகி விட்டது. அம்மணியை விட வயதில் சிறியவள், அழகிலும் இளமையின் கட்டுறுதியிலும், உடல் வாளிப்பிலும் இன்னும் அனுபவிக்க உகந்தவள் — வள்ளி — அவருடைய சொத்தாகி விட்டாள். கொஞ்சமும் மறுப்பில்லாமல் அவருக்கு இடம் தந்து ஏற்றுக்கொண்டு விட்டாள். அதை நினைக்க நினைக்க அவருக்குப் பெருமையாக இருந்தது. ஆண்மை உணர்வுக்கு அடிவிழுந்த இடத்தில் மருந்திட்டது போல இருந்தது.

அவரைவிட இருபத்தைந்து வயது குறைவான ஒரு பெண், அவருக்கு மகளாக இருக்கக்கூடிய வயதில் ஒரு பெண்,

அவரைத் தன்னை ஆளும்படி ஏற்றுக்கொள்ள இடம் கொடுத்ததை எண்ணிப் பார்க்கவே அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. இரவு வேளையில் துளியாக விழும் நிலா வெளிச்சத்தில் மல்லாந்து படுத்திருப்பவளின் அழகைப் பார்ப்பார். அவள் கொஞ்சும் குரல் காதில் விழும்போது அவளைத் தொடக்கூடக் கொஞ்சம் கூச்சமாக இருக்கும். அவளாகத் திரும்பி அவரை அணைத்து இழுத்துக் கொள்ளும்போதுதான் அவருக்குப் பயமும் தயக்கமும் நீங்கும். இப்படி ஓர் இளமையும் வாளிப்பும், உடல் திரட்டும், மேனி மெருகும் தனக்கு கட்டியாளக் கிடைப்பதை, இப்படி அவள், அவர் அணைப்பில் குழந்தை மாதிரி இணங்குவதை, மனத்தில் வாங்கிக் கொள்ளவே முதலில் நம்ப முடியாமல் இருந்தது. அப்புறம் போகப்போகப் பழகிவிட்டது.

அவருடைய மார்பில் முகத்தைப் புதைத்துக் கொள்வாள். அவருடைய மீசையை விளையாட்டாகச் சீண்டுவாள். தன்னை மறைத்துக்கொண்டு விலகி, அலை பாய வைப்பாள். பிறகு அவளாகவே வந்து அணைத்துக்கொண்டு அவரைத் தன்னுடன் சேர்த்து இழுத்துக் கொள்வாள். இந்த விளையாட்டெல்லாம் அவருக்கு ரம்மியமாக இருந்தது. அவருடைய வாலிப உணர்ச்சிகளுக்கு எண்ணெய் இட்டு ஒளி கூட்டுவதைப்போல இருந்தது. அம்மணி கூட அவரிடம் அப்படி ரசித்ததில்லை.

அதற்குப் பதிலாக அவர் அவளுக்கு எதை வேண்டுமானாலும் கொடுத்திருப்பார். அவளைப் பார்க்கும்போதெல்லாம் அவருக்கு மனத்தில் உணர்ச்சி பொங்கிற்று. நாளங்கள் புடைத்தன. மேனி வெதவெதத்தது. அந்த அழகை, கட்டை, ஆண்டுவிட்ட திருப்தி மட்டும் அல்ல அது. அவள் அவருக்குக் கொடுத்த புத்துணர்வு, அடிபட்டு விழுந்து கிடந்த மனப்பாங்கைத் தூக்கி நிறுத்திய அனுபவம், அதில் அவருக்குக் கிடைத்த புதிய வாழ்வு — இதற்கு முன்னால் அவளுடன் இருந்த பொழுதுகளின் லயம் அனைத்துமே தனிப்பொலிவுடன்தான் இருந்தன. இரவின் தனிமையும் இன்பமும்கூட இரண்டாவது இடத்துக்குத்தான் போய்விட்டன...

'வள்ளி... இதை வச்சுக்க' — என்று அந்த ஆரம்ப நாட்களில், அவர் கொஞ்சம் வெட்கத்துடன் அவளிடம் இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களை நீட்டினார். இரண்டு ரூபாய் கூலி வாங்கித்தான் பழக்கம் அவளுக்கு. இரண்டு நூறு ரூபாயா? அவள் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன.

'எதுக்கு சாமி?' என்று கேட்டாள். அவரால் பதில் சொல்ல முடியவில்லை. எதற்கு என்று சொல்வது? அந்தச் சின்னப் பெண்ணிடம் அவர் குழந்தையைப் போல வெட்கப்பட வேண்டியதாயிற்று.

'இதெல்லாம் எனக்கு வேண்டாம் சாமி' — என்று சொல்லிவிட்டு அவரை நிமிர்ந்து பார்த்தாள். 'எனக்கு நீங்கள்தான் வேண்டும்' என்று சொல்வதைப் போலத் தோன்றிற்று அவளுடைய கண்பார்வை.

'வச்சுக்க வள்ளி! உனக்குத்தான் எல்லாமே. நான் ஆசைப்பட்டுக் கொடுக்கிறேன். வேண்டாம்னு சொல்லாதே' என்று சொல்லி அவள் கையைப் பற்றி நோட்டுக்களை விரலில் வைத்து

முடிஞர். அலேபாய்ந்த அவருடைய மனத்துக்குக் கொஞ்ச
அமைதி கிடைத்தது.

'எனக்கு இதை வச்சுக்கக்கூட இடம் இல்லியே சாமி
என்ருள் வள்ளி. அந்தக் கள்ளமில்லாத பேச்சும் பார்வையும்
அவர் மனத்தைத் தொட்டன. அந்த வீட்டில் அவளால் தன்னே
பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லேயே? அவ
கொடுத்த பணத்தை எங்கே வைத்துப் பாதுகாப்பது?

'ஒரு பெட்டி தர்றேன். அதில் பத்திரமாப் போட்டு
வை. அப்புறமா பாங்கில் போய்ப் போடலாம். நான்கூட வந்து
சொல்லித் தாரேன்' என்ருர் கவுண்டர்.

பணம் — பாங்கு — அவர் பேச்சு — எல்லாமே அவளுக்கு
வேடிக்கையாக இருந்தது. இன்னும் பக்குவப்படாத மனத்துக்கு
அந்த வேடிக்கையை அனுபவிக்கும் குழந்தை ஆசையும் இருந்தது
அவர் கொடுத்த பெட்டியில் அதை வாங்கிப் போட்டுக் கொண்
டாள். ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமையன்று அவர் நூறு
ரூபாய் பணத்தை வெற்றிலே பாக்குடன் வைத்துக் கொடுப்பார்.
அவளும் ஒரு குறும்புச் சிரிப்புடன் வாங்கிக் கொள்ளுவாள்.

அவளுடைய தந்தையிடம் கவுண்டர் பணம் கொடுப்ப
தாகச் சொன்னது அவளுக்குத் தெரியும். அது அவளுடைய
கல்யாணச் செலவுகளுக்குக் கொடுப்பதாகக் கூறியது. இப்போது
அந்தச் செலவுக்கு அவசியமே இல்லே. அவள்தான் மாலே மாற்றிக்
கொள்ளாமல், ஊர்வலம் போகாமல், சாந்தி கழியாமல், தன்னே
நேரடியாக, முழுசாக அவரிடம் கொடுத்து விட்டாளே! காளிக்கு
அவர் கொடுப்பதாகச்சொன்னது வேறு. இப்போது அவளுக்கு அவர்
கொடுப்பது வேறு. ஆனுல் இரண்டிலுமே அவளுக்குக் கிடைக்க
இருந்தது ஒன்றுதான். அதை அவள் அடைந்து விட்டாள்,
கல்யாணம் என்ற முத்திரை இல்லாமல்....

அப்படிச் சில சமயம் நினேத்துப் பார்க்கும்போது
நெஞ்சில் ஓர் ஏமாற்றம் ஊர்ந்து நிற்கும். ஆனுல் அதை அவள்
மீண்டும் மீண்டும் நினேத்துப் பார்ப்பதில்லே. அவரைத் தன்
இஷ்டப்படி ஆட்டி வைப்பதிலும், அவரைத் தன்னேப் பின்
தொடர்ந்து வந்து கெஞ்ச வைப்பதிலும், அவளுக்கு ஓர் இரகசிய
உவகை இருந்தது. கட்டின பெண்டாட்டிக்குக்கூட அவ்வளவு
மவுசு இருக்காது. அதிகாரமாகத்தான் ஆண்டுவிட்டுப் போய்
விடுவார்கள் அந்தக் கணவர்கள். ஆனுல் கவுண்டர் அவளிடம்
இளகியதும், மஞ்சத்தில் கொஞ்சியதும், அப்புறம் அனுபவித்ததும்
ஏதோ ஓர் அன்புப் பூஜையைப் போலத்தான் இருந்தது.

விரவர அவளுக்கு அவரிடம் சுவாதீனம் அதிகமாகி
விட்டது. அவர் அவளேக் கோயம்புத்தூருக்கு அழைத்துக்கொண்டு
போவார். இருவரும் ஹோட்டலில் தங்குவார்கள். சினிமாவுக்குப்
போவார்கள். பணத்தைத் தாராளமாகச் செலவு செய்வார்.
அதைக் காண அவளுக்கு வியப்பாக இருக்கும். அவர் வாழ்க்கையில்
பணத்துக்குத்தான் அதிக மதிப்பு கொடுத்திருந்ததாக அவள்
நினேத்துக் கொண்டிருந்தாள். இப்போது அதைக் காட்டிலும்
அவளுக்கு மதிப்பு அதிகமாகி விட்டது. அதை எண்ண எண்ண
அவளுக்குப் பெருமையாக இருந்தது.

பவுடர் — ஸ்னோ — முகப்பூச்சு — எல்லாம் வாங்கிக் கொடுப் பார். ஹாலில் உட்காரவைத்துக்கொண்டு நகத்துக்குச் சாயம் போடுவார். படுக்கையில் படுக்க வைத்துக் கால்களை மடியில் ஏந்திக் கால் நகங்களுக்கும் சாயம் போடுவார். குளித்துவிட்டு வந்த வளுக்குத் தன் கையால் பவுடர் போட்டு முதுகில் தேய்ப்பார். கண்ணுக்குத் தெரியக்கூடாத இடங்களில் சென்ட் போட்டுக் கொஞ்சுவார். அவருடைய உடலை, அழகை, ஆராதிப்பதுபோலத் தான் இருக்கும் அவருடைய செய்கை.

அவளும் அவரிடம் கொஞ்சுவாள். குறும்பாகப் பேசு வாள். மெல்லிய கைகளால் மார்பில் குத்துவாள். மீசையைத் தடவி 'நெய் போட்டுக் கொள்ளுகிறதுதானே?' என்று கிண்டல் பண்ணுவாள். அவளே சட்டையை மாட்டிச் சரிகை மேல்துண்டைச் சரிபார்ப்பாள். கண்ணாடிக்கு முன்னால் அவருக்கு இணையாக நிற்பாள். கவுண்டர் குஷி தாங்காமல் அவளை இடையில் கை கொடுத்து அப்படியே அலாக்காக உயரே தூக்கிச் சுற்றிக் கீழே இறக்குவார். அவருக்கு அதில் ஒரு கிளுகிளுப்பு கிடைக்கும். அவளுக் கும் அது ஒரு வேடிக்கையாக இருக்கும்.

'அதெல்லாம் சரிதான். நீங்க என்னை எப்போ கலியாணம் செய்துக்கப் போறீங்க?' என்று அவள் அவரைக் கேட்டதில்லை. சினிமாவில் பார்க்கும்போது, ஒவ்வொன்றிலும் கல்யாணக் காட்சிகள் வரும். தாலி கட்டுகிற தோற்றம் தவறாமல் வரும். அதைத் தொடர்ந்து படுக்கை அறைக் காட்சியும் வரும். மலர்கள் தூவிய மஞ்சம், பால், பழம் எல்லாமே வரும். பாட்டும் சீண்டலும் விளக்கு அணைகிற காட்சியும் தெரியும். வள்ளி அவரைச் செல்லமாகத் திரும்பிப் பார்ப்பாள். 'இவ்வளவும் இல்லாமே நேரே இந்தக் கடைசி சீனுக்கு வந்துட்டீங்களே? மற்றவை யெல்லாம் எப்போ?' என்று கேட்பது போல இருக்கும் அந்தப் பார்வை.

கவுண்டரின் மனம் குறுகுறுக்கும். தான் செய்ததும், செய்வதும் சரிதானா என்று ஓரிரு நிமிடங்கள் சுயசோதனை செய்து கொள்வார். வள்ளி கேட்டிருந்தால்கூடப் பரவாயில்லை. கேட்கா ததே அவருக்குப் பெரிய வேதனையாக இருந்தது. 'என்னைத் தொட்டுட்டீங்க? தாலி கட்டிக்கொள்ள எனக்கு யோக்கியதை இல்லையா?' என்று கேளாமலே வள்ளி பார்ப்பது குற்றம் சாட்டு வதைப் போல இருந்தது. அவள் அப்படி ஒரு கேள்வியை என்று, எப்போது கேட்பாளோ என்று பயமாகவே இருந்தது. படுக்கையில் அவருடைய அணைப்பில் இருக்கும்போது அவள் அப்படி ஒரு கேள்வியைக் கேட்டிருந்தால் அவர் கலங்கிப் போகவேண்டியது தான். ஆனால் வள்ளி கேட்கவே இல்லை. அதுதான் அவளுடைய பலம். அந்தப் பார்வைதான் அவரை ஆட்டிவைத்தது. அதுதான் அவளுடைய ஆயுதம்.

வெளியே ஒன்றாக நடந்து போவது, வெளியூருக்குப் போய்வருவது, பெரிய வீட்டிலேயே ஒன்றாக இருப்பது, அம்மணி யின் புடைவைகளை ஒவ்வொன்றாக எடுத்து அணிந்து கொள் வது, இவை எல்லாமே கொஞ்சம் கொஞ்சமாக எல்லாருக்கும் அவரிடம் அவளுக்கு ஏற்பட்ட உறவை நிச்சயப்படுத்துவது போலத் தான் இருந்தன. அதை அவர்களும் புரிந்து கொண்டார்கள்.

வேலையாட்கள், மேஸ்திரிகள் எல்லாருமே அதைப் பக்குவமாகக் காட்டிக்கொண்டு, மரியாதையாக ஒதுங்கி நின்றார்கள்.

ஊராரும் அதைப் புரிந்து கொண்டார்கள். அதில் அவர்களுக்கு மரியாதைதான் இல்லை. அவளை அவர்கள் நேராக நிமிர்ந்து பார்ப்பதில்லை. ஓரக்கண்ணால்தான் பார்ப்பார்கள். தோளை இடித்துக்கொண்டு இரகசியமாகப் பேசுவார்கள். கண்ணைச் சிமிட்டிக்கொண்டு உதட்டை முறுக்கிக் கொள்வார்கள். அவர்கள் அவளுக்குப் பெண்டாட்டி என்ற பெயரோ, மதிப்போ கொடுத்திருக்க முடியாது. அப்படியானால் அந்த உரிமைக்குக் கிடைத்த பெயர்? நினைத்துப் பார்க்கவே கூச்சமாக இருந்தது....

கவுண்டருக்கு ஆசைகள் திரும்பிவிட்டன. இளமை முறுக்குத் திரும்பிவிட்டது. வாழ்க்கையில் ஆர்வம் உண்டாகிவிட்டது. எதையும் சுவைத்து ஆர அமர அனுபவிக்கும் வேகம் வந்தாயிற்று. தழையத் தழைய வேட்டி கட்டுவார். அரைக்கைப் பட்டுச் சட்டை போட்டுக்கொண்டு சிங்கப்பூர் கூலிங்கிளாஸ் அணிந்து கொள்வார். உப்பிய பாக்கெட்டில் எப்போதும் பணம் இருக்கும். புல்லாய் ரோமம் சரிந்த மணிக்கட்டில் இறக்குமதி செய்யாத கள்ள வாட்சு மினுமினுத்தது. புதிதாகச் சிகரெட் பிடிக்கிற பழக்கம்கூட வந்துவிட்டது!

நன்றாகச் சாப்பிடவும், சுவைத்து அனுபவிக்கவும் ஆரம்பித்திருந்தார். மதியச் சாப்பாட்டுக்கு உட்கார்ந்தால் முக்கால் மணி நேரம் ஆகும். மெல்லியதாகச் சீரகம் போல இருந்த அரிசியில் வடித்த பிரியாணி சோறுதான். கறி, மீன், முட்டை இல்லாமல் ருசிக்காது. வக்கணையாக விதம் விதமாக வைத்துக்கொண்டு நன்றாகச் சாப்பிடுவார். சாப்பிடும்போது வள்ளி அவரிடம் குறும்பு செய்வதும் உண்டு. பிடித்தவற்றை இலை நிறையப் போட்டு வேடிக்கை பார்ப்பாள். அவர் வயிறு முட்டச் சாப்பிட முடியாமல் திண்டாடும்போது, கூட உட்கார்ந்து வாயில் ஊட்டி 'எனக்காகக் கொஞ்சம்' — என்று கொஞ்சி அவரைத் திணற அடிப்பாள்.

வள்ளியும் அப்படி நாகரிகமாக, மவுசாக இருக்கவேண்டும் என்று அவருக்கு ஆசை. புத்தகங்களில் வருகிற படங்களில் நாகரிக உடைகளைப் பார்த்து அதைப்போலக் கோயம்புத்தூரில் ஆர்டர் கொடுத்து தைக்கச் சொல்லுவார். விதம் விதமான கண்ணாடி போல உடல் தெரிகிற, லேசான சில்க் புடைவைகளை உடுத்த வைப்பார். மேல்நாட்டுப் பாணியில் உள்ளாடைகள் வாங்கிக் கொடுப்பார். கல்லூரிப் பெண்களைப்போல உடைகள் வாங்கிக் கொடுப்பார்.

வள்ளியும் அவற்றை விதம் விதமாக அணிந்து அவரை மகிழ்விப்பாள். அவரைப் பிரமிக்க வைப்பது போலச் சொகுசு நடை போடுவாள். தோள் தெரியச் சோளியும், இடை தெரியப் புடவையும் அணிந்து இடுப்பை ஒடித்து மிடுக்காக நடப்பாள். புதிதாகப் பார்த்தத் திரைப்படத்தில் கதாநாயகி செய்ததைப் போலக் கவர்ச்சியைக் காட்டுவாள். கவுண்டருக்கு மகிழ்ச்சி வெறி எல்லைக் கடந்து ஓடும். அவளை அப்படியே குழந்தையைப் போலத் துள்ளத்துள்ளத் தூக்கி அணைப்பார். காலையும் கையையும், கடைசல் உடம்பையும், வழவழப்பானத் தோளையும், அங்கப்

பூரிப்பையும், கண்டும் தொட்டும் சுவைத்தும் மகிழ்ந்து போவார்.

அதெல்லாம் அவர்களுக்குள்ளேதான். அந்தப் பெரிய வீட்டின் அறைகளுக்குள்ளேதான். வெளியில் எதுவும் தெரியாது. வீட்டு வாசலைக் கடந்துவிட்டால் வள்ளி ரொம்பப் பணிவாகத்தான் இருப்பாள். கவுண்டரும் ரொம்ப கௌரவமாகவே ஒதுங்கி நிற்பார். வீட்டுக்கு யாராவது எப்போதாவது பேச வந்தாலும் வள்ளி உள்ளே போய்விடுவாள். அவர்கள் இருவரும் ஒன்றாக இருப்பது ஒன்றைத் தவிர, விரசம் ஏதும் யார் கண்ணுக்கும் புலப் படாது.

அவளுடைய நாகரிக உடை, அலங்காரம் எல்லாம் வீட்டில் அவருடன் இருக்கும் வேளையில் மட்டும்தான். அவர் கண்ணைப் பறிக்கிற, உடல் அழகைக் காட்டுகிற கவர்ச்சி, ஆடைகள் எல்லாம் அவர் கண்களுக்கு மட்டும் தெரியும் அந்தரங்கமான அழகு விருந்துகள்தாம். வெளியே வந்தால் புடைவைத் தலைப்புத் தோளி லிருந்து நழுவாமல் அடக்க ஒடுக்கமாகத்தான் நடப்பாள். குனிந்த தலை நிமிராது.

அன்று கவுண்டர் வழக்கம்போலக் காலையிலேயே குடையும் கையுமாகக் கம்பங்காட்டுக்குப் புறப்படாமல் வீட்டி லேயே இருந்தார். நேரத்திலேயே குளித்து முருகன் படத்துக்கு மாலை போட்டு நீறு அணிந்துகொண்டு, காலை ஆகாரத்தையும் முடித்து விட்டார். வெற்றிலைப் பாக்கும் வாயுமாக வாசற்புறம் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார்.

ஒன்பது மணிக்கு ஒரு டீ சாப்பிடுவார். அதைப்போட்டு எடுத்துக்கொண்டு வந்த வள்ளி, இரகசியக் குரலில் கிண்டலாக ''மாப்பிள்ளை இன்னிக்கு எங்கே போகப் போறுப்பலே?'' என்று சொல்லிக் கண்ணைச் சிமிட்டினுள். கவுண்டர் சிரித்துக் கொண் டார். ''அரை மணியிலே தெரியும். நீயும் குளிச்சுப், பட்டுப் புடவை கட்டிக்க. கூந்தலைச் சீவிச் சிங்காரிச்சுக்க. போற வழியிலே பூ வாங்கி வச்சுக்கலாம்'' என்றுர்.

குழந்தையைப்போலக் கண்களை அழகாக உருட்டி விழித் தாள் வள்ளி. பிறகு முகவாய்க் கட்டையில் வலது கையை ஊன்றிக் குறும்பாக ''என்ன ஆச்சு? ஏதாச்சும் நடக்கப்போகுதா?'' என்று கேட்டாள். அதைப் பார்க்கக் கவுண்டருக்கு வேடிக்கையாக இருந்தது. ''எங்கே? நெஞ்சு படபடக்குதா பார்க்கலாம்!'' என்று அவளை அருகில் இழுத்துக் கையை வைத்துப் பார்க்க முயன்றுர். ''இந்த சரச விளையாட்டெல்லாம் படுக்கை அறை யிலே'' என்று சொல்லிவிட்டு, கன்னம் குழியச் சிரித்தபடி வள்ளி உள்ளே ஓடிவிட்டாள்.

இரவின் இருட்டில் கள்ளத்தனமாகத் தொடங்கிய நட்பு, வரவர முதிர்ந்து விட்டது. பகலிலும் அவளுடன் விளையாடத் தோன்றிற்று. வீட்டுக்குள்ளே நடந்த இரகசியமான சரசங்களை

வெளியிலும் செய்து பார்க்கும் பொல்லாத துணிச்சல் மனத்துக்கு வந்துவிட்டது. அதை அவரால் கட்டிப்போட முடியவில்லை....

இருவருமாக வெளியே கிளம்பினார்கள். வண்டி பூட்டித் தயாராக இருந்தது. அதில் ஜோடியாக ஏறிக்கொண்டு புறப்பட்டார்கள். வண்டியில் அவர்கள் ஒன்றாக அப்படி அமர்ந்து செல்வது அதுதான் முதல் தடவை. வள்ளிக்கு அது வெகு ஆனந்தமாக இருந்தது. பின்புறம் அமர்ந்து வேடிக்கை பார்த்துக்கொண்டே போனாள்.

வண்டி டவுனுக்குள் நுழைந்து கடைத் தெரு வழியாகப் பாங்கு ஒன்றின் வாசலில் போய் நின்றது. அவளைக் கீழே இறங்கச் சொல்லி, கவுண்டரும் கீழே இறங்கினார். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. ''என்னாங்க இது? எதுக்கு என்னை இங்கே கூட்டி வந்தீங்க?'' என்று இரகசியக் குரலில் செல்லமாகக் கண்டித்தாள்.

''பேசாம உள்ளே வா வள்ளி! இது ஒரு முக்கியமான காரியம். உன் பேரிலே கணக்கு வைத்து ஆயிரம் ரூபாய் பணம் போடப்போறேன். அம்மணியின் நகைகள் எல்லாம் இனிமே உனக்குத்தான். இங்கே பத்திரமாக வைக்கப் பொட்டி கொடுப்பாங்க.. அதில் அந்த நகைகளை நீ வச்சுக்கலாம். உனக்குத் தெரியாமல் வேறு யாரும் எடுக்க முடியாது. நான்கூட எடுக்க முடியாது'' என்று சொல்லிச் சிரித்தார் கவுண்டர்.

வள்ளி ''அம்மாடியொவ்'' என்று சொல்லிச் சிரிப்புத் தெரியாமல் வாயை மூடிக்கொண்டாள்!

# 6

**வ**ள்ளியை அழைத்துக்கொண்டு உள்ளே போனார் கவுண்டர். சில்க் ஜிப்பாவும் கூலிங் கிளாசுமாக அவர் போனபோது, வள்ளி பின்னால் வந்தது அவருக்கு மிகவும் பெருமையாக இருந்தது. கவுண்டருடைய வரவு செலவுகள் அந்தப் பாங்கு மூலமாகத்தான் நடக்கும். அதனால் ஏஜெண்ட் அவரைத் திருப்திப் படுத்த மிகவும் கடமைப்பட்டிருந்தார்.

கவுண்டருடன் வள்ளியையும் அறையில் நாற்காலியில் உட்காரச் செய்து கூல்ட்ரிங்ஸ் வரவழைத்துக் கொடுத்தார். பளபளவென்ற அந்த அறையையும், கண்ணாடிக் கதவையும் மின்விசிறி விளக்கு ஜோடனைகளையும் பார்த்தபோது வள்ளிக்கு நெஞ்சில் இனிமை கூடி நிறைந்தது. சுவரில் மாட்டி இருந்த தாமரைப் பூவில் அமர்ந்த லட்சுமி படத்தை மானசீகமாகத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

ஏஜெண்ட் மனுகாகிதத்தைக் கொண்டு வந்து வைத்தார். வள்ளி கையெழுத்துப் போடவேண்டிய இடத்தில் குறியிட்டுக் காட்டினார். பேனாவை மூடியைத் திறந்து கையில் பவ்வியமாகக் கொடுத்தார். வள்ளி படித்தது ஐந்தாம் வகுப்புத்தான். ஆனால் கையெழுத்துப் போடுகிற அளவுக்கு ஆங்கிலம் தெரியும். இருந்தாலும் இப்படி ஒரு சூழ்நிலையில் கையெழுத்திடும்போது உள்ளங்கை வியர்த்தது. பனிச்சாரலில் நின்றதுபோல மார்பில் ஒரு குளிர்க்கட்டி சிலிர்க்க வைத்தது.

அவள் கையெழுத்துப் போட்டதும் நூறு ரூபாய் நோட்டுக்களாகப் பத்து எண்ணி வைத்தார் கவுண்டர். ஏஜெண்ட் தானே பணத்தைச் செலுத்த ஏற்பாடு செய்து, பிளாஸ்டிக் அட்டை போட்ட கணக்குப் புத்தகத்தையும் கொண்டுவந்து கொடுத்தார். அவள் பணம் போடவும், எடுக்கவும் தேவைப்பட்டால் எழுதவேண்டிய மனுக்களையும் கொண்டுவந்து வைத்தார். ''நீங்க சிரமப்பட வேண்டாம். நான் இங்கேயேதான் இருப்பேன். எப்போதும் நீங்கள் வந்து பார்க்கலாம். நான் உதவி செய்வேன். கவுண்டருக்கு வேண்டப்பட்டவங்களாச்சே?'' என்று குரலைத் தேனாகப் பொழிந்து கொண்டு பேசினார் ஏஜெண்ட்.

புத்தகத்தை எடுத்து அவள் கையில் கொடுத்துவிட்டுக் கையில் கொண்டு வந்திருந்த நகைகளை எடுத்து வைத்தார் கவுண்டர். பத்திரமாக வைக்கும் பாதுகாப்புப் பெட்டியில் வைத்துப் பூட்டி சாவியைக் கவுண்டரிடம் கொடுத்தார். ''அதுகிட்டேயே கொடுங்க'' என்றார் கவுண்டர். வள்ளி உடல் புல்லரிக்க, கை விரல்கள் நடுங்க, அதை வாங்கிக் கண்ணில் ஒற்றிக்கொண்டு கழுத்தில் ஊக்கு சேர்த்துப் போட்டுக் கொண்டாள்.

திரும்பி வந்து வண்டியில் ஏறிக்கொண்டார்கள். கட்டின பசுவைப்போல, வள்ளி குனிந்த தலை நிமிராமல், புதுச்சேலை கணுக்காலில் தடுக்க நடந்துவந்து வண்டியில் ஏறிக்கொண்டாள். வண்டியின் இரும்புத் தண்டியில் காலை வைத்து உள்ளே ஏறும் போது விரல் நழுவப் பார்த்தது. ''மெள்ள மெள்ள'' என்று கவுண்டர் அவளைப் பின்புறம் தாங்கிக் கொண்டார். அவளுக்கு ரொம்பக் கூச்சமாகப் போய்விட்டது. அதை இன்னும் அதிகமாக்குவது போல அப்போதுதான் பாங்கிற்குச் சைக்கிளில் வந்து இறங்கிய ஓர் இளைஞன், அவள் நழுவப் பார்த்த இடத்துக்கு ஓடி வந்தான். அவன் விரல் அவள் மீது படக் கவுண்டர் விடவில்லை.

வள்ளி ஒரு முறை அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவள் உடல் கூசிக்குன்றி வளைந்தது. அந்த முகத்தை எங்கேயோ பார்த்த ஞாபகம்தான் முதலில் தோன்றிற்று. தொடர்ந்து ஒரு நொடியில் எங்கே பார்த்தோம் என்றும் நினைவு வந்துவிட்டது. தலைமுதல் கால்வரை வெட்கம் நெளிந்து பரவிற்று. அந்தக் காட்சி மனத்தில் ஓடிற்று... குளத்தில் மூழ்கி வள்ளி தலை நிமிர்கிறாள். கூந்தல் ஈரத்துடன் தோளெல்லாம் வழிகிறது. சற்று உயர்த்திக் கட்டிய பாவாடைதான் மார்பை மறைக்கிறது. அதுவும் அந்த ஈரத்துணியில் இலைமறை காய்மறையாகத் தெரிகிறது. அந்த

இளைஞன் அவளைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறான். படம் பிடித்துக் கொண்டிருக்கிறான். அவள் வெட்கத்துடன் மீன் கொத்திப் பறவை நீருள் குதிப்பதைப்போலக் குளத்தில் நீரில் மூழ்கு கிறாள்...

வண்டி ஓடிக்கொண்டிருந்தது. கண்ணை மூடிப் பசு கொட்டிலில் அசை போடுவதைப்போலக் கவுண்டர் தாம்பூலத்தை மென்று கொண்டிருந்தார். வெகுநேரம் அவளுடைய பார்வை பாங்கின் வாசலிலேயே நின்று, அவளையே கவனித்துக் கொண்டிருந்த இளைஞனையே உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தது. அவன் தொடர்ந்து வரவில்லை. உள்ளே போகவும் இல்லை. அவளும் கிளம்பி வந்துவிட்டாள். ஆனால் திரும்பிப் பார்த்த பார்வையைப் பெயர்க்க முடியவில்லை.

கவுண்டர் கண்ணைத் திறக்கவில்லை. வண்டி ஓடிக் கொண்டிருந்தது. மாமரத்து அணில் அந்த வெயில் வேளையின் அமைதியில் 'ணிக்ணிக்' என்று ஆணி அடித்துக் கொண்டிருந்தது. இடையிடையே எங்கோ வானில் பறந்து கொண்டே ஒரு கழுகு குழைந்து கத்தும் குரல் கேட்டது. கவுண்டரின் கை அவள் மடி மீது சுவாதீனமாகப் படிந்திருந்தது. அவள் அதை ஒதுக்கவில்லை. அந்த உணர்வு அவளுக்குக் கூச்சமாகவும் இல்லை. உடம்பில் அவருடைய கை எங்கே பட்டாலும் இப்போதெல்லாம் அவளுக்குக் கூச்சமோ நெளிவோ ஏற்படுவதில்லை.

வழுக்குமரத்தில் பிடிபடாமல் வழுக்குவதைப்போல அவளுடைய நினைவுகள் வழுக்கிக்கொண்டு ஓடின. திடீரென்று அன்று காலையில் கவுண்டர் அவளைப் பட்டுப் புடவை உடுத்திக் கொள்ளச் சொல்லி, வண்டியில் ஏறச்சொன்னதும் அவளுடைய உள்ளம் எண்ணாததெல்லாம் எண்ணிவிட்டது. ஏதோ ஒரு கோவிலில் மாலை மாற்றிக் கொண்டு தாலி கட்டிக்கொண்டு வரப்போகிறோம் என்றெல்லாம் கற்பனை செய்யத் தொடங்கி விட்டாள்.

இப்போது வண்டி திரும்பி வருகிறது. கையில் மாலையும் இல்லை. கழுத்தில் தாலிச் சரடும்இல்லை. இன்னும் அவள் அவருடைய மனைவியாக இல்லை. ஏஜெண்ட் கூட அவளைக் கவுண்டருக்கு வேண்டப்பட்டவள் என்று மட்டும்தானே சொன்னார்? ஆயிரம் ரூபாய் பணம், கல்லுக்கல்லாக நகைகள், எல்லாவற்றையும் கொடுத்திருக்கிறார் கவுண்டர். நகைகளைப் பார்த்தபோது அவளுக்குக் கூச்சமாகக்கூட இருந்தது. அந்தக் காசுமாலையையும் கல்வளையல்களையும் அவளை வெற்றுடம்பில் அணியச் சொல்லிக்கூட விளக்கேற்றி அழகு பார்த்திருக்கிறார் கவுண்டர். அந்த விபரீத ஆசைக்கெல்லாம் அவளும் வளைந்து கொடுத்திருக்கிறாள்....

பணமும் நகையும் எதற்காக? எதற்குப் பதிலாக? அவள் கொடுத்ததற்கெல்லாம் மதிப்புப் போட்டுக் கொடுத்ததா அவை? கழுத்தில் தாலி இல்லாமல், உடலை ஒப்படைத்து, சுகம் தந்து, பணிவிடை புரிந்ததற்குப் பதிலாகவா

அந்த மரியாதை? அம்மணி அவற்றை அணிந்திருக்கிறாள் — அவரை அடைந்ததன் அடையாளமாக. அப்புறம் உதறிவிட்டுப் போயிருக்கிறாள் — அவரைத் துறந்துவிட்டதன் அடையாளமாகவும்தான். இப்போது அவளுக்கு வந்து சேர்ந்திருக்கின்றன அந்த நகைகள். அம்மணி அணைத்துவிட்டுப் போன விரகதாபத்தை, உடல் தாகத்தை, மறுபடி எழச்செய்து குளிர்வித்த சேவைக்காக அவளுக்கு அந்த நகைகள் கிடைத்திருக்கின்றன. எல்லா நகைகளுமே — திருமாங்கல்யச் சங்கிலியைத் தவிர! கவுண்டர் ஏன் அந்தச் சங்கிலியை அவள் கழுத்தில் கட்டவில்லை. ஊரறிய ஏன் அவளை மேளம் கொட்டிக் கையைப் பிடித்து மணம் செய்து கொள்ளவில்லை? அவள் கேட்காததுதான் தப்பா? கேட்டிருந்தால் செய்திருப்பாரா?

ஊர் வந்து சேரும் வரை அந்தக் கீறலிலேயே மனம் ஓடிக் கொண்டிருந்தது. எடுத்துவிடுவாரின்றி மீண்டும் மீண்டும் குளத்துச் சேற்றில் மாடு அகப்பட்டுக் கொள்வதைப்போல, திரும்பத் திரும்பச் சிக்கிக் கொண்டு தவித்தது. முழங்கால்களுக்கிடையே முகத்தை வைத்துக்கொண்டாள். அதிலிருந்து வீடு வந்துசேரும் வரையில் தலைநிமிரவே இல்லை.

மறுபடியும் அவள் பாங்கிற்குப் போக ஒரு மாதம் ஆகிவிட்டது. அன்று கவுண்டர் துணை வரவில்லை. அவளைச் சீண்டுவதைப்போல ''நீயே பஸ்ஸில் போய்விட்டுவா... உனக்குப் பாங்கில் பணத்தைப் போட்டுக் கணக்கு வைக்கத் தெரிகிறதா பார்ப்போம்'' என்று சொல்லி அனுப்பிவிட்டார். கவுண்டர் அவளுக்கென்று அவ்வப்போது கொடுத்த பணம், செலவழித்தது போக நோட்டும் சில்லறையுமாக ஐம்பது ரூபாய் இருந்தது. அதை எடுத்துக்கொண்டு போனாள் வள்ளி.

கையில் புத்தகமும், கவர் ஒன்றில் பணமுமாக பாங்கில் அவள் நுழைந்ததும் பியூன் ஓடிவந்து ''பணம் போடனுங்களா? அங்கே போங்க'' என்று ஜன்னல் ஓரமாக இருந்த கௌண்ட்டர் ஒன்றைக் காட்டினான். அங்கே போய் அவள் பணத்தையும் பாங்க் புத்தகத்தையும் கொடுத்ததும் உள்ளே இருந்த கை நீண்டு வாங்கிக் கொண்டது. ஒரு நொடி அந்த விரல்கள் தற்செயலாக அவள் கைவிரல்களில் பட்டன. தற்செயலாகத்தானா...?

அவள் நிமிர்ந்து பார்த்தாள். மின்னல் அடித்ததுபோல இருந்தது. போன தடவை வாசலில் பார்த்த அதே இளைஞன்தான். அவன் இங்கேதான் வேலை பார்க்கிறானா? உடம்பு முழுவதும் ஒரு தடவை தலையோடு காலாய் சூடேறிற்று. அவன் தன்னை, தன் மேனி அழகைக் கண்கொட்டாமற் பார்த்த ஞாபகம் வந்தது. முகம் ஜிவ்வென்று சிவந்தது.

பாஸ் புக்கில் பதிந்து திரும்ப வாங்கிக்கொண்டு வெளியே வந்தாள். கூடைக்காரியிடம் மல்லிகைச்சரம் வாங்கிக்

கொண்டையிட்ட கூந்தலில் வில்லாகப் பதிய வைத்துக்கொண் டாள். மனத்தில் இனம் புரியாத மகிழ்ச்சி பொங்கிற்று. அது கழுத்துவரை ததும்பிப் பூரித்து நின்றது. பஸ்ஸுக்கு டிக்கட் வாங்கச் சுருக்குப் பையிலிருந்து சில்லறையைத் தேடி எடுத்தாள்.

''நான் வாங்கித் தரலாமா..?'' என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தாள். அதே வாலிபன்தான். வேலையைப் போட்டு விட்டு, அவளுக்குத் தெரியாமல் அவள் பின்னாலேயே தொடர்ந்து வந்திருக்கிறான். அவள் கை சுருக்குப் பையிலிருந்து விலகாமல் அப்படியே நின்றது. கண்கள் அவனையே குத்திட்ட பார்வையாகப் பார்த்துக்கொண்டு நின்றது. அவன் கையை நீட்டிச் சில்லறையை வாங்கிக் கொள்ளவில்லை. அவனே காசு போட்டு வாங்கினான்.

''எதுக்கு நீங்க வாங்குறீங்க?'' என்று நாணத்தால் குரல் மிரளக் கேட்டாள் வள்ளி. பார்வை தாழ்ந்துவிட்டது.

''ஒரு அபராதம் கட்டறதாக வச்சுக்குங்க... இந்தாங்க ப்ளீஸ்!'' என்று டிக்கட்டை அவள் கையில் கொடுத்தான்.

''அபராதமா..?'' என்று வியப்பில் கண்கள் விரியக் கேட்டாள் வள்ளி.

''ஆமா... தப்புக் காரியம் செய்ததற்கு அபராதம். ஏதோ ஒரு மயக்கத்தில் தப்பாக அப்படிச் செய்துவிட்டேன். உங்களை முதன் முதலில் பார்த்ததை, படம் பிடித்ததைத்தான் சொல்லுகிறேன்'' என்றான் மறுபடியும்.

''அதிலே தப்பு என்ன இருக்கு...?'' என்று தன்னையறி யாமல் கேட்டுவிட்டாள் வள்ளி. உடனே ஏன் அப்படிச் சொன்னோம் என்று எண்ணுவதைப் போலக் கையைக் கடித்துக் கொண்டாள். அவன் கண்பார்வையினாலேயே சிரித்தான். அப்புறம் பேசவில்லை. அவளுக்கு உடம்பெல்லாம் கிளர்ந்தது. கண்ணில் நீர் அரும்பிற்று. பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து, கையை அசைத்துவிட்டு, சைக்கிளில் போகிறவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

மனம் மீண்டும் எண்ணிற்று. அவன் பார்த்ததில் என்ன தப்பு? அழகாக ஒரு பெண் அப்படி மெய்ம்மறந்து குளித்துக் கொண் டிருந்தால் பாராமல் போவதற்கு அவன் என்ன சன்னியாசியா? பார்த்தால்தான் என்ன பிசகு? பாராட்டுத்தானே அந்தப் பார்வை? கவுண்டர் பார்க்கவில்லையா...? பாராட்டவில்லையா? துகில் நெகிழ்ந்து இருட்டிலும், வெளிச்சத்திலுமாக உடல் நெளிந்து மின்ன...

சட்டென்று உலுப்பிக் கொண்டாள். என்னென்ன நினைவுகள்? எப்படிப்பட்ட சிந்தனைகள்? எப்படி இவற்றுக்கெல் லாம் மனத்தில் இடம் கொடுத்தாள். கவுண்டருக்குச் சரியாக அந்த வாலிபனை ஒப்பிட்டு நினைக்கலாமா? எப்பேர்ப்பட்ட தவறு? மீண்டும் மீண்டும் தன் நெஞ்சையே இடித்துக்கொண்டாள். ஆனால், அது அழவில்லை; புலம்பவில்லை; வருத்தப்படவும் இல்லை.

விரித்துக் காட்ட முடியாத ஒரு மகிழ்ச்சியில் கிளர்ந்து புரண்டது. குதூகலமாகத் துள்ளிற்று.

அந்த வாலிபன் — அவனுடைய பார்வை — அவனுடைய அழகின் ரசனை — அவனுடைய விரல்கள் பட்ட உணர்ச்சி தந்த மகிழ்ச்சி — எல்லாம் சேர்ந்து அவளை ஒரு தள்ளு நடையுடன் வீடு திரும்ப வைத்தன. கவுண்டர் அவள் நடந்து வந்ததையே கவனித்துக் கொண்டிருந்தார்.

''என்ன குஷி புள்ளே! கால் டான்ஸ் பண்ணுதே..?'' என்றார்.

''ஐம்பது ரூவா பாங்கியிலே போட்டுட்டேன். இந் தாங்க புத்தகம்'' என்று அதை அவர் மடியில் போட்டுவிட்டு, ஒரு சினிமா பாட்டை முணுமுணுத்தபடி அடுக்களைக்குள் நுழைந்தாள் வள்ளி.

ஒரு கல்யாணத்துக்காக ஊருக்குப் புறப்பட்டார் கவுண்டர். அவளை அழைத்துக்கொண்டு போகவில்லை. போனால் என்னவென்று சொல்லி அறிமுகப்படுத்துவது? அதுவும் உறவு முறைக்காரர்கள் எல்லாரும் வந்திருப்பார்கள். அவர்களிடம் என்னவென்று சொல்லுவது?

''பழனிக் கவுண்டனை வந்து ராவைக்கு வாசலில் துணைக்குப் படுத்துக்கச் சொல்லியிருக்கிறேன். பயப்படாமே இரு. வாசற்தாழ்ப்பாளைத் திறக்க வேண்டாம். அக்கம் பக்கம் யார் வீட்டுக்கும் போகவேணும். நாளைக்குக் கல்யாணம் முடிஞ்சதும் திரும்பிடுவேன். எப்படியும் ராவைக்குள்ளே...'' என்றார் கவுண்டர் குடையும், பையுமாகக் கிளம்பிக்கொண்டே.

''அப்படி என்ன அவசரமாம்...?'' என்று குறும்பாகக் கண்ணைச் சிமிட்டினாள் வள்ளி.

''ஆமா... உன்னை விட்டுப்புட்டு இரண்டு ராத்திரி வெளியே இருக்க என்னாலே முடியாது'' என்று பதிலுக்குக் கண்ணைச் சிமிட்டினார் கவுண்டர். தாழ்ப்பாளைப் போட வந்த அவள் கைமீது அவர் கைவிரல்கள் சேர்ந்து மூடின. வள்ளியின் கைவிரல் அவருடைய உள்ளங்கையை நறுக்கென்று கிள்ளிற்று.

கவுண்டர் காலை பத்துமணி பஸ்ஸுக்குப் புறப்பட்டுப் போய்விட்டார். அவள் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு உள்ளே போய்விட்டாள். சமையல் செய்து வைத்துவிட்டுக் குளித்துச் சாப்பிட்டாள். பிற்பகலில் ஒரு சிறு தூக்கமும் போட்டாயிற்று. முகத்தைக் கழுவிக்கொண்டு வந்து வாசற்கதவைத் திறந்து வைத்துக்கொண்டு படியில் உட்கார்ந்தாள். கொஞ்ச நேரத்தில் பழனிக் கவுண்டன் வந்துவிடுவான்.

தோட்டத்து கேட் திறந்தது. ஒரு சைக்கிள் உள்ளே வந்தது. ஜிவ்வென்று அவள் உடம்பில் இரத்தம் குளிர்ந்து ஓடியது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அதே வாலிபன்தான்! அங்கேயே வந்துவிட்டான். எப்படி ஊரும், பேரும் அடையாளம் தெரிந்தது?

சைக்கிளிலிருந்து இறங்கி சிரித்துக்கொண்டே நின்றான் அவன். அவள் அவன் அப்படி வந்ததை எதிர்பார்க்கவில்லை என்று நோட்டம் பார்த்துக்கொண்டான். அவள் அவனை மறுத்துக் கோபித்துக் கொண்டு திருப்பி அனுப்பமாட்டாள் என்பதையும் ஊகித்துக் கொண்டான். கொஞ்சம் தைரியமாகவே, சைக்கிளில் மாட்டியிருந்த பையிலிருந்து பூப்பொட்டலத்தை வெளியே எடுத்து அவள் அருகில் வைத்தான். அவள் பயந்தது போல எழுந்து விலகி நின்றாள். அந்தப் பயமும் நடிப்புத்தான். அதுவும் அவனுக்குத் தெரிந்ததுதான்.

''நான் போகட்டுமா..?'' என்று கேட்டான். அவள் பதில் சொல்லவில்லை. ஆனால் பார்வை 'வேண்டாம்' என்றது.

''கொஞ்ச நேரம் உங்ககூட இருக்கட்டுமா?'' என்று கேட்டான்.

''வேண்டாம்'' என்று தலையைக் குனிந்துகொண்டு கால்விரலால் தரையைத் தேய்த்தாள் வள்ளி.

''ஏன் அப்படிச் சொல்லுறீங்க?''

''ஐயா ஊரிலே இல்லே. நான் தனியா இருக்கேன். பயமா இருக்குது.''

''தனியா இருக்கப் பயமா..? நான் வந்தது பயமா?'' என்று கேட்டான் அவன்.

அவள் 'களுக்'கென்று சிரித்துவிட்டாள். அவனுக்கும் சிரிப்பு வந்துவிட்டது. அவள் எழுந்து உள்ளே போனாள். அவன் ஒரு கணம் தயங்கிவிட்டுக் கூடவே உள்ளே போனான். ஆனால், வாசல் அறையைத் தாண்டவில்லை.

''தாகத்துக்கு ஏதாவது சாப்பிட றீங்களா?'' என்று கேட்டாள். அவன் தலையை ஆட்டினான். அவள் உள்ளே போய் மோர் எடுத்துக்கொண்டு வந்தாள். அதைப் பருகிக்கொண்டு, அவளைப் பார்த்தபடியே நின்றான். அவளும் விலகிப்போகவில்லை. ஆசையாக அவனையே கவனித்துக்கொண்டிருந்தாள்.

''நீங்க அவருக்கு என்ன உறவு? மகளா..?''

அவளுடையமுகத்தில் தெரிந்த அதிர்ச்சியைக் கண்டதும் சமாளித்துக்கொண்டான். ''மன்னிக்கணும். ஒரு வேளை அவரை இளையதாரமாகக் கட்டிக்கொண்டிருக்கிறீங்களா?''என்று கேட்டான். வள்ளி தலையைக் குனிந்து கொண்டாள். தலை அசையவில்லை. அவள் என்னவென்று பதில் சொல்லுவது?

சங்கடமான ஏதோ ஒரு கேள்வியைக் கேட்டுவிட்டோம் என்று புரிந்து கொண்டவனாக, ''நான் கேட்டது தப்பானால் விட்டுடுங்க.. உங்க முன்னாலே நான் இப்படித்தான் தடுமாறிப் போயிட்றேன். என்னைத் தப்பு பண்ண வைச்சுக்கிட்டே இருக்கீங்க...'' என்றான்.

''தப்பில்லே. இதுவும் தப்பில்லே'' என்றாள் வள்ளி. அதைக் கேட்டதும் அவன் முகம் சட்டென்று மலர்ந்தது. ''பாஸ் புக்கில் விலாசத்தைப் பார்த்தேன். பெயரும் தெரிஞ்சுது.. பார்க்கணும் போல இருந்தது. லீவு போட்டுவிட்டு சைக்கிளில் வந்தேன். நீங்க தனியாகத்தான் இருக்கீங்க... உட்கார்ந்து நிறையப் பேசலாம். ஆனால் உங்களுக்குப் பயமாக இருக்குது.. நான் போகட்டுமா?'' என்று கிளம்பினான். அவள் வாசல் வரையில் வந்து நின்றாள்.

''உங்க ஐயா நாளைக்கும் திரும்பி வரமாட்டாங்களா?'' என்று கேட்டான், எதையோ நினைத்துக் கொண்டவனைப்போல.

''மாட்டாங்க... ஆனால்... ஒண்ணும் வேணாம்..எனக்குப் பயமா இருக்குது'' என்று சிணுங்கினாள் வள்ளி.

''இங்கேதானே பயம்? டவுனுக்கு வாங்க.. பாங்கிலே பணம் போடுகிற சாக்கில் வாங்க... அங்கே பேசலாம். ஓட்டலில் சாப்பிடலாம். சாப்பிட்டுக்கிட்டே பேசலாம்'' என்றான் அவன்.

''வேண்டாமுங்க. அங்கேயெல்லாம் நான் வந்து...'' என்று இழுத்தாள் வள்ளி. முகம் சிவந்து போய்விட்டது.

''பின்னே நான் இங்கே வரவா? நீங்க சமைச்சுப்போட்டு நான் சாப்பிடவா?'' என்று கேட்டான் அவன்.

''அதெல்லாம் வாணும்!'' என்று பதறிப்போய் பதில் சொன்னாள் வள்ளி. பிறகு, ''சரி சரி! நானே நாளைக்குக் காலையிலே அங்கே வர்றேன். உங்களைப் பாங்கில் பார்க்கிறேன்!'' என்று சொல்லிவிட்டுத் தாழ்ந்த குரலில் ''இதெல்லாம் எதுவுமே யாருக்கும் தெரியவேண்டாம்'' என்று சொன்னாள் வள்ளி.

''நான் கொண்டுவந்த பூவை வச்சுக்கிலியே?'' என்று கேட்டான் அவன்.

அவள் சிரித்துக் கொண்டாள். பழனிக்கவுண்டன் வரும் வேளைதான். தொடர்ந்து அவன் அங்கே இருக்கக்கூடாது. உள்ளே போய் பூச்சரத்தை எடுத்துக்கூந்தலில் சூட்டிக்கொண்டு வந்து ஜன்னல் வழியாகப் பார்த்தாள். அவன் சிரித்துக்கொண்டே ஒரு முறை சைக்கிள் மணியை அடித்தான். கை உயர்ந்து அசைந்தது. அவளும் சிரித்துக்கொண்டே கையை அசைத்தாள். சைக்கிள் கேட்டைத் தாண்டிப் போகும்வரையில் பார்த்துக்கொண்டே இருந்துவிட்டுக் கதவைத் தாழ்ப்பாள் போட்டாள்.

அன்று இரவு அவளால் தூங்க முடியவில்லை. கட்டிலில் புரண்டு கொண்டே இருந்தாள். மீண்டும் மீண்டும் அவன் பேச்சையும், சிரிப்பையும் எண்ணி எண்ணி மனம் பூரித்துப் போனாள். கொஞ்சம் பழகுவதற்குள் எவ்வளவு துணிச்சல்? அவள் பணிவு கொடுத்த தைரியமா..? அல்லது அவள் அழகு தூண்டிவிட்ட வேகமா...?

கண்ணை மூடிக் கொண்டாள். அவன் அருகில் வந்து அமர்ந்து பூச்சரத்தைத் தலையில் சூட்டுவது போல இருந்தது. அவளை தூக்கி நிறுத்தி அழகு பார்த்து காமிராவில் படம் பிடிப்பதுபோல இருந்தது. படமெடுத்ததும் அருகில் வந்து அவள் முகத்தைநிமிர்த்தி...

அதற்கு மேல் அவளால் சிந்திக்க முடியவில்லை. ஏனோ கவுண்டரின் ஞாபகம் தலையெடுத்தது. ஒரு குற்ற உணர்வு நெஞ்சில் கனத்துச் சுமந்தது. 'இதை வளரவிடக்கூடாது. மறுபடி நான் தனியாக அவனைச் சந்திக்கவே கூடாது' என்று எண்ணிக்கொண்டாள். ஆனால், காலையில் எழுந்ததும் அவளால் டவுனுக்குப் போகவேண்டும் என்ற ஆசையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவே முடியவில்லை!

# 7

காலை முற்றுவதற்குள் குளித்து முடித்து அலங்காரம் செய்துகொண்டாள். கண்ணுக்கு மை தீட்டிக் கொண்டாள். இரகசியமாக மார்புக்கு நடுவில் சோளியில் துளி சென்ட்கூடப் போட்டுக் கொண்டாள். சிங்கப்பூரிலிருந்து, கொண்டுவந்ததாக ஒருவரிடம் கவுண்டர் வாங்கி வந்த பெரிது பெரிதாகப் பூப்போட்ட சில்க் புடைவையை எடுத்து அணிந்து கொண்டாள். கூந்தலை பின்னால் தளர விட்டுக் காதோரம் சுருளாக இறக்கிவிட்டுக் கொண்டாள். முத்து ஜிமிக்கி ஒன்றைத் தொங்கவிட்டுக் கொண்டாள்.

நிலைக்கண்ணாடியில் பார்த்தபோது அவளால் தன் உருவத்தை நம்பவே முடியவில்லை. 'இது யாரோ புது வள்ளி' என்று நினைக்கும்படி இருந்தது. கோயம்புத்தூரில் பார்க்கிற கல்லூரிப் பெண்ணைப் போல இருந்தது. கண்ணாடிக்கு முன்னால் நின்று முன்னும் பின்னும் திரும்பித் தன்னை அழகுப் பார்த்துக் கொண்டாள். உதட்டை முறுக்கிச் சிரித்துக் கொண்டாள். கண்ணைச் சிமிட்டிக் கொண்டாள். அந்தக் கவர்ச்சி சொக்குப்பொடிப் போடுவதைப் போல் இருந்தது.

பஸ்ஸில் போய் இறங்கி, கைப்பையைத் தொங்கவிட்டுக் கொண்டு பாங்கிற்கு நடந்தாள். பலருக்கும் அவளை அடையாளம் கூடத் தெரிந்திராது. அப்படி ஒரு நடை. அப்படி ஓர் உடை. கண்ணிற்கு கூலிங்கிளாஸ் வேறு. தியாகராஜன் அவளைப் பார்த்துப்

பிரமித்தே போய்விட்டான். கையிலிருந்த பேனவை மூடி வைத்து விட்டுக் கண்ணில் வியப்புத் தெரிய, ''அடேடே! நான் யாரோன்னு நினேச்சேன்'' என்று, வாய்விட்டே சொல்லிவிட்டான்.

பணம் போடுகிற சாக்காக வந்த வள்ளி, பாங்கில் பணத்தைக் கட்டிவிட்டுப் புறப்பட்டபோது அவனும் கூடவே கிளம்பிவிட்டான். வள்ளியின் உடையும் அலங்காரமும் அவனுக்கு அவள் மனத்தைச் சொல்லாமல் சொல்லிவிட்டது. தன்னுடைய அழகை அப்படி அவள் பெருமையுடன் அவனுக்குக் காட்டியது, 'இதெல்லாம் உனக்குத்தான், உனக்கு மட்டும்தான்' என்று கூறுவதைப்போல இருந்தது...

இருவருமாகக் கிளம்பிவிட்டார்கள். கடைத்தெருவில் ஒவ்வொரு கடையாகப் பார்த்துக்கொண்டே போனூர்கள். அவன் சிரிக்கச் சிரிக்கப் பேசிக்கொண்டே வந்தான். அவன் எதைச் சொன்னுலும் அவளுக்குச் சிரிப்பு பொங்கிக் கொண்டு வந்தது. உள்ளூற அப்படி ஒரு கிளுகிளுப்பு மலர்ந்து கிடந்தது. ஓரக்கண்ணுல் திருட்டுப் பார்வை. தற்செயலாக இடிப்பது போல, மேலே இடித்த இடிப்பு. இரகசியமாக விரலைத் தொட்ட குறும்பு — எல்லாமே அவளுக்கு விறுவிறுவென்று சமையலில் பூண்டு போட்ட மாதிரி இருந்தது.

பஸ்ஸில் ஏறுவதற்கு முன் அவர்கள் ஓட்டலுக்குப் போனூர்கள். ஸ்வீட், காரம், மசாலா தோசை எல்லாம் வரவழைத் தான் தியாகு. விளையாடுகிற குழந்தையைப் போல அவளுடன் குறும்பு செய்து கொண்டே இருந்தான். சுற்றிலும் இருந்தவர்கள் பார்வை அவர்களைப் பார்த்து வட்டமிட்டது. அவர்கள் பழகுகிற விதத்திலேயே கல்யாணம் செய்து கொண்டவர்கள் அல்ல — காதல் ஜோடிகள்தாம் என்பது புரிந்தது. அவர்கள் அப்படிப் பார்த்ததும் வள்ளிக்கு ரம்மியமாக இருந்தது.

சாப்பிடும்போது அவள் காலை மெதுவாகத் திருட்டுத் தனமாக மிதித்தான் தியாகு. கணுக்கால் கொலுசைக் கால் விரலால் தடவிக் கொடுத்தான். கால் விரல்கள் இணைந்து கூசி விலகிப் புரண்டு கொண்டன. அவன் சொல்ல ஆசைப்படுவதையெல்லாம் அந்த உணர்வு தொட்டுத்தொட்டுச் சொன்னது. அவளுக்கு வெட்கமாக இருந்தது. கூடவே மகிழ்ச்சியாகவும் இருந்தது.

வெளியே வந்தார்கள். பஸ் நிற்குமிடத்துக்கு அவள் கூடவே வந்து ஏற்றிவிட்டுத்தான் போனுன். புறப்படுகிற சமயம் திடீரென்று ஒரு தைரியம் வந்தவனைப்போல அவள் கையைப் பிடித்து விரல்களைப் பற்றினுன். நகமெல்லாம் சதையில் அமுங்குவதைப் போல ஒரு பிடிப்புடன் அவன் விரல்கள் அவளுடைய உள்ளங் கையை ருசி பார்த்தன. அப்போதுதான் ஞாபகத்துக்கு வந்ததைப் போலச் சட்டென்று ஒரு கவரை அவள் கையில் கொடுத்து விட்டு, விலகிக் கொண்டான்.

பஸ் கிளம்பிவிட்டது. அவள் தலையை நீட்டி அவனைப் பார்த்துக்கொண்டிருந்தாள். பின்னால், மறைகிறவரை, நின்று கொண்டிருந்த அவனுடைய உருவம், புள்ளியாகிற வரையில் பார்த்துக்கொண்டே இருந்தாள். மனத்தில் தோன்றிய குறுகுறுப்பு, அச்சம் எல்லாவற்றையும் கடந்து ஒரு பெருமிதம் பொங்கி அலைத்தது. 'என்னை நினைத்துக்கொண்டா? என்னையேவா? எனக்காகவா இப்படி ஒரு படித்த வாலிபன்? எப்படி இருக்க முடியும்? நம்ப முடியவில்லையே?' என்பதுபோல மீண்டும் மீண்டும் எண்ணிக்கொண்டாள்.

அவள் திரும்ப வீட்டுக்கு வந்து சேரும்போது உச்சி வெயில் கடந்துவிட்டது. சாப்பிடப் பிடிக்கவில்லை. உடையை மாற்றிக் கொள்ளுமுன் வாசற்கதவைத் தாழ்ப்பாளிட்டுவிட்டு, போய் வந்த சோர்வும், வியர்வையும் அடங்கக் குளித்தாள். மார்பின் நடுவில் இருந்த செண்ட்டின் மணம் இன்னும் மாறவில்லை. மல்லிகைப்பூ மணத்த கூந்தலின் வாசம்கூட இளகவில்லை. உடம்பிலும் அந்த நினைவு மணத்துக் கொண்டிருந்தது. அவனுடைய கால் விரல்களைத் தொட்டுத்தொட்டு விளையாடிய தன் கால்விரல்களைக் கையால் தொட்டுப் பார்த்துக்கொண்டாள்.

குளித்துவிட்டு, வெறும் புடவையை மட்டும் உடம்பில் சுற்றிக்கொண்டு மாடிக்குப் போனாள். அங்கே திறந்த வெளி மாடியை ஒட்டிய வராந்தாவில் தலைப்பை விரித்துப் படுத்துக் கொண்டாள். ஆசையாக அந்த நினைவுகளை மீண்டும் எண்ணிக் கொண்டாள். அதுவே ஆலவித்தாகத் திரண்டு அமைவது போலக் கன்னம், மோவாய், மார்பு, வயிறு எல்லா இடங்களிலும் பரவி நின்றது. வானை வளைக்கும் ஆசையாகக் கால்களும் கைகளும் இறுகிக் கொண்டன. உள்ளும் புறமும் புடைத்து நின்றது.

தரையின் மென்சூட்டில் உடம்பு லேசான இதம் கண்டது. ரவிக்கையில்லாத வெற்றுடம்பில் வெளிச்சமும், கதகதப்புமாக வெயில் மலர்ந்து தடவிக்கொடுத்தது. கண்ணைமூடிக் கொண்டு உள்ளே பரந்த செவ்வானத்தையும், அதன் நடுவில் தெரிந்த தியாகுவின் சிவந்த முகத்தையும் பார்த்துக்கொண்டு, தூங்காத கனவாகக் கண்டு ரசித்தபடி படுத்துக் கொண்டிருந்தாள். வாசற்கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டது.

எழுந்து மெதுவாக முன்புறம் போய்க் கீழே எட்டிப் பார்த்து, ''யாரு?'' என்று அலுத்துக் கொட்டினாள். கண்பார்வையில் கீழேயிருந்த தலைநிமிர்ந்த உருவம் தெரிந்தது. கவுண்டர்தான்! வியப்புடன் கீழே இறங்கி ஓடிவந்துக் கதவைத் திறந்தாள். ''ஏது இவ்வளவு சுருக்கா?'' என்று கண்ணை இடுக்கிச் சிரித்தாள். அவளை ஏற இறங்கப் பார்த்தார் கவுண்டர். அப்போதுதான் உணர்ந்தவளாய்த் தலைப்பை இழுத்துப் போர்த்தி உடம்பை மூடிக்கொண்டாள் வள்ளி.

''உன்னை விட்டுட்டு இருக்கமுடியலே புள்ளே!'' என்று கூறி ஒருமுறை அவளை இறுக அணைத்துவிட்டு, விறுவிறுவென்று உள்ளே விரைந்தார் கவுண்டர். பின்பக்கம் போய் காலைக் கழுவிக் கொண்டுவந்தார். சிரித்துகொண்டே நின்றவளை, அப்படியே குண்டுக்கட்டாகத் தூக்கி இறக்கினார். முகத்தில் முகம் வைத்து அவளை அணைத்துக்கொண்டார்.

வள்ளிக்கு உடம்பு சுட்டது. அந்த அணைப்பும், விளையாட்டும் வேண்டி இருக்கவில்லை. அவருடைய பரவசத்தைப் பார்க்கவே கசப்பாக இருந்தது. கொஞ்ச நேரம் அவரை விட்டு விலகியிருந் தால் தேவலை என்று எண்ணி நெஞ்சு முணுமுணுத்தது. கவுண்டர் சாப்பிடாமல் வந்திருந்தார். சோறு ஆக்கும் பாவனையில் அவள் விலகி உள்ளே போய்விட்டாள்.

தியாகு கொடுத்த கடிதத்தைப் படிக்க முடியவில்லை. சமையலறையில் வேலை செய்யும்போதுதான், கவுண்டர் குளியல் அறையில் இருந்தபோதுதான், அவசரம் அவசரமாகப் படித்தாள் வள்ளி. அவளுக்குப் புரிகிற மாதிரி எளிய வாசகத்தில் கடிதம் எழுதி இருந்தான் தியாகு. சுருக்கமான கடிதம்தான் என்றாலும், அதில் அவனுடைய ஆசையை அள்ளிக் கொட்டியிருந்தான்.

வள்ளிக்கு உடம்பெல்லாம் பூரித்தது. இவ்வளவு ஆசை யாக, அருமையாக அவளை வருணித்து, வியந்து எழுதியவர்கள் யாரும் இல்லை. காதல் கடிதம் எழுதுவதை அவள் சினிமாவில்தான் பார்த்ததுண்டு. இப்படி மனசைக் கொட்டி, அவளைத் துருவிப் பார்க்கிற மாதிரி, கொஞ்சி எழுதிய கடிதம் அவளுக்கு முதல் அனுபவம். கடைசியில் அவன் கொடுத்திருந்த முத்திரை—அவள் கன்னத்திலேயே கொடுத்தது போன்ற உணர்ச்சி — அவளை மெய்ச்சிலிர்க்க வைத்தது.

மறுபடியும் அவளைச் சந்திக்க அவனே வருவதாக எழுதியிருந்தான். அவர்கள் சந்திக்கவேண்டிய இரகசியமான இடத் தையும் குறிப்பிட்டிருந்தான். அங்கே அவளுக்காக மாலை ஐந்து மணிக்குக் காத்திருப்பதாகவும் சொல்லியிருந்தான். இன்னும் இரண்டு நாட்கள்—நினைக்கக் கொஞ்சம் தாபமாக இருந்தது. சிறிது பயமாகவும் இருந்தது. கவுண்டர் குளியலறையிலிருந்து நனைத்துப் பிழிந்த வேட்டியைச் சொடுக்கிக் கொண்டு வரும் சத்தம் கேட்டது. அவசரமாக அந்தக் கடிதத்தை ஒரு சம்புடத்தில் போட்டு மூடி விட்டாள்.

சரியான ஆகாரம் ஏதும் இல்லை போலிருக்கிறது. கவுண்டர் வழக்கத்துக்குக் கூடுதலாகவே ஒரு பிடி பிடித்தார். சோறும் குழம்பும் அவளுக்குக்கூட மிஞ்சவில்லை. சாப்பிட்டதும் பஸ்ஸில் வந்த அலுப்பில் தூங்கிவிட்டார். அவர் குறட்டைவிடும் சத்தம் அவளை விரட்டுவதுபோல இருந்தது. அவளை அந்த வீட்டி லிருந்தே விரட்டுவதைப் போல இருந்தது. அவளுக்கும் அவரைத்

தன் மனத்திலிருந்து விரட்டி வெளியேற்றிவிடவேண்டும் போல ஓர் வேகம் துடித்தது.

கவுண்டர் தூங்கிக் கொண்டிருந்தபோது வள்ளி அந்தக் கடிதத்தை மீண்டும் எடுத்தாள். அந்த எழுத்துக்களில் அவனையே மீண்டும் பார்ப்பது போலத் தோன்றிற்று. அதை மார்புடன் அணைத்துக் கொண்டாள். ஆசையுடன் முத்தமிட்டாள். பிறகு பத்திரமாகப் பீரோவில் நகைப்பெட்டியில் வைத்துப் பூட்டினாள். அவன் குறிப்பிட்டிருந்த கிழமை, இடம், நேரம் எல்லாவற்றையும் மீண்டும் சொல்லிப் பார்த்து மனத்தில் இருத்திக் கொண்டாள்.

அந்த இரண்டு நாட்களுமே நினைவு கசந்தது. கவுண்டர் அவளை அணைத்ததும் சுகித்ததும்கூடப் பிடிக்கவில்லை. ஏதோ ஒரு வெறிக்குத் தன்னைவிட்டுக் கொடுப்பது போலத்தான் தோன்றிற்று. கவுண்டரின் அணைப்பிலிருந்து விலகிப் படுத்ததும், அந்தக் கண் மூடலுக்குள் தியாகுவின் உருவம்தான் அப்பட்டமாக நிறைந்து நின்றது. சொல்லமுடியாத ஏக்கம் ஒன்றில் உள்ளம் பரபரக்க அலைந்தது.

வேலை செய்யும்போதும், ஓய்வில் கண் மூடும்போதும், எந்நேரமும் மறுபடியும் தியாகுவைச் சந்திக்கப்போகும் நினைவுதான். வெள்ளிக்கிழமை மாலை ஆறுமணி — குளக்கரைத் தோப்பில் பின்புறம் ஒதுங்கிய களத்துமேட்டுப் பக்கம் — தியாகு சைக்கிளில் வருவான். அவளைப் பின்புறம் தூக்கி உட்கார வைத்துக்கொண்டு யாரும் காணாத இடமாக அழைத்துக் கொண்டு போவான். இருவரும் பொழுதுபோவது தெரியாமல் பேசுவார்கள். தொட்டுத் தொட்டுப் பார்த்து அணைத்துக் கொஞ்சி — மேலே நினைக்க முடியாமல் நெஞ்சுக்குள் அருவி பாய்ந்தது.

**வெ**ள்ளிக்கிழமை மாலை நாலரை மணிக்கே குடமும் கையுமாக அவள் குளத்துக்குக் கிளம்பிவிட்டாள். வெள்ளிதோறும் மாலையில் குளித்துவிட்டு வந்து, இரவு ஏழு மணிக்குத்தான் கவுண்டருடன் கோவிலுக்குப் போவது வழக்கம். அன்று கவுண்டருக்கு டவுனுக்குப் போகும் வேலை வந்துவிட்டது. அதுவும் சௌகரியமாகப் போய் விட்டது. ஏழு மணிக் கடமையைக்கூட மறந்துவிட்டு நிதானமாகவே திரும்பலாம் என்ற தைரியத்துடன் புறப்பட்டாள்.

தியாகு அவளுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். அவளைக் கண்டதும், கையை நீட்டி அழைத்தான். துணிச்சலுடன் 'சி' போட்டு அணைத்துக் கொண்டான். மறைவாக அழைத்துக் கொண்டு அவளை முகம் நிமிர்த்தி நெருங்கி...

ஒரு விநாடி உடல் முழுவதும் புது இரத்தம் பாய்வது போல இருந்தது வள்ளிக்கு. இந்த அணைப்பும் இதழ் நெருக்கமும் அவளுக்குப் புதிது அல்ல. கவுண்டரிடம் அவள் காணாத புருஷசுகம் எதுவும் இல்லை. ஆனால், அவனுடைய வாலிபத் துடிப்பும் வேகமும், அவளுக்குப் புதுமையாக இருந்தது. அந்த உணர்வு தன் உடலில் பாய்ந்து பரவிய கிளர்ச்சி அடக்கவொண்ணாததாக இருந்தது.

முகவாயைத் திருப்பி அழகு காட்டினுள் வள்ளி. புடவைக் கொசகொசப்பில் அவன் சொக்கிப் போய்த் திகைக்க, கன்னத்தில் இடித்து இழுத்துச் சேர்த்துக் கொண்டாள். கண்ணைச் சிமிட்டி மயக்கி முகத்தை மார்புடன் சேர்த்துக்கொண்டாள். வசியமானவனைப் போல அவள் மடியில் கிடந்தான் தியாகு. கடைசியில் எழுந்து விடை பெறுமுன் அவள் கையைப் பிடித்துக் கொண்டு, ''நான் ஏன் உன்னை என் சொத்தாக ஆக்கிக் கொள்ளக் கூடாது?'' என்று கேட்டான்.

''நீங்க என்ன சொல்றீங்க? இப்போதும் நான் உங்களுடையவதானே?'' என்று சிணுங்கினுள் வள்ளி.

''அப்படி இல்லே வள்ளி. உன்னை எனக்கு மட்டும் என்று ஆக்கிக் கொள்ளணும். இந்தச் சந்திப்பு இப்படி இரகசியமாக இருக்கக்கூடாது. உரிமையோடு இருக்கணும்'' என்ருன் தியாகு.

''அப்படியென்ருல்...'' என்று அவனை ஏற இறங்கப் பார்த்தாள் வள்ளி.

''உன்னை நான் கல்யாணம் கட்டிக்கப் போறேன் வள்ளி!'' என்ருன் தியாகு, ஒரு பரவசத்துடன்.

''என்னையா?'' என்று சொல்லி வள்ளி பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள். அவள் நெஞ்சில் அந்த அன்பு தேனுகப் பாய்ந்தது. கண்ணில் நீர் வந்தது. அவன் அவள் முகத்தை நிமிர்த்திப் பார்த்தான். நீர் ததும்பி வழிந்த கன்னத்தில் முத்தமிட்டான்.

''ஏன் அழறே வள்ளி? என்னை நீ நம்பலியா?'' என்று கேட்டான்.

''நீ சொல்றதைத்தான் நம்ப முடியலே. ஆம்பிளேங்கன்னு பெண் சுகம் தேடுறவங்கன்னுதான் எனக்குத் தெரியும். அதுக்கு இப்படி மரியாதை கொடுக்கிறவங்களும் இருக்கிருங்கன்னு இப்பத்தான் எனக்குத் தெரியும். அதுவும் என்னைப்போல ஒரு பொம்பளேக்கு...'' என்று விசும்பினுள் வள்ளி.

''உனக்கென்ன குறைச்சல் வள்ளி?''

''உங்களுக்குத் தெரியாதா? நான் ஏற்கெனவே கவுண்டரின் சொத்தானவள். இந்த உடம்பு உங்களுக்குப் புதுசு இல்லே. இது புதுப் பண்டம் இல்லே. ஏற்கெனவே இன்னெரு ஆம்பிளே ருசி பார்த்தது. என்னதான் சொன்னுலும் உங்க மனசு சமாதானமா இருக்குமா? நெனைச்சுப் பாருங்க...''

''நெனைச்சுப் பார்த்தேன் வள்ளி! எனக்கு உன் அன்புதான் வேணும். அதுவும் உரிமையோட வேணும். கள்ளக்காதல் வேண்டாம். இருட்டில் கண் மறைவா கெடைக்கிற சுகம் வேண்டாம். நீ என் மனைவியா இருக்கணும். கவுண்டர் உன்னைக் கல்யாணம் கட்டிக்கலே. நீ அவர் பொஞ்சாதியா இருந்தா நான் ஆசைப்படறது

தப்பு. அவர் கொடுக்க முடியாத பதவியை நான் கொடுக்க ஆசைப் படறேன். அவருக்கு உன் மேலே ஆசை இருக்கலாம். ஆனால், அருமை தெரியலே. நான் உன் அருமை, பெருமை தெரிஞ்சவன். அதனாலேதான் எனக்கு நீ சொல்லுற கறை கண்ணுக்குப்படலே. அவர் உன்னை ஆண்டிருக்கலாம். ஆனால், உன் மனசை அவர் ஆளலே. ஆண்டிருந்தா நீ என்னை திரும்பிக்கூடப் பார்த்திருக்க மாட்டே. உன் மனசை நீ புதுசாதான் எனக்குக் கொடுக்கிறே. அதுலே கறையே இல்லே! அது எனக்குப் போதும் வள்ளி!''

தியாகு அவளுடைய கைவிரல்களைத் தொட்டுக் கண்ணில் வைத்து ஒற்றிக் கொண்டான். வள்ளிக்கு மனசு உருகிப்போயிற்று. அவன் அணைப்பில் குலுங்கக் குலுங்க அழுதாள். அவனுடைய அன்பின் தூய்மையில் கரைந்து போனாள். கவுண்டரைப் போல அவனும் அவளை சுகம் அனுபவிக்க ஆசைப்படுவதாக எண்ணியதை எண்ணி எண்ணி மாய்ந்து போனாள்.

அதற்குப் பிறகு அவர்கள் வாரம் ஒருமுறை எப்படியோ சந்தித்துக் கொண்டிருந்தார்கள். அவள் டவுனுக்கும் பாங்கிற்கும் போவாள். அவன் கிராமத்துக்கு வருவான். குளக்கரையிலோ ஊருக்கு வெளியிலோ சந்தித்துக் கொள்வார்கள். ஒருவருக்கொருவர் கதை சொல்லிக் கொண்டு மகிழ்ந்து போவார்கள். அவளுக்கென்று அவன் ஏதாவது வாங்கிக்கொண்டு வந்து கொடுப்பான். அவனுக்காக அவள் ஏதாவது தின்பண்டம் செய்து கொண்டுவருவாள்.

இருவரும் கல்யாணம் செய்து கொள்வதைப்பற்றிப் பேசுவார்கள். அதற்கு ஒருபடி மேலே போய், அவர்களுடைய குழந்தைகளையும் குடும்பத்தையும் பற்றிக்கூடப் பேசுவார்கள். ஆனால், அவர்கள் பேச்சில் விரசம் ஒன்றும் இராது. மணம் செய்து கொண்ட பிறகு இருக்கப்போகும் உறவுக்காக அந்த நிலையில் ஆசைப்படமாட்டார்கள். அந்தச் சந்திப்பு அவர்களுக்குக் கண்ணு மூச்சு விளையாட்டாகவே இருந்தது. அகம் கவ்விய அந்தரங்கமான நட்பாக இருந்தது. இருட்டுக்குப் பயந்த குருட்டுக் காமமாக இல்லை..

மணம் செய்து கொள்ளாமல், கவுண்டரின் ஆசைநாயகி யாக வாழும் இந்த வாழ்க்கை என்ன வாழ்க்கை? தியாகுவின் மனம் நெகிழ்ந்த நட்புக்கும், கவுண்டரின் உடல்வெறி வடியும் உறவுக்கும் எவ்வளவு வித்தியாசம்? உரிமை இல்லாத அந்த உறவு எந்த விதத் தில் பொருத்தமானது? காசுக்குக் கொடுக்கும் ஆசையில் என்ன ஒட்டுணர்ச்சி இருந்தது? இத்தனை நாளாக அவள் ஏன் இதையெல் லாம் கேட்டுக் கொள்ளவில்லை. அல்லது வார்த்தையில்லாமல், உருவ மில்லாமல் உள்ளுக்குள்ளே சுழன்று கொண்டிருந்த ஓர் உணர்ச்சிக் குத்தான் தியாகு இப்போது ஓர் உருவம் கொடுத்துவிட்டானே?

கவுண்டர் அவளை மார்பிறுகப் புல்லுவார். அங்கம் அங்கமாக ரசிப்பார். இளமையின் சுகத்தை மதுபானம் போல அருந்தி மயங்கிக் கிடப்பார். ஆனால், அவளுக்கு அதில் ஈடுபாடு குறைந்துவிட்டது. ஏதோ ஒரு மறுப்பு அவர்கள் கூடியவேளையிலும்

தெரிந்தது. அது கவுண்டருக்கும் தெரிந்தது. சில்லென்ற மரக் கட்டை போன்ற அவள் உடலில் அவர் வழக்கமாகக் கண்ட சுகத்தைக் காண முடியவில்லை. ஏதோ கடமைக்காக அனுமதிக்கும் உறவாகத்தான் இருந்தது.

'உனக்கு என்னதான் வேணும்? ஏன் என்னைப் பிடிக்க வில்லை உனக்கு?' — இப்படிக் கேட்கத் தோன்றும் அவருக்கு. ஆனால், கேட்கவும் பயம். அவள் எதைக் கேட்டாலும் அவர் கொடுத்துவிட முடியுமா? அவளுடைய பாவனைகளை, நடத்தையைக் கூர்ந்து கவனிப் பார். அவள் வெளியே போனால், அவளுக்குத் தெரியாமல் தொடர்ந்து செல்லுவார். அவளுடைய முகத்தில் தெரியும் கவலை களைப் பார்த்து ஊகிப்பார்.

அவளுடைய வாழ்க்கையில் வேறு யாரோ புகுந்து கொண்டுவிட்டதை அவரால் ஊகிக்க முடிந்தது. ஆனால், அது யார் என்று அவளை — அப்படிப் பானை உடைப்பதைப் போலக் — கேட்கத் தைரியம் இல்லை. வார்த்தையாகக் கேட்காமல், கண்ணால் கேட் பார்; உடம்பால் கேட்பார்; கோபத்தால் கேட்பார்; சிரிப்பால் கேட்பார். வள்ளிக்கும் ஓரளவு புரியும். ஆனால், வாய் திறந்து பதில் சொல்லமாட்டாள். கண்ணால் நீர் பெருக்குவதுடன் சரி.

**அ**ன்று ஏதோ நடந்துவிட்டது. கவுண்டர் தட்தட் என்று நடந்தார். மாடித்தளம் அதிர்ந்தது. வள்ளிக்குத் திக்கென்று இருந்தது. அன்று மாலை அவள் தியாகுவைப் பார்க்கவேண்டும். டவுனுக்கு வருவதாகச் சொல்லியிருந்தாள். ஆனால், கவுண்டரிடம் அதைப்பற்றிப் பேசவில்லை.

அவள் வரவேண்டாம் என்றும் அவனே வருவதாகவும் ஆபீஸ் பையன் மூலம் ஒரு கடிதம் கொடுத்தனுப்பியிருந்தான் தியாகு. அது கவுண்டர் கையில் சிக்கிவிட்டது. ஆனால், அதை அவர் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. மாலை நான்கு மணி அடிக் கட்டும் என்று காத்துக்கொண்டிருந்தார். சட்டையை மாட்டிக் கொண்டு கிளம்பிவிட்டார்.

அவர் அப்படிப் போனது நல்லதாயிற்று. அவள் வழக்க மாகப் புளியமரத்தடியில் நாலரை மணி பஸ்ஸைப் பிடிப்பதுவழக்கம். அவசர அவசரமாக புடவையை மாற்றிக்கொண்டு காலில் செருப்புக்கூட இல்லாமல் கிளம்பிவிட்டாள். ஓட்டமும், நடை யுமாக வந்து சேர்ந்தாள். பஸ் வருகிற நேரந்தான். தூரத்தில் தெரியப்போகும் பஸ் வண்டியின் தோகைப் புழுதி அடையாளத் துக்காகக் காத்துக் கொண்டிருந்தாள்.

யாரோ பின்னால் வந்து கையைப் பற்றுவது தெரிந்தது. திடுக்கிட்டுத் திரும்பினாள். கோபம், வெறியெல்லாம் அடங்கி ஓர் அலட்சியமாக அருவருப்பாக அவளைப் பார்த்துக்கொண்டு நின்றார் கவுண்டர்.

''எங்கே போறே புள்ளே?'' என்று கேட்டார்.

''டவுனுக்கு... பாங்கில் பணம் போட'' என்று சமாளித்தாள் வள்ளி.

''பணம் போடவா? அந்தப் படவாவைப் பார்க்கவா?'' என்று உறுமினர் கவுண்டர். வள்ளி மருண்டு போனுள். ''என்ன சொல்றீங்க?'' என்று திக்கித்துப் போய்க் கேட்டாள்.

''செருப்பால அடி! சொன்னுப் புரியுமா? நட வீட்டுக்கு! அங்கே வந்து சொல்றேன்!'' என்று அவளை அழைத்துக்கொண்டு கிளம்பினர். அவள் நெஞ்சு 'திக்திக்' என்று அடித்துக்கொண்டது. நடக்கப் போவதை நினைத்து ஒரே கலக்கமாக இருந்தது...

# 8

வீட்டுக்கு வந்ததும் வள்ளியை ஓர் அறையில் தள்ளினர் கவுண்டர். அவருடைய மனம் துவண்டு கிடந்தது. அவள் முகத்தை நெருங்கி, கிட்டே, மூச்சுப் படப் பார்த்தார். 'எப்படி எனக்குத் துரோகம் செய்யப் பார்த்தாய்?' என்று கேட்பதைப் போல இருந்தது அது.

வள்ளியும் மறுக்கவில்லை. மறுத்துப் பயன் இல்லை என்று அவளுக்குத் தெரியும். ஏதோ ஓர் ஆதாரம் இல்லாமல் கவுண்டர் இப்படி நடந்துகொள்ள மாட்டார் என்ற ஒரு சந்தேக பயம் அவள் மனத்தை அலைத்துக் கொண்டிருந்தது. உள்ளிருந்து தியாகுவின் கடிதத்தைக் கொண்டு வந்து அவள் முகத்தில் விட்டெறிந்தார்.

''படிச்சுப் பாரு புள்ளே! புரியறதில்லே? உன்னைக் கூப்புடுறான்! சரசம் பண்ணுவதற்கா? ஏன்? நான் உன்னைத் திருப்தியா வச்சுக்கலியா? என்ன கொறை வைச்சேன்? பணம் இல்லியா? பாசம் இல்லியா? படுக்கை இல்லியா? எதுக்கு எனக்குத் துரோகம் பண்ணலாம்னு நினைக்கிறே? வைரமும் தங்கமுமா அப்பி உன்னை நிறுத்தலே? எதுக்கு? இப்படி என் தலையிலே கல்லைப் போடவா? இன்னொரு அம்மணிக்கு இந்த வீட்டிலே இடம் இல்லை புள்ளே! நெனைப்பிலே வச்சுக்க! மறுபடி நான் ஏமாற மாட்டேன்!'

கவுண்டர் குமுறி வெடித்தார். கோப ஆவேசத்தில் உடம்பெல்லாம் நடுங்கிற்று. கவுண்டர், வீட்டு வாசலைப் பூட்டிக் கொண்டு போய்விட்டார். எங்கே போனர் என்று தெரியவில்லை. அவள் மயங்கிக் கிடந்தாள். அரைத் தூக்கமா முழுத்தெளிவா என்று புரியாத போதை.

இரவு அவர் வீடு திரும்ப மணி ஏழு ஆகிவிட்டது. பேசாமலே சாப்பிட்டார். பேசாமலே படுத்துக் கொண்டார். அவளுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. வழக்கம்போல அருகே போய்ப் படுத்துக் கொண்டாள். கொஞ்ச நேரம் இருட்டில் மௌனம் தேங்கிக் கிடந்தது. பிறகு புழுபோலச் சுருண்டு கிடந்தவளை இடுப்பில் கையை வைத்து ''ஏய்'' என்று உலுக்கினர். அவ்வளவுதான்! 'புசுக்'கென்று அழுகை வந்துவிட்டது வள்ளிக்கு.

அப்போதும் அவருக்குக் கோபம்தான். ஆனல் அவள் தன்னை விட்டுவிலகவில்லை என்று ருசுப்படுத்திக் கொள்வதுபோல ஒரு வேகம். வாய் திறவாமலே, தூக்கக் கலக்கத்தில் நடப்பதைப்போல, சம்பந்தமில்லாமல் நிகழ்வதைப்போல அவளைச் சேர்த்துக் கொண்டார். மார்பில் முடிச்சாக இருந்த இறுக்கத்தில் அவள் உஷ்ண மூச்சுப் படர, அவருடைய விரல்கள் அங்கம் அங்கமாக ரசித்து முடித்தது. அப்புறம் அவள் பேச எண்ணியபோது அவரிடமிருந்து பதில் இல்லை. வேகம் ஓய்ந்து தூங்கி விட்டார்.

அப்புறம் ஒரு நாள்.

கம்பங்காட்டில் நடந்து வந்து கொண்டிருந்தவளைத் தற்செயலாகச் சந்திப்பது போல வந்து பார்த்தான் தியாகு. அவனைக் கண்டதுமே அவள் கண்கள் கலங்கின. முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டாள். ''என்னம்மா வள்ளி?'' என்று அவள் முதுகைத் தடவிக் கொடுத்ததும் அழுகையே வந்துவிட்டது. அவனிடம் நடந்ததைச் சொன்னுள்.

''அப்புறம் நேரே அவர் வந்து என்னைக் குளக்கரையில் பார்த்தார். 'நீ யாருடா வள்ளியைக் கூப்பிடறதுக்கு?' என்று கேட்டார். நானும் விடவில்லை. 'அவளைக் கூப்பிடக் கூடாதுன்னு சொல்ல நீங்க யாரு? கட்டிக்கிட்ட புருசனு?'ன்னு கேட்டேன். அவராலே பதில் பேசமுடியவில்லை. 'கவனிச்சுக்கறேன்'னு உறுமிக்கிட்டே போயிட்டார். மெய்யாத்தான் கேக்குறேன். அவர் என்ன உன்னைக் கல்யாணமா கட்டிக்கிட்டாரு? காசுக்குச் சுகம் அனுபவிக்கிற பேர்வழிதானே? அவருக்கு உன்கிட்டே என்ன உரிமை?'' என்று கேட்டான் தியாகு.

''எது எப்படியோ விட்டுடுங்க! நான் கொடுத்து வச்சது அவ்வளவுதான். என் பொழைப்பு இப்படியே தீர்ந்து போச்சு'' என்ருள் வள்ளி.

''அப்படிச் சொல்லாதே வள்ளி! நான் உன் கழுத்திலே தாலி கட்டத்தான் போறேன். உனக்குக் கௌரவமான வாழ்க்கை கொடுக்கத்தான் போறேன். உன் அழகு, இளமை, எல்லாத்தையும் உரிமையுடன் அனுபவிக்கத்தான் போறேன். அதுவரையில் உன்னுடைய கள்ள நட்பு எனக்கு வேண்டாம். மாலையும் கழுத்துமா வந்து கவுண்டர் கிட்டேயே சொல்லிக் காட்டுவேன், உங்க புத்தியைவிட என் புத்தி உசந்ததுன்னு!''

வள்ளி அவன் மார்பில் முகத்தை வைத்து அழுதாள். ஒரு பக்கம் எல்லா விதத்திலும் அவளை, அவளுடைய குறையோடு ஏற்றுக்கொண்டு போற்றுகிற தியாக வடிவமான வாலிபன் தியாகுவின் தோற்றம். இன்னொரு பக்கம் அனாதையாக இருந்தவளை உருவாக்கிச் சீராட்டிப் போற்றி வாழவைக்கிற கவுண்டரின் தோற்றம். அவளால் இரண்டையும் மனத்தராசில் வைத்து எடை போட்டுப் பார்க்க முடியவில்லை. அவள் அதிகம் படிக்காதவள். அதிகமாக நாகரிகம் தெரியாதவள். ஓர் எளிய பெண்ணின் மென்மை மாத்திரம்தான் அவளுக்கு இருந்தது. இந்தச் சிக்கலை விடுவிக்க அந்தப் பண்பு போதவில்லை...

ஒரு மாதம் ஆகிவிட்டது...

கவுண்டர் உடம்பு, நாண் அறுந்த வில்லாக ஆகிவிட்டது. கண்களில் எப்போதும் ஒரு ஏக்கம். அவளோடு பேசுகிற பேச்சில் பழைய ருசி இல்லை. அவள் போடும் சாப்பாடு உடம்பில் ஒட்டவில்லை. பணத்தைக் கணக்குப் பார்த்துச் செலவழிக்கிற பழைய பற்றுக்கூட இல்லை. 'எல்லாம் போச்சு — எப்படியோ போகட்டும்!' என்ற விரக்தி, பார்வையிலும் பேச்சிலும் தெரிந்தது. இருவரும் அந்த ஒரே வீட்டில்தான் இருந்தார்கள். ஒன்றாகவே சாப்பிட்டார்கள். ஒன்றாக இணைந்து தூங்கினார்கள். ஆனால் மனத்தால் தொட்டுக்கொள்ள முடியவில்லை. அவர்களுக்கு நடுவில் ஒரு சுவர் எழுந்துவிட்டது. அதை இடிக்க இருவருக்குமே தைரியம் இல்லை....

புதிதாக மலர்ந்த அந்த இளமையும் துடிப்பும் எங்கே? அதை அவரிடம் வரவழைத்த அவளே, மீண்டும் அதை அவரிடமிருந்து பிடுங்கிக் கொண்டு விட்டாளா? கவுண்டர் கோபித்திருக்கலாம். அவளை அடித்திருக்கலாம். சோறு போடாமல் வதைத்திருக்கலாம். அதை அவள் ஏற்றுக்கொண்டு நிமிர்ந்திருப்பாள். ஆனால் இந்த மௌன சோகம், அவளை வருத்தாமல் குத்துகிற பார்வை, அவளை குனியவைத்து விட்டது. 'நீயும் என்னை விட்டுப் போய்விடுவாயா?' என்ற பார்வை, அவளை அரவணைப்பாக ஏக்கத்துடன்தான் பார்த்தது. மிரட்டி அடக்க நினைக்கவில்லை.

வள்ளியின் மனம் அலைபாய்ந்தது. அவள் போய்விட்டால் கவுண்டர் தாங்குவாரா? அவளுடைய படுக்கைத் துணை அவருக்கு இல்லாவிட்டாலும் பரவாயில்லை. வாழ்க்கைத் துணை இல்லாமல் அவரால் நடக்க முடியுமா? பின்னாலிருந்து தள்ளிவிட்ட மாதிரி, அவரைத் தவிக்க விட்டுவிட்டு அவள் ஓடிப் போகவா? தின்ற சோறும், குடித்த மோரும் உப்பில்லாமலா இருந்தது? உடம்பில் கொஞ்சம் நன்றி ஓட வேண்டாமா?

தியாகுவையும் மறக்க முடியவில்லை. எப்படிப்பட்ட வாலிபன்? மற்றவர்களைப்போல அவன் சதை ருசிக்காக அலையவில்லை. அவளை அழித்து அனுபவிக்க நினைக்கவில்லை. கவுண்டர்

கல்யாணம் செய்து கொள்ளவில்லை. ஆனால் மனைவியைப்போல வைத்து சுவாதீனமாக அனுபவித்துக் கொண்டிருக்கிறார். அவனும் விரும்பி இருந்தால் அவளை வசப்படுத்தி அனுபவித்திருக்கலாம். ஆனால் அவன் அவளைப் பெண்டாள விரும்பவில்லை. பெண்டாட்டியாக மணம் செய்து கொள்ளத்தான் ஆசைப்பட்டான். அவனை எப்படிக் கைவிடுவது? முகத்தில் அடித்தது போலப் 'போ' என்று சொல்லி விரட்டுவது?

அவர்களுடைய நட்பு, மனம் நெகிழ்ந்த நேரங்கள், கனிவான பேச்சு எல்லாம் அவளுக்கு நினைவுக்கு வந்தது. உடல் குளிர்ந்து நடுங்கிற்று. கவுண்டரின் அணைப்பின் சூடு கூட அதைப் போக்க முடியவில்லை. கவுண்டரின் அபிமான பெண்ணாக அவளால் இருக்க முடியாது இனிமேல். அவர் கொடுத்த நகைகள், புடவைகள் எல்லாம் அவரிடமே இருக்கட்டும். தன்னைச் சேர்ந்தவள் என்ற ஒரு பழைய நினைவை வேண்டுமானால் அவர் வைத்துக் கொள்ளட்டும்.

அவர் விலகிப் போகவேண்டியதுதான். அவள் ஒரு முடிவுக்கு வந்து விட்டாள்.

அன்று கவுண்டர் கோயம்புத்தூருக்குக் கிளம்பிப் போய்விட்டார். அவள் மீது அவருக்கு நம்பிக்கை இல்லை. கொல்லையிலும் வாசலிலும் இரண்டு பெரிய பூட்டுக்கள் தொங்கின. சாவிக்கொத்தை இடுப்பில் செருகிக் கொண்டு பஸ்ஸில் ஏறிப் போய்விட்டார். அவளுக்குச் சாப்பிடப் பிடிக்கவில்லை. ஏதோ நினைவாகப் பாயை விரித்துப் புரண்டுகொண்டே இருந்தாள்.

மாலை நேரம். பின்புறம் ஆளரவம் கேட்டது. எழுந்து உட்கார்ந்து பின்புறக் கதவு வழியாக ''யாரு?'' என்று கேட்டாள். ''உஸ்'' என்று உதட்டில் கைவிரலை வைத்துக்கொண்டு நின்றான் தியாகு. எச்சரித்த விரல், உதட்டிலேயே நின்றது. கண்ணில் ஒரு சிறு சிரிப்பு தெறித்தது.

''நீங்களா?'' என்று எழுந்து வந்தாள். பின்புறம் போட்டிருந்தக் கம்பிக் கதவைக் கையால் பிடித்தபடி நின்றாள். அவன் அந்த விரல்களைக் கம்பி வழியாகச் சேர்த்துப் பிடித்துக் கொண்டான்.

''நான் லீவு போட்டுட்டேன் வள்ளி. ஊருக்குப் போறேன். இங்கே வரமாட்டேன். வேறே ஊருக்கு மாத்திடு வாங்க.. நீ என்னோடு வரத் தயார்தானே?'' என்று கேட்டான். அவள் பார்வை தரையை நோக்கிற்று.

''மனசைத் தயார் பண்ணிக்க. உன்னை ரெடி பண்ணிக்க. நாளன்னிக்கு விடியற்காலை நாலு மணிக்கு இந்த

வீட்டு வாசல் கேட்டுக்கிட்ட வந்து நிற்கிறேன். நீ தயாரா இரு. வேணுமின்னு ஒரு சின்னப் பொட்டி எடுத்துக்க. என்கிட்ட பணம் இருக்கு. எதுவும் தேவையில்லே. நீ அரையில் கட்டினப் புடவை யோடு கிளம்பிடலாம். எனக்கு எதுவுமே வாணும். நீதான் வேணும்!''

அவள் கண்டம் கலங்கிற்று. அவன் கையைப் பற்றிக் கொண்டு அழுதாள். முகத்தோடு முகம் வைத்து அழமுடியவில்லே. கம்பி தடுத்தது.

''சரின்னு சொல்லு வள்ளியம்மா.''

'சரி' என்று சொல்லுவது போலத் தலேயை ஆட்டிஞள். அவன் அந்த விரல்களேப் பிடித்து இதழ்களால் பதித்துக் கொண்டான். அவளேப் பார்த்தபடியே சைக்கிளேத் தள்ளிக்கொண்டு போய்விட்டான். அவர்கள் இருவருமே ஒருவரையொருவர்தாம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். வாசற்புறமாக வந்த கவுண்டரைக் கவனிக்கவில்லே. அவர் அப்படியே மாடி ஏறிப்போய், அங்கே நின்றபடி அவர்கள் சந்தித்ததையும், பேசியதையும் கவனித்ததையும் பார்க்கவில்லே....

மறுநாள் இரவு. கவுண்டர் சற்று முன்னதாகவே தூங்கி விட்டார். வள்ளி அவர் தூங்கிவிட்டதை நிச்சயம் செய்து கொண்டு கைப்பெட்டியைத் தயார் செய்து கொண்டாள். பட்டுப் புடவை, நகை எதையும் எடுத்துக் கொள்ளவில்லே. இரண்டு நூல் புடவை, இரண்டு ரவிக்கை, இரண்டு உள்பாவாடை, இரண்டு துண்டு, சோப்புப் பெட்டி, சீப்பு — அவ்வளவுதான். பர்ஸில் ஐம்பது ரூபாய் பணம். அது அவளுடைய அப்பன் இறந்து போனபோது அவளிடம் விட்டுவிட்டுப் போன பணம். அவ்வளவு தான். பெட்டியைப் பூட்டக்கூட இல்லே.

விளக்கை அணேத்துவிட்டு வந்து படுத்துக் கொண்டாள். கவுண்டரை அணேத்துக் கூப்பிட மனமில்லே. நாளேயிலிருந்து அவருக்கு அவள் கிடைப்பாளா? அவள் துணே கொடுக்க முடியுமா? இன்று தந்து, நாளே ஏமாற்றுவானேன்? தூக்கமும் வரவில்லே. மனம் ஊசலாடிற்று. நடந்ததையும் நடக்கப் போவதையும் எண்ணி எண்ணிப் புலம்பிற்று.

தூக்கத்தில் கவுண்டரின் கை அவள் மார்பில் விழுந்தது. அவள் அதை விலக்கவில்லே. 'ஐயோ பாவம்!' என்று நினேப்பதைப் போல அப்படியே விட்டுவிட்டாள். மெல்ல மெல்ல அப்படியே உறங்கிவிட்டாள்....

சில்லென்று காற்று வெட்டிற்று. கண்ணை விழித்துப் பார்த்தாள். மணி நான்கு அடித்தது. மெதுவாக எழுந்து மாடியிலிருந்து இறங்கி வந்தாள். முகத்தைக் கழுவிக் வாயைக் கொப்புளித்தாள். தலைக்கலைவைச் சரிசெய்து கொண்டு கைப் பெட்டியுடன் கிளம்பி விட்டாள்.

விடியற்காலை நிலா வெளிச்சம் மண்ணில் பூத்துக் கிடந்தது. வயற்காட்டில் வெளிச்சத்துக்கு விளக்குப் போட்டது போல இருந்தது. கேட்டு வரை நடந்து வந்து விட்டாள். வாசலில் நின்று கொண்டாள். தூரத்தில் சைக்கிளில் தியாகு வரும் உருவம் தெரிந்தது. 'எதற்கும் சரி பார்க்கலாம்' என்று கைப்பெட்டியைத் திறந்து பார்த்தாள். அவள் உடல் நடுங்கிற்று.

பெட்டியில் நூல் புடவைக்குப் பதிலாக இரண்டு பட்டுப் புடவைகள் இருந்தன. ஒரு சிறு பெட்டியில் நகைகள் எல்லாம் இருந்தன. அவற்றுக்கு மேல், கட்டாக நூறு ரூபாய் நோட்டுக்கள் இருந்தன. எப்படி வந்தது? அவை எதையுமே இரவு அவள் வைக்கவில்லையே? அதே பெட்டிதான்....

இரவு அவள் தூங்கிய பிறகு கவுண்டர் எழுந்து அவ்வளவையும் எடுத்து வைத்திருக்கிறார். அவருக்கு எல்லாம் தெரிந்து விட்டது. அப்படியும் அவளைத் தடுக்கவில்லை. மனம் ஒப்பாவிட்டாலும் அவளை விடை கொடுத்து அனுப்பி வைத்திருக்கிறார். அவள் வாழட்டும் என்பது போல ஆசீர்வதித்து, பட்டுப் புடவைகளும், நகைகளும், கட்டு நோட்டுமாக....

அவள் கண்களில் நீர் சுரந்தது.

அவர் மனம் தடுமாறாமல் இருந்திராது. ஆனால் அவர் அவளைத் தடுக்கவில்லை. அவருக்குத் தெரியாமல் அவள் இரகசியமாக ஓடிப்போக நினைத்தாள். ஆனால் அவர் அவளுக்குப் பகிரங்கமாகவே விடை கொடுத்து அனுப்பியிருக்கிறார். அவள் இல்லாமல் அவர் வாழப்போகும் விதம்? பிடித்துவைத்த மண் மாதிரி — தானே குளித்து — தானே பொங்கிச் சாப்பிட்டு — தானே படுக்கை விரித்துப் புலம்பிப் பெருமூச்சுவிட்டு....

நினைவு தடுக்கிற்று.

தியாகு எதிரே வந்து நின்றுவிட்டான். நிலா வெளிச்சத்தில் சிரிப்பில் விரிந்த பற்களின் வெண்மை. வாயைக் குவித்து லேசாக ஊதினான். மகிழ்ச்சியில் மனம் மிதப்பது தெரிந்தது.

''ரெடிதானே வள்ளி?''

அவள் தலையைத் தூக்கவில்லை. அவன் கைப்பெட்டியை வாங்கிக்கொள்ளக் கையை நீட்டினான். அவள் கொடுக்கவில்லை. அவனுக்குப் புரிந்துவிட்டது.

''பின்னே எதுக்கு இந்த விடியற்காலை நேரத்துலே இங்கே வந்து நிற்கிறே வள்ளி?''

''உன்கிட்டே சொல்லிட்டுப் போயிடலாம்னுதான் தியாகு! என்னைக்கும் நீ தியாக ராசாவாகவே இரு. உன்னை மனசுலே வச்சுக் கும்பிட்டு அனுப்பி வைக்கிறேன். எனக்கு அந்த நினைப்பு போதும்'' என்றாள் வள்ளி.

''வள்ளி'' என்று தடுமாறினான் தியாகு.

''உறுதியாத்தான் சொல்றேன். என் மனசிலே இனிமே கலக்கம் இல்லே. நான் ஓடிப்போயிடலாம். அவர் அனுமதி கொடுத்துட்டாரு. இதோ பாரு. பெட்டியிலே தங்கமும் வெள்ளி யுமாப் போட்டு அனுப்பி வச்சிருக்காரு.. அவர் மனசு தங்கம். ஆனா நான் போயிட்டா அந்த வைரம் பாய்ஞ்ச உடம்பு விழுந்துப் போயிடும். அவர் தாங்கமாட்டாரு. அவர் ரொம்ப நாளைக்கு இருக்கக்கூட மாட்டாரு. வாழ்க்கையிலே இன்னொரு அம்மணியின் துரோகத்தைத் தாங்கிக்கிற தைரியம் அவருக்கு இல்லே! நீங்க வயசு வந்த ஆம்பிளே... உங்களுக்கு இன்னொரு வள்ளி கிடைப்பா... திருப்தியா இருங்க... எனக்குக் கவுண்டர் போதும். இனிமே அதுக்கு மேலே எனக்கு ஆசை இல்லே. அவரை வாட வாட விட்டு ஓடிப்போய் நான் பூவா மலர்ந்துக்கிட்டு இருக்க முடியாது! நான் வரேன்'' என்று சொல்லி நிறுத்தினாள், வள்ளி. அவள் உள்ளத்தில் அடித்த புயல் அடங்கிவிட்டது!

வள்ளி 'விருட்'டென்று உள்ளே திரும்பி விட்டாள். நிதானமான உறுதியான காலடிகளுடன் வீட்டுக்குத் திரும்பி விட்டாள். உள்ளே வந்ததும் பெட்டியைக் கீழே வைத்துவிட்டுப் பெருமூச்சுப் போட்டாள். கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டாள். மனக் கதவுக்கும் தாழ்ப்பாள் போட்டாள்.

சட்டென்று விளக்கு எரிந்தது. அவள் திரும்பிப் பார்த்தாள். அங்கே கவுண்டர் நின்று கொண்டிருந்தார். அவர் கையில் துப்பாக்கி இருந்தது. வழக்கமாக வேட்டைக்கு எடுத்துச் செல்லும் துப்பாக்கி அது!

வள்ளிக்கு அழுகை பொங்கி வந்தது. அவருக்கு நேரே வந்து நின்று கொண்டாள். மார்புத் துணியை விலக்கி ''சுடுங்க! சுடுங்க ஐயா! என்னைக் கொன்னு போடுங்க! இந்த நன்றி கெட்ட ஜென்மம் இனிமேலும் உயிரோட இருக்கவாணும்!'' என்று சொல்லி விட்டு ''ஓ''வென்று அழுதாள் வள்ளி. கவுண்டர் அந்தக் கண்களைப் பார்த்தார்.

அங்கே சபலம் நடமாடவில்லை. அந்தப் பேதையின் கண்களில் அந்த வேளையில் பூஜை அறையில் எரியும் குத்துவிளக்குச் சுடரின் பிரமை மின்னிப் பிரகாசித்தது. அது வெறும் கொழுந்தாக ஆடவில்லை. முழுவளர்ச்சியடைந்த பெண்மையின் நிறைவு அங்கே ஒளிவிட்டது.

கவுண்டரின் கையிலிருந்தத் துப்பாக்கி கீழே விழுந்தது. அவளை இறுக அணைத்துக் கொண்டார். ''உன்னைச் சுட வரலம்மா நான்! உன்னைத்தான் அனுப்பிச்சுக் கொடுத்திட்டேனே? நீ போனபிறகு எனக்கு வாழ்க்கையிலே என்ன இருக்கு? என்னையே சுட்டுக்கத்தான் துப்பாக்கியை எடுத்தேன்.''

குழந்தையைப் போல விக்கி விக்கி அழுதார் கவுண்டர். அவரது இதயத்தில் பாறையாய், இரகசியமாய் கனத்துக்கிடந்த ஓர் ஆழ்ந்த துயரம் உருகிற்று. அது கண்களிலிருந்து தாரை தாரையாக வடிந்தது. வள்ளி அவர் முகத்தையே ஏக்கத்துடன் வெறித்து நோக்கினாள். அவளுடைய கண்கள் சிவந்து கலங்கின. தனது துயரத்தையே ஒரு புன்முறுவலாக்கிக் கொண்டு அவரிடம் ''ஐயா! எல்லாத்தையும் தெரிஞ்சு வைச்சுக்கிட்டு, என்னைத் தடுக்கக்கூட வராமே, வழியனுப்பி வைக்க உங்களுக்கு எப்படி மனசு வந்துச்சு?'' என்று சொல்லிக்கொண்டே துடித்த அவள், அவரது கன்னத்தில் அழுந்தும்படி அவரைத் தழுவிக் கொண்டாள்...

விடிய ஆரம்பித்து விட்டது.

பத்து நிமிடங்கள் பேசாமலே இருந்தார்கள். பிறகு அவர், அவளைக் கைத்தாங்கலாக உள்ளே அழைத்துக்கொண்டு போனார். பீரோவைத் திறந்து உள்ளேயிருந்து எதையோ எடுத்தார்.

''வள்ளி... ஒரு முடிவுக்கு வந்திருந்தேன். அதுக்காகத் தான் அன்னைக்குக் கோயம்புத்தூருக்குப் போய் வாங்கிக்கிட்டு வந்தேன். எங்கே இனிமேல் அதுக்கு உபயோகம்னு ரெண்டு நாளா மனசு புலம்பிக் கிட்டிருந்தது. இப்போ சரியாப் போச்சு. இனிமே அது உபயோகப்படும்!'' என்று சொல்லிக்கொண்டே வள்ளியின் கையில் அந்தப் பெட்டியை வைத்தார்.

ஆவலோடு வள்ளி அந்தச் சிறு பெட்டியைத் திறந்து பார்த்தாள். உள்ளே இருந்தது மஞ்சள் பூசிய தங்கத்தாலி!




**Statement about Ownership and other Particulars about**

**MANIAN MAATHA IDHAZH**

**(Tamil Monthly)**

**FORM IV**

**(See Rule 8)**

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | Madras |
| 2. Periodicity | : | Monthly |
| 3, Printer's Name | : | G. M. Kulathu. |
| Nationality | : | Indian |
| Address | : | 98, Mount Road, Guindy. Post Bag No. 1159, Madras-600 032. |
| 4 Publisher's Name | : | Manian. |
| Nationality | : | Indian |
| Address | : | 7, Hanumantha Rao Road, Balaji Nagar, Madras-600 014. |
| 5. Editor's Name | : | Manian. |
| Nationality | : | Indian. |
| Address | : | 11, Judge Jumbulinga Mudaliar Road, Madras-600 004. |
| 6. Name and addresses of Individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total Capital. | : | Idhayam Publications (P) Ltd. 7, Hanumantha Rao Road, Balaji Nagar, Madras-600 014. |

I, Manian, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

MANIAN

*Signature of the Publisher.*

Dated: 27th February, 1980.




லேக் முழுக்க உல்லாசப் படகுதான். லேக் முழுக்க இளம் பெண்களின் பளிச்சென்ற வண்ண உடைகளும் செண்ட் மணமும்தான். லேக் முழுக்க தங்கள் வலிவையும் ஸ்டைலையும் காட்டியபடி, பெண்கள் காதில் விழவேண்டும் என்றே அறுவை ஜோக் அடிக்கும் வாலிபக் கூட்டம்தான்.

போட் ஹவுஸை ஒட்டி ஏரிக்கு பார்டர் கட்டியதுபோல் கார்களின் அணி.

"அங்கே பாரேன் வேடிக்கையை!"

"பாவம், போட் கிடைக்கவில்லை போலிருக்கு. பண்டியிலே மாட்டிக் கொண்டு தவிக்கிறான் மனுஷன்!"

பாதி வெய்யிலும், அது மறைவதற்குள் அவசரமாகப் புறப்பட்டு விட்ட மாலை மசங்கலும் ஏரியின் நீர்மேல் விசித்திரமாக ஒருபுறம் பரவிக்கொண்டிருக்க, இரண்டு பக்கமும் மொட்டையாக மூக்கு இல்லாமல் வெட்டி விட்டது போன்ற தாழ்வான படகில் ஒற்றைத் துடுப்பை எப்படிப் போட்டாலும் படகு சுற்றிச் சுற்றி வட்டமிடுகிறதே தவிர முன்னுக்கு நகரமாட்டேன் என்கிறதே

என்று வெளியில் சொல்லவும் முடியாமல் சமாளிக்கவும் முடியாமல் திணறிக் கொண்டிருந்த ஒருவரது பரிதவிப்பை ஏரி முழுவதும் ரசித்தது. நீல நிற சூட் அணிந்திருந்த அடர்த்தியான புருவமுடைய ஓர் உயரமான மனிதரும் (உரிமையாளர்: ராஜ் எலெக்ட்ரானிக்ஸ், ராஜ் சோப்ஸ், எட்ஸெட்ரா) தன் நண்பருடன் புன்னகைத்தபடி கரையோரமாகத் தொடர்ந்து நடந்தார்.

அவருடைய நண்பர் புல் சரிவிலிருந்த ஒரு பூவைக் காட்டினுர். "மிஸ்டர் புஷ்பராஜ்! அந்தக் காட்டுப் பூவைப் பார்த்தீர்களா?"

அவர் வாக்கிங் ஸ்டிக்கால் காட்டிய பக்கம் புஷ்பராஜின் பார்வை சென்றது.

நிலைத்து நின்றது.

இலையோ பூவோ—அந்தச் சிறு மலரின் ஒவ்வொரு மஞ்சள் இதழிலும் சிவப்பு நெளி கோலம் போட்டிருந்தது. திலகம் வைத்தாற்போல் மகரந்தக் கொண்டையில் ஒரு கரு நீலப் பொட்டு.

வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தவரின் மார்பு மேலும் கீழும் ஏறி இறங்கியது. மூச்சுத் திணறுகிறுற் போல் முகத்தில் ஒரு சிவப்பு. வேதனை. சிகரெட் லைட்டரை ஏற்றுகிறுர்.

"என்ன மிஸ்டர் புஷ்பராஜ்! அழகான பூவை இப்படிப் பொசுக்கி விட்டீர்களே!"

புஷ்பராஜ் பேசவில்லை. மேலே நடந்தார். முகத்தில் அலாதியான ஒரு பூரிப்பு.

பிரயண்ட்ஸ் பார்க் திருப்பம் வருகிறவரை அவர் விளக்கம் தரவில்லை.

"பூவை எரித்துப் போட்டதைப் பற்றிக் கேட்டீர்களில்லையா? வாலிபன் எவனுவது பார்த்தால் பறித்து வந்து ஒரு பெண் தலையில் சூட்டுவான். கார் டிரைவர் கண்ணில் பட்டால் டேஷ் போர்டில் செருகி வைப்பான். அழகான அந்தப் பூ அப்படியெல்லாம் மாசு அடையக் கூடாது. அது புனிதமானது. அந்தப் புனிதத்தைக் காப்பதற்காகத்தான் அழித்து விட்டேன்."

'மிஸ்டர் புஷ்பராஜ். யு ஆர் எ ஸ்டிரேஞ்ச்மேன்!' மப்ளர்காரர் நினைத்துக் கொண்டார்—சொல்லவில்லை.




பரந்து கிடக்கிற கடல்—ஆனல் பருக உதவாதது. பெருமை அடித்துக் கொள்கிற அடுக்கு மாடிக் கட்டிடங்கள்— வேலே தேடி வருகிற இளைஞனுக்கு எதிர்ப் படுவதெல்லாம் மூடின கதவுகள்தான். எங்கும் எதிலும் சுறுசுறுப்பு—கஷ்டப்படுகிறவனேப் பார்த்து ஏண்டா பாவி என்று கேட்கத்தான் ஆளில்லே.

இதுதான் சென்னே.

முதல் நாளே பூஷணத்துக்குத் தெரிந்து போய்விட்டது. எப்படியோ சில மாதங்களே ஓட்டிவிட்டான்.

எட்டு மணி நேரத்துக்கு முன் சாப்பிட்ட துளியூண்டு போண்டாவின் கடைசித் துளியும் ஜீர்ணமாகி விட்டதை வயிறு அறிவித்தது.

தலே ஒருபுறம் வலித்துக் கொண்டிருந்தது.

கால் சென்ட்ரலுக்கு வழி விசாரித்தது.

மறுபடி ஊருக்கே போய் விடவேண்டியதுதான்.

"ஏ சரசு!"

டிக்கெட் வாங்குமிடத்தில் யாரையோ யாரோ கூவினர்கள்—நெஞ்சிலே ஓங்கி அறைந்த மாதிரி.

திரும்புகிருன். உலகத்தில் ஒரு சரஸ்தானு?

பஞ்சாயத்து ஆபீசுக்குள்ளே ரீடிங் ரூம் பகுதிக்குப் போகிற வழியில் குளுகுளுவென்றிருக்கிற குரோட்டன்ஸ் மேலே பியூன் பூவாளியாலே தண்ணீர் வீசிட்டிருக்கிருன். சீராக வெட்டி விடப் பட்டிருக்கிற லயன் கீரைகளின் மேலேயும், அதுமேலே படிந்திருக்கிற பட்டுப் புழுதியின் மேலேயும், மணலேப் பரப்பினுப்பலே இருக்கிற நடைபாதைமேலேயும்,

பூவாளித் தண்ணீர் பொழிகிறபோது கிளம்புகிற கதம்பமான இலையும் மண்ணும் கலந்த வாசனையும், நடு நடுவே அகல அகலமாத் தலையை விரிச்சிட்டிருக்கிற இலை குரோட்டன்ஸ் மேலே தண்ணீர் தடதடன்னு மழை பெய்யற மாதிரி ஒலி எழுப்புகிறதே அதுவும் காற்றுடன் மெதுவா கலக்கின்றன.

கமான்களிலே படர்ந்திருக்கும் மயில் மாணிக்கக் கொடிகளில் சின்னச் சின்னதாக சிவப்புச் சிவப்பா பூத்து மின்னுகின்றன தேன் பூக்கள் – சரசுவின் அதரங்கள்போல்.

சரசு முக்காலியைப் போட்டு ஏறிப் புத்தக பீரோவின் மேல்தட்டைச் சீர் பண்ணிட்டிருக்கிறாள். அவள் லைப்ரரியன்.

குறித்த நேரத்திலே காப்பி சாப்பிடலேன்னு சிலருக்குத் தலையை வலிக்கும். எனக்கு மணி நாலுன்னு சரசைப் பார்த்து ஆகணும்.

ரீடிங்ரூமில் தங்களுக்கு மட்டும் கிடைக்கணும்னு சில புத்தகங்களை மேல் தட்டுப் பின் வரிசையில் சில பேர் ஒளித்து வெச்சுட்டுப் போவது உண்டு. அந்தப் புத்தகங்களை யாருக்கும் சலுகையில்லாமல் அதனுடைய வரிசை எண்படி சரஸ் அரேஞ்ச் பண்ணிட்டிருக்கிறாள்.

உயரமா ஸ்டூல்மேல் அவள். முதுகுதான் தெரிகிறது. பீரோக் கதவு அகலமா ரெண்டு பக்கமும் இறக்கை விரிச்சிட்டு, அவள் ஒரு கம்பார்ட்மெண்ட்டுக்குள்ளே இருக்கிற மாதிரி இருக்கு. என்ன ஒரு ஸ்லிம்! கொண்டை கொஞ்சம் தூக்கலா இருந்ததால் புறங்கழுத்து அழகாக முதுகிலே இறங்குவது தெரிகிறது.

அவள் ஒரு புத்தகத்தை எடுக்கிறது, அதன்முதுகைத் திருப்பி நம்பர் பார்க்கறது, கொஞ்சம் குனிகிறது, நம்பரை முணு முணுத்துக்கறது—'நானூற்று ஆறு? இது ஏன் இங்கே வந்தது?'

அவளை ஏன் அலக்காக அப்படியே பூச்செண்டு மாதிரி நான் தூக்கக் கூடாது என்பதற்கு அவள் இருபத்து நாலு வினாடியில் சமாதானம் சொல்ல உத்தரவிடவேண்டும் போலிருக்கிறது.

தொண்டையை லேசாகக் கனைக்கிறேன். "நான் ஏதாவது எடுத்து வைக்கலாமா?"

"ஓ. பூஷணமா?"

ஐயையோ, ஸ்டூலிலிருந்து இறங்கிக்கிருள்.

அநியாயமா ஒரு சான்ஸை எனக்கு வீணடிச்சிட்டியேன்னு என் ஏக்கம் மௌனமாய்ப் புலம்பினதை அவள் புன்னகை சமாதானப்படுத்துகிறது.

"அந்த இந்தப் புஸ்தகம் வந்துட்டுதா?"

"எந்தப் புஸ்தகம்?"

"அதான் வந்து. . .இந்த இந்த நம்பர்?"

"ஈஸி. முன்னூத்தி மூணு?"

"மூணும் வரிசையில்தான் நேற்று..."

நான் அக்கறையாத் தேடற மாதிரி பீரோகிட்டே நெருங்கி அதனுடைய இறக்கை மாதிரி விரிஞ்சிருக்கிற கதவுகளுக்கு நடுவே—எனக்கும் சரசுக்கும் ஏற்பட்ட பிரைவேட் ரூமுக்கு வந்து விடுகிறேன்.

"சரஸ். அந்த...இந்த புஸ்தகம்."

எந்தப் புஸ்தகம் நான் கேட்கறேன்னு எனக்குப் புரியலே.

"இதுவா. .இதா?"

"இதில்லே வந்து. . ."

யாராவது புஸ்தகத்தைப் பற்றி நினேச்சிருந்தால் புஸ்தகம் தெரியும்.

புஸ்தக வரிசையிலிருந்த மெல்லிய விரல்களில் நாலே வசப்படுத்திக் கொள்கிறேன்..

"ப்ளீஸ்." அவள் விடுவித்துக் கொள்கிருள்.

நிதானம். பொறுப்பு. 'அய்யய்யோ, யாரேனும் வந்துடப் போருங்க'ன்னு அவள் அசிங்கமாய்ப் பதட்டப்படலே. ரொம்ப ஸாஃப்டா என் கையைத் தன் கையிலிருந்து எடுத்து இந்தப் பக்கமா வெச்சிட்டு, "என்ன புஸ்தகம்?" என்கிருள்.

"லிப்ஸ்டிக் போடறது உண்டாக்கும்?"

"உவம். என்ன கேட்டிங்க?"

"கண் அப்படிப் படபடக்கணும்னுதான் கேட்டேன்."




மேதா அவென்யூ. சென்னையின் அபூர்வமான பாஷ் பங்களாக்களின் சங்கமம்.

மூன்றுவதாக உள்ள பங்களா மற்றவற்றை விட உங்களை அதிகமாகக் கவர்கிறது. ஓர் அயல் நாட்டு கான்ஸலேட் ஜெனரலின் வசிப்பிடம். காலெஜ் ஸ்டூடெண்ட் மாதிரியான இளம் வயசு வெள்ளைக்காரர். சிரித்த முகம்—இந்தச் சிறு வாலிபரா கான்ஸலேட் ஜெனரல். . .வீணை கற்றுக் கொள்ளும் ஆர்வம், தமிழில் பேசும் திறமை, நாடக ஆக்டிங் (சப்பளமிட்டு உட்கார மட்டும் திணறல் தான்), மனைவிக்குப் புள்ளிக் கோலம் கற்றுத் தருவது—

இவையெல்லாம் உங்களைக் கவர்ந்ததைவிட அவருடைய அந்தக் கார்—புல்தரையோரமாக மாசு மருவற்று, வெள்ளை வெளேர் என்று நிற்கும் அந்த சொகுசுக் கார்—

—இரவு பத்து மணியாகியும் அணைக்கப்படாத பங்களா முகப்பு விளக்குகளின் பிரகாசமான ஒளி வெள்ளத்தில் அயல் நாட்டிலிருந்து மூன்று நாளைக்கு முன்தான் இறக்குமதி செய்யப்பட்ட புதுக் கருக்கழியாத மோகினித் தனமான அழகு யந்திரம்.

கான்ஸலேட் ஜெனரல் எந்த நண்பருடைய பார்ட்டிக்கோ சற்று நேரத்தில் புறப்பட உள்ளே ஆயத்தம் செய்துகொண்டிருக்கிறுர். எலக்ட்ரிக் ஷேவரின் ஹம்மிங்குடன் உலவியபடி மனைவியிடம் வேடிக்கை.

என்னவோ தீய்ந்து பொசுங்கும் நெடி.

மிஸஸ் கெல்டன், டி. வி. யில் ஒரு பருப்பு சாதப் பெண் நொண நொண மொழியில் செயற்கை மலர்ச்சியுடன் பத்துமணி ஏழுவினுடியை அறிவிப்பதைக் கேட்டு நினைத்துக்கொள்கிறுள்—திஸ் லேடி டெரிப்லி நீட்ஸ் எ டான்ஸில்ஸ் ஆபரேஷன்.

ஆஃப்.

வெள்ளித் திரையின் தாளிப்பு. ஒளிச்சதுரத்தின் வேகமான டாட்டா. ஹௌ ஸ்மார்ட்.

மீண்டும் பொசுங்குகிறது. என்ன நெடி?

தேடுகிறார்கள். டெலிவிஷன்? வாட்டர் ஹீட்டர்? ஏஸி மெஷின்? ஃப்ரிஜடேர்? எலக்ட்ரிக் அவன்?

பெட்ரோல் வாடை. குப்பென்று சத்தம். மடமட வென்று பற்றி எரிகிறது. தோட்டத்தில் முளைத்த திடீர்த் தீச்செடிகள்.

கெல்டனும் மிஸஸ்ஸும் பரபரக்கிறார்கள். திகைப்பு உணர்ச்சிகள். அவசர ஓடல்கள். டெலிபோன் சுழற்றல்கள். ஃபயர் ஃபயர். .மண், நீர், வீசல். அனல்... நீலம், மஞ்சள், வயலெட். .வெள்ளை டாங்க் வெடிக்கும் அபாயம். வெடித்து முடிகிறது.

தீயணைப்பு வண்டியின் ஊளை, கூடியிருந்த கூட்டத்தை விரட்டிவிட்டு வந்தபோது—

அழகிய புத்தம் புதிய ஃபாரின் காரின் எலும்புக் கூட்டையும் சிறிது சாம்பலையுமே பார்க்க முடிந்தது.

தெருவிலே விமர்சனம்.

"என்ன ஷோக்கான கார்டா. .எப்படி எரிஞ்சதோ தெரியலியே. .அநியாயமாப் பூடுச்சுடா?"

"ஐம்பதாயிரம் இருக்குமா?"

"ஒரு சக்கரம் மட்டும்! நீ அந்தக் காரைப் பார்த்ததில்லை."

"இன்ஷ்யூரென்ஸ் பண்ணியிருப்பாங்க. .அவன் குடுத்திட்டுப் போறான்."

"தொரை புட்டி அடிச்சிட்டுக் கொளுத்தின சிகரெட்டை அணைக்காமல் போட்டிருப்பான்."

கூட்டம் கலைந்து வெகு நேரமாயிற்று. ஒரே ஓர் உருவம்—பக்கத்து பங்களாவிலிருந்த இருண்ட ஸிட் அவுட்டில் ரிலாக்ஸ்ட் ஆக குஷன் சாய்வு சாய்ந்தபடி தனது அடர்ந்த புருவத்தை நீவி விட்டுக் கொண்டு இன்னமும் அந்த சாம்பல் குவியலையே புன்னகையுடன் பார்த்துக் கொண்டிருந்தது.

மூன்று நாளாக இருந்த மூச்சு திணறல் இப்போதுதான் புஷ்பராஜுக்கு நின்றிருந்தது. தனது சாமர்த்தியத்தைப் பாராட்டிக் கொண்டார்.

அழகான எதுவும் அனுபவிக்கப்பட்டு மாசு அடையக்கூடாது.

அந்தப் புனிதத்தைக் காப்பதற்குத்தான் அதை அழித்து விட்டார்.



# நான்கு

பூஷணத்தின் சொந்த ஊர் மாலனூர். விவரம் தெரியுமுன் பெற்றோரை இழந்து மாமாவின் ஆதரவில் பி. யு. ஸி. வரை படித்தான். மேற்கொண்டு படிப்புக்காக மாமாவைச் சிரமப்படுத்த விரும்பாமல் உத்தியோகம் தேடினன். சாலக்குடி எலக்ட்ரிகல் ஆபீஸில் ஒரு வேலை கிடைத்தது. சாலக்குடியை அவனுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை—ரீடிங் ரூமுக்குப் போகும் வரை.

சரஸ்வதி அங்குதான் அவனுக்கு அறிமுகமானள். அவளுக்கும் தனக்கும் காதல் ஏற்படும் என்றே, அவளுக்காகத் தான் செய்து கொண்டிருந்த உத்தியோகத்தை ராஜினமா செய்துவிட்டு சென்னைக்கு வந்து இவ்வளவு கஷ்டத்தையும் மனமுவந்து ஏற்றுக் கொள்வோம் என்பதெல்லாம் அவனுக்குத் தெரியாது..

சென்ட்ரல் ஸ்டேஷன்...

இன்ஜின்களின் இரைச்சல். டிக்கெட் வாங்கிக் கொண்டு ரயிலைப் பிடிக்கப் பறப்பவர்களின் பரபரப்பு. யோசனையில் ஆழ்ந்தபடி நின்றன் பூஷணம். சரஸ்.... லூஸ் செல்லா... கிட்டு சார்....

"டே செல்லா! வாடா இங்கே?" கிட்டு சார் கூப்பிடுகிருர்.

"என்னைங்களா?" என்கிருல் செல்லா.

"ஆமாமுங்க. .உங்களையே தானுங்க. .ஒரு காப்பி வாங்கிட்டு வர்ரீங்களா?"

"என்னங்க நீங்க. என்னைப் போகச் சொல்றீங்க?"

''டேய்! பெரிய வேலை பண்ணிக் கிழிக்கிற வனுட்டம். போடான்னு. . . .வாங்கிட்டு வந்தியானுத் துட்டு தர்ரேண்டா. .பத்து பைசா. ஆமாம்.''

''நிஜமாவுங்களா? அண்ணைக்கிக்கூட அப்படித் தாங்க தர்ரேன்னுப்புட்டு ஏமாத்திபுட்டீங்க. .''

''அட இன்னிக்குத் தர்ரேண்டா. டம்ளரை நல்லாக் கழுவிக்க. ஜல்தி! இப்படியா மெதுவா நடக்கறது? பறக்கணும்டா. .''

செல்லாவுக்குச் சிரிப்பு வருகிறது. உடம்பு வளர்ந்திருந்த அளவுக்கு மூளை வளராதவன்.

''எப்படிங்க நாம்ப பறக்க முடியுங்க? நாம்ப மனுசங்களாச்சே?''

''செல்லாவை என்னமோன்னு நினைச்சீங்களே கிட்டு சார்! பார்த்தீங்களா, உங்களையே மடக்கிட்டான் பயல்?'' பக்கத்திலிருந்தவர் சொல்கிறார்.

''டேய் செல்லா! நீ முதல்லே போய்க் காப்பி வாங்கிட்டு வா. உன்னை நான் பறக்க வெச்சுக் காட்ட றேனு இல்லையா பாரேன். .''

சற்றே அவிழும் நிலையிலிருந்த தட்டுச் சுற்று வேட்டியைச் செல்லா எக்கி நன்றாகக் கட்டிக் கொள்கிறான்.

''தலைவலி மண்டையைப் பொளக்குது. ஒரு பயலும் காணமேன்னு இருந்தேன். நீ வந்தே. .ஜல்தி போய் வா.''

''ஏங்க. .நெசமாவுமே பறக்க வைப்பீங்களா? நீங்க சிரிக்கிறீங்க. .சும்மாவாச்சுக்கும் சொல்றீங்க.''

''அட நிஜமாத்தாண்டா சொல்றேன். .ஏன் சார் கோதண்டு! நான் எத்தினி பேரைப் பறக்க வெச் சிருக்கேன். .கேட்டுப்பாரு இவுரை வேணும்னு. .''

''ஏங்க சார். .நம்பளாலே பறக்க முடியுங்களா? ஊ.ஹூம்ஹூம். .கண்ணடிக்கிறுரு. .''

''கண்ணுலே தூசி விழுந்துடிச்சிடா. .துடிக்குது. .''

''அய்யய்யோ. .தூசிங்களா. .நான் ஊதிவுட றேங்க நல்லா.''

''பரவாயில்லை. .இவுரு ஊதுவாரு. நீ போய்க் காப்பியை வாங்கிட்டு வா. .''

''நெசமாப் பறக்கவுடணுங்க.''

''சத்தியமா வுடறேன். செரியா?''

காப்பி வாங்கித் தந்துவிட்டு செல்லா நின்று கொண்டிருக்கிறான். அவர்களுக்கு மறந்துவிட்டது. ''ஏண்டா, போகலே? ஓ. .காசு தர்ரேன்னேனே—டே செல்லா, சில்

லறையே இல்லியே. நோட்டா இருக்குது, அப்புறமாத் தர்ரேன். .என்ன?''

''பறக்க வெக்கறீன்னிங்களே. .''

''ஓ. .ஓ! அதுக்கு நிக்கறியா? என்னசார் கோதண் டம்? செல்லா பறக்கணும்கருன். .நீங்க என்ன சொல் றீங்க?''

''பறக்க வுட்டுடறது. .''

''என்னங்க நீங்க? நீங்க சொல்லிப்பிட்டு அவுங் களைக் கேட்கறீங்க?''

''அடே! ரெண்டு பேரும் சேர்ந்துதாண்டா பறக்க வெக்க முடியும்? நீ போயிட்டு அப்புறம் வா. பறக்கவுடறேன்.''

''என்னங்க நீங்க. .நல்லா ஏமாத்தறீங்க. . வேலையை வாங்கிக்கிட்டு ஏமாத்தின எப்படிங்க? பறக்க வுடறேன்னீங்க.''

''என்ன கிட்டு சார். .பையனை எப்படியாச்சும் நீங்க பறக்கவுட்டுத்தான் ஆகணும் போலிருக்கு. புடிச் சிக்கிட்டானே விடாம?''

கிட்டு சார் யோசிக்கிருர். அவர் முகத்தில் ஒரு குறும்புப் புன்னகை. ''ஆல்ரைட்! சரிடா செல்லா. கோதண்டம் சாரும் உனக்காகச் சிபாரிசு பண்ருரு. நாளைக்கு நம்ம பள்ளிக் கூடத்துக்கு வந்துடு. ஸ்கூல்கூட லீவுதான். பள்ளிக்கூடத்துக்குள்ளாற ஒரு நொண்டியடிக் கிற கிரவுண்டு இருக்குதுல்ல. .அங்கே வெச்சு ஒன்னைப் பறக்க வுடறேன். .''

செல்லாவின் கண்களில் நம்பிக்கைப் பிரகாசம்.

''போயிட்டு வர்ரேங்க. .எத்தினி மணிக்குங்க?''

''சாயந்தரமா வாயேன். ஒரு நாலு மணிக்கு.''

டாணென்று செல்லா ஆஜர். முகத்தில் பெரு மிதம்.

கிட்டு சார், ''அடே! என்னடா, விவரம் தெரி யாத பையனா இருக்கியே!'' என்ருர்.

செல்லா தப்பு செய்து விட்டதுபோல், ''என் னங்க?'' என்ருன்.

''ஒண்ணும் கொண்டு வரலியா பறக்கறதுக்கு?''

''என்னங்க?''

''என்ன கோதண்டம் சார். .பையனையே கொண்டு வரச் சொல்லலாமா. .நாமே சமாளிச்சுக்கலாமா?''

''இங்கே ஒண்ணையும் காணோம் சார்.''

"சரிடா செல்லா. .நீ போய் ஒரு நீளக் கம்பு. . உன் மார் நீளத்துக்கு இருக்கணும். அப்புறம் ரெண்டு முறம், கொஞ்சம் கயிறு. .இதெல்லாம் சீக்கிரம் போய்க் கொண்டா."

செல்லா உற்சாகமாக வீட்டுக்குப் போய், யாருக்கும் தெரியாமல் எல்லாவற்றையும் கொண்டு வந்தான்.

"நிசம்மாவே கொண்டு வந்துட்டான் சார். ."

"நானும் நிசம்மாவேதானே சொன்னேன். . டேய் செல்லா, .என்னடாது. .பசங்களையெல்லாம் கூட்டி யாந்துட்டே."

"சொன்னேனுங்க. .எல்லாரும் பார்க்கறதுக்கு வந்துட்டானுங்க. ."

கிட்டு சார் சுறுசுறுப்பாக ஏற்பாடுகளில் இறங்கினர். "போங்க. போங்க. .பொட்டைப் புள்ளைங்கள் ளாம் ஸ்கூலுக்கு வெளியே போய் நின்னுட்டு அண்ணாந்து பார்த்திட்டு இருங்க. .செல்லா கொஞ்ச நேரத்திலே பறந் துட்டு வருவான். .ஆம்பிளைப் பசங்க வேணும்னு உள்ளே இருங்க. ."

வந்திருந்த பையன்கள் முகத்தில் ஒரே ஆவல். சில பொடிசுகளுக்குப் பொறுமைகூட. செல்லாவை மட்டும் பறக்க வுடப்போறாரே ஸயன்ஸ் வாத்தியாரு?

செல்லா முகத்தில் பெருமிதம் விநாடிக்கு விநாடி அதிகமாகிக் கொண்டிருந்தது. கோதண்டம் சார் பெண் பிள்ளைகளை வெளியே அனுப்பிக் கதவைச் சாத்தினர்.

அப்படியும் பெஞ்சுக்கு அடியில் ஒளிந்து கொண்டு இரண்டொரு பாவாடை வாண்டுகள்.

"மூச்சை நல்லா உள்ளே இழுத்துக்க. ."

"இப்படிங்களா?"

"இன்னும் நல்லா இழு. . ஊம். .அப்படித்தான் வேட்டியைத் தார்ப்பாச்சுப் போட்டுக் கட்டு."

செல்லா கட்டிக் கொண்டான்.

"கையை நல்லா அகலமா ரெக்கை மாதிரி விரி. .ரெண்டு கையையும். . . ."

செல்லாவின் விரித்த கைகளில் மார்போடு சேர்த்து கிட்டு சார் தடிக்கம்பை நன்ருகக் கட்டுகிருர். சிலுவையில் அறைந்த மாதிரி கையைக் காட்டிக்கொண்டு செல்லா நிற்கிருன். முகத்திலே கொஞ்ச நேரத்திலே பறக்கப் போகிற சந்தோஷம். சிரிச்சுக்கருன். .

"கோதண்டம் சார். .காலைக் கட்டுங்க."

கயிற்றால் கால் இரண்டையும் சேர்த்து வைத்து நன்றாகக் கட்டுகிறார்.

சுற்றிலும் நின்றுகொண்டிருக்கிற பையன்கள் முகத்தில் வினாடிக்கு வினாடி படபடப்பு.

செல்லா பறக்கப் போறான். .பறக்கப் போறான் என்று குதூகலம்.

கைகளில் பக்கத்துக்கு ஒன்றாக முறத்தைக் கட்டியாகிறது.

அந்த வினாடிக்குக் காத்திருந்தார்கள். உள்ளேயிருந்ததைவிட வெளியே ஆர்வம். கூட்டம். .பெரியவர்கள்—தண்ணீர்க் குடங்கள்—போவோர் வருவோர். .

கிட்டு சார் இவ்வளவு கூட்டத்தை எதிர்பார்க்கவில்லை.

"செல்லா ரெடியா?"

"ரெடிங்க. .ஏங்க. .மேகத்துலே கீகத்துலே டேஷ் அடிச்சுப்பிடப் போறேனுங்க. .ரொம்ப ஒசக்க வேண்டாங்க."

"ரெடியா? கண்ணை நல்லா மூடிக்க செல்லா. டேய் பசங்களா. .நீங்களும்தாண்டா. ."

செல்லாவும் வேடிக்கைக் கும்பலும் அப்படியே கண்ணை மூடிக்கொள்கிறது.

"ரெடி. . ஒன் டூ. ." கிட்டு சார் 'த்ரீ' சொல்றதுக்குள் படபடக்கிறது செல்லாவுக்கு.

"த்ரீ!"

ஒரே கத்தல்! கூப்பாடு! சிரிப்பு! விழுந்து விழுந்து வாயைப் பொத்திக் கொண்டு முகத்தைப் பொத்திக் கொண்டு.

செல்லா ஜிங்ஜிங்கென்று பயமும் மிரட்சியுமாக

"சார்! சார்! என் வேட்டிங்க! என் வேட்டிங்க! ஐயோ! என் வேட்டிங்க!" என்று கூவுகிறான்.

கிட்டு வாத்தியார் சிரிக்கிறார். "நல்லாப் பறக்கிறீயே! இன்னும் கொஞ்சம் பறந்தாத்தான் வேட்டி."

இதற்குள் ஆவல் தாங்க முடியாத வெளியேயிருந்த கும்பலும் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே வந்துவிடுகிறது. .

செல்லாவுக்குக் கிட்டு சார் திரும்ப வேட்டியைக் கொடுக்க, அம்மணமாகக் குதித்த அவன் அழுதிட்டே வேட்டியைக் கட்டிட்டு. ."போங்க சார். இதுதான் பறக்கறதுங்களா. .என்னங்க நீங்க. .இப்படீங்

களா ஏமாத்தறுதுங்க. .பொம்பளைப் புள்ளைங்க எதிரிலே என்னங்க இப்படி வேட்டியை அவிழ்த்து விட்டுட்டீங்க. .'' என்கிறுன்.

சிரிக்கிருர்கள்.

''இதுக்குத்தான் ஜட்டி போடணும். .இனிமே போடறியா?''

அவனுக்குக் கோபம்!

''போங்க சார் நீங்க. .நான் இனிமேல் காப்பி வாங்கிட்டு வர்ரேனு பாருங்க. .''

பூஷணமும் ரசித்தான்.

செல்லா, சரசுவின் தம்பி என்பது அப்போது தெரியாது.

பெரிய பயங்கரம் காத்திருப்பதும் அவனுக்குத் தெரியாது.




நான் கௌண்ட்டரில் உட்கார்ந்திருக்கிறேன்!

சரஸ் வந்து எதிரில் நிற்கிருள். கொஞ்ச நேரத்துக்கு ஒண்ணுமே—கம்ப்ளீட்டா ஒண்ணுமே புரியலே.

''நீங்கள் மாத்திரமே வந்துட்டிருந்தா எப்படி? நானும் வரவேணுமா?''

புன்னகையுடன் எதையோ எடுத்து கௌண்ட்டரில் வைக்கிருள். எலக்ட்ரிஸிடி பில். பஞ்சாயத்து போர்டின் கரெண்ட் பில்லைக் கட்ட என் ஆபீசுக்கு வந்திருக்கிருள்.

நான் கௌண்ட்டரிலேயிருந்து எழுந்து வெளியே சென்று அவளை வற்புறுத்தி அழைத்தபிறகு உள்ளே வருகிருள்.

நாற்காலி மேலிருந்த ஒரு ஃபைல் சுமையை எடுத்துக் கீழே வைக்கிறேன்..

"அடடே! கர்சீப்பை அழுக்கு பண்ணிக்கொண் டுட்டியே? நான் துடைச்சிடறேன்."

"பரவாயில்லே. . ஊம். .இதுதான் உங்க ரூம்?"

"சரஸ்! காப்பி வாங்கிட்டு வரச் சொல்றேன். ப்ளீஸ்."

"நான் போக வேணுமா?" கேள்வியிலேயே சாவகாசம் தெரிகிறது.

நான் பில்லைப் போட்டு முடிக்கிறேன். "கட்டாயம் காப்பி சாப்பிட்டுத்தான் ஆகணும். ."

"அங்கே வந்தால் நான் காப்பியா தர்ரேன்?"

என்னவோ சொல்ல நினைச்சு அடக்கிக்கிறேன்.

"கொஞ்சம் இரு. .யாரையாவது பிடிக்கிறேன். ஆமாம். காப்பியா. . இல்லே கூல் டிரிங்கா?"

"கூல்ட்ரிங்க்."

நான் வெளியே போய் யாராவது பயல்கள் தட்டுப்படமாட்டார்களா என்று பார்க்கிறேன்.

"டேய்! டேய்! தம்பி! இங்கே வாயேன்."

"என்னையுங்களா?"

"ஆமாம் தம்பி. .உன்னைத்தான். ப்ளீஸ். .ஐஸ் போட்டு ஜில்னு ஒரு கிரஷ் வாங்கிட்டு வர்ரியா? நல்ல பிள்ளை இல்லே?"

அவன் போகிறான். நான் திரும்புகிறேன்.

எனக்கு மிகுந்த சிரமம் கொடுத்து விட்டதாக சரஸ் சொல்கிறாள். "எதுக்குங்க. .ஆபீஸ் பியூன் கூட இல்லை. இதுக்குன்னு வாசல்லே போய் ஆளைத் தேளைப் பிடித்து. ."

"ஒரு சிரமமும் இல்லே சரஸ். .ரெடிரெடியா ஒரு பையன் வந்திட்டிருந்தான். .ரொம்ப உபகாரியான பையன். ஆனால் துட்டு மட்டும் கமிஷன் வெட்டிடணும் போலிருக்கு. . ."

நான் சிரிச்சுக்கறேன் திடீர்னு. . "என்ன சிரிச்சுக்கறீங்க?"

"ஒண்ணுமில்லே. ."

"இல்ல. .என்னவோ சிரிச்சீங்க"

"சொல்லிடுவேன். ."

"சொல்லுங்களேன். ."

சிரித்த அசல் காரணத்தை நான் சொல்லலை. ஆனால் வேறு ஒண்ணைச் சொல்றேன். "சரஸ் உனக்குத் தமிழ் மாசமெல்லாம் தெரியுமோ?"

"ஏன்?"

''குறிப்பா சில மாசங்கள் பெயர் ரொம்ப அழகாயில்லே? சித்திரை, தை. . . இதெல்லாம் விசேஷ மாசம். .''

''கூல் டிரிங் வர லேட்டாகுமோ?''

''வந்திடும் சரஸ். .நான் கேட்டதற்குப் பதில்..''

''என்ன கேட்டீங்க?''

''உனக்குப் பிடிச்ச தமிழ்மாசம் சித்திரையா? தையா?''

சரசு பதில் சொல்லவில்லே. என்னை அவள் விரும்புகிறாள். நான் அவளை விரும்புகிறேன். ஆனால் நான் கல்யாணம் பக்கமாகச் சுற்றி வளைச்சுப் பேச்சை நகர்த்தும்போதெல்லாம் இப்படித்தான் அவள் முகத்திலே ஒரு வாட்டம்.

காரணத்தை வெளிப்படையாக நான் கேட்கலே. . ஆனால் என்னவோ இருக்கு. அந்த என்னவோவை, அது வரதட்சணை பயமாயிருக்கலாம், பெற்றோர் ஆட்சேபிக்கக்கூடும் என்கிற பயமாயிருக்கலாம், ஒருகால் அக்கா கிக்கான்னு யாரும் இருக்காங்களோ கல்யாணமாகாமல். . கல்யாணமே ஆக முடியாமல். .

''சரஸ்!'' நான் முகத்தை நிமிர்த்தலாம்கறப்போ கூல்டிரிங் வர்ரது.

விவஸ்தை இல்லாத பையன்னு சரியா இருக்கு.

கூல் டிரிங்கும் கையுமாக அறை வாசல்லேயே எங்களைப் பார்த்துட்டு அப்படியே நிற்கிறான். வச்சிட்டு அந்தப்புறம் போகணும்னு அவனுக்குத் தெரியலே. ..

நான் போய் அவன்கிட்டேயிருந்து வாங்கிட்டு வர்ரேன்.

''சாப்பிடு சரஸ். சாப்பிட்டுட்டே பேசுவோம்.. நானும் பார்க்கறேன். .கல்யாணப் பக்கமாப் பேச்சை நகர்த்துனாலே உனக்கு என்னவோ மாதிரி ஆகிடறதே. . ஏன்? என்னை உனக்குப் பிடிக்கலேயா?''

சரஸ் குடிக்கவில்லே. ஸ்டிராவை மேலாக அவள் விரல்கள் திருகிட்டிருக்கு. ''ஒண்ணுமில்லே. .''

''இல்லே. . .ஏதோ இருக்கு.''

உதட்டை அவள் கடித்துத் துக்கத்தை அடக்கிக்கிறாள்.

''சரஸ்! எந்தக் கஷ்டம், எந்த இடைஞ்சல், எதுவாயிருந்தாலும் நீ தாராளமாகச் சொல்லலாம். எந்தப் ப்ராப்ளத்துக்கும் ஒரு ஸொல்யூஷன் உண்டு.''

"சில ப்ராப்ளம்ஸுகளுக்கு அப்படி இருக்காது போலிருக்கு."

"சரஸ்! ட்ரிங்க சாப்பிடு."

"வேணும். சாப்பிடற மனநிலையிலே இல்லே."

"அப்போ எனக்கும் வேணும்."

"வேஸ்ட் ஆயிடறதே."

"என்னவெல்லாமோ வேஸ்ட் ஆறது—சிலபேருடைய பிடிவாதத்தாலே. ஏன், என் மேலே உனக்கு நோ கான்ஃபிடன்ஸா?"

"பூஷண்! என்னை மன்னிச்சுக்குங்க. அதிருஷ்டசாலிகளாயிருந்தால்தான் கல்யாணம் பண்ணிக்கலாம்."

"எனக்கு அதிர்ஷ்டமில்லேங்கறியா? வெறுமே ஒரு லோயர் டிவிஷன் கிளார்க்தானே என்கிறியா?"

"நோ, நோ, என்னைச் சொல்லிக்கிறேன். பூஷண், டிரிங்கைக் குடிங்க."

"வேண்டாம் அந்தப் பையன் கிட்டே கொடுத்திடறேன். அதாவது குடிக்கட்டும்."

அந்தப் பையன் இன்னமும் போகவில்லை. அவன் கால் ஸ்விங்டோர் கீழே தெரிகிறது.

"செல்லா! இதை எடுத்துட்டுப் போ."

அவன் வர்ரான்.

சரஸ் அவனைப் பார்க்கிறாள். முகம் என்னவோ போல் ஆகிவிடுகிறது. பையன் போனதும் கேட்கிறாள்—"பூஷண், இந்தப் பையனைப்பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?"

"ஒண்ணும் நினைக்கலேயே."

"யார் இவன்? உங்களுக்குத் தெரிஞ்சவனா?"

"ஊஹூம். நான் ஏன் சிரிச்சேன்னு கேட்டியே. இந்தப் பையனை ஒருத்தர் பறக்க விட்டார். அந்த நினைப்பு வந்தது."

சரஸுக்கு அந்த நிகழ்ச்சியை வேடிக்கையாகச் சொல்றேன்.

"பூஷண்! இந்தப் பைத்தியக்காரப் பையன் மாதிரியானவர்களின் பரிதாப நிலையைப் பார்த்தீங்களா?"

"பாவம். தலையெழுத்து. நான் இந்தப் பைத்தியத்தைப் பற்றிச் சொன்னேன். நீயும் சிரிப்பாய் என்று. உன்னை இப்படி அப்ஸெட் பண்ணிட்டுதே...சரி. சரி. அவனைப் பற்றி நீ கவலைப்பட்டது போதும்...அந்தப் பயலுக்காக நீ இப்படி அழலாமா?"

"என்...என்...தம்பி அவன், பூஷண்."




புரோகிதர் வீட்டு அழுக்குச் சுவரிலே மாட்டியிருக்கிற காலண்டர், தேதி பதிமூன்றைக் காட்டிக் கொண்டிருக்கிறது.

வழக்கமாக விடியற்காலம் ஐந்து மணிக்கு எழுந்திருக்கிற அவர் இன்றைக்கு நாலுக்கே எழுந்து கொண்டு விட்டார். எழுந்திருந்ததும் பதின்மூன்று படுகிறது. 'அந்த மகராஜன் நன்ருயிருக்கணும்' அவர் மனசு வாழ்த்துகிறது.

ஆறு மணிக்கெல்லாம் புஷ்பராஜின் கார் வந்துவிடும் அவரைக் கூட்டிப் போக.

பரபரப்புடன் மனைவியை எழுப்புகிருர்.

''வெந்நீர் போடறயா?'' அவர் சம்சாரம் ஒரு புரள் புரண்டு படுக்கிருள். 'எலும்பாயிருந்தாலும் அந்த அழகுக்கு ஒண்ணும் குறைச்சலே இல்லே' என்று மனசு சொல்லிக்கிறது.

''எல்லாம் பச்சைத் தண்ணியிலே குளிங்கோ. கரி கிடையாது. காலங்காத்தாலே யார் வீட்டுக்குக் கடனுக்குப் போறது?''

''சரிம்மா. சரி. தூங்கு. தூங்கு.. .சோப்புக் கம்பெனிக்காராள் கார் டாண்ணு ஆறுக்கெல்லாம் வந்துடும் ... அதுக்கு நடுவிலே யாரும் வந்து பிடிச்சிக்காதிருக்கணும். வக்கீலாத்து ஆயுஷ்ஹோமமாச்சே, நாணுகிட்டே சொல்லிடறயா எழுந்ததும்...பன்னெண்டாகும் நான் வர..''

''ஊம்...'' என்றவளுக்குச் சட்டென்று அப்போதுதான் பிரக்ஞை முழுக்க வந்தது. அடடே! தேதி செப்டம்பர் பதிமூணு? மறந்தே பூட்டுது அவளுக்கு. தூக்கம் ஓடியே போயிட்டது. முகத்துலே சிரிப்பு தவழ, ''மசமசன்னு தூங்கிட்டேன்.. இருக்கிற கரியிலே பாய்

லரைப் போடறேன்.. காலையிலே பச்சை ஜலத்தைக் கொட்டிட்டு உடம்புக்கு வந்திடப் போறது. ஏன்னு..''

''என்னடி.. ராத்திரி என்னவோ வாள்வாள்னேயே!''

''ஒண்ணுமில்லியே.. முழுசா நூறு ரூபாயையும் அப்படியே கொண்டு வந்துடுங்கோ. அந்தக் கடன்காரனைப் பார்த்தேன். இந்த மளிகைக்காரனைப் பார்த்தேன்னு வழியிலேயே முறிச்சிட்டு இங்கே வந்து வெறும் கையை உதருதீங்க.''

''எதுக்கு அடி போடறே?''

''மூணும் வீட்டிலே அந்தக் காஞ்சிபுரம் பட்டுக்காரன் இன்ஸ்டால்மெண்டுலே பட்டுப் புடவை ஒண்ணு கொடுத்திருக்கான். ரொம்ப நல்லாருக்கு முன்னாலே நூறு ரூபாயைக் கொடுத்துட்டா— அதான்னு.. சைக்கிள்ளே கட்டிட்டு வருவானே அம்மக் கொத்து மூஞ்சி—''

''ஊம்...ஊம்..''

''மாதம் அப்புறம் இருபது இருபதாக் கொடுத்துக்கலாமாம்..''

''ஓ! பட்டுப் புடவைக்கு அடியா? சரி.. முழுசாக் கொண்டு வந்து சேர்க்கிறேன்— நீ காப்பியை ஸ்ராங்காப் போடு.''

''ஒரு வாய் டிபன்.. வரப் பன்னெண்டாகுமே.. உப்புமா வேணும்னா?..''

''வேண்டாண்டி. அந்த மனுஷன் பாவம், வாயிலே பச்சைத் தண்ணிகூட ஊத்திக்காம சிரத்தையாய்ப் பண்றவன். நான் டிபன் சாப்பிட்டுட்டெல்லாம் போகப் படாது..'' ஐயர் குளிக்கப் போகிறார்.

''அப்படியே வரப்போ.. என்னன்னு.. குளிக்க ஆரம்பிச்சுட்டேளா?''

''சொல்லுடி..''

''சோப்புக் கம்பெனிதானே. நாலு சோப்புக் கட்டி கேட்டு வாங்கிட்டு வாங்க. பைத்தம்மா பைத்தம்மா தேய்ச்சித் தேய்ச்சி உடம்பே பைத்தாலாடாட்டம் ஆயிட்டது.''

ஐயர் மந்திரங்களை நிறுத்தி நிதானமாக வெகு அக்கறையாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார் பன்னிரண்டு மணி வரை சொல்கிறதுக்குள் திதிக்கான மந்திரம் ஸ்டாக்

தீர்ந்து போய்விடப்போகிறது என்று பயந்தவர் மாதிரி சில இடங்கள் நீட்டி நீட்டிக்கூடச் சொல்கிறார்.

புஷ்பராஜ் மணையில் கைகளைக் கூப்பியது கூப்பிய படி கண்ணை மூடிட்டு உட்கார்ந்திருக்கிறார். திதி ஆரம்ப மாகிறது. ''அம்மாவை நினைச்சுக்குங்க.'' அவர் உதடுகள் புரோகிதரின் மந்திரங்களைத் திருப்பி உச்சரிக்கவில்லை. அந்த மந்திரங்கள் அவர் காதில் விழுந்து கொண்டிருக்கிறதா என்பதுகூடச் சந்தேகம்தான்.

'அம்மாவை நினைத்துக்குங்க' என்று புரோகிதர் சொல்லித்தான் அவர் நினைத்துக் கொள்ள வேண்டுமா? அம்மா வுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டிருக்கிற மனோ பரவசத்திலே தன்னை மறந்தவராக அமர்ந்திருக்கிறார்.

''...ஜலத்தை இதிலே விடுங்க...கையை அலம் பிக்குங்க...எள்ளை இதிலே போடுங்க...கட்டை விரல் வழியா...''

புரோகிதர் சொல்கிற சடங்குகளைச் சிரத்தை யாகச் செய்கிறார். அம்மாவையே நிற்கவைத்து அவள் பாதங் களிலே அட்சதையைப் போட்டு வணங்குகிறாற்போல் ஒவ் வொன்றையும் மிகுந்த அக்கறையாகச் செய்கிறார். பன்னி ரண்டாகிறது முடிய.

புரோகிதர் வியர்வையைத் துடைத்துக்கொண்டு தட்சிணை நூறு ரூபாயை வாங்கிக்கொண்டு புறப்படுகிறார். ''ஒரு கப் காப்பியாவது சாப்பிடுங்கோ. தோஷமில்லை. இப்படி வரப் பட்டினியா இருக்கப்படாது...கடவுள் உங் களுக்கு க்ஷேமத்தைத் தரணும். உங்க தாயார் மகா புண்ணியவதி. இந்த நாகரிக காலத்திலே இவ்வளவு சிரத்தையா யார் தாயாருக்குத் திதி கொடுக்கிறா?''

புரோகிதர் புறப்பட்டுச் செல்கிறார்.

புஷ்பராஜ் திதி கழித்த நீர், எள், இலைகளை அகற்றிவிட்டு பங்களாவின் உள்ளே சென்று பீரோவைத் திறக்கிறார்.

அது பீரோ அல்ல.

ஓர் அறையின் கதவு.

பீரோக் கதவுபோல் தோற்றம் தரக்கூடிய விதத் தில் அறைக் கதவு அமைந்திருக்கிறது.

அது ஒரு சிறிய அறை. ஏர் கண்டிஷன் செய்யப் பட்டு குளுகுளுவென்றிருக்கிறது. பங்களாவின் மற்ற எந்த இடத்துக்கும் ஏர்கண்டிஷன் கிடையாது. இந்தச் சிறிய அறைக்கு மட்டும் ஏன் என்று உங்களுக்குத் தோன்றும்.

சுவரில் ஒரு பெண்மணியின் படம் மாட்டப்பட்டிருக்கிறது — விளக்கு அலங்காரங்களுடன். படத்துக்குப் பக்கத்திலிருந்த அலமாரியில் எட்டு சந்தனப் பேழைகள்— சித்திரவேலைப்பாடமைந்த அற்புதமான பேழைகள் வைக்கப்பட்டிருக்கின்றன.

புஷ்பராஜ் தன் தாயின் படத்தையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார். சில சமயம் இரவு பூராக்கூட அப்படியே அதன் எதிரே அவர் உட்கார்ந்திருப்பது உண்டு.

அவருடைய தாய் அருள் மிகுந்த கண்களுடன் கனிவாக இருக்கிறார். விதவை போலும். தூய வெள்ளாடை. ஆனால் வெகு இளமையான தோற்றம். சில சமயம் அரைகுறை வெளிச்சத்தில் அந்தப் படம் ஒரு தேவதை உயிருடன் வந்து நின்று ஆசி கூறுவதுபோலிருக்கும்.

மகன்மீது உயிரையே வைத்திருந்த பாசம் மிகுந்த கண்களை புஷ்பராஜ் பார்க்கிறார்.

அவர் கண்களிலிருந்து நீர் கசிகிறது. திடீரென்று அந்த அறை முழுவதும் தகிப்பதுபோல் அவருக்குள் உஷ்ண மேற்பட்டது.

திகுதிகுவென்று அம்மா எரிந்த காட்சி அவர் கண்முன் விரிந்தது. எப்படிக் கருகிப் போய்விட்டாள்?

அப்போது அவர் சிறு பையன்.

"அம்மா! அம்மா! இப்படிப் பண்ணிக்கிட்டியே. ஐயோ...நான் என்ன பண்ணுவேன்?"

ஆம்புலன்ஸ் வந்ததும் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டாள். அத்தனை டாக்டர்களும் ஆச்சரியப்பட்டனர். காயங்களில் குரூரமானது நெருப்புக் காயம். நோயாளி மரணவஸ்தைப்பட்டுச் சித்திரவதைப்படுவார். இந்த அம்மாளால் எப்படி உடம்பு ஊசி குத்த இடமில்லாமல் இப்படிக் கொப்புளித்து வீங்கியிருக்கிறபோது ஒரு சின்ன முனகல்கூட இல்லாமல் மகனின் தலையை இவ்வளவு அமைதியாக வருடிக் கொடுத்துக்கொண்டு இருக்க முடிகிறது?

புஷ்பராஜுக்கு இப்போதும் தாயார் தன் தலையை வருடிக் கொடுப்பது போலிருந்தது.

அம்மா அழகாயிருந்ததாலல்லவா தற்கொலை பண்ணிக்கொண்டு இறக்கும்படி ஆயிற்று? அம்மாவை போஸ்ட்மார்ட்டம் பண்ணி மேலும் கோரமாக்கி உடல் ஒப்படைக்கப்பட்டபோது அந்த முகத்தைப் பார்த்தார்.

எப்படி அழகாயிருந்த அம்மா. எப்படி ஆகி விட்டாள்? அவருக்கு முதல் மூச்சுத் திணறல் அப்போதுதான் ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து வெறி. அழகின் மீது கொடூர வெறுப்பு. உலகத்திலே எதுவும் அழகாக இருக்கக் கூடாது...எதுவும் ...எதுவும்.

கண்ணாடி கூஜாவை, தந்த யானையை, லஸ்தர் விளக்கை, சோபாவை, அழகிய டீபாயை...உடைத்து நொறுக்கியவாறு அவர் கத்திய கத்தல், போட்ட கூச்சல்— அவர் திமிறிக்கொண்டு அம்மா மேல் விழுந்து கதறுகிறார். "என் அம்மாவை எடுத்திட்டுப் போகாதீங்க. .எங்கிட்டே கொடுத்திடுங்க...எங்கிட்டே கொடுத்திடுங்க...என் அம்மாவை எடுத்திட்டுப் போகாதீங்க...."

அப்போதிருந்து புஷ்பராஜுக்கு அழகிய எதைப் பார்த்தாலுமே மூச்சுத் திணறத் தொடங்கியது.

தட்டிலிருந்த மலர்களைக் கையில் எடுத்து புஷ்ப ராஜ் அம்மாவின் படத்துக்கும் அருகிலிருந்த எட்டுச் சந் தனப் பேழைகள் மீதும் சமர்ப்பித்தார். அம்மாவின் படத் துக்கு அணி செய்து கொண்டிருந்த ஸீரியல் மின் விளக்கு களில் நடுவே இரண்டு பல்ப் எரியாமலிருப்பதைக் கவனிக் கிறார்.

'மடையன்கள் இதைக்கூடக் கவனிக்காமல்...' என்று தன் சிப்பந்திகள் மீது சட்டென்று ஆத்திரம் வரு கிறது. அடுத்த கணமே நினைத்துக் கொள்கிறார்—அவர் களில் யாருக்கும் தெரிந்திருக்க நியாயமில்லை. அந்த அறை யில் அவரைத் தவிர யாரும் பிரவேசிக்கக்கூடாது. இப்படி ஓர் அறை இருப்பதேகூட யாருக்கும் தெரியாது. தகுந்த ஆளைக் கூப்பிட்டு விளக்கைச் சரி செய்ய வேண்டும் என்று எண்ணிக் கொண்டார். போனவர் திரும்பி வந்தார். எட்டுச் சந்தனப் பேழைகள் மீது அவர் பார்வை நிலைத்தது. விளக்கைச் சரிசெய்ய ஆள் வரும்போது இந்தப் பேழைகள் இங்கே இருக்கலாமா?

அதை அப்போது பார்த்துக்கொண்டால் போயிற்று என்று தோன்றியது.

அம்மாவின் படத்தின் எதிரே நீண்ட நேரம் அமைதியாக உட்கார்ந்து இருந்துவிட்டு அந்த அறையை விட்டு எழுந்து செல்ல மனமில்லாதவராக புறப்பட்டுச் சென்றார்.




செல்லா சரஸ்ஸின் தம்பியா!

இடி இறங்கிறாற்போலாகிறது எனக்கு. "ஐம்... டெரிப்ளி ஸாரி..."

"ஒரு தம்பி—அதுவும் ஒரே தம்பி. இந்த நிலையிலிருக்கிறப்போ... கல்யாணத்தைப் பற்றி நினைக்கவே நான் தகுதியில்லாதவள் பூஷணம். அம்மாவுக்கும் அவ்வளவு குடும்பப் பொறுப்புன்னு சொல்ல முடியாது. அவள் நல்லாச் செலவு பண்ணுவாள். கடனைச் சுமப்பாள். நானும் கல்யாணம் ஆகிப் போய்விட்டால்—செல்லா? இப்பவே இப்படிப்பட்ட கேவல நிலை... நான் இருக்கேனே... ஒரு டிரெஸ்ஸாவது பண்ணி அனுப்பறேன்—டிரெஸ்ஸை அவிழ்த்து விட்டு வேடிக்கை பார்க்கத்தான் மனுஷங்க இருக்காங்க... செல்லாவுக்குக் குணமாகாமல் நான் கல்யாணத்தைப் பற்றி நினைக்கிறதே பாவம்."

அவளை மெதுவே சமாதானப்படுத்தறேன்... "கவலைப்படாதே சரஸ்... நான் இல்லையா? நான் எதுக்குத் தான் இருக்கிறேன்?" சும்மா சொன்ன சமாதானமில்லை. கால் கடிதம் கொடுத்துட்டு—மாற்றல் கேட்டுக் கிடைக்கவில்லை—பத்திரிகை விளம்பரத்தைப் பார்த்து எழுதிப் போட்டதில் ஒரு கம்பெனி உத்தரவு அனுப்பியிருந்தது. சென்னைக்குப் புறப்பட்டேன்.

என் திட்டம் இது:

சென்னையில் ஒரு வேலையைத் தேடிக் கொள்வது. செல்லாவை வரவழைத்து அங்குள்ள மனநோய் விடுதியிலோ, தனிப்பட்ட மனநோய் மருத்துவர்களிடமோ சிகிச்சை அளித்து—

செல்லாவை நான் குணப்படுத்துவேன். அப்புறம் தான் கல்யாணம்... புறப்படுகிறேன்.

எனக்கு வேலை தருவதாக வாக்களித்து நேரில் புறப்பட்டுவந்து வேலையை ஒப்புக்கொள்ளச் சொல்லி

சைதாப்பேட்டையிலிருந்து வந்த அந்தக் கடிதம் இன்னமும் என் சட்டைப் பையில்தான் இருக்கிறது.

சாலக்குடியில் ராத்திரி ஆபீஸ் ரூம்லே அந்த ஆர்டர் கவரைத் திருப்பித் திருப்பி நான் பார்த்துக் கொண்டதை நினைச்சுக்கறேன். 'டெஸ் பாட்ச்ட் பை' என்று நீலநிறத்தில் ரப்பர் ஸ்டாம்ப் போட்டு, சிவப்பு மையில் கிறுக்கியிருந்த கையெழுத்தும், தபால் தலை ஒட்டப்படாமல் வட்டமும், சதுரமுமான விசேஷ சிவப்பு முத்திரைகளுடனும் அந்தக் கடிதமிருந்தது. எனக்கு அசல் சர்க்கார் வேலையே கிடைத்துவிட்ட திருப்தியை ஏற்படுத்தியது.

மூன்று வகை வேலைகள் தரப்பட்டிருந்தன. திறமைக்கு ஏற்ப உசிதம்போல் செலக்ட் செய்யப்படும் என்று ஆர்டரில் வாசகம் காணப்பட்டது. அதற்குச் சம்மதமிருந்தால் மட்டுமே புறப்பட்டுவரச் சொல்லிக் கண்டிப்பான வாசகம் கூறியது.

இதெல்லாம்தான் நான் ஏமாறுவதற்கான காரணங்கள்.

சைதாப்பேட்டையில் நெல்லையப்பர் தெரு செகண்ட் கிராஸ் ஸ்ட்ரீட் என்ற கம்பீரமான பெயருக்கும் அந்த மூத்திர நாற்றச் சந்துக்கும் கொஞ்சமும் பொருத்தமில்லாதிருந்தவுடனே எனக்கு ஒரு தொய்வு ஏற்பட்டது. என் மாதிரியே மூன்று பேர் வந்திருந்தார்கள். தாழ்ந்த ஓட்டு வீட்டுக்குள் நுழைந்து வலது பக்கமுள்ள அறையில் அந்தப் பெயரையுடைய பலகை கதவில் தொங்கியது. ஓர் ஆள் காக்கிச் சட்டை அணிந்தவனாக, "இன்டர்வியூவுக்கு வந்திங்களா... மானேஜர் இதோ குளிச்சிட்டு இருக்கார். குளிச்சதும் நாஷ்டா பண்ணிட்டு இதே வந்திடுவார்... உள்ளே போய் இருங்க," என்று அந்த அறையைத் திறந்து மின் விசிறியைச் சுற்றவிட்டான்.

தாழ்ந்த தளம். குறுகலான அறை. பச்சைப் பசுக்க ஒரு காடிநிறமான டிஸ்டெம்பர் அடித்த சுவர்கள். ஒரு மேஜை, இரண்டு மூன்று நாற்காலி. ஒரு சின்ன சைஸ் இரும்புப் பீரோ..மேஜை மேல் சில ஃபைல்கள்...பாரங்கள்.

'இந்தியன் இன்ஜினியரிங் அப்ளையன்ஸஸ்' பற்றிய என் கனவுக்கும் இந்த அறையில் தெரிகிற அந்தஸ்துக்கும் ஒரு பொட்டுச் சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை.

"போய் டிபன் சாப்பிட்டு வந்துடறேன்," என்று பியூனிடம் சொல்லிக் கொண்டு நான் திரும்பறேன்.

"டெபாசிட் ஃபாரத்தை ஃபில்லப் பண்ணும போறீங்களே?" பியூன் ஒரு பாரத்தைத் தந்தான்.

அதன் உச்சியில் 'ரூபாய் 50' என்று குறித் திருந்ததை நல்லவேளை நான் கவனித்துவிட்டேன். "இல்லப்பா. எனக்கு வேலே வேண்டாம். நான் உங்க மானேஜரைப் பார்க்க வேண்டிய அவசியமில்லே..."

நான் ஐம்பது ரூபாய் அல்ல ஐந்து பைசா கூட ஏமாறத் தயாராக இல்லே.

திரும்பிவிட்டேன்.

இந்த வேலேயை நம்பி பார்த்துக்கொண்டிருந்த நல்ல வேலேயை விட்டுவிட்டு வந்துவிட்டோமே என்று நான் அந்த ஏமாற்றத்தில்கூட நினேக்கவில்லே. சரசுக்கு நான் இல்லாமல் போரடிக்குமே என்ற நெருடல் மட்டும் நடுநடுவே வரும். மற்றப்படி..

இது மெட்ரூஸ். நூறுயிரம் ஜீவகோடிகளின் சுறுசுறுப்பு நடமாட்டங்கள்.

ஒவ்வொரு விஞடியும் ஒவ்வொருத்தரும் இங்கே முன்னேற முண்டியடித்துக் கொண்டிருக்கிறுர்கள். முன்னேறிக் கொண்டிருக்கிறுர்கள். ஆனல் நான்...




சென்ட்ரல் ஸ்டேஷனின் அத்தனே வெளிச்சத்தில், சுறுசுறுப்பில் நான் மாத்திரம் பலவீன இருள் படிந்த மனத் துடன்—தோல்வியுற்ற ஒரு மட்டமான இளேஞுக—

பிளாட்பார டிக்கெட் கொடுக்கும் கவுண்டருக் குச் சற்றுத் தள்ளிப் போவோர் வருவோர்க்கு இடைஞ்ச லில்லாத இடத்தில் அடுத்து என்ன செய்வது என்று தெரியாத குழப்பத்தில் நின்று கொண்டிருக்கிறேன்.

ஆளுயரக் கண்ணாடி ஷோ கேஸ்களில் விதவிதமான பட்டாடைகள்.

பளபளக்கும் பிளாஸ்டிக் பைகள். கைக்கடியாரங்கள். புத்தகக் குவியல்கள்.

வேதனைக்கு நடுவிலேகூட எப்படி என்றால் கார்கலும் டாக்ஸியிலும் விதம் விதமாக வந்து இறங்கும் பிரயாணிகளை—எவ்வளவு செழுமை—வேடிக்கை பார்க்க முடிகிறது!

உலகமே செல்வத்தில் புரள்கிறது—என்னைத் தவிர. உலகமே ஒரு குறிக்கோளுடன் ஓடி விரைந்து கொண்டிருக்கிறது—என்னைத்தவிர.

ஏன், எனக்கும் குறிக்கோள் உண்டு. என் சரஸ்வதிக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றுகிற ஒரு குறிக்கோளைவிடப் பெரிய குறிக்கோள் என்ன இருக்கிறது.

வாக்கைக் கொடுத்துவிட்டேன். ஆனால் வக்குதான் இல்லை போலிருக்கிறது.

''சார்...படுக்க இடம்...ஒன் ருபீ...'' ஒரு போர்ட்டர் கேட்டுப் போகிறான்.

நான் தலை அசைக்கிறேன். அவன் முணுமுணுத்துப் போகிறான்.

''இந்தா மிஸ்டர்...க்யூவிலே நிற்கிறதானால் நில்லு...இல்லாட்டி ஓரம் போ...உன்னைத்தான் மேன்..''

பழ ஸ்டால் அருகேயிருந்து வந்த ஒரு போலீஸ்காரர்—க்யூவை ஒழுங்கு பண்றவர் போலிருக்கு—அதட்டல் போடுறார்.

நான் இன்னும் ஒதுங்கி ஓரமாக நிற்கிறேன்.

கால் இருக்கிறது. இன்னும் பல படிகள் ஏறிப் பார்க்க வேண்டியதுதான்.

கண்ணைப் பசிக் களைப்பு மசமசக்க வைக்கிற வரை பட்டணத்து ஆபீஸ்களின் பெயர்ப் பலகைகளைப் படித்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்.

''சார்!''

யாரோ என்னைக் கூப்பிட்டார்கள். திரும்பினேன். ஒரு வாலிபன்—வியர்த்திருந்தது. ''நாக்பூர் டிரெயின் கித்னே பிளாட்பாரம்?'' இந்திக்காரன் போலிருக்கு.

''தெரியலே.''

''கொஞ்சம் பொட்டி பார்த்துக்கோங்க...நான் விசாரிச்சிட்டு வந்துடறேன்...இங்கேயே இருங்கோ ஸாப்.''

அந்த வாலிபனுக்கு அப்படி ஒரு வியர்வை—பின்னே, இந்தப் புழுக்கத்தில் அவ்வளவு தடித்த கோட்டும்—அதுவும் கறுப்புக் கோட்டு—சூட்டும், டையும்..

அவன் ஒரு சலாம் போட்டுவிட்டு பிளாட் விசாரணைக்கு விரைந்து சென்றுவிட்டான்.

வேலைவெட்டி இல்லாதவனுக இந்த மெட்ராஸிலே ஒரே ஒருத்தன் நான் தானிருக்கிறேன் என்று அவனுக்கு சோதிடம் தெரிந்த மாதிரி எனக்குப் பெட்டிக் காவலைக் கொடுத்துவிட்டுப் போன அந்த வாலிபன் ஐந்து நிமிடமாகியும் வரவில்லை.

எனக்குக் கால் வலிக்கிற மாதிரி இருந்தது. பெட்டிமேல் உட்கார ஒரு கணம் நினைக்கிறேன். முள்ளாக முருடு முருடாக இருந்த பெட்டி, 'உட்காராதே' என்று என்னை உட்கார அனுமதிக்க மறுத்தது.

எங்கே தொலைந்தான்? அந்த வாலிபனுக்காக நாலு பக்கமும் என் கண்கள் தேடின. ரிஃப்ரெஷ்மெண்ட் அறையிலிருந்து கமகமவென்று டீ மணம் யாரோ கதவைத் திறந்தபோது வந்தது.

ஒரு டீயாவது சாப்பிடலாம். ஆனால் பெட்டிப் பொறுப்பு? மீண்டும் என் கண்கள் வாலிபனைத் தேடின. முகம்கூட மறந்துவிடும்போலிருக்கிறது. கறுப்புக் கோட்டு, புள்ளி புள்ளியான டை.

கௌண்ட்டர் அருகே என்னவோ பரபரப்பு. நாற்பது வயசுக்காரர் ஒருத்தரைச் சுற்றி ஒரு சிறு கும்பல். பாவம். எந்த ரயிலுக்கு அவசரமாகப் பிரயாணமாயிருந்தாரோ...பர்ஸோ என்னவோ யாரோ பிக் பாக்கெட் அடித்துவிட்டார்களாம். இரண்டு போர்ட்டர்கள் பேசிக்கொண்டு போனார்கள். அப்புறம் யாரோ மூன்றாவது போர்ட்டர், "யோவ்! பர்ஸ் இல்லியாம் வாத்யாரே. சூட்கேஸாம்...எவனோ அடிச்சிகிட்டுப் போயிட்டானும்... ஸோமாரிங்கய்யா..." என்று சொல்லிக்கொண்டே பின்னால் போனான்.

சூட் கேஸ்! யாரோ அடித்துக்கொண்டு போய் விட்டார்கள்?

பெட்டியை அங்கேயே விட்டுவிட்டு, ஆனால் அதையும் ஒரு கண் பார்த்துக்கொண்டே, பறிகொடுத்தவரிடம் விரைந்தேன். "சார்...உங்க பெட்டி எப்படியிருக்கும். என்ன கலர்?"

"ரெண்டு பக்கமும் குமிழ் குமிழா நிறைய வெச்சிருக்கும் சார். ப்ளு கலர்...பெரிய டிரங்க். ஜ்வெல் ஸெல்லாம் இருக்கு சார்...கல்யாணத்துக்குப் புறப்படறோம்...கழுத்திலேயிருந்தா அடிச்சிடுவாங்கன்னு பெட்டியிலே வெச்சா...பெட்டியோட..."

"என்கூடக் கொஞ்சம் வாங்க..."

அவருடைய பெட்டியேதான்..."சார்...சார்... உங்களுக்குக் கோடி தாங்க்ஸ்!" மலர்ச்சியுடன், "வெங்கடாசலபதி! காப்பாத்திட்டேடாப்பா..."

"கொஞ்சம் இருங்க... நீங்க போய் ஒரு போலீஸைக் கூட்டிட்டு ஒரு பக்கமாக இருங்க...உங்க பெட்டியைத் திருடினவன் யாருன்னு நீங்க பார்க்க வேணுமா?"

"இல்லே சார்...கிடைச்சதே...அது போதும். எடுத்துக்கறேன்..."

"அப்படியில்லே சார். இதிலே ஒண்ணு இல்லேன்னு...என்னையில்ல பிடிச்சுக்குவீங்க?"

"நியாயம்தான்..."

கொஞ்ச நேரத்தில் நாக்பூர் ஆசாமி வந்தான்.

"ரொம்ப தாங்க்ஸ் பாபு! உங்களை ரொம்ப நேரம் வெயிட் பண்ணவைத்துட்டேன்... மாஃப் கீஜியே... பெட்டியை எடுத்துக்கறேன்..."

"யார் பெட்டியை?"

அவனுக்குத் துணுக்கென்பது தெரிகிறது.

"நம்ப பெட்டியை." என் ஆட்சேபத்தைப் பொருட்படுத்தாமல் அவசரமாகப் பெட்டியைக் குனிந்து எடுத்தான்.

அவன் சட்டையைச் சட்டென்று பிடித்தேன். "வைடா பெட்டியை! திருட்டு ராஸ்கல்!"

"யார்ரா திருடன்? நீதான்!" அவன் கை பளாரென்று என் உதட்டில் குத்தியது. ஆனால் என் பிடி அவனை விடவில்லை. அவன் கட்டியிருந்த டை வசமாக இருந்தது. அதற்குள் பெட்டியின் சொந்தக்காரர் போலீஸ்காரருடன் வந்துட்டார். போலீஸ்காரருக்கு லட்டுபோல ஒரு கேஸ் லாபம். எனக்கு? வெங்கடகிரியின் அறிமுகம்!

**ப**த்துச் பைசா வேர்க்கடலையை—என் ராத்திரி உணவை—ஒவ்வொன்றாகக் கொரித்துக்கொண்டே சரஸ்வதியின் கடிதத்தைப் படித்துக் கொண்டிருக்கிறேன்...

தினமும் சரஸ் எனக்குக் கடிதம் போட்டுக் கொண்டிருந்தால் பகல் நேர ஒரு சாப்பாட்டைக்கூட நான் பச்சைத் தண்ணீரோடேயே தள்ளிவிட முடியும்...

"பூஷண், அஸ்பஸ்டாஸ் கூரையிலிருந்து சாயந்தரமானதும் இறங்கி அரட்டைக்கு வருகிற உஷ்ணம், ராத்திரி பூரா உங்ககிட்டே பேசிட்டிருக்கிறதென்று எழுதியிருந்தீர்கள்... எங்களாலே உங்களுக்கு எவ்வளவு சிரமம். பூஷண், எனக்காக நீங்கள் இருந்த வேலையை உதறிட்டு, மெட்ராஸில் நாலடிக்கு நாலடி ஒரு சின்ன ரூமில் கஷ்டப்படறது சரியில்லே...செல்லாவுக்குக் குணமாக வேண்டு மென்று நான் உங்ககிட்டே ரொம்பப் பிடிவாதமாச் சொல்லிட்டேனு. அதை தினமும் நினைச்சு வருத்தப்படறேன்.

"வீட்டுக்கார வெங்கடகிரி நல்லவர் நல்லவர்னு நீங்க அவருக்காக துதி பாடியிருக்கீங்க...

"ஏதோ வேலை கிடைக்கும்வரை தங்குவதற்கு ஒரு ரூம் கொடுத்தாரே என்று நன்றி சொல்ல வேண்டியது தான். ஆனல் நீங்க அவருக்காகப் பெட்டித் திருடன் கிட்டே எவ்வளவு ரிஸ்க் எடுத்துக் கொண்டீர்கள்?

"ஏதோ அவருடைய சிபாரிசால் உங்களுக்கு ஒரு வேலை கிடைக்கக்கூடும் என்று நீங்கள் எழுதியிருப்பது எனக்கு ஒரு ஆறுதலாயிருக்கிறது.

"மற்றப்படி செல்லாவழக்கம் போல்.அம்மாவுக்குத் திடீர்னு கண்ணு இருட்டிட்டு...ஒற்றைத் தலைவலியாயிருந்தது பெரிசாகி மயக்கமாத் தடால்னு விழுந்து... வாயிலே நுரை...ரீடிங் ரூமுக்கு எதிர்வீட்டுப் பையன் ஓடி வந்து சொன்னுன். ஆச்சு போச்சுன்னு பொழச்சது புனர் ஜென்மம். பின்னே ஓயாமல் சினிமா பார்த்தால்? அம்மாவுக்குத் துளிப் பொறுப்பில்லே...நான் ஒருத்திதான் கல்லுக்குண்டாட்டம் இருக்கிறேன்...போயும் போயும் இந்தத் துரதிருஷ்டத்தைக் காதலித்தீர்களே, உங்கள் மாதிரி ஒரு அசடு கிடையவே கிடையாது. அதனுலே என் பூஷணத்துக்கு அசட்டுச் சக்ரவர்த்தின்னு ஒரு பட்டம் கொடுக்கிறேன்... கோபிச்சுப்பீங்களா—என்னடாது இந்த அதிகப்பிரசங்கிக் கழுதை நம்மை அசடு கிசடுன்னு சொல்கிறது என்று? ஆனுல் உங்களை நினைச்சு நினைச்சுப் பார்க்கறேன்...உங்களுக்குக் கோபம் வராதுன்னுதான் தோணுகிறது... ... ஆமாம். 'சரஸ்' பார்த்தீங்களோ? சினிமாவைச் சொல்கிறேன்.

சரஸ்வதி".




லிஸ்டைப் பார்த்துப் படித்துக்கொண்டே வருகிற புரொவிஷன் ஸ்டோர் பையன் உதட்டைப் பிதுக்கிக் கையை விரிக்கிறான். "நாலாவது அயிட்டம் இல்லேம்மா. மீதியெல்லாம் இதோ இப்ப அனுப்பிவிடறேன்—சைக்கிள் வந்ததும். நீங்க போங்க."

ஆபீஸில் வேலை செய்து விட்டுத் திரும்பிய களைப்பு இன்னும் அந்த அம்மாளின் முகத்தில் நீங்கியிருக்க வில்லை. சில பத்திரிகைகள். ஹாண்ட்பாக். ஹாண்ட் பாக்கிலேயே ஒரு பகுதியில் துருத்திக்கொண்டு டிபன் பாக்ஸ். ஒரு மடிப்புக் குடை. முகத்திலே கடுப்பு. ஆபீசில் டோஸ் விட்டிருக்கலாம் அல்லது வாங்கியிருக்கலாம். பாக்கி யிருப்பது கடைப் பையன் மேல் செல்கிறது. "என்னப்பா நீ? ஒவ்வொரு தரமும் இப்படியே சொல்றது? இந்தத் தடவை எப்படியும் அந்த சோப்தான் கொடுத்தாகணும். இல்லாட்டி சோப்பே வேண்டாம். லிஸ்டே நீ போட வேண்டாம்." பேசும்போதே கிடுகிடுவென்று கோபம் வருகிற டைப் போலிருக்கிறது. "போன தரம் என்ன சொன்னே. .சரக்கு வந்துடும்மா அடுத்த வாரம்னே.. சொன்னீயா இல்லையா? அதென்ன நாங்க குறிப்பிட்ட ஒரு சோப்பை எழுதி அனுப்பறது. .நீ அது இல்லேன்னா இல் லேன்னு சொல்லணும். வேறு எதையாவது போட்டு அனுப் பினால்? நீ செங்கல்லை அனுப்பினாக்கூட நாங்க தேய்ச்சுக் கிட்டு உனக்கு மாசக் கடைசியிலே பணம் தரணும். உங் களுக்கு அக்கௌண்ட்னா இளப்பம். .ஊம்?"

கல்லாவிலிருந்த முதலாளி—அல்லது முதலாளி ஸ்தானத்தைத் தற்காலிகமாக வகிப்பவர் சமாதானப் படுத்தினார் இருந்த இடத்திலிருந்தே. "யார்ராவன்? அம்மா

கேட்கிறதைக் கொடுங்களேண்டா. .அம்மா, கோபிச்சுக் காதீங்க. பொடியன் வெவரம் புரியாதவன்.''

''இல்லீங்க முதலாளி, ராஜ் சோப்பு கேட் கிறாங்க அம்மா.''

முதலாளி முகத்தில் இப்போ லேசாக அசடு வழிகிறது. மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறார். ''ராஜ் சோப்புங்களா? உள்ளபடிக்கே சப்ளை இல்லீங்க. .''

ஹாண்ட் பாக்கோடு சேர்த்துப் பிடித்திருந்த பத்திரிகைகளிலிருந்து ஒன்றை எடுக்கிறாள். . ''இதைப் பார்த் தீங்களா?''

பத்திரிகையின் கடைசிப் பக்கத்தில் ராஜ் சோப்பு விளம்பரம்—நான்கு வண்ணங்களில். 'வாங்குங்கள் இன்றே. உயர்ந்தவர்கள் விரும்பும் உயர்ந்த சோப். அதை உபயோகிக்கும் ஒரு நடிகை சிரிக்கிறாள்.'

''சப்ளை இல்லையென்றால் விளம்பரம் கொடுத் திட்டிட இருப்பாங்களா. . . .முட்டாளுங்களா அவுங்க! வாராவாரம் முழுப்பக்க விளம்பரம். தினப்பத்திரிகையைப் பிரிச்சுக் காட்டட்டுமா?''

கடையில் கும்பல் சேர்கிற நேரம், அதுவும் மாத முதல்—கணக்கு வரவு இருக்கிற நேரம்— ''ராஜ் சோப்பு தானே வேணும். . .நான் எப்படியாவது வாங்கி அனுப்பறேம்மா. .மீதி சரக்கைப் போட்டுடலாமில்லையா?''

''ஆனால் அந்த சோப் வந்தாகணும். விலை மலிவு என்று ஹோல்ஸேலா வித்துப்பிடறீங்க போலி ருக்கு. .''

''அம்மா.. சொல்றேன்னு த்தப்பா நினைக்காதீங்க. சரக்குக்கு மார்க்கெட்டில் கிராக்கி ஏற்படணும்னுகூட வெறுமே விளம்பரம் பண்ணுவாங்க மார்க்கெட்டிலே. .ஒரு பொருள் விளம்பரம் பண்ணிட்டதாலே கிடைக்கணும்னு கட்டாயம் இல்லே. .போன மாசம் ரெண்டே ரெண்டு கட்டி வந்தது. நூறு கேட்டிருந்தோம்.''

''பின்னே? வரவேயில்லேன்னது பொய்தானே?''

''ஃபேக்டரியிலே ஸ்டிரைக் கியக்கோ என்னவோ சரக்கு வந்தால் வஞ்சகமென்னங்கம்மா. .''

''ஏய்யா. .சரக்கைத் தயாரிக்கிறவங்க அதை அப்படியே வெச்சிட்டு என்ன பண்ணப் போறாங்க. .அவுங் களே அத்தனையையும் தேய்த்துக் குளிப்பாங்களா? எல்லாம் நீங்க பண்ற வேலே.''

அந்த அம்மாள் கோபத்துடன் புறப்பட்டுப் போய்விட்டாள். மாசம் முன்னூறு ரூபாய் சரக்கு வாங்கு கிற ஒரு நல்ல கிராக்கியாம். டோஸ் வாங்கிக் கொண்ட தில் தற்காலிக முதலாளிக்கு எரிச்சல். குமாஸ்தா மீது பாய்ச்சல். "ஏய்யா அந்த ராஜ் சோப்புக்குச் சுடச் சுட போன் போட்டுக் கேளு. காதை அப்புறம் குடையலாம்."




நான் குடியேறியிருந்த வெங்கடகிரியின் ஸ்டோர் ஸில் கசகசவென்று நிறையக் குடித்தனங்கள். அதற்குக் கொத்தவால்சாவடி என்று ஒரு பேர் உண்டு என்கிறது எனக்குப் பிற்பாடுதான் தெரியும்.

தெருவை ஒட்டின மாதிரி வீட்டின் குட்டைச் சுவர். பலவீனமான ஒற்றைக் கல் சுவர். இந்தப் பக்கம் ஓர் இரண்டடி. அந்தப் பக்கம் ஓர் இரண்டடி. நடுவிலே கதவில்லாத மொட்டை வாசல். வாசலை ஒட்டி உள்ளே நாலடிக்கு நாலடி பொது இடம். காற்றுட அங்கே வந்து போர்ஷன்காரர்கள் நின்று கொள்ளலாம். காய்கறி வந்தால் வந்து வாங்கலாம். மூணு நாலு மணிக்கு வெய்யில் இல்லை யானால் குடித்தனக்காரப் பெண்கள் உட்கார்ந்து அரட்டை அடிக்கலாம். முன் போர்ஷன்காரர்கள் தட்டுக்களில் வற்றல் வடகம் — போகிற வருகிறவர்களுக்கு வழிவிட்டுவிட்டு— உலரவைக்கலாம். வெளியில் ஆபீஸ் புறப்படுகிற ஆண் கள், அக்குளில் ஆபீஸ் பையை இடுக்கிக்கொண்டு, ஒரு வெற்றிலை சீவலை மென்றுகொண்டு புறப்படுமுன் இந்தப் பக்கமும், அந்தப் பக்கமுமாக அங்கிருந்துகொண்டு சகுனம்

பார்க்கலாம். வழி அனுப்ப வந்த மனைவிமார்கள் 'பால் கூப்பன்... மருந்து' என்று எதையாவது ஞாபகப்படுத்தலாம். எவர்சில்வர், ஜாடி பழைய துணிப் பாத்திரக்காரர்கள் துணி போட்டு மூடிய தங்கள் பெரிய கூடைகளை இறக்கி வைத்துக்கொண்டு, 'அது வராதும்மா...மேலே துட்டு கொடுத்து வாங்கிக்க... நீ ஐஸா ஆளா கீறியே... கேட்டு வாங்கிட்டுப் போவியா...வுருட்டுனு போறியே... நாங்க இன்னு வவுத்துக்குத் துன்னறதா...சுமந்துகினே செத்துடறதா...' என்று பேரம் பண்ணலாம்.

அந்தப் பதினாறடிச் சதுரமான பொது இடத்தில் குடித்தனக் குழந்தைகள் சில சமயம் சிறுநீர் கழித்து, வெங்கடகிரி வந்து அந்தக் காரியத்தைச் செய்தது எந்த வீட்டுக் குழந்தை என்று விசாரணை செய்வார். 'ரூம்காரர் ரொம்ப சாதுவாயிருந்தா அவர் ரூம்லேயேகூட இதுகள் போய் ஒண்ணுக்குப் போயிட்டு வந்துடும்... இந்தாங்க பூஷணம், நீங்க பார்த்தால் உடனே ஒரு கழியாலே மண்டையிலே போடுங்க—எந்தக் குடித்தனக்காரக் குழந்தையாயிருந்தாலும் டோண்ட் கேர்...நான் பார்த்துக்கறேன்...கர்மம்...கர்மம்' என்று முண்டாசைக் கட்டிட்டு வாளித் தண்ணீரைக் கொண்டுவந்து டப்பாவிலே வீசி வீசி அங்கே ஊற்றுவார். எனக்கு விட்டிருந்த ரூம் பொது இடத்தை ஒட்டியிருந்தது என்பதால் அதனுடைய பராமரிப்புப் பொறுப்பு ஓரளவு எனக்கு உண்டு என்பதை அவர் சாடை மாடையாக எனக்கு உணர்த்தினாலும் நான் எந்தக் குழந்தையையும் அதட்டினதில்லை.

முன்னால் வராந்தாவைத் தாண்டினதும் இடது பக்கமாச் சிறிய ரூம். எனக்கு இருபத்தாறு ரூபாய்க்கு விட்டிருந்தது. அதிக வெளிச்சமில்லாவிட்டாலும் இருட்டு கிடையாது. வலது பக்கம் அதே மாதிரி ஒரு ரூம். அந்த ரூமும் அதை ஒட்டின ஒரு பட்டாசாலையும்—அதாவது ஹாலும் ஒரு போர்ஷன். ஹாலுக்கு எதிர்ப்புறம் முன் போர்ஷன்காரர்களுக்கான தொட்டி முற்றம்—பொதுக் குழாய்—சில பாத் ரூம்கள். ஹாலை ஒட்டினாற்போல் கோவணம்போல எல்லா போர்ஷனுக்குமான நடை. அது ஒரு நீள நதின்னு பக்கத்துலே பிரிஞ்சு பிரிஞ்சு போற கிளையெல்லாம்தான் போர்ஷன்கள். வாசல்லேருந்து பார்த்தால் கடைசி வரை சில கோயில் கர்ப்பக்கிரகம் தெரியுமே அது மாதிரி தெரியும். ஒருத்தருக்குச் சமையல் ரூமும் குடியிருக்கிற ரூமும் எதிரெதிரா இருக்கும். ஒருத்தருக்குச்

சமையல் ரூம் முன்னாலும் குடியிருக்கிற ரூம் இன்னொரு கோடியிலும் இருக்கும். பலவிதம்.

எனக்கு விட்டிருந்த ரூமை அடுத்து இன்னொரு சின்ன ரூம். அதுலே ஒரு பாட்டு வாத்தியார் இருந்தார். ரேடியோவில் கூடப் பாடுவாராம். அவர் சொல்லக் கேள்வி. ஆனால் நான் வந்ததிலிருந்து கேட்டதில்லை. சில குழந்தைகள் வந்து காலையில் பாட்டு கற்றுக் கொண்டு போகும். பாட்டுக்காரர் ஸா... பா...ஸா...என்று சொன்னால் ஒவ்வொரு குழந்தை 'ச்சா.. ப்பா...ச்சா...' என்று சொல்லும். அந்த அடிப்படை ஸ்வரங்களைத் திருத்தறதுக்கே பல நாள் அவர் பாடுபடு வார். அடிக்கடி புகையிலையைத் துப்பறதுக்கு வாசல் பக்கச் சாக்கடைக்கு வந்து போறப்போ ரூம் கதவு திறந்திருந்தா என் பக்கம் பார்த்து ஒரு புன்னகையோடு போவார். எனக்கு சங்கீதத்தைப் பற்றி ஒண்ணும் தெரியாததால் இப்படி ஒருத்தர் நெற்றிக்குப் பொட்டு வெச்சிட்டு அங்க வஸ்திரமும் வெற்றிலை பாக்கு வாயுமாக, நான் சாலக்குடி ரீடிங் ரூமில் பத்திரிகைகளிலேயும் கதைகளிலேயும் சந்தித்த மாதிரி அசலாக ஒரு பாட்டுக்காரரைப் பார்க்கிறது எனக்கு அதிசய மாக இருந்தது.

ஒரு சாதுவான ரயில்வே குமாஸ்தாவின் பெரிய குடும்பம் பின்கட்டில் குடியிருந்தது.

நடுவிலே ஏதோ ஒரு போர்ஷனில் ஒரு அம்மைத் தழும்புகார அர்ச்சகர். அவர் சம்சாரம் ரொம்பப் பொல்லாதவள் என்று மற்றக் குடித்த னப் பெண்கள் பேசிக்கொள்வது என் காதில் விழும். அந்த அம்மாளுக்குச் சினிமாவுக்கு ரொம்பப் போகிற வழக்கம்.

காசுக்குக் கவலைப்படமாட்டாள். அர்ச்சகர் சில சடங்குகளில் தனக்குத் தட்சிணையாகக் கிடைக்கும் பாத்திர பண்டங்களை வீட்டுக்குக் கொண்டுவருவார். சில வேளைகளில் புது ஜோடி வேட்டிகள்.

இதையெல்லாம் அந்த அம்மாள் அனுயாசமாக அடகுக் கடையில் கொண்டுபோய் வைத்து விடுவாராம்.

வெங்கடகிரி என்னிடம், நான் குடியேறிய இரண் டாம் நாளே, "நடுக்கட்டு அர்ச்சகர் ஒரு மாதிரி. அவர் நல்லவர்தான். அந்த அம்மாள் கடன் கிடன் ஏதாவது நைஸாகக் கேட்பாள். கொடுத்தீரோ வராது. ஜாக்கிரதை."

என்று ஓர் எச்சரிக்கை பண்ணியிருந்தார். ஆனல் அந்த அம்மாள் என்னிடம் கடன் கேட்க வரவில்லே. வந்திருந் தாலும் நான் உள்ளபடிக்கே கொடுக்கிற நிலேயில் இல்லே. அர்ச்சகர் போர்ஷனுக்கு எதிர்ப் போர்ஷனில்தான் வீட்டுச் சொந்தக்காரர் வெங்கடகிரி இருந்தார்.

அவர் போர்ஷன் சற்று விசாலமானது. தரை மழ மழவென்று சிமிட்டி போட்டிருக்கும். அறைகளின் வாசல்களில் கண்ணுடிக் குழல் மணிகள் தொங்கவிடப்பட்டிருக்கும்.

வெங்கடகிரியின் சம்சாரத்துக்கு இந்த மணி வேலே, பின்னல், எல்லாம் பிடிக்கும் போலும். வாசலிலே மற்றப் பெண்களுடன் அரட்டை அடிக்கும்போதுகூட கையில் நூல்கண்டோ, க்ரோஷா ஊசியோ இருக்கும். சில சமயம் அவர் பெண் பாரதிகூட அந்த மாதிரி பின்னல் ஏதாவது செய்து கொண்டிருப்பாள்.




திருவொற்றியூர் சாலேயில் எர்ணுவூர் கேட்டைத் தாண்டி ஒதுப்புறமான மைதானத்தில் உயர்ந்த காம்ப வுண்டுச் சுவருடன் கூடிய ஒரு தொழிற்சாலே தெரிகிறது. சுவர்களும் இரும்புக் கதவும் மிக உயரமாக இருப்பதால் உள்ளிருக்கும் தொழிற்சாலே தெரியவில்லே. ஆனல் சுவரின் மேலுள்ள இரும்பு ஹோர்டிங்கில் பரிமளா என்று கொட்டை எழுத்துக்கள் தெரிகின்றன. ராத்திரியில் நீலமாக எரிபவை.

கேட்அருகே கிழட்டு வாட்ச்மேன் பீடியைப் பிடித்த வாறு, அருகிலிருந்த தன் பேத்தியுடன் பேசிக் கொண் டிருக்

கிறான். அந்தப் பீர்க்கன்காய்ப் பின்னல் சிறுமி தாத்தாவைத் துளைத்துக் கொண்டிருக்கிறாள்—மூக்கை நொடிக்கு நொடிக்கு உறிஞ்சிக்கொண்டு. "இதோ அய்யே. .உள்ளே இட்டுகினு போய்க் காட்டுன்னு. ."

"அடி விவரம் புரியாத புள்ளே. .உள்ளே ஒண்ணியும் இல்லே புள்ளே."

"போ பாட்டா. .எங்க இஸ்கோல்லே நான் எம்பிட்டுப் பெருமையாச் சொல்லி கிட்டேன். .மிஸ்ஸம்மா கேட்டாங்க. 'சோப்பு பண்ணறது எப்படித் தெரியுமோ உங்களுக்கு'ன்னு. .நான் எந்திருச்சி. .'எங்க பாட்டா சோப்புக் கம்பெனியிலேதான் வாட்ச்மானு இருக்கார்'னேன். மிஸ்ஸம்மா 'அப்படியா'ன்னு சொல்லி, 'திங்கள் கிழமை யன்னிக்கி பேச்சிம்மா பார்த்துட்டு வந்து உங்களுக்கெல்லாம் சொல்லுவான்'ங்க. .நீ என்ன பாட்டா. . என்னியெலே உள்ளே வுடமாட்டேங்கறே?"

"அறியாப் புள்ளெயா இருக்கியே. ." பாட்டன் அவளுக்குத் தன் சட்டைப் பையிலிருந்து டீ குடிக்கத் துட்டு எடுத்துக் கொடுக்கிறார். "தங்கமில்லே. .மொதலாளி வர்ர நேரம். நீ போய் டீ குடிச்சுட்டு போடி தாயி."

"எனக்கு டீ ஒண்ணியும் வேணும்." திணிக்கப் பட்ட காசை அவள் தூக்கித் தள்ளுகிறாள். மண்ணில் போய் விழுகிறது.

கிழவனுக்கு ஓரே செல்லப் பேத்தி. ஸ்கூல் போகிறவள்.

"துட்டைத் தூக்கி எறியலாமா? தப்பில்ல. ."

"பாட்டா! பாட்டா! கொஞ்ச நேரத்திலே பார்த்திட்டு ஓடியாந்துடலாம். சொம்மா. .கொஞ்சநேரம்.."

"அடி ஆத்தா. . .இப்போ சோப்பு ஒண்ணியும் பண்ணலேயே. ஒன்னியோட பேஜாராப் போச்சே."

"டகுலு வுடறியே. .டொம்மு டொம்மு டொம் மூணு மெசினு சத்தம் கேட்குது. .அதோ. .கொழாயிலே புகை. ."

"சரி, சரி, சொன்னா புரியாது உனக்கு."

பேத்தியைக் கூட்டிக்கொண்டு உள்ளே போகிறான்—போகுமுன் ஞாபகமாக இரும்புக் கேட்டை நன்கு பூட்டி விட்டு.

பேச்சிம்மாவுக்குப் பெரிய ஏமாற்றம். "என்ன பாட்டா? அம்யாம் பெரீசா இருந்தது. .உள்ளே ஒண்ணி

யுமே காணோம். சின்னச் சின்ன ஊடாட்டம் நாலு இருக்குது. சின்ன வங்களா ஒண்ணு கீது. இதானு பாக்டரி. ." மூக்கை ஜிவ்ஜிவ்வென்று உறிஞ்சினுள். "சோப்பு வாசமே அடிக்கலே? எங்கே பண்ருங்க சோப்பு?"

"சரி. சரி. போகலாமா?"

சிறுமிக்கு மகா ஏமாற்றம். "அந்தக் கொட்டா யிலே என்ன?"

"வா காட்டறேன்."

ஆபீஸ் மேஜைகளும் சில பைல்களும் ஒன்றில் இருந்தன. இன்னொன்றில் கொஞ்சம் சோப்புக் கட்டிகள்.

"இவ்வளவுதானு சோப்பு கம்பேனி? எப்படிப் பண்ருங்க சோப்பு?"

"அடி கச்மாலம்." கிழவன் குரலேத் தாழ்த்திக் கொண்டான். "இங்கே ஒரு சோப்பும் பண்றதில்லே. . வெளியிலே போய் டமாரம் அடிச்சிடாதே. .பாட்டனுக்கு வேலே பூடும்." . .

"பின்னே அந்த மெசின்? டம்டம்னு சத்தம் போடுதே ராலி மாதிரி அது?"

"அதுதான் ஜெனரேட்டர். கரெண்டு சப்ளே. சின்னப் புள்ளே. .உனக்குத் தெரியவேணும்."

"ஊஹூம். .சொன்னுத்தான். ."

"சமத்துக் கண்ணல்ல. . டீ வாங்கித்தாரேன். . குடிச்சிட்டு. ."

"ஒண்ணும் வேணும்."

வாட்ச்மேன் பேத்தியைக் கூட்டிக் கொண்டு வெளியே வந்தான். "ஒண்ணுமில்லேம்மா. சோப்பே இவுங்க தயார் பண்றதில்லே. . வெளிக் கம்பெனியிலிருந்து அப்பப்போ கொஞ்சம் சோப்பு வாங்கி இவுங்க முத்திரையை அதிலே குத்தி இவுங்க சோப்பு மாதிரி அனுப்பிச்சுடுவாங்க. பாக்டரி ஒப்புக்கு நடக்குது."

"ஏன்?"

"இத்துனியூண்டு இடத்துலே ஆகாத வேலேக்கு இவ்வளவு பெரிய ஜெனரேட்டர் வெச்சு கரெண்டு வேறு செலவு. . எல்லாம் நஷ்டக் கணக்கு காட்டறதுக்குன்னு யோசிக்கிறாங்க."

"அப்படீன்னு?"

"அடி ஆத்தா. .கும்பிடு தாயே. .மொதலாளி கார வர்ராசப்பலே இருக்குது. . ஓடு ஓடு!"




மூன்று மாசத்திலே தான் எத்தனை சோதனை. ஒற்றைவேளைச் சாப்பாடாக இந்த மூன்று மாசமும் சாப்பிட்டுக்கொண்டு வேலை தேடின களைப்பு எவ்வளவு? இருபது, இருபத்தொண்ணு, ஐயோ இருபத்தொன்பதுக்கு வந்துட்டுதே நம்பர், நாளைக்கு முப்பதும் ஆயிட்டுதுன்னு, சாப்பாட்டு டிக்கெட் புதுசு வாங்கணுமே, ஓட்டு மொத்தமா இருபத்திரண்டு ரூபாக் குறைஞ்சிடுமே கையிருப்பிலேருந்து—இப்படியெல்லாம் கணக்குப் போட்டுட்டு—மெட்ராஸ் வந்த இந்த மூன்று மாசமா வெளியிலே என் துக்கத்தைக் காட்டிக்காமலும், நலுங்காமல் சலவைச் சட்டையையும் வேட்டியையும் ஜாக்கிரதையாக வாரத்துக்கு ஒருதரம் மாற்றிட்டும் இருந்திருக்க வேண்டாம்.

அடடே! நான் பிச்சாண்டியாக இருந்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. செல்லாவுக்கு சிகிச்சைக்கு ஏற்பாடு பண்ணமுடியலையே என்று தவித்திருக்கவேண்டியதில்லை.

மாமாவின் கடிதத்திலே மறுபடியும் அந்தக் கடைசிப் பாராவைப் படிக்கிறேன்.

"..பூஷண், சாலக்குடி வேலையை விட்டு மெட்ராஸ் போய்விட்டாயே! சாலக்குடியிலிருந்தபோது அடிக்கடி வருவாய். இப்போ வர்ரதே இல்லை. பாவம் உன் அந்தாக்ஷரி போட்டிக் கூட்டாளி வைத்தியர் பழனி செட்டியார்தான் பொழுது போகாமல் ரொம்பக் கஷ்டப்படறார்..."

இருட்டிக் குமுறிட்டிருக்கும் போதுதான் மின்னல் பளிச்சினு அடிக்கும் என்கிறது சரியாகத்தானிருக்கு.

குழப்பமும், கலக்கமுமாயிருக்கிறப்போதான் தெளி வும் கீற்றும் பிறக்கும் போலிருக்கு.

மாமா இதுக்கு முன்னாலேகூடக் கடிதத்திலே வைத்தியரைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார்.

ஆனால் இன்னிக்குத்தான் என் மூளையிலே அது ஒரு வெளிச்சத்தை ஏற்படுத்தினது.

அவருடைய பேரன் சதாசி இங்கே மெட்ராஸில் தானே மெடிகல் காலெஜிலே படிக்கிறான்!

சைதாப்பேட்டையிலே நான் ஏமாந்ததும் உடனே அவனைப்போய் நான் பார்த்திருக்கலாமே! மடையன் மாதிரி பேப்பரை மட்டும் தினமும் பார்த்துப் பார்த்து வேலைக்கு எழுதிப் போட்டு எழுதிப்போட்டு ஏமாற்றம் அடைஞ்சிட்டிருக்கிற வடிகட்டின முட்டாள்தனத்தை உணர்ந்ததும் எனக்கே என்னவோ மாதிரி ஆயிட்டுது.

அறிவை எப்பவும் கூர்மையா வெச்சிட்டிருக்கணும். ஒரு புது உற்சாகத்தோடு கிளம்பத் தயாராக ஆறேன்.

நேற்று ராத்திரி சாப்பிட்ட வேர்க்கடலைப் பருப்பு ஒண்ணு மேஜைகிட்டே விழுந்திருக்கிறது.

இரண்டு மூன்று எறும்புகள் அந்தப் பெரிய பருப் பைச் செங்குத்தாக சுவருக்கு மேலாகக் கூரையை நோக்கிச் சிரமத்துடன் இழுத்திட்டிருக்கு. தன்னம்பிக்கை.

மனசு ஒரே உற்சாகமாக இருக்கு. 'தம் புடிங்க! விடாதீங்க!' என்று உற்சாகமாக அவைகளுக்கு வாய்விட்டு வாழ்த்துக்கூறிவிட்டு டிரெஸ் பண்ணிக்கொண்டு சதாசியைப் பார்க்கக் கிளம்பறேன்.

ரூமைப் பூட்டிக்கறப்போ, வீட்டுக்காரருடைய பெண் எங்கிட்டே ஏதோ கேட்கறதுக்காக வாசற்படி கிட்டே ரெண்டு வாட்டி இப்படி அப்படி போற மாதிரி இருந்தது.

துறுதுறுன்னு அழகாப் பாவாடை சட்டை சிலவேளைகளில் பொய்த் தாவணி போட்டிட்டிருக்கும் அந்தப் பெண். ஹைஸ்கூல்லே பத்தாவது படிக்கறதாகத் தெரிந்தது. கொஞ்சம் உயரம். எப்பவுமே தாவணி போட்டுக்கலாம். ஆனால் முக்கால்வாசியும் பாவாடை சட்டை தான்.

பண்டிகை நாளாயிருந்தால், வடை, அல்லது பாயசம் இது மாதிரி அவுங்க வீட்டிலிருந்து வர்ரது உண்டு.

இன்னைக்கிக்கூட அப்படி ஏதாவது விசேஷமாயிருந்து ஏதாவது கொண்டுவந்து தரதுக்குத்தான் நான் இருக்கேனு, பூட்டிகிட்டும் போயிட்டேனு என்று பார்க்கிறதோ என்று தோன்றியது.

நான் பூட்டிட்டுத் திரும்பி வாசற்படிகிட்டே தயங்கினமாதிரி வந்ததும் அந்தப் பெண் பாரதி, "சார்," என்கிறுள்.

நான் நிற்கிறேன்.

"அப்பா உங்ககிட்டே—வாடகை விஷயம் ஞாபகப் படுத்தச் சொன்னுர்..."

நறுக்குனு என்னைக் குத்தின மாதிரி இருக்கு. வெங்கடகிரி நல்லவர்தான். என்னிடம் பூர்ண அனுதாபமும் பிரியமும் மதிப்பும் உடையவர்.

கடலைக் கொட்டையை ராத்திரி ராத்திரி சாப்பிட்டுக் கொண்டு, கையிலிருக்கிற பணம் தீருகிறதுக்குள் எப்படியும் வேலையைப் பிடிச்சுடலாம்கிற நம்பிக்கையோடு இருந்திட்டிருக்கிறேன்.

தேதி ஏழாயிட்டுது. ஆரும் தேதிக்குக் கரெக்டா நான் வாடகை கொடுக்காமல் ஒரு அவநம்பிக்கையை சிருஷ்டி பண்ணிட்டோமோன்னு தோணவும் முகத்தில் ஒரு சிரிப்பை வரவழைச்சிட்டு பாரதிகிட்டே, "ஸாரி...மறந்து போச்சு. இதோ இப்போ தந்துடறேன்...." என்று பூட்டின ரூமைத் திறக்கிறேன்.

"இல்லில்லே...பரவால்லே சார்...அப்பா ஜஸ்ட் ஞாபகப்படுத்தச் சொன்னுர். அவ்வளவுதான்..."

எதற்கும் உடனே கொடுத்துடறதுதான் பரவாயில்லை என்று தோன்றிற்று.

ஆகவே ரூமை மறுபடி திறந்து...,

—இருபத்து நாலு ரூபாயை மனப் பாரத்துடன் எடுத்து ஒரு கவர்லே போட்டு, ''ப்ளீஸ்... அப்பாகிட்டே கொடுத்துடும்மா...ரொம்ப ஸாரின்னு சொன்னேன்னு''சொல்லுங்றபோதே... 'இன்னும் பாக்கி கையிருப்பு முப்பத்தாறு ரூபாதானே இருக்கு...டிக்கெட் புஸ்தகத்திலே டிக்கெட் நம்பர் இருபத்தெட்டுக்கு வந்துட்டுது!' என்கிற கவலே மேகமா உள்ளே மனசைச் சூழ்ந்துக்கறது. ரூபாய் போனதும் உற்சாகம் போய் விட்ட மாதிரி ஒரு சோர்வு. சதாசியை இன்னொரு நாள் பார்த்துக்கலாம் என்று சலிப்புடன் அறையிலேயே தங்கிவிட்டேன்.




மெடிகல் எக்ஸிபிஷன். கூட்டம் நெரிந்து கொண்டிருந்தது. கடைசி நாள். பேசும் எலும்புக்கூட்டைப் பார்த்து வியந்துகொண்டிருந்த மருத்துவ மாணவரை உற்றுப் பார்க்கிறேன். மிடுக்காக, ட்ரிம்மாக, ஆள் அழகாகை, தனது வரிசையான வெண்பற்களின் கவர்ச்சிகரமாக அந்தச் சூழ்நிலேக்கே ஓர் இளமையை ஏற்படுத்துவது போலிருந்த அந்த உற்சாகமான மாணவனே எங்கோ பார்த்தது மாதிரி, சட்டென்று கவனம் வருகிறது.

சதாசியா? திரண்ட கன்னங்களும் மூக்குக் கண்ணுடியும், மீசையும், வாலிபத்துக்கே உரிய தடால் வளர்ச்சி

யும் அவனை எனக்கு அடையாளம் தெரியாமல் போய் விட்டது.

"யூ ஆர். .மிஸ்டர் சதாசி?" அவனை இப்படிச் சட்டென்று கேட்டுவிட முடியுமா? ஒருகால் அவனுக இல்லா திருந்துவிட்டால் சே. .சே. . அவனேதான். . எவ்வளவு மாறியிருக்கிருன் அவ்வளவுகூட எனக்கு ஞாபகமில்லையா என்ன?

அவனுக்கும் என்னை அடையாளம் தெரிந்து, என் மாதிரியே அவனுக்குள்ளும் போராட்டம். சட்டென்று "பூஷணம், நீங்களா?" என்று அவன் ஒரு வார்த்தை சொல்லவில்லையே என்று எனக்கு வருத்தம்.

சொந்த ஊர்க்காரர்கள் வேறு ஊரில் சந்தித்துக் கொண்டால் ஓர் அறிமுகப் புன்னகை கூடச் செய்யக் கூடாதா என்ன? அல்லது அவனுல் அடையாளம் தெரியாத அளவுக்கு நானும் மாறியிருக்கிறேனு?

"யு ஆர். .மிஸ்டர் சதாசி. ." நான் கேட்டுவிட் டேன்.

"நீங்க. .பூஷணம் சாரா? ஓ! ரொம்ப நாளாச் சுங்க பார்த்து. ." மேட்டர் அஃப் பாக்டாக் இருந்தது அவன் விசாரிப்பு.

"என்ன. .முடிச்சிட்டீங்களா படிப்பை?"

"இல்லை. ."

ஒற்றை வார்த்தையில் பேசுகிறவனிடம் தொடர்ந்து எப்படிப் பேசுகிறது. இருந்தாலும் பேசினேன்.

"நான் இப்போ மெட்ராஸே வந்தாயிட்டுது. இங்கேதான் வேலை."

"அப்படிங்களா? சௌக்யம் தானுங்களே மற் றப்படி."

"சதாசி. உன்னிடம் கொஞ்சம் தனியா நான் பேசணும். எப்போ சௌகரியப்படும்?"

அவன் முகம் ஒரு மாதிரி ஆகிட்டது. இப்படித் திடீரென்று கியூவில் ஒருத்தர் தன்னிடம் உரிமை கொண் டாடிப் பேசுவது அவன் கௌரவத்துக்கு இழுக்கு போலி ருக்கிறது என்று நினைத்தானே?

"கொஞ்சம் பிஸி. ." சங்கடப்பட்டான். "நீங்க இப்படி வந்து இருங்க. .அடுத்தவர் இதோ! வந்துவிடுவார்

இன்னும் கொஞ்சநேரத்திலே பொறுப்பை எடுத்துக்கொள்ள. அப்போ நாம் பேசலாமே.''

அவர் வர கால் மணி ஆயிற்று. பூஷணம் என்று ஒருவன் இருப்பதை அடியோடு மறந்தவனாக சதாசி சக மாணவர்களுடன் அங்குமிங்கும் போய்க் கலகலப்பாகப் பேசிக் கொண்டிருந்தான். திடுமென்று அரை மணிக்கு ஆளையே காணோம். அப்புறம் வந்தான். ''ஸாரி சார். ஒரு கேஸ் கவனிக்கணுமாயிருந்தது. .நம்ம வார்டு, விடமுடியலே. . சொல்லுங்க. .என்ன விஷயம்?''

நான் தயங்கித் தடுமாறி, செல்லா விஷயம் கூறினேன். ''நீ எங்கே வந்து பார்க்கச் சொல்றியோ அங்கே வந்து பார்க்கறேன்.''

''இப்ப அனேகமா அங்கே அட்மிஷன் பண்ணிக்கிறதே இல்லே.''

''நீ எப்படியாவது யாரையாவது பிடித்து.''

''அடுத்த வாரம் வாங்களேன். .''

''எங்கே?''

''வந்து. . .ஏன் ஹாஸ்டலுக்கு வாங்களேன். . ரூம் நம்பர் எட்டு.'' மறுவாரம் சென்றேன்.

சதாசியுடைய அறை வெகு நீட்டாக இருந்தது. ஆடம்பரத்துடன் இணைந்த சுத்தம் அங்கே பரிமளித்தது. நாலு பெரிய சப்போட்டா பழம் வாங்கிப் போயிருந்தேன்..

அவன் அதைத் தொடவில்லை. ''எனக்குப் பிடிக்காது.''

''ஓ. நம்ம ஊரிலே. .உங்க தோட்டத்திலேகூட ஒரு மரம் இருந்ததில்லே?''

''ஞாபகமில்லே. .நான் போய் எத்தனையோ வருஷமாயிட்டுது. . .'' அவனுக்கு வெளியே கிளம்புகிற அவசரம் போலிருக்கிறது—சாடையாக மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்தான்.

''வெளியே கிளம்பிட்டிருக்கிறுப் போலிருக்கு?''

''பிக்சர்தான். என்னவோ புதுத் தியேட்டர் பெயர் போட்டிருந்தது. .''

''அந்தத் தியேட்டரா? அதற்குப் போகிற வழியேதான் நான் இப்போ இருக்கிற தெருவும்.''

''ஓ. அப்படியா?''

''முடிந்தால் வாயேன்—பிக்சர் போய்விட்டு வருகிற வழிதான். நம்பர் ட்வெண்ட்டி ஸிக்ஸ். தயாப்ஜி ஸ்டிரீட்.''

"ட்ரை பண்றேன்."

"முதல் ரூம். .நான் வெயிட் பண்ணிட்டிருக்கேன். ."

"முடிஞ்சால் வரேன் சார். .ப்ரெண்ட்ஸ் கூடப் போறதாலே டெஃபனிட்டா ஒண்ணும் சொல்ல முடியாது. முடிஞ்சா வர்ரேன்."

"சதாசி. .செல்லா விஷயமாக. ."

"ஞாபகம் வெச்சிட்டிருக்கறேன். அந்த சூப ரெண்டுக்கு வேண்டிய ஒரு புரொஃபஸர் காலேஜில் இருக்கிறார். அவரைப் பிடித்து. ."

"கொஞ்சம் பிடிப்பா."

"கான்ஃபரென்ஸுக்கு அலைஞ்சிட்டிருக்கார். . பிடிச்சுடறேன். ."

சதாசியை ஒருகால் பார்த்துக் கூப்பிடலாம் என்று வாசல் பக்கமே ராத்திரி பத்தரை மணிவரை கால்கடுக்க நின்றதுதான் மிச்சம். திரும்பலாம் என்று நினைத்தபோது 'டக் டக் ட ட டக் டடடக்' என்று மரச் செருப்புகளின் ஓசை கேட்டது. மருத்துவ மாணவர்கள் அணியும் மரச்செருப்பு ஒலி அல்லவா?

சதாசி தன் சிநேகிதர்களுடன் கலகலப்பாகப் பேசியபடி சினிமா முடிந்து திரும்பிக் கொண்டிருந்தான்.

நண்பர்களுக்கு மத்தியில் நான் அவனை வழி மறிப்பது நன்றாயிருக்குமா? அவனாக வருவதானால் வரட்டும் என்று கண்ணில் தென்படுகிற மாதிரி நின்றேன்.

அவன் பார்த்தான். கையை வேகமாக ஓர் ஆட்டு ஆட்டிட்டுப் போயிட்டான்.

அடுத்த வாரம் தியேட்டரிலேயே அவனைப் பார்க்க நேரிட்டது. என் அதிர்ஷ்டம் தனியாக வந்திருந்தான். பிக்சர் முடிந்ததும் பேசியவாறே என்னுடன் நடந்தான்—

அவனுடன் நான் நடந்தேன்.

"யாருக்காவது ஏதாவது பணம் கிணம் தரணுமென்றால்கூட பரவாயில்லே சதாசி."

"அப்படியெல்லாம் கூடப் பண்ண முடியாது சார். .முன்னே ஒரு காலத்தில் அப்படி இருந்தது. ..ஆனால் அது மாறி வெகு நாளாச்சு. .போலீஸ் சர்டிபிகேட் வேணும்—நியூஸென்ஸ் கேஸ் என்று. அப்படியும்கூட உள்ளே அட்மிட் பண்ணறதுன்னு. ."

"வாயேன். .இதுதான் என் ரூம்."

சதாசியின் முகச் சுளிப்பு எனக்கு புரிந்தது. அந்த வீட்டின் அமைப்பும், செங்கல் தெரியும் முன்புறச் சுவரும், கோணு மாணுவென்று ஒட்டியிருக்கிற சினிமா போஸ்ட்டர்களும், தெருவை ஒட்டினுற் போலிருக்கிற அந்தக் குப்பைச் சுவரும்—குடித்தனங்களில் முணுக்முணுக்கென்று அழுது வடிகிற விளக்குகளும். .

"பூஷணம் சார். .அப்புறம் நான் ஒரு நாள் சாவகாசமா வர்ரேன். ."

சரஸ்வதி, தன் தம்பியைப் பற்றி மனக் கஷ்டப்பட்டு அவ்வப்போது எனக்கு எழுதியிருந்த கடிதத்தைக் கண் முன்ஞல் சதாசிக்குக் காட்டணும்னு எனக்கு அபிப்பிராயம். அவனுக்கு அப்போதுதான் புரியக்கூடும்.

வற்புறுத்தி அழைத்த பின் உள்ளே வருகிருன். நடைபாதையில் சாக்கடைக் கடப்பைக் கல்சத்தமிடுகிறது. "குனிந்து. .குனிந்து. தலே இடிச்சுக்கப் போகுது. ."

"ரொம்ப சின்ன இடங்க. .ரொம்ப க்ரேம்ப்ட். என்ன இப்படி உஷ்ணம் கொல்லுது! அஸ்பெஸ்டாஸ் ஷீட். அதான்!"

"இஸ். . இஸ். . உஸ்ஸ். ." என்று வீசிக் கொள்கிருன். "ஒரு சின்ன ஃபேன் போட்டுக்கக்கூடாதா நீங்க. ."

"போட்டுக்கணும்னுதான் நினேக்கிறேன். ."

ஒரு ஸ்டூல் இல்லே அவனே உட்கார வைக்க.

"பாரதி! கொஞ்சம் உங்க ஸ்டூல்?" நான் எதிர்ப் போர்ஷன் பக்கமாகத் தற்செயலாகத் தெரிந்த பாரதியிடம் குரல் கொடுக்கிறேன்.

பாரதி அவங்க வீட்டிலிருந்து ஒரு ஸ்டூலே எடுத்திட்டு வர்ராள். நானுகப் போய் எதிரே வாங்கறதுக்குள், "பரவாயில்லே சார். .நான் கொண்டு வர்ரேன்," என்று அவளே ரூமுக்குள் கொண்டு வந்து போட்டுவிட்டுப் போகிருள். சதாசியின் முகத்தில் ஒரு மாறுதல்.

திரும்ப வந்து, "வாட்டர் கீட்டர் வேணுமா சார்?" என்று கேட்கிருள்.

"ரொம்ப தாங்க்ஸ'ம்மா. .வாட்டர் வேணும்."

"செல்லா விஷயமா நான் அந்த புரொசபர் கிட்டே நேற்றுகூடப் பேசினேன். .அதுவே ஒண்ணும் கஷ்டமில்லேயே என்கிருர். ." அவன் குரலில் ஒரு சுறுசுறுப்பு.

எனக்கு மகிழ்ச்சியாயிருக்கிறது கேட்க. ."என்ன சொல்கிருர்? நான் சரசுக்கு எழுதட்டுமா? செல்லாவை

உடனே அனுப்பி வைக்கச் சொல்லட்டுமா யார்கூடவாவது?''

''டைம் ஆச்சு சார். .முடிஞ்சா நாளைக்கு நான் வந்து புரொஃபசர் சொன்னதைச் சொல்றேன்.''

மறுநாள் எட்டு மணிக்கு ராத்திரி சிக்கன ஆகாரத்தைச் சாப்பிட்டுக்கொண்டிருக்கேன்.

வாசலில், ''மிஸ்டர் பூஷணம் சார்.. இருக்கிறாரா?'' என்று சதாசி யாரிடமோ கேட்கும் குரல் காதில் ஒலிக்கிறது.

சதாசி வந்தாச்சா? புரொஃபசர் சாதகமாகச் சொல்லியிராவிட்டால் அவன் சொன்னபடி வந்திருக்க மாட்டான்.

எழுந்து அவசரமாக வெளியே வர்றேன். ''சார்! உங்களைத் தேடிட்டு நேற்று வந்தாரே அவர் வந்திருக்கிறார்.'' பாரதி எதிரே வந்து சொல்லிட்டுத் தன் போர்ஷனுக்குப் போய்விட்டாள்.

''வா சதாசி! இரு. இரு. .ஸ்டூல். .''

''அதெல்லாம் ஒண்ணும் வேணும் சார். . தரையே நல்லாக் குளுகுளுவென்று தான் இருக்கிறது.. புரொஃபசர் என்ன சொல்கிறாரென்றால். .பேஷண்ட் பற்றி முதல்லே முழு விவரமும் கரெக்டா பூரா கேஸ் ஹிஸ்டரியும் தெரியணுமாம். .''

''நான் வரவழைச்சுடட்டுமா?''

''வரவழைக்கறதுக்கு முன்னாடியே தெரிஞ்சாக் கூட நல்லதுதான்.''

''அப்போ நான் எழுதறேன். .அவனுக்கு இதற்கு முன்னே நடந்த வைத்தியம், அது இது எல்லாவற்றையும் விவரமாக. .''

''கொஞ்சம் வாட்டர் இருக்குமா சார். .கூலா?''

''ஓ.''

நான் எழுந்து வெங்கடகிரி போர்ஷனுக்குப் போய் ஒரு எவர்சில்வர் செம்பில் குடி தண்ணீர் வாங்கி வருகிறேன்.

''வீட்டுக்காரரர் ரொம்பத் தங்கம்.''

''ரொம்ப உபசாரம் போலிருக்கு. .தண்ணீர் எவர் சில்வர் செம்பிலேயே வருகிறது. .''

''டொக்டொக்!''

அறைக்கதவை யாரோ தட்டுகிறார்கள்.

திரும்பிப் பார்க்கிறேன்.

பாரதி. ''வாசல்லே சைக்கிள் பூட்டலே போலிருக்கு. ஊபயன்கள் சக்கரத்தை சுழற்றுகிறுங்க. .''

''ஓ! அடடே! ஆமாம்.'' சதாசி எழுந்து வாசலுக்குப் போய் சைக்கிளை பூட்டிவிட்டு வருகிறுன். இரவல் சைக்கிள் வாங்கிட்டு என்னைப் பார்க்க வந்திருக்கிறுன். உண்மையில் என்னைப் பார்க்கறதுதான் அவன் நோக்கமா?




நான் நினைத்த அளவுக்கு சென்னை நகரத்தின் இதயம் அவ்வளவு கல்லாக இருக்கவில்லை. பெட்டியை மீட்டுக் கொடுத்ததற்கு வெங்கடகிரி, ''ரொம்ப நன்றி சார், என்று வாயால் ஒரு தாங்க்ஸ் சொல்லிவிட்டு விடை பெற்றுக் கொண்டிருக்கலாம். அல்லது அவசியம் ஒரு காப்பியாவது சாப்பிடணும் சார் என்னுடன்,'' என்று ரிஃப்ரெஷ்மெண்ட் ரூமில் ஒரு காப்பி வாங்கிக் கொடுத்த வுடன் கைகூப்பியிருக்கலாம். ஆனுல் அவர் தாங்க்ஸுூம் சொல்லி, காப்பியும் வாங்கித் தந்து, வேலை தேடித்தவித்துக் கொண்டிருக்கிற என் நிலைமையை எப்படியோ அறிந்ததும் ஐந்து பத்து என்று அன்றுடம் லாட்ஜுகளுக்கு வாடகை கொடுத் துக் கொண்டு தங்க முடியாத என் இயலாமையைப் புரிந்து தன் வீட்டில் முன்புறமிருந்த ஒரு சிறு அறையில் தங்கிக் கொண்டு வேலை தேட அன்புடன் இசைவு அளித்தார்.

புது நம்பிக்கையுடன் வேலை வேட்டை. நான் அடையும் ஏமாற்றத்தைவிட வெங்கடகிரிக்கே தினமும் என் முகத்தைப் பார்த்து ஏமாற்றம். 'என்ன சார்! இன்றைக்

கும் ஸ்வீட் கிடையாதா?' 'நீங்க அங்கே போனீங்களோ?' 'இவனைப் பார்த்தீங்களோ?' 'அப்படிப் பண்ணியிருக்கக் கூடாது நீங்க' 'பாண்ட் சரியில்லே.' 'அப்பவே சகுனம் ஆச்சு' 'ரொம்ப டயர்டாப் போயிருக்கீங்க' 'இன்னும் ஒரு மணி காத்திருந்திருக்கலாம்.' 'அப்படித்தான் சொல்லுவான். ஆர்டரைக் கையிலே வாங்கறவரை அங் கேயே உட்கார்ந்திடணும்' 'நாசூக்காக விட்டுப் பிடிக் கணும். மூஞ்சைப் பார்த்தாலே எரிச்சல் வந்திடப்படா தில்லையா?' 'கோயிலுக்குப் போனீங்களோ' 'எம்ப்ளா ய் மெண்ட் எக்ஸ்சேஞ்சை விட்டுடாதீங்க' 'இருந்த வேலையை ராஜினமா பண்ணினீங்களே...மகாத் தப்பு.'

அவருக்காகவாவது எனக்குச் சீக்கிரம் வேலை கிடைக்காதா? ஒரு நாள் பெட்டியைக் காப்பாற்றின சம்ப வத்துக்காக அவர் என்னைக் குறைவான வாடகை யில் தங்க அனுமதித்திருந்தார். நான் எடுத்துக் கொள்ளும் சலுகை அதிகம் என்று வேறு உறுத்தல். சீக்கிரம் எனக்கு வேலை கிடைக்கணும். என் சரஸ்ஸுக்கு நான் என்றைக்கு வேலை கிடைத்துவிட்ட மகிழ்ச்சியான செய்தியை எழுதுவேன். அப்படி ஒரு சந்தர்ப்பம் வரவே வராமல் போய்விடுமா?

டொக் டொக். கதவை பாரதி தட்டு கிறள்—அவள் அப்பா எனக்காக மார்க் செய்து அனுப்பிய முந்தின நாள் செய்தித்தாளை அவள் கொண்டு வந்து தருவது வழக்கம்.

பேப்பரைத் தந்துவிட்டு உடனே போய்விடுவாள். இன்றைக்குப் போகவில்லை.

''அப்பா கொடுக்கச் சொன்ஞர்...''

''ரொம்ப தாங்க்ஸ்...''

தபால்காரர் வருகிறபோது நான் இருக்கமாட் டேன். சரசுவிடமிருந்து வருகிற கடிதங்களை அனேக மாக பாரதிதான் கொண்டுவந்து தருவாள். கடிதத்தை அவள் கிட்டேயிருந்து வாங்குகிறபோதெல்லாம் என் முகம் பிரகாசிக்கிறதை அவள் னோட் பண்ணியிருப்பாள் போலிருக் கிறது.

''ரும் சார்!'' அவள் தயங்குகிறுள். ''சார்... நீங்க வந்தபோதிருந்ததைவிட ரொம்ப இளைச்சுப் போயிட் டீங்க. அப்பா, அம்மாகிட்டே சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்.''

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. நான் நல்லாத் தான் இருக்கிறேன். உன் அப்பாவுக்கு என்மேலுள்ள பிரியத்தால் அப்படித் தோன்றுகிறது..."

அவள் களுக்கென்று சிரிக்கிறாள். "எனக்கு உங்க மேல் பிரியம் இல்லே. ஆனால் எனக்குக்கூட அப்படித்தானே தோன்றுகிறது. சார்...ஒண்ணு கேட்பேன், தப்பா நினைத் துக்கமாட்டீர்களே..."

"ஊம்..."

கதவுத் தாழ்ப்பாளை இப்படியும் அப்படியும் தள்ளி அவள் கை விஷமம் செய்கிறது. முகத்திலும் குறும்பு. "உங்க ஒய்ஃப் எந்த ஊரில் இருக்காங்க?"

"ஒய்ஃப்..." நான் சிரிக்கிறேன். "இன்னும் உங்க அண்ணுவுக்கு ஒரு மன்னி வரவில்லே."

"அம்மா கூப்பிடறாங்க போலிருக்கு. நான் போயிட்டு வர்ரேன் சார்..." சற்றே சிரித்துக்கொண்டு போனவள் திரும்பி வந்து, "எதிர்கால அண்ணி அட்ரஸ் சொல்றீங்களா சார். நான், நீங்க இந்த மாதிரி சரியா வேளைக்குச் சாப்பிடாமல் இருக்கிறதை அவுங்களுக்கு எழுதப் போறேன்...எங்க வீட்டிலேருந்து ஏதாவது கொடுத்தனுப் பினாலும் ரொம்பக் கிராக்கி பண்ணிக்கிறார்னு எழுதறேன்.. உங்களுக்கு இன்றைக்கு பெஸ்ட் அஃப் லக் சொல்லத்தான் வந்தேன். இன்னைக்குப் பாருங்களேன்...சாயந்தரம் வரு கிறபோது வேலை கிடைத்துட்டுதுன்னு சொல்லப் போறீங்க."

"பாரீ...பாரீ..." அவள் அம்மா.

"கத்தறாள் பாருங்க—எவ்வளவு தூரம் கேட்கிற மாதிரி..."

பாரதி ஓடிவிட்டாள்.

இந்த அன்பான பெண் வந்து மெனக்கெட்டு சொல்லிட்டுப் போகிறதே பெஸ்ட் அஃப் லக்...அதற்காக வாவது எனக்கு இன்றைக்கு வேலை கிடைத்தாகணும்.

பல்லைக்கடித்துக் கொண்டு வழக்கத்தைவிட அதிக மாக ஏறி இறங்குகிறேன். ராயவரம், மயிலாப்பூர், திருவல் லிக்கேணி, திருவொற்றியூர்...

சாயந்தரம் பாரதி வாசலிலே கேட் அருகே வழக்கமாகக் காற்று வாங்குகிற குடித்தனக்கார பெண் களுக்கு நடுவே நின்றிருக்கிறாள். அவள் பார்வை என்னைத் தூரத்திலே நான் வர்ரபோதே ஆவலுடன் பார்ப்பது எனக்குத் தெரிகிறது. அவளுடைய பெஸ்ட் அஃப் லக் பற்றி பூர்ண

நம்பிக்கையோடு அவள் இருக்கிறாள். அதை நான் குலைக்கக் கூடாது.

மலரவைத்துக் கொள்கிறேன் முகத்தை. பெண்கள் ஒரு பாவலா மரியாதையுடன் கொஞ்சம் வழியை விடுகிறார்கள். எல்லார் முகத்திலும் என்னைப் பார்த்தாலே ஓர் இரக்கம்...அனுதாபம்...மனசுக்குக் கஷ்டமாக இருக்கு. நடையே சொல்லிடும் போலிருக்கு வெற்றியா தோல்வியான்னு.

நான் வீட்டுக்குள் நுழைந்து, பின்கட்டுக்கு முகம் கழுவப் போறேன். பாரதி வாசலிலிருந்த ஒரு அம்மாளுக்குக் குடிக்கத் தண்ணீர் தங்கள் போர்ஷனுக்குப் போய் எடுத்து வருகிற சாக்கில் எனக்குச் சில அடிகள் பின்னாடி வருகிறாள்.

"எப்படி சார் என் பெஸ்ட் அஃப் லக்? பழம் தானே?"

"ஆமாம் பாரதி. எனக்கு வேலை கிடைச்சுட்டுது!"

"அப்படியா! எந்தக் கம்பெனி சார்..."

எனக்குச் சட்டென்று ஏதோ ஒரு கம்பெனி பெயர் ஞாபகம் வருகிறது. ஒரு ரேடியோ தயாரிப்புக் கம்பெனி. சாயந்தரம் நாலுமணிக்கு மன்றாடியதாலே நினைவிலே இருக்கிறது. சொல்றேன்.

"பார்த்தீங்களா? எப்படி என் பெஸ்ட் அஃப லக்! நான் இத்தனை நாள் சொன்னேனே. இன்னிக்கு எனக்குச் சொல்லணும்னு தோன்றிற்று சார்! ஸ்வீட் இல்லியா சார்? அப்பாதான் என்னைவிட ரொம்ப சந்தோஷப் படுவார்...ஸ்வீட் மறந்துடாதீங்க..."

"நாளைக்கு ஆபீஸிலேருந்து வருகிறபோது கட்டாயமாக..."

பாரதி தன் போர்ஷனுக்குத் தண்ணீர் எடுக்கப் போய்விட்டாள்.

முகத்துக் களைப்பை நான் வழித்துக் கொட்டுகிறேன்.

காலையில், "கன்கிராஜுலேஷன்ஸ் மிஸ்டர் பூஷணம்!" என்ற குரல் என்னைத் தட்டி எழுப்புகிறது." கடைசியா ஒரு வேலை கண்டுபிடிச்சுட்டீங்க. சபாஷ். என்னவோ ரேடியோ கம்பெனியாமே...பாரதி சொன்னாள். எங்களைவிட அவளுக்கு ரொம்ப சந்தோஷம். தினமும் ஆயிரம் தடவையாவது 'பாவம் ரூம் சார்'னு சொல்லிட்டிருப்பாள்.

‘‘எங்கேயிருக்கு? பெரிய கம்பெனியா... ஏதாவது அடாஸ்கிடாஸா? என்ன பெயர் சொன்னீங்க...’’

‘‘என்னவோ வந்து...’’நான் தடுமாறிவிட்டு ஞாபகப்படுத்திப் பார்க்கறேன்—நேற்று சாயந்தரம் என் கண்ணில் பட்ட அந்தக் கம்பெனி ராஜ எலெக்ட்ரானிக்ஸ்.

‘‘ராஜ். எலக்ட்ரானிக்ஸா! பலே’’ என்கிறார் வெங்கடகிரி. ‘‘பெரிய கம்பெனி ஆச்சே! சரியான புளியங் கொம்பாய்த்தான் பிடித்திருக்கிறீர்கள். என்ன மாதிரி வேலை?’’

சமாளிக்கிறேன். ‘‘நாளைக்கு போனுத்தான் தெரியும். உடனே கேட்டால் மரியாதையாயிருக்காதே.’’

‘‘நல்ல காரியம் பண்ணினீர்கள். வேலை தேடித் தேடி. உங்களுக்கும் வேலை தருகிறவர்களின் சைகாலஜி நன்றாகப் புரிந்து விட்டது.’’

மறுநாள்—அந்த மேற்படி எலக்ட்ரானிக்ஸ் கம்பெனி. வெங்கடகிரிகிட்டேயும் அவர் பெண்ணிடமும் சொல்லிவிட்ட பொய்யை நிஜம் செய்வதற்காக நான் அந்தக் கம்பெனிக்குள் நுழைந்து ஃபோர்மன் ஒருத்தரிடம் கெஞ்சிக் கொண்டிருக்கிறேன்—மானம், வெட்கம், மரியாதை. .இதையெல்லாம் சுத்தமாகத் தூர மூட்டை கட்டி வைத்துவிடு.

‘‘சார். .ப்ளீஸ்! கூலி வேலையானுலும் செய்கிறேன். ஆனுல் வேலைன்னு ஒண்ணு இந்தக் கம்பெனியிலே எனக்கு நீங்க கொடுத்துத்தான் ஆகணும். நீங்க கொடுக்கத் தான் போறீங்க. நான் இங்கே செய்யத்தான் போறேன்.’

‘‘ஏம்பா...கம்பெனி உன்னுதா...எங்க ப்ரொப் ரைட்டருதா?’’

‘‘சார்! எந்த வேலை வேணுமானுலும் செய்கிறேன். எவ்வளவு குறைஞ்ச சம்பளம்னுலும் சரி. .தினக் கூலின்னு கூடப் பரவாயில்லை இங்கே நான் வேலையிலே சேர்ந்துட்டதாகவே எல்லார்கிட்டேயும் சொல்லிட்டேன். அதுக்காகவாவது வேலை கொடுக்கணும். .’’ நடந்ததைச் சொல்கிறேன்.

‘‘விசித்திரமாத்தானப்பா இருக்குது..’’ அவர் சிரிக்கிறபோது அனுதாபம் அவர் கண்ணில் உதயமாவது எனக்குத் தெரிகிறது. .

‘‘ஏறக்குறைய கூலி வேலை மாதிரிதான். டெம்பரரிதான். நாளைக்குவா பார்ப்போம்.’’

"பார்க்கறதில்லே சார்..நான் இங்கேதான் வேலை செய்கிறேன், நான் உங்க கம்பெனியிலே நேற்றே சேர்ந்தாச்சு!"

"ரொம்ப முன்னடைவுள்ள பையனுயிருக்கிறே? சரி. .நாளேக்கு வா. உனக்கு வேலே. சம்பளமெல்லாம் சுமாராத்தானிருக்கும்—விதின் ஹண்ட்ரட்."

முழுகுகிறவனுக்குத் துரும்பு.

"பரவாயில்லே சார். .பரவாயில்லே...தாங்க்ஸ் சார் தாங்க்ஸ்."

நான் திரும்பறபோது...

திருவல்லிக்கேணி பீச்சிலே உட்கார்ந்து மணலே அளேஞ்சிட்டே, கடலேயைப் பார்த்து....

"சரஸ்! எனக்கு வேலே கிடைச்சிட்டுது! வேலே கிடைச்சிட்டுது!" என்று மகிழ்ச்சியால் கூவுகிறேன்.




கை சால்ட்டரிங் அயர்னே பிடிச்சு சேஸிஸிலே, கண்டென்ஸர் ஒண்ணே இணைக்கப் பார்க்கிறது.

பிளக்கிலே அயர்னேச் செருக மறந்துட்டதாலே ஈயம் மெல்ட்டாகலே.

ஆனுல் அப்புறம்தான் என் கவனக் குறைவு தெரிகிறது.

பிளக்கிலே அயர்னேச் செருகிட்டுக் காலே ஆட்டிட்டிருக்கேன் சூடு ஆகட்டும்னு. சீஃப் இன்ஜினீயர் சூரிய ராமன், ஒரு செட்டோட ஆஸிலேஷன் காயிலே எடுத்துட்டு எங்கிட்டே வர்ரார்.

"எத்தனை வைண்டிங் சுற்றினீங்க. . .ஆஸிலேஷன் சரியா வரலையே. . .அவுட் அடிக்கிறதே. . .ப்ளீஸ். . .கொஞ்சம் கேர்ஃபுல் ஆக வைண்ட் பண்ணுங்க. . .வாக்ஸ் போட்டது கூடப் போருது."

ஆஸிலேஷன் காயிலையும் நான்தான் வைண்ட் பண்ற வழக்கம். "இதோ செக்கப் பண்ணிடறேன் சார்," என்று ஓம்ஸ் மீட்டர் எந்த மேஜையிலே இருக்குன்னு பார்க்கறேன்.

ஃபோர்மன் கேசவலு தன் மேஜையில் ஒரு லௌட் ஸ்பீக்கரை அலற விட்டிட்டிருந்தார். ஏதோ சர்வீஸுக்கு வந்த ரேடியோ. ரேடியோ தயாரிக்கிற கம்பெனியென்றாலும் சர்வீஸிங்கும் அவ்வப்பொழுது செய்யறது உண்டு. பூதம் மாதிரி சத்தம் போடுகிறது. "இதைக் குப்பைத் தொட்டியில்தானப்பா போடணும்." ஃபோர்மன் சொல்கிறார். "செய்," என்று அவரைப் பார்க்காமலே சீஃப் என்ஜினியர் வேறு ஸெட்டின் ஆஸிலேஷனை செக்கப் பண்ணியவாறு சொல்கிறார்.

எப்பவும் நின்னுட்டுதான் டேபிள்ளே அவர் வேலை பண்ணுவார். சில வேளையில் மீட்டர்லே ரீடிங் பார்க்கறதுக்கு மேஜையுடைய அடிக்கட்டையிலே காலை வெச்சிட்டு எழும்பிப் பார். குள்ளம். கறுர் கண்டிப்பு. கோபமாருக்கிறபோதோ பிடிக்காதபோதோ யாராவது பேசினால் 'செய்'. . . என்பார். அப்புறமா, 'நானு சொன்னேன். பைத்தியக்காரத்தனமாயிருக்கே. நீயா முடிவு பண்ணிட்டு வந்து கேட்டால் நான் என்ன சொல்ல முடியும்?' என்று பாய்வார்.

மூணு மாசத்துக்குள்ளே நான் எனக்கு முன்பின் தெரியாத ஒரு வேலையை பிக்கப் பண்ணிட்டு ஒரு சேஸியை ஒயரிங் பண்ற அளவுக்கு முன்னேறியிருக்கிறேன் என்று அவர் என்னைப் பாராட்டலையே என்று எனக்கு எப்பவாவது தோணும்.

ஆனால் அதே சமயம் இந்த இவருடைய மண்டைக்குள்ளேயிருக்கிற விஞ்ஞானக்கூடத்திலே என்னிக்காவது ஒருநாள் நான் முழுத்தகுதி பெற்று நுழையத்தான் போறேன்—அவர் அப்போ என்னைப் பாராட்டத்தான் போறார்னு நினைச்சிப்பேன். நான் சாயந்தரத்திலே தனியார் டியூடோரியல் ஒண்ணிலே சேர்ந்து ஆபீஸ் விட்டதும் ரேடியோ இன்ஜினீயரிங் படிச்சிட்டு வர்ரதை இன்னும் அவருக்கு நான் சொல்லலே.

வைன்டிங்கின் ஸ்பேஸை, ஏயர் அறுந்துடாமல், இன்ஸுலேஷன் பாதிக்கப்படாமல் பின்ஸரால் தள்ளி விட்டு அட்ஜஸ்ட் பண்றேன். மெழுகு டிப்பிங் இன்னொரு தரம் போட்டு எடுக்கணும். ஹீட்டரில் வால் கிண்ணியைப் போட்டு, ஆபீஸ் ரூமிலேருந்து டைப்பிஸ்ட் முதுகுக்குப் பின்னாலிருக்கிற அலமாரியிலிருந்து, "சார், வாக்ஸ் எடுத்துக்கறேன், நாலு கட்டி," என்று ஒரு வார்த்தை சொல்லிட்டு எழுந்து வந்து கிண்ணியில் போடறேன்.

மஞ்சளாயிருக்கிற மெழுகு அழகாகக் கரைஞ்சு தண்ணீர் உருகிக் கொண்டிருக்கு. இன்னும் கொஞ்சம் உருகணும். நான் வெய்ட் பண்றேன்.

பஞ்ச் பண்ணின சேஸிஸ்களை ஃபோர்மன்கிட்டே காட்டறதுக்காக எடுத்துட்டு வந்த ஆறுமுகம், "சார்... வாக்ஸ் காய்ஞ்சிட்டுது போலிருக்கே," என்று போகிற போக்கில் சொல்லிட்டுப் போறான்.

"தாங்க்ஸ் ஆறுமுகம்,"னு சொல்றேன். அவனுக்கு நான் எத்தனை தாங்க்ஸ் வேண்டுமானாலும் சொல்லிட்டேயிருக்கலாம்.

தொண்டுக்கட்டை ஆறுமுகம்னு ஊரிலே சோம்பேறியாயும் திருட்டுப்பட்டம் வாங்கிக் கட்டிக்கொண்டு அங்கேயும் இங்கேயும் திரிஞ்சிட்டிருந்த ஆறுமுகம் இங்கே மெட்ராஸ் வந்ததும் தான் ஓர் ஆளாகி அதுவும் ஒரு ஆபீஸ்லே பட்டறைக்கு மேஸ்திரியா ஆகியிருக்கிறான். என்ன சுறுசுறுப்பு. என்ன கட்டுமஸ்தான பாடி!

"பூஷணம், இன்னுமா ரெடியாகலே?" சீஃப் இன்ஜினியர் என் காயிலுக்காகக் காத்திட்டிருக்கார்.

"இதோ சார்." ஹீட்டரை ஆஃப் பண்ணிட்டு மெழுகுத் திரவத்திலே டிப் பண்ணின காயில்களைப் போட்டு முங்க வைத்துவிட்டு. பின்ஸர்ஸிலே ஒவ்வொண்ணை எடுத்து சூடு ஆறுகிற மாதிரி வைக்கிறேன்.

இன்னும் ஒண்ணு இருக்கு. வால் கிண்ணத்தில் குனிஞ்சு ஸ்பின்ஸர்ஸை விட்டுத் தேடிட்டிருக்கேன், பின்னாலே போர்மன் பாட்டரி செட்டுக்கான கனமான பெரிய பாட்டரியைக் கையில் எடுத்திட்டு, "எங்கே வழி விடுங்க பூஷண்," என்று குரல் கொடுக்கிறார்.

கொஞ்சம் ஒடுக்கமான இடம். இப்படி ஒதுங்

கிக்கிறேன். அடுத்த நிமிஷம் "ஆ!" என்று தவித்துப் போகிறேன்.

நான் ஃபோர்மன்னுக்காக நகர்ந்த அவசரத்தில் வால் கிண்ணத்தில் வால் முழங்காலிலே பட்டுக் கொதித்துக் கொண்டிருந்த சூடான திரவமான மெழுகு அப்படியே என் பாதங்களில் வந்து கொட்டிவிட்டது.

இதில் என்ன டிராஜிடின்னு, மெழுகானதால் உடனே அது உறைஞ்சு பாதங்களிலே அந்தச் சூடு துடிக்கத் துடிக்கப் பிடித்துக்கொண்டுவிட்டது.

என் அலறலைக் கேட்டு நிலைமையைப் புரிஞ்சு கொண்ட சீஃப் இன்ஜினியரும், ஃபோர்மனும், மற்ற சிப்பந்திகளும் ஆறுமுகமும் ஓடிவருகிறார்கள். ப்ரொப்ரைட்டர் ரூம், கம்பெனியின் மாடியில் இருந்தது. யாரோ ஒருத்தர் பர்னலைத் தேடிட்டு மாடிக்கு ஓடினார்கள்.

"ஒண்ணுமில்லே...பரவாயில்லே..." என்று நான் எரிச்சலைப் பல்லைக் கடித்துட்டுப் பொறுத்துக்கொண்டு சொன்னாலும் எல்லாருக்கும் ஒரே பரபரப்பாகிவிட்டது. ஆனால் ஒரு தொழிற்சாலையென்றால் விபத்துக்கள் சகஜம் தான். ஆனால் எனக்குப் பயமாப் போறது. வேலையிலே சேர்ந்து சில மாசம்தான் ஆகிறது. அதற்குள் இப்படி அஜாக்கிரதையாக விபத்துக்குள்ளாகிட்டதாலே என் வேலைக்கு ஏதானும் அபாயம் வந்துடுமோ...

அதனாலே "ஒண்ணுமில்லே சார்..." என்று நானே வலியைப் பொறுத்துக்கறேன்.

தன் அறையிலிருந்து ப்ரொப்ரைட்டர் புஷ்பராஜ் இறங்கி வர்ரார். "ஓ! திஸ் யங்மேன். அதுக்குத்தான் ரொம்பச் சுறுசுறுப்புக் கூடாது!" என்று பக்கத்திலே வந்து என் காலைப் பார்த்துட்டு. "ஓ! பெரிசாத்தான் பட்டிருக்கு! எதிர்வீட்டு டக்டர்கிட்டே ஒரு ஏ.டி.எஸ். போட்டுக் கொண்டு வந்துடு எதுக்கும்..." என்றார்.

அவர் குரலில் அன்பு தொனிக்கிறது. ஆனால்.... ஆனால்...அவர் உருவத்தைப் பார்த்ததும்

ஏனோ தெரியவில்லை. ஒரு பயம், பீதி என்னை ஆக்கிரமித்துக் கொள்கிறது.




ஹாஸ்டலிலே சதாசியின் ரூம் கதவை லேசாக நான் தட்டறேன். ஒரு பலவீனமான முணுமுணுப்பு என் மனசை என்னவோ செய்யறது. அவன் ஒரு கட்டில்லே படுத்திருக்கிருன். முகத்திலே தாடி. மெலிவு. கொஞ்ச நாளாக அவன் என் ரூமுக்கு வராததால் போய்ப் பார்த்து வரக் கிளம்புகிறேன்.

"சதாசி!" நான் பதட்டத்தை அடக்கிட்டு அவன் கட்டில்லே போய் உட்கார்ந்து அவன் கையைப் பிடிச்சுக்கறேன்.

அவனுக்கு என்னைப் பார்த்ததும் கண்ணுலே பளிச்சுனு ஒரு பிரகாசம் கண நேரத்துக்குத் தோன்றி அவனுடைய பலவீனமான முகத்துக்கு ஒரு பிரகாசம் ஏற்பட்டது என்னு அப்புறம் கொஞ்ச நேரம் கழிச்சுத்தான் எனக்குத் தெரிந்தது.

"என்னப்பா சதாசி. என்னது.... உடம்பு சரியில்லையா?"

சதாசி எனக்கு மரியாதை காட்டறதுக்காக எழுந்து உட்கார்ந்துக்க முயற்சிக்கிருன்.

"பரவாயில்லே. இரு... இருப்பா நீ..."

ஹாஸ்டல்லே மாணவர்களுடைய ரூம் என்ருல் இப்படித்தான் இருக்குமா என்று அப்போதான் பார்க்கிறேன்.

அது மூணு பேர் இருக்கிற ரூம் போலிருக்கு மூணு மேஜை இருந்தது.

எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. ஒருவித கேர் லெஸ்னஸ்—ஆனுல் அதிலே ஓர் இளமை சிதறிக்கிடக்கிறது.

சுவர் மூலைகளில் கட்டப்பட்ட கொடிகளிலே ஹாங்கரில் வரிசையாகச் சட்டைகள்.

ரூம் மேட் கொசுவலைக்குள்ளிருந்து அப்போதுதான் வெளியேறியிருந்தான்—மத்தியான்னத்திலேகூட கொசுவலை

கட்டிட்டுப் படுத்துத் தூங்குவானே அவன்—வேடிக்கையா யிருக்கு.

தடித்தடியான மெடிகல் புத்தகங்கள் மேஜை களிலும் ஷெல்புகளிலும் ஹேர் ஆயில், சோப்பு, பவுடர், முகம் பார்க்கும் கண்ணுடி, ரேசர் செட் இப்படிப் பொருள்கள் புத்தக அலமாரியில் கலந்து இருந்தது.

ஒரு சீட்டிச் சத்தத்துடன் இடுப்பிலே குட்டை யான ஒரு துண்டுடன் காலிலே மரக்கட்டை செருப்புடன் பாத்ரூமிலிருந்து அப்பதான் குளிச்சிட்டு ஒரு ரூம் மேட் மாணவர் வர்ரார். எப்பவேணும்னு குளிப்பார் போலிருக்கு. என்னைப் பார்த்ததும் சீட்டி சத்தம் ஒரு விளுடி குறைஞ் சிட்டு மறுபடி விட்ட இடத்திலே ஆரம்பிச்சுக்கருர்.

சதாசி கட்டிலிலேருந்து சொல்ருன்—"முத்துக் கண்ணன்!...இவுங்க எங்க ஊர்...."

"ஓ! வணக்கங்க!"

அந்த திருநெல்வேலி மாணவர் மரியாதையோடு எனக்கு மலர்ச்சியும் அடக்கமுமாக கைகூப்பிட்டு, "க்ளாட் டு மீட் யூ," என்று கையையும் பிடித்துக் குலுக்குகிருர்.

தமிழ்லே வணக்கம்.

இங்கிலிஷ் முறையிலே கை குலுக்கல்.

வேடிக்கை.

"சார்...நீங்க சமயத்துக்கு வந்தது எங்க குல தெய்வம் மாதேஸ்வரன் மலே மாதய்யனேயே பார்க்கிற மாதிரி இருக்கு சார்..."

சதாசி கண் கலங்க என் கையைப் பிடிச்சுக்கருன்.

அவனேட ரூம்மேட் டிரெஸ் பண்ணிட்டு வெளியில் போயிட்டுருன்.

அவன் போன பிறகுதான் சதாசி அப்படி என் கையைப் பிடிச்சுட்டுக் கலங்கினது. அவன் ஏன் இவ் வளவு பலவீனமாயிருக்கான்.

காலிலே என்ன கட்டு, எங்கேஅடி பட்டுகிட் டான் என்கிறதை அவன் இன்னும் சொல்லலே. நான் அதை விசாரிக்கிறேன்.

"அடி இல்லே சார்...நரம்புச் சிலந்தி."

திடுக்கிட்டுப் போறேன். நரம்புச் சிலந்தி! எங்க மாலனூர் தன் ஊர்வாசிகளுக்குத் தருகிற ஸ்பெஷல் பரிசாச்சே?

ஊரிலுள்ள நடைக்கிணறுகளான பெரிய கிணற்றையும் சங்கிலியாழூட்டுக் கிணற்றையும் கடைத்தெருவிலேயிருக்கிற உப்புக் கிணற்றையும் நினைச்சுக்கறேன். கீழே ஐம்பது நூறு படி இறங்கித் தண்ணீர் மொண்டுட்டு வரணும். ஊர்த் தெருப் புழுதிகளையும் அசிங்கங்களையும் மிதிச்சுட்டுப் போற அதே கால்களோடுதான் எல்லாப் பெண்களும் அந்த நடைக் கிணறுகளிலே இறங்கித் தண்ணீர் மொண்டுட்டு வருவாங்க. குடிக்கிற தண்ணீரும் அதுதான்—முதலியார் கடை ஸ்பெஷல் சோடாவுக்கும் அதே தண்ணீர்தான்—

ஊரிலே நரம்புச் சிலந்தி வராதவர் அபூர்வம்.

என் கணுக்காலிலே இப்பக்கூட குறு குறுன்னு எரிச்சல் ஏற்படற மாதிரி இருக்கு. பத்து வயசிலே எனக்கு வந்த நரம்பு சிலந்தியையும், வைத்தியர் பழனியப்பன் என்னை மிரட்டிகிட்டு என் காலிலிருந்து நரம்புப் புழுவைத் தினமும் கொஞ்சம் கொஞ்சமா இழுத்து நெருப்புக் குச்சியிலே, நூல் சுற்றுகிற மாதிரி சுற்றி சுற்றி வெச்சுக் கட்டி கார மருந்தும் என்னவோ பச்சையாத் தழையையும் வெச்சுக் கட்டினதெல்லாம் ஞாபகத்துக்கு வருகிறது. நான் அதை நரம்புன்னுதான் நினைச்சிட்டிருந்தேன்—அப்புறம்தான் அது உயிரோடிருக்கிற புழு என்று தெரியவந்தது. முழ நீளத்துக்கு மார் நீளத்துக்குக்கூட அது இருப்பதுண்டு. சில சமயம் துண்டா அறுந்துடும். அதை எடுத்துக் கீழே போட்டால் துடிக்கும். காலில் ஜாக்கிரதையாக விளக்கெண்ணெய் தடவித் தடவி இழுப்பார். இல்லையானால் பாதி வந்ததும் விருட்டுனு மறுபடி உள்ளே இழுத்துக்கொண்டுவிடும். அப்படி அது இழுத்துட்டு அறுந்துவிட்டதானால், மறுபடி உள்ளேயே வளர்ந்து வேறு எந்தப் பக்கம் வேணும்னாலும் புண்ணை ஏற்படுத்திக்கொண்டு தலையைக் காட்டும். குஞ்சு வைத்து குட்டிப் புழுவா ஒரே இடத்தைச் சுற்றிப் புற்றுப் புற்றாகவும் வந்து இம்சை செய்யும்.

அனேகமாகக் காலிலே வரும். சிலருக்கு மூஞ்சியிலே, கன்னத்திலேகூட வந்திருக்கு.

பஸ் புரோக்கர் அழகண்ணனுக்கு நாக்கிலேயே வந்திருக்காம். பயங்கரம்.

சுத்தமான குடிதண்ணீர் வசதிக்கு ஒரு ஏற்பாடு

கூடப் பண்ணிக்க வக்கில்லாத மாலனூரை நினைக்கறப்போ பற்றிக்கொண்டு வர்ரது.

மூணுமைல் தள்ளியிருக்கிற சங்கமங்கலத்துக்குக் காவிரித் தண்ணீர் குழாயிலே வருது.

மாலனூர் மேடாம். ஊரிலேயிருக்கிற பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்ட்டுக்கும் மற்றக் கையாலாகாதவர்களுக்கும் காவேரி தன்னால் வந்து வாயில் விழ வேண்டும்.

அப்போகூடத் தன் வீட்டு வாசல் வரைக்கும் ஒரு குழாயைப் போட்டுட்டு ஊர் எக்கேடோ கெடட்டும் என்று விட்டுவிடுவாங்க.

பஞ்சாயத்து நிர்வாகிகள் வீடு இருக்கிற சந்துகளில் மட்டும் தெருவுக்கு கான்கிரீட். மெள்ள மெள்ள மீதி இடத்துக்கும் வரும்னு பதினைந்து வருஷமாச் சொல்லிட்டு வாசல்லே அவுங்க அவுங்க வீட்டுக் கடலைக்காயையும், முளைகட்டின துவரையையும் உலர்த்தப் போட்டுகிட்டு கட்டில்லே உட்கார்ந்துட்டு, குழிப்பணியாரம் சாப்பிட்டுட்டிருப்பார்கள். இப்போ இல்லே...யுக யுகாந்தரமா இப்படித்தான் செய்திட்டிருக்காங்க. செய்திட்டிருப்பாங்க.

"எனக்கு ரொம்ப அவமானமாயிருக்கு சார்..." என்கிறான் சதாசி.

"இப்ப என்ன மருந்து போட்டிருக்கே? ஏதோ காரம் வெச்சுக் கட்டுவாங்களே..."

"நான் ஊருக்கே போயிடலாமான்னு பார்க்கறேன் சார்...அவ்வளவு கஷ்டம்..."

"சீ! இதுக்குப் போயா? அங்கிருந்துதானே உனக்கு இது இறக்குமதி. மறுபடி அங்கே ஏன் போகிறேன் என்கிறே?"

"இதுக்கு இல்லே சார்."

"பின்னே?"

அவன் ஏதோ தயக்கப்படறான் என்கிட்டே எப்படிச் சொல்றதுன்னு.

கதவை ஒரு தரம் பார்த்துக்கறான்—ரூம் மேட்ஸ் யாராவது வந்துடப் போறாங்கன்னு.

அப்புறம் சொல்றான்:

"அப்பா பணம் அனுப்பிச்சு ரெண்டு மாசம் ஆகுது சார். அவருக்கு அங்கேவரும்படி முன்னே மாதிரி இல்லே போலிருக்கு..."

"அப்படியா?"

"இங்கே ஹாஸ்டல்லே ஒவ்வொரு நாளும் ஒருத்தனுக்கு கெஸ்டா நான் இருந்துட்டு எப்படி சார் காலம் தள்ளறது. அவமானமா இருக்கு. நோட்டீஸ் போர்டிலே ஒவ்வொரு மாசமும் என் பெயர் மட்டும் மெஸ் பில் கட்டாதவங்க பட்டியல்லே டைப் பண்ணி ஒட்டியிருக்கு. நண்பர்கள் எல்லாரும் அனுதாபமா என்கிட்டே நடந்துகிட்டாக்கூட முள்ளுமேலே இருக்காப்பலே இருக்கு."

"சதாசி! ஹாஸ்டல்லே இருக்க அவமானமாயிருந்தால் நீ என்னோடு வந்து இரு."

எப்படிச் சமாளிக்கப் போறேன்னு தெரியாட்டாலும் எப்படியாவது சமாளிச்சுடறது என்ற உறுதியோடு சதாசியை உடனே ஹாஸ்டலைக் காலி பண்ணச் சொல்லிவிட்டு ரிக்ஷாவில் என் ரூமுக்குக் கூட்டி வந்துடறேன்.

காலையிலிருந்து ஒரு காப்பியைத் தவிர ஒண்ணுமே சாப்பிடாவிட்டாலும்—ராஜ் எலக்ட்ரானிக்ஸில் என் கட்டைச் சம்பளத்துக்கு காலையில் டிபன் கட்டுபடியாகாது—எனக்கு இப்போ பசிக் களைப்பு இல்லை. ஒரு லட்சியத்துக்கு வர்ர சோதனையை நான் புரிஞ்சு கொண்டதாலே உடம்புக்கு ஒரு தெம்பும் பலமுமே வந்திருக்கு. சரஸ். இதோ சதாசி மூலமா செல்லாவுக்கு ஒரு விடிவு ஏற்படப் போகிறது.

"மெதுவா...மெதுவா..." என்று சதாசியைக் கையைப் பிடிச்சு அணைச்சவாறு இறக்கி நடத்தி ரூமுக்குக் கூட்டிப் போறேன்.

அவனை ஒரு கையில் தாங்கிட்டிருந்ததாலே சட்டையிலிருந்து சாவியை எடுத்து ரூமைத் திறக்கறதுக்கு அசௌகரியமாயிருக்கு.

வெங்கடகிரியின் பெண் பாரதி தாவணித் தலைப்பைச் சரிப்பண்ணிட்டு அப்போதான் வாசலுக்கு வந்து யார் வந்து இறங்கறது, ரூம் சார் யாரோ ஒருத்தரைக் கூட்டிட்டு வந்து இறங்கறாரே...ஓ, இவரா? முன்னேகூட அடிக்கடி வந்திருக்கிறாரே' என்ற பாவம் அவள் முகத்தில் தெரிகிறது. கையிலே சாவியிருந்தாலும் நான் ரூமைத் திறக்க முடியாத அசௌகரியமான நிலையில் இருக்கிறதை பாரதி ஒரு நொடியில் புரிந்து கொண்டு, "சார்.... நான்

திறக்கிறேன்...சாவியைக் கொடுங்க...'' என்று என் கிட்டேயிருந்து சாவியை வாங்கிட்டு ரூமைத் திறந்து விடுகிறாள். அப்புறம், ''ஏதானும் வேணுமானால் சொல்லுங்க சார்...வென்னீர் கின்னீர்?'' என்கிறாள் வாசற்படியைப் பிடிச்சிட்டு.

எனக்கு பாரதி அப்படிக் கேட்டது இதமாக இருக்கு...யாரோ ஒரு நோயாளியை நான் கூட்டிட்டு வந் திருக்கேன். நாம் நம்மாலான உதவியைச் செய்யணும்னு அவளுக்குத் தோணி அவள் கேட்டிருக்கிறாள்.

''ரொம்பத் தாங்க்ஸ். ஏதாவது வேணும்னாக் கேட்கறேன்,'' என்கிறேன்.

சதாசியைக் கீழேதான் படுக்க வைக்க முடிந்தது. ஒரு கட்டில் அல்லது பெஞ்ச் இருந்தால் தேவலே. இத்தனை குடித்தன வீடுகளில் எந்த ஒரு வீட்டு நொண்டி பெஞ்சியோ உள்ளேயிருந்தால் இடத்தை அடைச்சிட்டிருக்குன்னு பின்னாலே கண்டா முண்டான் சாமான்களோடு, மழையிலும், வெய் யிலிலும் கேட்பாரற்றுப் போடப்பட்டிருந்ததை நான் பார்த்தது ஞாபகத்துக்கு வருகிறது. வெங்கடகிரி வந்ததும், ரூமுக்கு நான் புதுசா அழைச்சிட்டு வந்திருக்கிறவனைப் பற்றிச் சொல்லி அதற்கு அனுமதி வாங்குவதோடு அந்தப் பெஞ்ச் விஷயமும் விசாரிக்கணும்.

''பூஷணம் சார்...என்னால் உங்களுக்கு ரொம் பச் சிரமம்...'' சதாசி வருத்தப்படறான். ஹாஸ்டல் ரூம் மாதிரி பெரிசா இல்லாமல் சின்ன ரூம்லே ஏதேதோ குடித் தனத்திலே நான் ஒண்டிட்டிருக்கும்போது அவனுக்கும் இடம் தந்துவிட்டுச் சிரமப்படுகிறேன்னு அவன் நினைக்கறது எனக்குப் புரிகிறது.

பாரதி மறுபடி வந்தாள். ''சார்... உங் களுக்கு போஸ்ட் சார்... போஸ்ட் மேன்கிட்டே வாங்கி வெச்சேன்...தரையெல்லாம் கழுவிட்டிருந்தது.''

ஒரு கவரைக் கொடுத்துட்டுப் போனாள். அதை வாங்கறதுக்கு முன்னேயே சரசு எழுதியிருப்பாள் என்று தோன்றியது. வாசல் வழியாத் தபால் வரவில்லை, ஜன்னல் வழியாத் தென்றல் வந்தது.

''சதாசி...நீ இரு. நான் போய் சாப்பிட்டுட்டு, உனக்கும் ஒரு காரியர்லே வாங்கிட்டு வந்திடறேன்.''

சரசுவின் லெட்டரைப் படிச்சிட்டே ஓட்டலுக்குப் போறேன். ஓட்டல் காரியரிலேயே ஒரு டிக்கெட்டுக்கான சாப்பாட்டை—அப்படித் தர்ரது வழக்கமில்லே யின்னுலும் எனக்காக ஓட்டல்காரர் சலுகை—வாங்கிட்டு வர்ரேன்.

அவனுக்குக் கீழே இலேயைப் போட்டுச் சாதம் பரிமாறுகிறேன்.

சதாசிக்கு விக்குகிறது. மேஜை மீதிருந்து தண்ணீர் எடுத்துத் தர்ரேன்.

தண்ணீர் வெதவெதன்னு பதமான சூடாயிருக்கு.

"வீட்டுக்காரர் பொண்ணு கொண்டு வந்து வெச்சிட்டுப் போனது...நான்கூட வேண்டாம்னேன்," என்கிறுன் சதாசி.

"நாம் அவர்களுக்குச் சிரமம் கொடுக்கக்கூடாதுன்னுலும்கூட அவர்களாக உதவறப்போ வாங்கிக்க வேண்டியதாகி விடுகிறது. இந்த ஹௌஸ் ஓனர் வெங்கடகிரி ரொம்ப நல்லவர்..." என்கிறேன்.




சூடான கட்லெட் மணத்தில் கமகமத்துக் கொண்டிருக்கிறது தேவி தியேட்டர் சிற்றுண்டி ஸ்டால்—படத்தைவிட கட்லெட் ஷ்யூர் ஹிட். ஸ்டாலில் நெரிசல்.

கும்பலாக வந்த கல்லூரிக் குமரிகளின் பட்டாளம் கட்லெட் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. மற்றவர்களுக்கு ஒரு துண்டு கிடைக்க வழியில்லை. தட்டுகளை வாங்கி வாங்கி பாஸ் செய்யும் பெல்பாட்ஸ்தான் ட்ரீட் கொடுக்கிறவள் போலிருக்கிறது. "உனக்கடி இது. ஆங்! சூடு! ஏய்! சுமதி! ஒன் மோர்? ஏய்! டோண்ட் ஃபஸ் மேன்!"

எல்லாரும் கட்லெட்டைக் கடித்து பல்லைச் சுடச் சுடப் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். சோடாபுட்டி திடுமென்று, "இஸ்ஸ்,.இஸ்ஸ்.. அங்கே.. அங்கே.. அங்கே கெவுனிடி!" என்கிறாள். இடிக்கப்பட்டவள் 'கெவுனி'க்கிறாள்.

கெவுனி பரவி, கிறார்கள்.

தங்களைச் சுற்றியுள்ள இடைவேளைக் கூட்டத்தையோ, யார் கவனிக்கிறார்கள் கவனிக்கவில்லை என்பதைப் பற்றியோ கொஞ்சமும் கவலைப் படாமல்— கையில் உறிஞ்சப்படாத ஒற்றை டிரிங்குடன் நட்டு நடுக் கும்பலில் போட்டிருந்த பிரம்பு சோபாவில்—தங்களுக்கென்று ஏற்பட்ட ஆளரவமற்ற அமைதியான காதல் தீவு போல அந்த இடத்தைக் கருதிக்கொண்டு ஒருத்தர் முகத்தை ஒருத்தர் பார்த்து உதடு அசைவது தெரியாமல், குரலே துளியும் கேட்காமல் அந்த இளம் ஜோடி ஆழமாகப் பேசிக் கொண்டிருந்தது.

பட்டாளத்துக்குப் பொறுக்கவில்லை.

"அய்யோ! அநியாயம்டி. அவன் ஸிப் பண்ணிட்டு அவள்கிட்டே தர்ரான்!"

"பின்னே உங்கிட்டேயாடி தருவான்?"

"ஒருத்தர் மூஞ்சியை ஒருத்தர் பார்த்திட்டே கழுத்தை இப்படி அப்படி அசக்காமல் முணுமுணுன்னு சிரிச்சு மகிழ்ந்து போகிறதுங்கடி!"

"எப்பப் பார் இப்படியேதான்...அது என்ன ஊமைப்படக் காதல்? நம்ம காதிலேயும் விழற மாதிரி ரெண்டு டயலாக் பேசமாட்டார்களோ? அன்னைக்கி பீச்சிலே சரியா பின்னடியே உட்கார்ந்திருக்கேன். என்ன வயித் தெரிச்சல்ஞ...தங்களைச் சுற்றி இடியே விழுந்தாக்கூடத் தெரியறதில்லே—ரெண்டும் சேர்ந்துட்டா..."

"தனியாப் பார்த்தா ஹாய்ங்கறது! அரட்டைக்கு வர்றது...."

"வாங்கடி போய் கொஞ்சம் கலக்கலாம்."

" ஹாய்! பிந்து!"

பிந்துவும் மனோகரும் இந்த உலகத்துக்கு வருகின்றனர்.

சுற்றிலும் கேரோ மாதிரி தோழிகள் கூட்டத்தைப் பார்த்து பிந்து அவளுக்கே உரிய அந்தக் கலகலப்பான சிரிப்பை—தோழிகளுடைய எந்தவிதப் பொறாமையையும் நொடியில் போக்கிவிடும் கபடமற்ற சிரிப்பு—சிரித்தபடி, "ஹாய் நீலு! ஹாய் மல்லி; ஹாய் வசந்த்! ஹாய் சுமித்! ஹாய் பஜாஜ்!" என்று வரவேற்கிறாள்.

தன் காதலனிடம் தோழிகளை அறிமுகம் செய்கிறாள். "மனோ! மீட் மை ஃப்ரண்ட்ஸ்!"

"ஹாய்!" அவன் அனைவரையும் கை குலுக்கினான்.

காதலர்களின் இன்பமான நேரத்தில் கரடியாக நுழைய வேண்டும் என்று திட்டமிட்டு ட்ரெஸ்பஸ் செய்தவர்களுக்கு இப்போது ஜோடியின்மேல் அனுதாபம் வந்துவிடுகிறது.

"ஸாரி! வெரி ஸாரி பிந்து...உங்களை டிஸ்டர்ப் பண்ணிட்டோம்...வுட் யு லைக் டு ஹாவ் ஸம் கட்லெட்ஸ்? வொண்டர்ஃபுலி நைஸ்..."

"வாங்கிட்டு வா...ஒண்ணு போதும்.... ரெண்டு பேரும் எடுத்துப்பாங்க..."

சூடான கட்லெட்டை ஒரு பிளேட்டில் சோடா புட்டி வாங்கிவந்து காதல் தேவதைகளுக்குக் காணிக்கை போலச் சமர்ப்பித்தாள்.

பல 'ஸீ யூ'க்கள். இடைவேளை முடிந்து படம் தொடங்கிவிட்டதால் தோழிகள் உள்ளே போகின்றனர். சுற்றக் கும்பலும் உள்ளே அடங்கிவிடுகிறது. அவர்கள் இரண்டு பேர் மட்டும் விட்ட இடத்தில் மறுபடி தொடங்கி அதே பிரம்பு சோபாவில் அமர்ந்தவாறு பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

ஸ்டால்காரர்கள் ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொள்கிறார்கள். இவர்கள் இரண்டு பேரும் படம் முடிகிறவரைகூட உள்ளே போவார்கள் என்று அவர்களுக்குத் தோன்றவில்லை.

என்னதான் பேசிக்கொள்வார்கள் அப்படி என்று கட்லெட் போட்டுக் களைத்த ஆசாமிக்கு ஆச்சரியமாயிருந்தது. ஆனால் அந்த இரண்டு பேர் எந்தவித சேட்டையோ, தரக்குறைவோ இல்லாமல் உட்கார்ந்தது உட்கார்ந்தபடி ஒருத்தர் முகத்தை ஒருத்தர் பார்த்துப் புன்னகைத்தபடி, ஏதோ மெல்லிய காற்று தற்செயலாக அவர்களுடைய

உதடுகளை அசைப்பதுபோல உதடுகளசையப் பேசிக் கொண்டு...

இந்தக் காதலர்கள் நீடூழிகாலம் நன்ருக இருக்க வேண்டும் என்று கட்லெட் மனசுக்குள் வாழ்த்துகிறது.

அவர் எவ்வளவோ அழகான யுவதிகளை — தியேட்டருக்கு வருகிற அரட்டைகளை, திமிர்களை, அல்பங்களை, அலட்டிகளை, ஆபாசங்களைப் பார்த்திருக்கிருர்.

இந்த இரண்டு பேர் பேசிட்டிருக்கிறதும், நடந்து கொள்கிற முறையும் மிகத் தூய்மையாக அவருக்குத் தெரிகிறது. இப்படிப்பட்ட காதலைப் பெற்ருேர்கள் தாராளமாக அனுமதிக்கலாம் என்றுகூட அவருக்குத் தோன்றுகிறது. ஆனுல் என்ன டிராஜடின்னு அவருக்குக் குழந்தை குட்டி கிடையாது. மனசுக்குள்ளே சிரிச்சிட்டே, இவுங்களிலே அந்தப் பொண்ணை நம்ம பொண்ணு நினைச்சுகிட்டா என்ன என்று தோன்றுகிறது. இல்லையானுல் பையனைத் தன் பையனு நினைச்சுகிட்டு அவளை மருமகளா நினைச்சுக்கலாமா.. எப்படி நினைத்தாலும் அவருக்கு மகிழ்ச்சியாகவும் நிறைவாகவுமிருக்கிறது. தன் மானசீக மகனையும் மருமகளையும் மீண்டும் பார்க்க அவர் ஆசைப்பட்டு நோக்கினுர். அதற்குள் அவர்கள் புறப்பட்டுவிட்டனர்—வெளியே.

"மிஸ்ட்டர்! கொஞ்சம் வாட்டர்...க்விக்!" கட்லெட்டின் சிந்தனை கலைகிறது. தண்ணீர் கேட்டவரைப் பார்த்தார்.

அதிகாரமும் அதே சமயம் அவசரமும் ஒருவித வேதனையும் ஒலித்த அந்தக் குரலுக்குடையவர் பெரிய மனிதத் தோற்றத்துடன் கோட் சூட் அணிந்த ஐம்பது வயதுக்காரராயிருந்தார். அடர்ந்த புருவங்கள். அவரும் அந்த ஜோடியையே—குறிப்பாக பிந்துவையே ஒரு பக்கத்திலிருந்து இவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு மூச்சுத் திணறுவது போலிருந்தது.

அவர் மெதுவே ஸ்டாலுக்கு வந்து தண்ணீர் கேட்பதற்குள் அந்த ஜோடி புறப்பட்டு வெளியே சென்றுவிட்டது. ஒரு ஸ்கூட்டர் கிளம்பும் ஓசை அவர் காதில் விழுந்தது.மறுபடியும் அவருக்குத் திணறியது. தண்ணீர் குடித்து நீங்கக்கூடிய திணறலல்ல இது என்று அவருக்குத் தெரியும்.

"பிந்து! நீ நடந்துக்கறது கொஞ்சம்கூட நல்லாயில்லே.. அப்பா உன்கிட்டே சொல்லச் சொல்லி என் பிராணனை வாங்குருர். அவர் சொல்றதானுல் சுருக்குனு

ஏதானும் சொல்லிடுவாராம். அப்புறம் உனக்கு வருத்தம் ஏற்படும்னு என்னை சொல்லச் சொல்கிறார்...''

பிந்துவுடைய அம்மா ஃபிரிஜ்ஜை ஞாயிற்றுக் கிழமையாதலால் க்ளீன் பண்ணிட்டே அவளிடம் சொல்லிட்டிருக்கிறாள்.

ஃபிரிஜ்ஜுக்குள்ளேகூட கரப்பு! எவ்வளவு மதிப்புள்ள பொருளாயிருந்தால் என்ன? சில வேண்டாத விரும்பத் தகாததுகள் எப்படியோ உள்ளே புகுந்துவிடுகின்றன..பிந்துவுக்கு ஏற்பட்டிருக்கிற காதல் மாதிரி. பழைய ஐஸ் க்யூபுகளை பிளாஸ்டிக் பக்கெட்டில் கொட்டுகிற போது லொடலொடவென்று சத்தம் கேட்கிறது. அந்த சத்தம் அடங்கினதும் பிந்து அம்மாகிட்டே போகிறாள்.

''பட்டர் ரொம்பப் பழசாயிட்டுதம்மா...ஒரு மாதிரி கொழ கொழன்னு ஆயிடலை?'' என்கிறாள்.

வெண்ணெயைத் தன் மெல்லிசு விரலில் துளி தொட்டுப் பார்க்கிறாள்.

''கையை ஏன் பிசுக்குப் பண்ணிக்கிறே?'' அம்மா சொல்கிறாள். ''நான் கேட்டேனே அதுக்கு என்ன சொல்றே? எனக்கோ உங்க அப்பாவுக்கோ சுத்தமாப் பிடிக்கலை..நீ நடந்து கொள்றது...''

''மனோ ரொம்பத் தங்கமானவர் அம்மா. ஹி இஸ் எ ஜென்டில்மன்.''

''பிந்து, அப்பாவுக்கு ஒண்ணு பிடிக்கலைன்னு அதுக்கு ஏதாவது அர்த்தம் இருக்கும். அப்படியே ஒண்ணுக்கும் அர்த்தமில்லாமல் வீம்புக்கே அவர் ஒண்ணு சொன்னாக்கூட அதற்கப்புறம் அவர் சொன்னது சரிதான் என்கிற மாதிரி காரியம் நடந்துவிடும்...என் அனுபவத்தாலே சொல்றேன்...''

''போம்மா. போர் அடிக்கிறே. ஐ லைக் ஹிம். பர்சனாலிட்டிக்காகச் சொல்றேன்னு நினைச்சுக்காதே. அவ்வளவு மூடமில்லை நான். அவர் எவ்வளவு நைஸ்னு எப்படி உனக்கு விவரிக்கிறதுன்னு எனக்குத் தெரியலை.''

''பாய் ஃபிரண்டாக இருந்து தொலையட்டும் என்கிறார் அப்பா. பிந்து...நாங்க என்ன, கட்டுப்பெட்டி பேரண்ட்ஸாட்டமா நடந்துக்கறோம். நீ அவனோடு ஸ்கூட்டரிலே சுற்றினா கேட்கிறோமா...ஹோட்டலுக்குப் போய் விட்டு ஒரு மணிக்கு வந்தால்கூட ஆட்சேபிக்கிறதில்லை. ஒரு வார்த்தை மற்றவர்களும் சொன்னதில்லை. அப்படியே

சொன்னாலும் நான் ரைட் அண்ட் லெஃப்ட்டா அவர்களுக்குக் கொடுக்கத் தவறமாட்டேன்..''

''எனக்குத் தூக்கம் வருது....பை த வே...அப்பா எங்கே இப்போ?''

''கான்ஃபரென்ஸில்லையா? டில்லி போனாரே நேற்று? நாளைக்கு வந்துடறார். அனேகமாக வருகிறபோது அந்தப் பையனையும் கூட அழைச்சிட்டு வரலாம். நான்தான் சொல்லி அனுப்பிச்சேன். ஃபைனான்ஸ் டிபார்ட்மெண்ட்டில் இருக்கிறாராம். நீ இம்ப்ரஸ் ஆவேன்னு சொல்றார். ஜஸ்ட் லைக் இன்டர்வியூமாதிரின்னு வெச்சுக்க...ப்ளீஸ்.... நாளைக்கு நீ உன்னுடைய பாய் ஃப்பிரண்டோடு வந்து மானத்தை வாங்காதே—அட்லீஸ்ட் நாளைக்கு மட்டும்.''

மறுநாள் முதல் பிந்துவைக் காணோம். டில்லியிலிருந்து வந்த அப்பா பதறினார். மனோவையும் காணோம்.

''பிந்து கடைசியாக....இவ்வளவு அசிங்கமாக நடந்து கொண்டுவிட்டாளே...''

கல்லூரித் தோழிகள் பேசிக் கொண்டனர். சே! அவள் மேலிருந்த மதிப்பே போச்சுடி!

''பின்னே? அவள் வீட்டிலே அவளைக் கம்ப்பெல் பண்ணியிருக்காங்க வேறு யாருக்கோ கழுத்தை நீட்டச் சொல்லி.''

''வாட் ஆர் யு டாக்கிங்? அதுக்குன்னு ஓடறதா? எனக்குக்கூடத்தான் பாய் ஃப்பிரண்ட்ஸ் இருக்காங்க. என்னைக் கூடத்தான் பேரண்ட்ஸ் வேறு இடத்திலே பண்ணிக்கச் சொல்றாங்க...''

''ஏய்! சந்தடி சாக்கிலே உன் இல்லாத பெருமையை விடறியா? உன்னை ஒருத்தரும் சொல்லலே.. உன் புட்டிக் கண்ணுக்கு ஏதோ க்யூவிலே மாப்பிள்ளைகள் இருக்கிற மாதிரி நீயே நினைச்சிட்டு...''

''ஏய்! பிராமிஸ்டி. எங்க மாமாவுக்கு மூணு பசங்க...தே ஆர் மேட் ஆஃப்டர் மி. எனக்குத்தான் யாரைப் பண்ணிக்கிறதுன்னு தெரியலே...ஆனால் ஷ்யூர். நான் ஓடமாட்டேன்...''

''ஆமாண்டி...ஓடறது என்கிறது மட்டம்தான். பேரண்ட்ஸோடு சண்டை போடலாம். சீப் பண்ணிக்கக் கூடாது.''




இரண்டு நாளிலே ஆபீஸ் திரும்பிடறேன். ஆனுல் மனசிலே மட்டும் ஒரு பதட்டம் இருந்திட்டே இருக்கு.

கை ஏதோ யந்திரக் கணக்கா காயிலே வைண்ட் செய்கிறது. மனசு திரும்பத் திரும்ப, 'சதாசி இவ்வளவு நேரம் என்ன விபரீதமான காரியத்திலே ஈடுபட்டிருக் கிருனே? அவனைப் பொறுப்புள்ளவன்னு நம்பறது சரியா? ஒன்றுகிடக்க ஒன்று ஏதாவது ஆகிவிட்டால் வெங்கட கிரிக்கு நானல்லவா பொறுப்பு?' சுந்தரமூர்த்தி பார்க்கிலே அவனை உட்காரவைத்து நான் சொன்ன புத்திமதிகளை நானே நினைச்சுப் பார்க்கறேன்.

அவன் தலையைக் குனிஞ்சு கேட்டுட்டானே தவிர ஒரு வார்த்தை வருத்தம் தெரிவிக்கலே.

பாரதி அவனுக்கு எழுதின கடிதங்களை அவன் எனக்குக் காட்டினப்போ என் அதிர்ச்சியை அடக்கிட்டு சொல்றேன். "இதெல்லாம் ஒரு விளையாட்டுத்தனமான பிராயத்திலே ஏற்படற மன விகாரங்கள். ஒரு ஹைஸ்கூல் பெண் காதல் கடிதம் எழுதிட்டாள் என்கிறதற்காக நீ அதை ஸீரியஸாக எடுத்துக் கொண்டு விடக்கூடாது. இது ரொம்பத் தப்பான காரியம். வெங்கடகிரிக்குத் தெரிந்தால் உன்னைப்பற்றி என்ன நினைப்பார்? உனக்கு இடம் கொடுத் திருக்கிற என்னைப்பற்றி என்ன நினைப்பார்?"

"சார்.." சதாசி உதட்டைக் கடித்துக் கொள் கிருன். அவன் கண்ணிலே நீர் முட்டுகிறது. "நான் ரெண்டு நாளா சாப்பிடக்கூட இல்லே சார்."

எனக்கு என்னவோ மாதிரி ஆகிடறது.

"ஏன்?"

"சாப்பிடறத்துக்கு உள்ளபடிக்கே பிடிக்கலே சார்.. பாரதிக்கு ரெண்டு நாளா உடம்பு சரியில்லே. ஃப்ளு. வெங்கடகிரி என்னைக்கூப்பிட்டு, டாக்டர், ஏதானும் மருந்து கொடுங்களேன் நீங்கதான்னுர்."

"ஓ, எனக்குத் தெரியாது."

"பாரதி, சாப்பிடாத போது எனக்குச் சாப்பிட மனசாகலே சார்.."

"சதாசி நீ படிக்கிறதுக்காக வந்தவன். அதை மறந்துடக் கூடாது. நம்ம ஊர் தறிக்குழியிலிருந்தும் முறுக்குக் கடையிலிருந்தும், சந்தைப் புழுதியிலிருந்தும் உன்னை உன் அப்பா விடுதலைபண்ணி டாக்டருக்குப் படிக்க இங்கு அனுப்பிச்சாரேன்னு நான் பெருமைப்பட்டேன். காதல் கீதல் என்கிறதையெல்லாம் மூட்டை கட்டித் தூரத்திலே வை. வெளியிலே சொன்னுல்கூட யாரும் சிரிப்பார்கள். அவள் இப்போதுதான் ஒன்பதாவது கிளாஸ் படிக்கிருள். நீ டாக்டருக்குப் படிக்கிற பொறுப்புள்ளவன்."

"சார். பாரதி சின்னப் பொண்ணு இல்லே சார். நான் எவ்வளவு தீவிரமா அவளே விரும்பறேனே...அவ்வளவு தீவிரமா அவள் என்னை விரும்புகிருள்."

"ஏண்டா பைத்தியம்? நீ என்ன சொல்லுகிறே? என்ன நான் செய்யணும்னு எதிர்பார்க்கிறே?"

"அப்படியில்லே சார். வருஷங்கள் கிடுகிடு என்று ஓடிடும். நான் பல்லேக் கடித்துக் கொண்டு இன்னும் இரண்டு வருஷத்திலே மெடிகல் பாஸாகிவிடுவேன். வெற்றிகரமான டாக்டராகவும் ஆகிவிடுவேன். அப்போ எனக்கு பாரதி இல்லேன்னு என் வாழ்க்கைக்கே அர்த்தமில்லேன்னு ஆகிவிடும் சார்..."

நான் சிரிக்கிறேன். அவன் அழருனே அழருனே அப்படி அழருன். நாசி விடைக்கக் குனிந்த தலேயுடன் இப்படியா பெருமூச்சு விட்டுக்கொண்டு ஒரு ஆண் பிள்ளை அழுவான்?

"சதாசி. இப்போ நீ என்ன சொல்றே? உனக்கும் பாரதிக்கும் கல்யாணத்துக்கு நான் ஏற்பாடு செய்யணும்கிறியா?"

"அந்த மாதிரி நான் சொல்லலே சார். ஆனுல் அவள் எனக்குத்தான், நான் அவளுக்குத்தான் என்கிறது நிச்சயம் ஆகிடணும் சார்...."

"அதாவது..." நான் சிரிக்கிறேன். "நிச்சய தார்த்தம் பண்ணிக்கணும் என்கிறாயா?"

"இல்லே சார். வெங்கடகிரி காதில் இப்படி எனக்கு ஒரு அபிப்பிராயம் இருக்கிறது என்கிறதை நீங்க பக்குவமாக எப்படியாவது போட்டுடணும்."

"சதாசி! உனக்குப் பைத்தியமா ஏதாவது? நான் கௌரவமாக இருக்கிறது உனக்குப் பிடிக்கலையா? நான் ஏதாவது திருமண புரோக்கரா? பாரதி சின்னக் குழந்தை. அவளை நீ ரொம்பப் பெரிய மனுஷியாக்கறே."

"அவள் லெட்டரைப் பார்த்தீங்களா சார்... 'உங்களையில்லாமல் வேறு யாரையும் நான் கல்யாணம் செய்துக்கமாட்டேன். உங்களுக்காகவே நான்....எனக்காகவே நீங்கள்'னு அவளே எழுதியிருக்கிறாள்."

"குழந்தைத்தனம்..."

"பாரதியா சார் குழந்தை? அவள் என்மேலே வைத்திருக்கிற நம்பிக்கைக்கு ஒரு உதாரணம் சொல்லட்டுமா சார்?"

"சொல்லு. உன் மனசிலேயிருக்கிறதை யெல்லாம் கொட்டிடு என்கிறதற்காகத்தானே உன்னை இங்கே கூட்டிவந்திருக்கிறேன்."

அவன் கொஞ்சம் தயங்கினான். கூச்சப்பட்டான். ஆனால் சொல்ல வேண்டிய வேளை வந்துவிட்டது என்றதால் சொல்லித் தீர்ப்பது என்று அவனும் நினைத்தான் போலிருக்கு.

"பாரதி குழந்தையில்லே சார். அவள் என்னை எந்த அளவுக்கு அந்தரங்கமாக நம்பறாள் தெரியுமா? அவள் பெரியவளானதைக்கூட அவள் அம்மாகிட்டே அவள் சொல்லலே. என்கிட்டேதான் சொன்னாள்...."

எனக்கு மயக்கம் வரும்போலிருந்தது. "சதாசி! என்னடாது இது பேத்தல்..."

"பேத்தல் இல்லே சார். அவள் என்னை எவ்வளவு அந்தரங்கமாக நம்புகிறாள், அவள் ஒண்ணும் சின்னப் பொண்ணு அல்ல, குழந்தை அல்ல என்கிறதுக்கு ஒரு உதாரணம் சொன்னேன். அவள் குழந்தையில்லேங் கறதுக்குச் சொல்றேன்."

நான் பிரமித்து உட்கார்ந்திருக்க அவன் சொல் லிட்டிருக்கிறான்.

"ஒரு மாசத்துக்கு முன்னாலேயே பாரதி பெரியவளாயிட்டாள். பெற்ற அம்மாகிட்டேயே சொல்லலே. என்கிட்டே சொன்னாள். நான்தான் அவளுக்கு அட்வைஸ் பண்ணினேன். 'பாரதி! நீ இப்படி மறைச்சது தப்பு. அம்மாகிட்டே சொல்லிடணும். அதுக்கு சில விசேஷம் அது இது எல்லாம் பண்ணுவாங்களில்லையா' என்றேன்.

"அவள் கேக்கலே. ரொம்ப அலட்சியமாக, 'ஊஹூம்...அப்புறமா நான் மெதுவே சொல்லிக்கிறேன். பெரியவளாயிட்டேன்னு அம்மாகிட்டே சொன்னால் அவ்வளவு தான்...உடனே என்னை வீட்டைவிட்டு ஒரு வினாடி வெளியே தனியே விடமாட்டாள். உங்க ரூம் பக்கம் வந்து நான் எட்டிக்கூடப் பார்க்க முடியாது,' என்றாள். சார்...அவள் என்மேலே எவ்வளவு பிரியம் வைத்திருந்தால்...தான் பெரியவள் ஆனதை அம்மாகிட்டேயே மறைத்திருக்கணும்?"

எனக்கு இப்பகூட வியர்க்கிறது. பாரதிங்கற சின்னப் பொண்ணு உள்ளுக்குள் இவ்வளவு துணிச்சலும் தைரியமும் உடையவளா? அவள் குழந்தையில்லையா?

நான் பெருமூச்சும் படபடப்புமாக சதாசியைப் பார்க்கிறேன். "சதாசி, உன் பொறுப்பும் என் பொறுப்பும் இப்போதுதான் இரட்டை மடங்கு அதிகமாகிறது. நாம் ரூமை நிச்சயம் காலி பண்ணிடறது நல்லதுன்னு தோணறது. நீங்க இரண்டு பேருமே புரியாதவர்களாக இருக்கிறீங்க. உங்களை அறியாமல் ஏதாவது தப்புக் காரியம் நடக்கிற துக்கு நான் பொறுப்பாளியாக இருக்கமாட்டேன்..."

"நம்ம ஊரைச் சேர்ந்த பையன்னு எனக்கு நீங்க காட்டின ஆதரவுக்கு நான் உங்களுக்குத் துரோகம் செய்யமாட்டேன்... நீங்க பயப்படற மாதிரி நடந்துகொள்ள மாட்டேன்...

ஆனால் இந்த ரூமிலிருந்து என்னைப் போ ்டான்னா எனக்குப் பைத்தியம் பிடிச்சாலும் பிடிச்சுடும்."

"உன் பாரதியை அதற்குள்ளே யாரும் கொத்திக் கொண்டு போய்விட மாட்டார்கள். அதற்கு நான் உத்தர வாதம் தர்றேன். நீ அந்தஸ்தாக டாக்டராக வந்தபின் வெங்கடகிரிகிட்டே சொன்னால் அவரே சந்தோஷமாக ஒப்புக் கொள்வார். ஒரு டாக்டரை மாப்பிள்ளையாக அடைய அவருக்கு கொடுத்து வெச்சிருக்கணுமில்லையா?"

சதாசி முகம் மலரத் தொடங்கியது. ஆனாலும் அதில் அவநம்பிக்கை. "அப்படியில்லே சார். வெங்கடகிரிக்கு

நிறைய உறவுகாரங்க இருக்காங்க. சட்டுனு எவனவது பேசி முடிவு பண்ணிக்கொண்டு விட்டால்?''

''இப்போதானே பாரதி ஹைஸ்கூல் படிக்கிறுள். அதற்குள் அப்படியெல்லாம் கல்யாணம்செய்துவிடமாட்டார்.''

''இல்லே சார். அதிலே இன்னெரு சங்கடம் என்னன்னு...பாரதியே எழுதியிருக்கிறுள். அவர்கள் ஜாதிலே பதினறு வயசுக்குள் கட்டாயம் பண்ணிவிடுவார்களாம். இப்போ அவளுக்குப் பதினலு...''

''சதாசி....'' நான் அவனைத் தட்டிக் கொடுக்கிறேன். நான் என் வாழ்க்கையில் ஒரு காதலன் என்றல் எப்படி இருப்பான் என்று பார்த்ததில்லே. இப்போதான் பார்க்கிறேன். ''வெங்கடகிரிகிட்டே நான் பக்குவமாகச் சொல்கிறேன்...''

''அப்போ நாம் ரூமைக் காலி பண்ண வேண்டாம் இல்லேயா?''

''இல்லே. நீ ஜாக்கிரதையாக நடந்து கொள்வாயென்கிற நம்பிக்கையிலே...''

''உங்களுக்கு ஒரு கெட்ட பெயர் வர்ர மாதிரி நான் நடந்துகொள்ள மாட்டேன் சார்....சத்தியமா....''




புரொப்ரைட்டர் எப்போது ஃப்ரீயாவார் என்பதற்காகக் காத்திட்டிருக்கிறேன். அதிருஷ்டம் எப்படியென்றல், நாம் காரியம் ஆகவேண்டுமென்று காத்திட்டிருக்கிற போது பார்த்து யாராவது அவருக்கு ஒரு விளக்கெண்ணெய் ஃபிரண்டு வந்து சேருவார். அப்படியே அவர் புறப்

பட்டுப் போனாலும், கூடவே புரொப்ரைட்டரையும் சேர்த்துக் கூட்டிட்டுப் போய்விடுவார். இல்லாவிட்டால் ஏதாவது ஒரு டெலிபோன் கால் வந்து சேரும். புறப்படுகிறாற்போல் ஆகிவிடும்.

மறுபடியும் அந்தப் பக்கம் போகிறவன் மாதிரி போய்ப் பார்க்கிறேன். நான் நினைத்ததேதான். அவரது கொடைக்கானல் ஃபிரண்ட் சமீபத்திய ரேஸ் கோர்ஸ் ரகளை பற்றிப் பேசி முடித்து எழுந்து கொண்டபோது முதலாளியும் கிளம்பிவிட்டார்.

என் தலையை வராந்தாவில் பார்க்கிறார் புரொப்ரைட்டர். "பூஷணம், ஏதாவது வேலையாக இருக்கிறாயா?" என்கிறார்.

"இல்லே சார்."

"பங்களாவில் ஒரு சின்ன எலக்ட்ரிக் வேலை இருக்கு. அட்டெண்ட் பண்ணினால் பரவாயில்லை."

"எஸ் சார்."

"அங்கேதான் போறேன் வா." எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது.

சரஸ் அதிருஷ்டசாலிதான்னு நினைச்சுக்கறேன். அவளுடைய கையில் இப்பவே பளபளக்கிற தங்க வளையலை—என் அன்பளிப்பை—மாட்டிவிட்ட மாதிரி மகிழ்ச்சி எனக்கு ஏற்படுகிறது.

வளையல் இன்னும் என் கைக்குக் கிடைக்காததால் மானசீகமாகத்தான் அதை நான் சரசுக்கு அணிவித்து அழகு பார்க்க வேண்டியிருக்கிறது.

'காதலன் என்கிறவன் வெறுமே கடிதம் எழுதிட்டிருந்தால் போதாது—தன் அன்பையும், பிரியத்தையும் காதலிக்கு உருப்படியாகக் காட்ட வேண்டுமாக்கும்...'

சதாசியுடைய தியரி. அவன் பாரதிக்கு ரகசியமாக இதை வாங்கித் தந்தேன், அதை வாங்கித் தந்தேன் என்று என்னிடம் சொல்கிற போதெல்லாம் என் மனசுக்குள் பெருமூச்சு விட்டுக் கொள்வேன். சரசுக்கு நான் ஒரு ஃபேஸ் பவுடர்கூட வாங்கித் தந்ததில்லை. என் ஆபீசுக்கு வந்தபோது கிரஷ் வாங்கித் தந்தேனே அதுதான்...

அவளுக்காக உருப்படியான ஏதாவது அன்பளிப்பு செய்யணும்னு மனசிலே உருத்திட்டே இருந்தது. எந்த அறிவிப்பும் இல்லாமல் தபாலில் அனுப்பிடறது என்பது என் திட்டம். ஆறு மாசமாக எப்படியோ எல்லாச் செலவுக்கும் மத்தியில் கொஞ்சம் கொஞ்சமாக மிச்சம் பண்ணி

ஒண்ணேகால் பவுனில் ஒரு வளையல் ஆர்டர் பண்ணி அட்வான்ஸும் தந்துவிட்டேன். இரு நூறு ரூபாய் ஷார்ட் அடிக்கிறது. முழுப் பணமும் அட்வான்ஸாகத் தராததால், தினமும் பவுன் ஏறுகிற விலைக்குத் தகுந்தபடி அவன் விலையை கூட்டிட்டே போகிறான்.

முதலாளி பங்களாவுக்குள் அங்குள்ள ஏர்கண்டிஷண்ட் அறைக்குக் கூட்டிப் போகிறார்.

சுவரில் ஓர் அழகிய இளம் விதவைப் பெண்மணியின் படம். சகோதரியா, அண்ணியா, உறவு தெரியவில்லை. ஆனால் பூஜைக்குரியவர் என்பதை, தூவியிருந்த மலர்கள் தெரிவித்தன. படத்தை அலங்கரித்த ஸீரியல் பல்பில் ஒரு பக்கம் ஏழெட்டுப் பல்ப் எரியவில்லை. பக்கத்திலே சித்திர வேலைப்பாட்டுடன் கூடிய எட்டு சந்தனப் பேழைகள் அவற்றின் சந்தன மணம் அறையின் ஒளி மணத்தோடு கமகம வென்று கமழ்ந்து கொண்டிருந்தது.

"கொஞ்சம் செக் பண்ணு."

உபகரணங்களை எடுத்துப் பரப்பிக் கொள்கிறேன். அறையின் ஏஸி குளுமை எனக்கு உற்சாகமளித்தது. வேலை முடிந்ததும் முதலாளியிடம் பக்குவமாக... அவர் எதிர்பார்த்த டெலிபோன் மணி அடிக்கிறது. ஏதாவது டிரங்க்கால் போலும். "பார்த்திட்டு இரு. இதோ வர்ரேன். வேறொண்ணையும் டிஸ்டர்ப் பண்ணாதே."

ஜாக்கிரதையாக ஸ்டூல் போட்டுக் கொண்டு ஸீரியல் ஸெட்டில் டெஸ்ட்டரை வைக்கிறேன். டெஸ்ட்டரே வேலை செய்யவில்லை என்று அப்புறம்தான் தெரிகிறது.

இதுமாதிரி சமயத்தில் நைஸாக பக்குவமாக ஒயரையே விருட்டென்று தொட்டுப் பார்க்கிறது வழக்கம்தான்.

அப்படிதான் நினைத்துத் தொடுகிறேன். அடித்ததே ஓர் அடி.

ஸ்டூலிலிருந்து பாலன்ஸ் தவறி விழுந்திருப்பேன். நல்லவேளை சமாளித்தேன்.

ஆனால் படத்துக்கு அருகில் பலகை மீது வைக்கப்பட்டிருந்த சந்தனப் பேழையில் ஒன்று என் கைபட்டுக் கீழே விழுந்துவிட்டது.

பதட்டத்துடன் அதை மீண்டும் எடுத்து வைக்க குனிந்தேன். நல்லகாலம் பெட்டிக்கு ஒன்றும் சேதாரமில்லை. திறந்த பெட்டியிலிருந்து ஏதோ சாம்பல் கொட்டி

யிருந்தது. சாம்பலுக்கு நடுவே ஒரு பெண்ணின் புகைப் படம்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. அழகிய மண மிகுந்த சந்தனப் பெட்டிக்குள் சாதாரணச் சாம்பல். அதுவே விசித்திரமாக இருந்தது. சாம்பலுடன் ஒரு இளம் பெண்ணின் புகைப்படம்.

வேலையைச் செய்து முடித்துவிட்டு நான் திரும் புவதற்கும் அவர் போனில் பேசிவிட்டு வருவதற்கும் சரி யாயிருந்தது.

"சரி பண்ணிட்டேன் சார்."

"ஓ.கே."

அவர் அறையைப் பூட்டிக் கொள்கிறார்.

நான் ஹாலுக்கு வந்ததும் தலையைச் சொறிந் தேன். "எக்ஸ்க்யூஸ்மி சார். வந்து ஒரு ஒரு எதிர்பாரா செலவு.. ஒரு முன்னூறு ரூபாய் அட்வான்ஸாகக் கொடுக்க ஆர்டர் செய்தால் மாசம் கொஞ்சமாக..."

"ஊம்?" என்றார் புரொப்ரைட்டர். "புது வழக்கமெல்லாம் என்ன? ஊம்?"

மனசு தளர்ந்து போய்விட்டேன்.

மறுநாள்.

ரூமில் பேப்பரைப் புரட்டிட்டிருக்கிறேன்.. பவுன் விலையைப் பார்க்கிறேன்— ஏதோ புல்லியன் மார் கெட்டையே நான் நடத்துகிற மாதிரி. நேற்றைக்குப் பத்து ரூபாய் கிடுகிடு உயர்வு. ரயிலாயிருந்தால் அபாய சங்கிலியைப் பிடித்து இழுக்கலாம். இந்தத் தங்கச் சங் கிலியைப் பிடித்து யாரால் நிறுத்த முடியும்.....

நேற்றைக்கு மட்டும் ரூபாய் கிடைத்திருந்தால் சரசுவுக்கு பாக் பண்ணி..எப்படி அவள் அதை வாங்கிட்டே தீரணும்கறதுக்கு பாயின்ட் பாயின்டா கடிதம் எழுதிட் டிருப்பேன்.

பேப்பரை மடித்து வைக்கும் போது அதில் வெளியாகியிருந்த ஒரு பெண்ணின் புகைப்படம் தட்டுப் படுகிறது.

சந்தனப் பேழையில் சாம்பலோடு பார்த்த அதே மாதிரியான சாயலுள்ள— அச்சாக அதே பெண் தான்.

புகைப்படத்துக்குக் கீழே எழுதியிருந்த விவரங் களைப் படித்தேன்.

"பிந்து டியர்,... நீ விரும்பியபடியே நடந்து கொள்ளத் தயாராக இருக்கிறோம். எவ்ரி திங் வில் பி செட்டில்ட் இன் யுவர் ஒன் வே. டோண்ட் வொர்ரி. உன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் உன் அப்பாவும் அம்மாவும்."

மோவாயைத் தடவிக் கொள்கிறேன்.




எப்படியோ தெரியவில்லை... சில நாட்களில் பூஷணத்தின் பொருளாதார நிலைமை மளமளவென்று முன்னேறிவிட்டது.

சரஸுக்கு எழுதி, செல்லாவை வரவழைத்தான். மனோவைத்தியத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டான்.

ஒரு நாள், ஆஸ்பத்திரியிலிருந்து ஒரு பெண்மணி அறைக்கு அவனைத் தேடிக்கொண்டு வந்தாள். அவள் ஓர் ஸோஷியல் வொர்க்கர் என்றும், மன நோய் விடுதியில் வேலை பார்ப்பவள் என்றும் தெரியவந்தது.

நாற்பது வயசிருக்கும். களையான முகம். நிறைய நகைகள் அணிந்து குடும்ப ஸ்திரீயாக இருந்தாள்.

"நீங்கள்தானே பூஷணம்? செல்லாவை நீங்கள் தானே அட்மிட் செய்தது...."

"ஆமாம்..."

"உங்களுக்கு ஒரு மகிழ்ச்சியான செய்தியுடன் வந்திருக்கிறேன். அவருக்கு ஓரளவு நன்ருகக் குணம் ஆகி விட்டது. நீங்கள் வந்து உடனே கூட்டிப் போகலாம். நாளை பத்து மணிக்கு வந்துவிடுங்கள்...."

"அப்படியா?" பூஷணம் ஆஸ்பத்திரிக்கு அவனைப் பார்க்கச் சென்றபோதுகூட ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. இப்பவும் சீக்கிரம் அவனுக்கு அப்படி எவ்வாறு குணம் ஆகியிருக்க முடியும்?

வந்த பெண்மணி விவரித்தாள். "ஆஸ்பத்திரியிலே எப்படியென்றால் இரண்டு வகைக் கேஸ்கள் உண்டு. 1. குணமாகிற கேஸ். 2. குணமாகாத கேஸ். வந்ததும் கொடுக்கிற மின்சார ஷாக்கிலோ, அல்லது ஊசி மருந்துகளிலோ குணம் தெரிந்தால் உண்டு. இல்லாத பட்சம் மாசக் கணக்கில், வருஷக் கணக்கிலிருப்பதெல்லாம் வெறுமே நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறதுக்காகத்தான். கொஞ்சம் குணமான கேஸ்கள்கூட, நீடித்து அங்கேயே இருந்தால் மறுபடி பைத்தியமாகிவிடறதும் உண்டு. ஆகவே தகுந்த பக்குவ நிலையிலே செல்லா இருக்கிறபோதே நீங்கள் கூட்டிப் போய்விடுவது நல்லது. ஒரு விஷயத்தில் மட்டும் ஜாக்கிரதையாக இருங்கள். அவருக்கு ஏதாவது வேலை கீலை கொடுத்து, வேலை பழக்கணும். டல்லாக உட்கார வைக்கக் கூடாது."

வெங்கடகிரி ஏழெட்டுத்தரம் கேட்டுவிட்டார். "உங்க செல்லாவுக்கு உடம்பு தேவலாமா? வீட்டிலே இங்கே பொம்மனாட்டிப் பசங்க புழங்கற இடம். நார்மலாகத் தானே இருக்கிறார்?"

"செல்லாவால் ஒரு தொந்தரவும் இருக்காது. எவ்வளவோ குணமடைந்துவிட்டான். யாரும் பயப்பட வேண்டியதில்லை..." என்று அவன் அவரிடம் சொன்னாலும் மனசில் திக்திக்கென்று ஒரு பயம் இருந்து கொண்டிருந்தது.

அவனுக்கு ஏதாவது வேலை கொடுக்கும்படி சொல்லியிருந்தார்கள்.

அவனை ஒரு பேப்பர் கடையில் சேர்த்தான். அவனுக்குத் தெரிந்த பழைய பத்திரிகைக் கடை. இரண்டு நாள் அவன் உற்சாகமாக வேலைக்குப் புறப்பட்டுப் போனான். மூன்றாம் நாள், "நான் போகலை," என்றான்.

"பேப்பர் கடைக்காரர் கிட்டே இந்த மாதிரி சொன்னேங்க... நூறு இருநூறு ரூபா சம்பளம் எல்லாம் எனக்குப் பத்தாதுங்க. இன்னும் நிறையப் போட்டுக்குடுங்கன்னு...அதுக்கு அவரு எதிர்த்தாற்போல் பாங்கி

யிருக்குதில்லே? அதுலே மானேஜர் உத்தியோகம் போட்டுத் தர்ரேன்னு சொல்லிட்டாருங்க..."

"அப்படியா? அவர் சும்மா சொல்லியிருப்பார் செல்லா..."

"இல்லீங்க. உத்தரவே டைப பண்ணிக் குடுத் திருக்காங்க...ஏங்க. ஆயிரம் ரூபாய் சம்பளம் பரவாயில் லீங்களா?"

சட்டைப் பையில் மடித்துப் பத்திரப் படுத்திக் கொண்டிருந்த ஒரு காகிதத்தைக் காட்டினுன்.

ஆங்கிலத்தில் நாலு வரி அதில் டைப் பண்ணி யிருந்தது.

"செல்லாவாகிய உங்களை இந்த பாங்கியின் மானேஜ ராகப் போட்டிருக்கிறேம். நீங்கள் கட்டாயம் சம்மதித்து இதை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இப்படிக்கு குணசீலன்.
நியூஸ் பேப்பர் கடை."

"என்னங்க நாளையிலிருந்து பாங்கிக்குப் போகட் டுங்களா? உங்களுக்கு சந்தோசம்தானுங்களே?"

குணசீலனைச் சாயந்தரம் பார்த்து இதைப் பற்றிக் கேட்காமலிருக்க முடியவில்லை.

"மன்னிச்சுக்குங்க சார். அவர் உபத்திரவம் பொறுக்க முடியலே. ஆயிரம் ரூபா கொடுத்தாதான் ஆச்சு என்று பிடித்துக் கொண்டுவிட்டார். அவரைக் கேலி பண்றதுக்காக நான் பண்ணலீங்க..." என்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

மறுநாளிலிருந்து பேப்பர் கடைக்கு செல்லா போவதை நிறுத்திவிட்டான். அவனுடைய மூளை கொஞ்சம் தேர்ந்து வருவதை இப்படியான கலாட்டாக்கள் மறுபடி குழப்பிவிடப்போகிறது என்று பூஷணம் கவலைப்பட்டான்.

ஒரு பிரைவேட் மனேவைத்திய ஆஸ்பத்திரியில் செல்லாவைச் சேர்த்துவிட்டு, சரஸுக்குக் கடிதம் எழுதிப் போட்டான்.

சரஸ்வதி வாட்சைப் பார்த்துக் கொண்டாள். ஆறுக்கு இன்னும் ஐந்து நிமிடம். பேஸின்பிரிட்ஜில் ரயில் நின்றுவிட்டது. நீண்ட நேரமாக அது சோம்பேறித்தனமாக நிற்க வேண்டிய அவசியம் அவளுக்குப் புரியவில்லை.

அவுட்டரிலிருந்து புறப்படத் தயாராக ரயில் கூவுகிறது.

ஜன்னலோரமிருந்த ஒரு சிறுமியின் கன்னத்தைத் தட்டிக் கொடுத்துவிட்டு, அதனிடம் சிறிது இடம் பிடித்து ஜன்னலோரமாக உட்கார்ந்து கொண்டாள்.

சென்ட்ரலில் அவளை வரவேற்கக் காத்திருக்கும் பூஷணத்தின் கண்களில் உடனே படுவதற்காக..

அவளுடைய லக்கேஜ் குறைவுதான். ஒரு பெட்டி, ஒரு தலையணை. அவள் கண்கள் ஐந்தாவது பிளாட்பாரம் முழுவதும் தேடின. பிளாட்பாரம் அனேகமாகக் காலி, பூஷணம் வரவில்லை.

போர்ட்டரை மறுத்துவிட்டு வெளியே செல்லும் வழியிலிருந்த வெள்ளை உருவத்திடம் டிக்கெட்டைத் தந்து விட்டு ரிஃப்ரெஷ்மெண்ட் ரூம் வரை வந்து சுற்றுமுற்றும் பார்த்தாள். அவன் காணப்படவில்லை. ஒருகால் இன்னொரு வழியிருந்ததே, அங்கே காத்திருப்பாரோ.

இன்னொரு வழியைப் பார்த்தாள். சில சைக்கிள் ரிக்ஷாக்கள், வரிசையான ஆட்டோக்கள்.

அவளைக் கண்டதும் ஆர்வம் காரணமாக பிளாட்பாரத்தில் கும்பலிருப்பதைப் பொருட்படுத்தாது அவன் அவளைக் கட்டிக் கொண்டுவிடக்கூடிய இன்பமான ஓர் அபாயத்தை அவள் எதிர்பார்த்து அந்தச் சமயத்தில் எப்படி அவன் அன்புப் பிடியிலிருந்து நாசூக்காக ஒதுங்க வேண்டும் என்று முன்கூட்டித் திட்டமிட்டிருந்தாள், அப்படி ஒரு நிகழ்ச்சியே நடைபெறவில்லை.

முகவரி என்ன? பதற்றத்திலே மறந்து விட்டது.

சூட்கேஸைத் திறந்தாள். பூஷணத்திடமிருந்து வந்த கடிதத்தைத் தேடினாள். பெட்டிக்குள்தான் வைத்ததாக ஞாபகம். ஊஹூம். கிடைக்கவில்லை. நம்பர் நன்றாக ஞாபகமிருந்தது. ஊரில் அவர்களுடைய வீட்டு நம்பரேதான் இங்கே அவனுடைய ரூம் நம்பரும். இருபத்து நாலு...

தெருப் பெயரை நிதானமாக யோசித்தாள். ஏதோ 'ஜி' என்று முடியும். அவளுக்கு லேசாக வியர்த்தது. கைக்குட்டையால் துடைத்துக்கொண்டாள்.

"டாக்ஸிம்மா..."

டாக்ஸிக்காரரிடம் கேட்கலாம். ஆனால் என்னவோ 'ஜி' என்று முடியும் தெரு டவுனில் எது என்று

கேட்டால் அவர் சொல்லுவாரா? சொல்லக்கூடும். அவள் கேட்டாள்.

"நீங்க ஏறிக்குங்க. ஒரு சுற்றுச் சுற்றிடறேன்.. நம்பர் தெரிந்தால் போதும்..."

டூரிஸ்டுகளுக்கு ஊர் காட்டிப் பழக்கம். கை அரிக்கிறது. டூரிஸ்ட் யாரும் வராவிட்டாலும் டவுனில் சுற்றியே முப்பது நாற்பது தேறக்கூடிய கிராக்கி வந்திருக்கிறது.

கதவைத் திறந்து, "ஏறுங்கம்மா" என்று உபசரிக்கிறார்.

அவள் தயங்கிக் கொண்டிருந்தபோது, "சரஸ்!" குரல் கேட்கிறது.

அவள் திரும்புகிறாள். மெயின் என்ட்ரன்ஸிலிருந்து கையை உயர ஆட்டியபடி பூஷணம் வந்து கொண்டிருந்தான்.

அவளுக்குக் குப்பென்று உடம்பெல்லாம் மலர்ச்சி அடைந்தது. பெட்டியை அனுயாசமாக ஒரு தூக்குத் தூக்கிக் கொண்டு அவள் அவனை நோக்கி விரைவதற்குள் அவனே வந்தாகிவிட்டது.

"ஸாரி... ஸாரி... ஸாரி..."

அவள் கைகளைப் பற்றிக் கொண்டான். "எதிர்பாராமல் ஒரு காரியம். நேரமாகிவிட்டது. ரொம்பக் காக்க வைத்துவிட்டேன்... போகலாமா?"

பூஷணமா இது! டிப்டாப்பாக இருந்தான். ஓரளவு அவள் எதிர்ப்பார்த்ததுதான். இருந்தாலும் இப்போது உள்ளம் பெருமையால் பூரித்தது.

"ஏன் உங்க கண் இவ்வளவு சிவந்திருக்கிறது?"

"நைட் டியூட்டி."

டாக்ஸிக்காரரர், "வண்டி சார்?" என்றார். கையை ஆட்டிவிட்டு, அவளிடமிருந்து பெட்டியை வாங்கிக் கொண்டு ஸ்டேஷன் எதிரே கார் பார்க்கை அவன் கடக்க அவள் பின் தொடர்கிறாள்.

"ஏறிக்கலாம்..."

அவளுக்கு இன்பமான அதிர்ச்சியாக இருக்கிறது. ஒரு பெரிய கார். டிரைவர் மரியாதையாக அவர்களுக்குத் திறந்துவிட்டார்.

சௌகரியமாக அவள் அமர்ந்து கொண்டாள். "ஆபீஸ் கார்?" அவள் அவனுக்கு மட்டும் கேட்கிற

மாதிரி கிசுகிசுக்கிறுள். அவன் தலையைப் புன்னகையுடன் ஆட்டிவிட்டு, ''லேட்டுக்கு இது ஒரு காரணம்,'' என்கிறுன்.

ஆபீசில் இவ்வளவு செல்வாக்கு உடையவனுக அவன் இருப்பது அவளுக்குப் பெருமிதம் தந்தது.

டிரைவரிடம் ஏதோ மெள்ளச் சொன்னுன். கொஞ்ச தூரம் போனதும் அவன் வண்டியை நிறுத்தி விட்டு இறங்கிக் கொள்கிறுன்.

''முன்னுலே வா சரஸ். இனிமேல் நான்தான் ஓட்டப் போகிறேன். டிரைவர் ஒரு வேலையாக இப்படியே போகிறுன்.''

சரஸ்வதி அவன் அனுயாசமாக அந்தக் காரைச் செலுத்தும் அழகை ரசிக்கிறுள். ரீடிங் ரூமில் கூச்சப்பட்டுக் கொண்டு சாதுவாக நின்றதற்கும் அலட்சியமாக இந்தப் பெரிய காரை ஓட்டுவதற்கும் எவ்வளவு வித்தியாசம். சிலுசிலுக்கும் அவனது கிராப்பைப் பின்னுக்குத் தள்ளிவிட அவள் விரல்கள் ஆசைப்படுகின்றன.




மெரீனு பீச். காலை வெய்யில். இன்னும் சூடேற வில்லை.

கண்ணகி சிலைக்கு அருகே சாலையில் சற்றுத் தள்ளிக் காரை பூஷணம் நிறுத்தினுன்.

''பீச்சில் கொஞ்சம் உட்கார்ந்திருந்துவிட்டுப் போகலாம்.''

அவள் முறுவலிக்கிருள். "காதலர்களுக்குப் பைத்தியம் பிடிப்பது உண்டுதான். ஆனல் காலையிலே இப்படி பீச்சில் உட்காருகிற அளவுக்குப் பிடிக்க வேண்டாம்."

அவன் சிரிக்கிருன். "நாம் கொஞ்சம் வித்தியாசமான காதலர்களாக இருப்போம். சாயந்தர சுண்டல் பீச்சைவிட காலை பீச்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும். காலை வெய்யிலிலே அந்த அலைகள் புரண்டு சுருள்கிற அழகுக்கு இணையே கிடையாது."

காரை லாக் செய்துவிட்டுப் படகு ஓரமாகப் போய் இருவரும் உட்கார்ந்தார்கள். மீனவர்கள் சற்றுத் தொலைவில் கட்டுமரத்திலிருந்த சரக்கைக் கரையில் பரப்பி காண்டிராக்ட்காரர்களுடன் பேரம் செய்கிற காட்சி அவள் கண்ணில் படுகிறது. ஒரு பெரிய மார்நீள மீன் பிடித்து வெகு நேரமாகியும் இன்னும் சாகவில்லை. நீண்டகால வயோதிக வியாதியஸ்தர் மாதிரி அந்தக் கிழட்டு மீன் இப்படியும் அப்படியும் புரண்டவாறே இருக்கிறது.

செல்லாவைப் பற்றி விசாரிக்கிருள். சொல்கிருன்.

"கொஞ்சம் இரு சரஸ்! இதோ வந்தேன்."

அவளைப் படகின் பின்னே உட்கார வைத்துவிட்டு எங்கோ சென்ருன்.

கொஞ்ச நேரம் கழித்து அவன் வெறும் கையுடன் வந்தான்.

"காப்பி கிடைக்குமா என்று பார்த்தால் கிடைக்கலையே. நீ டயர்டாக இருப்பாய். புறப்படலாமா?"

எழுந்திருந்தாள். அவன் பாண்ட் பாக்கெட்டிலிருந்து எதுவோ கீழே விழுந்தது. அவள் எடுத்துத் தந்தாள். நூறு ரூபாய் நோட்டுக் கற்றை. அலட்சியமாக அதை வாங்கித் துருத்திக் கொண்டான். சரஸ் முகத்தில் கவலை.

கார் ஓட்டல் சோழாவை அடைந்தது.

அவளுக்கு அவனிடம் என்னவோ கேட்க வேண்டும் போலிருந்தது. அடக்கிக் கொண்டாள்.

"நீ குளித்துவிட்டு ரெஸ்ட் எடுத்துக்கொள். வெஸ்டர்ன் முறையிலே டப் பாத் பிடிக்கலையானுல் சாதா பாத் எடுத்துக்கொள்."

அவளுடைய மனத்திலிருந்த குழப்பம், இனம் புரியாத ஓர் அச்சம், அவன் பிறவிப் பணக்காரன் போல் பேசின தோரணை இவைகளெல்லாம் அவளைக் கலக்கமடையச் செய்யாதிருந்தால் ஓட்டல் சோழாவின் அந்த அதிநாகரிகமான ஷவருடன் கூடிய பாத் டப்பை அவள் ரசித்திருப்பாள்.

சாலக்குடியில் தகரக் கதவுக்குச் செங்கல் வைத்து விட்டுக் குளிக்கிறதுக்கும் இதற்குமுள்ள வித்தியாசங்களை உணர்ந்து பெருமைப்பட்டிருப்பாள்.

சுருக்கமாகக் குளித்துவிட்டு அவள் அறைக்குள் வரும்போது அவன் டெலிபோனில் யாருடனோ பேசிக் கொண்டிருந்தான். இரண்டொரு வார்த்தைகள் மட்டும் அவள் காதில் விழுந்தன.

"அதுவா?பாரதி? ஓஹோ..ம்...லெட் மி டிரை."

அவள் கையிலிருந்த கண்ணாடி வளையலின் ஒலி அவனுக்கு அவள் வந்துவிட்டதை அறிவித்துவிட்டது. எந்த வித முடிப்பும் இல்லாமல் ரிஸீவரை அப்படியே வைத்தான். "அதற்குள் குளிச்சாயிட்டுதா? பிரயாணக் களைப்புத் தீர நன்றாகக் குளிப்பதுதானே?"

அவள் புன்னகைத்துக் கொண்டாள். "இப்படிக் கொட்டுக் கொட்டென்று பார்த்திட்டிருந்தால்...நான் டிரெஸ் சேஞ்ச் பண்ண வேண்டாம்?" தான் ஒட்டுக் கேட்டதாக அவன் நினைத்துவிடக்கூடாது என்று அவள் எண்ணினாள்.

பாரதி..டிரெஸ் செய்து கொண்டிருக்கும்போதும், அப்புறமும் அவள் மனசு அதையே அசைபோட்டுக் கொண்டிருந்தது. பாரதி..லெட் மீ ட்ரை..

டிரெஸ் செய்துகொண்டு தலையை வாரிக் கொள்ள டிரெஸ்ஸிங் மிரர் முன் உட்கார்ந்தாள். அந்த டிராயரைச் சீப்புக்காக இழுத்தபோது உள்ளே கற்றையாக ரூபாய் நோட்டுக்கள். அவளுக்கு ஏதோ ஒன்று குப்பென்று தொண்டையை அடைப்பது போலிருந்தது. அந்த டிராயரை மூடினாள். பூஷணம் எப்படித் திடீரென்று பணங்காய்ச்சி மரமானான்?

"சரஸ்!" அவள் தோள்களைப் பின்னாலிருந்து அவன் கைகள் பற்றின. அவை கொஞ்சம் மென்மை இழந்து அவளை உறுத்துவது போன்ற அதிருப்தி அவளுக்கு ஏற்பட்டது. அல்லது அது அவளுடைய பிரமையாகவும் இருக்கலாம்.

"சரஸ்! பணம் சம்பாதிக்கிறதோ, வசதியாக வாழ்க்கை நடத்துவதோ தப்பு அல்ல. பாவம் அல்ல. பணத்தைக் கண்டதும் உன் முகத்திலே இத்தனை அருவருப்பு ஏன்?"

அவள் சிரித்து மழுப்பினாள். "நான் ஒண்ணும் அருவருப்படையவில்லை."

"நான் இப்போ ஆபீசில் டெக்னிஷியன் அல்ல. பாஸ் புஷ்பராஜுக்கு பி.ஏ.. பிரைவேட் செகரட்டரி. மானேஜ் மெண்ட் கோர்ஸ் தபாலில் படித்துத் தேறினேன். ஒரு வருஷத்திலே படிக்கிற படிப்பை மூன்று மாசத்திலே படித்து அவருக்கு நான் வலது கையாக இருக்கிறேன். செல்லாவைத் தனியாக நர்ஸிங்ஹோமில் சேர்த்திருக்கிறேன். இந்த வசதிகளையும் ஆடம்பரத்தையும் சந்தேகிக்காதே. அறிவாளியாயிருக்கிறவன் ஏழையாகவே இருந்து சாகணும்னு தலையெழுத்து அல்ல. அவன் அதைப் பயன்படுத்தருப்பலே படுத்தினால் வசதியான பணக்காரனாக ஆக முடியும்."

அவள் ப்ளவுஸில் அவன் விரல்கள் விஷமம் செய்தன. "நீ எவ்வளவு அழகாயிருக்கிறே. இந்த வசதியான அறை உனக்குப் பிடிச்சிருக்கில்லையா?"

"ரொம்ப வாடகை இருக்குமே?"

அவன் முகம் இருளடைந்தது. "பணத்தைப் பற்றி ப்ளீஸ் பேசாதே..." அவளைச் சட்டென்று அணைத்துக் கொண்டான்.

"வெங்கடகிரி வீடு?"

"அது அந்தக் காலம்."

அவளும் அவனை இறுக்கமாக தன் மார்பு அவன் நெஞ்சோடு கலக்கும்படி இறுக்கி அணைத்துக்கொண்டாள். அவனைப்பற்றி அவளுக்கு ஏற்பட்டிருக்கும் பயம், குழப்பம் இவைகள் தீர, பயத்தைக் கொடுத்தவனையே துணையாக இறுக்க அணைத்துக் கொண்டாள்.

"நாம் சந்தோஷமாக இருக்கணும். சரஸ்.."

அவள் அவன் மார்பில் தலையை வைத்துவாறு கட்டிலில் படுத்திருந்தாள்.

அவள் கைகளை அவன் லேசாக வருடிக் கொண்டிருந்தான். "நாலு ஐம்பத்தெட்டு இப்போ எப்படி இருக்கிறார்? பழைய சிடுமூஞ்சியாகவேதானே?" என்றான்.

அவர் சாலக்குடி எக்ஸிகியூடிவ் ஆபீசர். சரஸ் கிட்டே பூஷணம் புத்தகம் வாங்குவதற்காக வருகிறபோதெல்லாம் அவர் பார்வை கழுகுப் பார்வை ஆகிவிடும்.

சரசு பதட்டப்படுவாள். "பூஷண்! சமத்துப் பிள்ளையா ஏதானும் புஸ்தகத்தை எடுத்துட்டு நீங்க புறப்படறது நல்லது. இ. ஓ. ஏற்கனவே என்னைப் பார்க்கறப்போவெல்லாம், எச்சரிக்கற மாதிரியாப் பார்க்கிறார்.

பயமாயிருக்கு. எங்க அப்பா இருந்தபோது பார்ப்பாரே அந்த மாதிரி கண்ணே ஒரு மாதிரியா முறைச்சு..."

"இ. ஓ.கிட்டே நான் வேணும்னு சண்டைக்குப் போகட்டுமா? ஏன் சார் அவள் அப்பா மாதிரி முறைக்கிறீங்க. ஓரிஜனலா முழிங்களேன்னு..."

சரசு பயப்படுவாள். "நேரமாச்சு போங்க."

அவளுக்கே அவனை விரட்டிட்டோமோன்னு வருத்தமாகவும் ஆயிடும்.

"ஸாரி...விரட்டறேனேன்னு கோபிச்சுக்காதீங்க. உங்களுக்கு இப்போ 'மிருதுளாவின் காதல்' தானே வேணும்? கொஞ்சம் இருங்க. ரிஜிஸ்தரைப் பார்க்கறேன். வெளியே போயிருக்கான்னு..."

அவன் சிரிச்சிட்டுச் சொல்வான். "'மிருதுளாவின் காதல்' வேண்டாம்." குரலைச் சட்டென்று குறைத்துக் கொள்வான். "எனக்கு 'சரஸ்ஸின் காதல்' தான் வேணும்." பேசிக் கொண்டிருக்கும்போதே எக்ஸிகியூடிவ் ஆபீசர் வந்து விடுவார்.

சரசு மேஜைகிட்டே அவன் நின்றுகொண்டிருக்கிறதையும் சுவரிலே மாட்டியிருக்கிற கடியாரத்திலே சின்ன முள் ஐந்துகிட்டேயும் பெரிய முள் அப்போது தான் பாதி ஒண்ணுக்கும் பன்னெண்டுக்கும் பாதி வழியிலே இருந்துட்டிருக்கிறதையும் கவனிச்சிட்டே போவார்.

சே, சே! வயசானவர்கள் ஆபீசர்களாயிருந்தால் இப்படித்தான்.

டொங்கு டொங்குன்னு அவருடைய மூச்சுப் போன மணியை மூணு தரம் அடித்து சரசுவைக் கூப்பிடுவார்.

அவன் காதில் விழணும்னு அவர் உரக்க சரஸ் கிட்டே கண்டிப்பார். "மணி ஐந்தாயிட்டுதா?"

சரஸ் கடியாரத்தைப் பார்ப்பாள். "டூ மினிட்ஸ் இருக்கு."

"ரீடிங் ரூம் அஞ்சு மணிக்குத்தானே சரியாத் துவங்கணும்—நீ ஏன் நாலு ஐம்பத்தெட்டுக்கே புஸ்தக விநியோகம் ஆரம்பிச்சுட்டே? டிஸிப்ளின் வேணும். நீ போகலாம்..."

அதிலிருந்து அந்த சிடுமூஞ்சிக்கு நாலு ஐம்பத்தெட்டுன்னு பேர். அதை ஏமாற்றுகிறதற்காக சரஸ் கடியாரத்தில் நாலே முக்காலிருந்தால்கூட ஐந்தாக வைத்து விடுவாள்.




"வேண்டாம் பூஷண். ப்ளீஸ்..." நுரை மெத்தைக்குள் அவள் அழுந்தியிருந்தாள். "ப்ளீஸ்...அது வேண்டாம். டோண்ட் கம்பெல் மீ..."

அவனுடைய உஷ்ண மூச்சு அவளைத் தின்றுவிடும் போலிருந்தது. அவனைப் புரட்டித் தள்ளிக்கொண்டு எழுந்தாள்.

"என்மேல் நம்பிக்கையில்லையா உனக்கு?"

"நம்பிக்கையில்லாமல் புறப்பட்டு வரலை. எல்லாம் முறைப்படி நடந்தால்தான் கௌரவம்னு எனக்குத் தோன்றுகிறது..."

"ஆல் ரைட்." அவன் அவளைத் தொந்தரவு பண்ணாமல் சிரித்துக் கொண்டான். "இவ்வளவு அனுமதித்ததற்கே நான் நன்றியுடனிருக்க வேண்டும்."

அவள் ஆடையைச் சரிசெய்து கொண்டாள். "கோபமா? நான் என்றைக்கு இருந்தாலும் உங்க சரஸ் தானே? ஏன்...என்மேலே உங்களுக்கு நம்பிக்கையில்லையா?"

"சரி. நீ ரொம்பக் களைப்பாக இருப்பாய். இப்போ மீல்ஸ் வந்துவிடும். சாப்பிட்டு ஒரு தூக்கம் போடு..."

அவளால் முழுசாகத் தூங்க முடியவில்லை. பகலாயிருந்தாலும் என்னவோ கனவுகள். யாரோ முணுமுணுவென்று பேசுவது போன்ற சத்தம் அவள் தூக்கத்தைக் கலைத்தது.

லேசாக விழித்துப் பார்த்தாள். பூஷணத்தின் முதுகுதான் தெரிந்தது. டெலிபோனில் தாழ்ந்த குரலில் யாரையோ சமாதானப்படுத்துவதுபோல், ஏன் கெஞ்சுவது போல் பேசிக் கொண்டிருந்தான்.

"நேரில் இதோ வர்ரேன். பேசுவோம்." அவன் போனை வைத்துவிட்டு டிரெஸ் மாற்றிக் கொள்கிறான். அவள் கண்களை மூடிய வண்ணம் படுத்திருக்கிறாள்.

வெளியே சாத்திக்கொண்டு அவன் புறப்படுகிறான். கதவு லாட்ச் ஒற்றை க்ளிக்குடன் விழுகிற ஓசையை அவள் கேட்க முடிந்தது.

சட்டென்று எழுந்து கொண்டாள். ஆனால் அவனை ஓட்டல் முகப்பு வரைதான் பின்தொடர முடிந்தது. அவசரமாக யாரைச் சமாதானப்படுத்துவதற்காக அவன் புறப்பட்டிருக்கிறான், அல்லது யாரிடம் அவ்வளவு தூரம் கெஞ்சினான். எது விஷயமாக?

அறைக்குத் திரும்பினவள் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டாலும் அமைதியாக இருக்க முடியவில்லை.

அவளுக்கு வியர்க்கிற மாதிரி இருக்கிறது. 'நான் இப்போது டெக்னீஷியன் அல்ல. பிஸினஸ் மானேஜ்மெண்ட் படித்து ப்ரொப்ரைட்டருக்குக் காரியதரிசி... என்னை நம்பு...'




"எஸ்! ராஜ் எலக்ட்ரானிக்ஸ்." ஃபோர்மன் கேசவலு தற்செயலாக ஆபீஸ் ரூம் சென்றவர் டெலிபோனை எடுத்துப் பதில் சொன்னார். சில விநாடிகள், "எஸ்...நோ. நோ... வாட்? ஹூ? அவர் கம்பெனி?" என்று தனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் சமாளித்துப் பார்த்தார்.

மறுமுனையிலிருந்து வந்த விசாரணை மேலும் தொடரவும், "இந்தாங்க சூரியராம். வந்து கொஞ்சம்

பேசுங்க... இங்கிலீஸ்லே பொரியுது ஒண்ணு. எங்கேப்பா இப்போ நாம வாண்டட் விளம்பரம் கொடுத்தோம்?''

சீப் இன்ஜினியர் சூரியராமனுக்கு அந்தப் பெண்ணின் இனிய குரல் மிகவும் பிடித்திருந்தது.

''ஸாரி மேடம்...நாங்க டெக்னீஷியன் தேவைன்னு ஒரு விளம்பரமும் தரவில்லே.''

''ஆனால் உங்கள்கிட்டே இப்போ ஒரு டெக்னீஷியன் வேகன்ஸி இருக்கு...இல்லேயா?''

''தப்புத் தகவல் கொடுத்திருக்காங்க யாரோ.''

''வேறு யாராவது பொறுப்பானவர்கள்கிட்டே நான் பேச முடியுமா?''

''நான் சீப் இன்ஜினியர். பொறுப்புள்ளவன்னு என்னை நினைச்சிட்டிருக்கிறேன்...இப்போ வேகன்ஸி இல்லே. ஸாரி...''

''ஒன் மினிட்... ஸாரி, டோண்ட் கெட் அஃபெண்டட்...வேலையில்லாத படித்த பெண் பட்டதாரியின் நிலைமையை நீங்க யோசித்துப் பார்க்கணும்னு கேட்டுக்கறேன். மிஸ்டர்...மே ஐ நோ யுவர் குட் நேம்...''

சூரியராம் பெயரைச் சொல்கிறார். ''மிஸ்டர் சூரியராம்...எனக்குக் கிடைத்த ஒரு இன்ஃபர்மேஷன்படி, ஒரு டெக்னிஷியன் இப்போ பி. ஏ. ஆக உயர்த்தப்பட்டிருக்கிறாரில்லேயா? அப்போ அந்த டெக்னிகல் போஸ்ட் காலியாக இருப்பதாக வைத்துக் கொள்ளலாமா?''

டெலிபோனை வைத்து விடுகிறார் சூரியராம்.




சினிமாத் தியேட்டர்—இரவு ஒன்பதரை மணி ஷோவாக இருந்தாலும் ஹௌஸ் ஃபுல்லாகியிருந்தது.

பிரம்மாண்டமான பானர் ஹேமமாலினியின் போதைச் சிரிப்பை வெளிச்சமிட்டுக் கொண்டிருந்தது.

காரை பார்க் செய்துவிட்டு பூஷணம் வந்தான். ஹௌஸ் ஃபுல் அவன் எதிர் பார்க்கவில்லை.

"நடு ராத்திரியில்கூட ஹௌஸ் ஃபுல்!"

சரஸ்வதிக்கு அவன் அளவுக்கு ஏமாற்றமில்லை. சொல்வதானால் படம் பார்க்கப் போகிறோம் என்ற உற்சாகம் அவளுக்குக் கொஞ்சமும் இல்லை.

"திரும்பிவிட வேண்டியதுதான்."

"ஊஹூம். இரு..." அவன் சொல்லிவிட்டு வாசலில் பிளாக் மார்க்கெட்டில் கிடைக்கிறதா என்று பார்க்கக் கிளம்பினான்.

பானரிலிருந்த 'சரஸ்' எழுத்துக்களில் கோத்திருந்த ஜிகினாப் பொட்டுக்கள் காற்றில் சிலுசிலுத்தன. சரஸ்வதி அந்த அழகை ரசிக்கிற மனநிலையில் இல்லை. அவள் அவனிடம் ஒரு கேள்வி கேட்டுவிடுவது என்று தீர்மானித்துக் கொண்டாள்.

"கொள்ளை அடிக்கிறான்கள். ஐந்து ரூபாய் டிக்கெட் பத்து ரூபாய்க்கு வாங்கி வந்துவிட்டேன். போகலாம்... ஏன்...டல் அடிக்கிறே? தலைவலி? ஏதாவது ட்ரிங்க்...ஹாட்?"

"ஒண்ணுமில்லையே..."

"சரஸ்! நாம் சரஸ் பார்க்கிறோம். த்ரில்லிங்காக இல்லை?"

இல்லை என்று பட்டென்று சொல்ல நினைத்து அடக்கிக் கொண்டாள்.

அவளுடைய மேனியிலிருந்து வந்த வாசனையும், சூட்டிக் கொண்டிருந்த மல்லிகையின் மணமும் அவனுக்குப் போதையூட்டின.

அவள் பொம்மை மாதிரி—சுவாரசியமாகப் படம் பார்ப்பது போலிருந்தாள். ஒரு இன்டர்நேஷனல் தீஃப் திரையில் கஞ்சா கடத்திக் கொண்டிருந்தான்.

பூஷணத்தின் முகத்தை அவள் ஓரக்கண்ணால் கவனித்தாள்.

சட்டென்று அவள் கேட்டாள். "நீங்க நிஜமாவே ஆபீஸில் காரியதரிசியா? என்கிட்டே எதையும் மறைக்காதீங்க..." அவனுக்கு மட்டுமே கேட்கிற மாதிரி அவள் கேட்டாள்.

"விசாரணைக் கமிஷனா?"

"உங்களுக்கு ஆட்சேபமில்லையானால் சொல்லுங்கள்."

"என்னை நம்புவாயென்று நினைத்தேன். சந்தேகமா?"

அவன் குரலில் வருத்தம். அவளுக்குத் திக்கென்றது. "பூஷண்! உங்களை சந்தேகிக்கிறதுக்காக நான் புறப்பட்டு வரலே."

அவள் இடைப் பக்கமிருந்த அவன் விரல்கள் விலகிக் கொண்டது அவளுக்கு வருத்தத்தை அளித்தது..

"ட்ரிங்க்...சாப்பிட்டால் பரவாயில்லை..." அவனைச் சமாதானப்படுத்துவதற்காக அவள் சொல்ல வேண்டியிருந்தது. அவனும் புரிந்து கொண்டான்.

"உள்ளேயெல்லாம் விற்கறதுக்கு சாலக்குடி தியேட்டர் இல்லை...இன்டர்வெல்லில் ஸ்னுக்பாரில் புகுந்து விளையாடுவோம்..."

அவள் தன் ஆபீசுக்குப் போன் பண்ணி விசாரித்திருப்பாளோ என்று அவனுக்கு நெருடிக் கொண்டிருந்தது. அவள் ஓட்டல் அறையிலிருந்து மறுபடி போன் பண்ணும லிருக்க ஏதாவது செய்தால் பரவாயில்லை என்று தோன்றியது.

"உங்க வேலையைப் பற்றிக் கேட்டதற்குக் கோபமா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே...பெண்களுக்கே உரிய அவநம்பிக்கை. இதெல்லாம்தான் காதலுக்கு விலை..."

இடைவேளையில் ஸ்னுக்பாரில் கூட்டம் நெருக்கியது. ஆப்பிள் ஜூஸ் மட்டும் போதும் என்று மற்றவற்றை மறுத்துவிட்டாள்.

அவர்கள் உறிஞ்சிக் கொண்டிருக்கும்போது, "ஹலோ சார்..." என்ற உற்சாகமான குரல் அவனை அழைத்தது. சதாசி.

சுருள் சுருளான தலைமுடி. தொங்கிய ஸ்டைலான மீசை. ட்ரிம்மான உடை. ஆனால் அவள் ஒப்பிடும் போது பூஷணத்தின் உடையே அவனுடையதைக் காட்டிலும் எடுப்பாயிருந்தது.

வந்தவன் பூஷணத்துக்கு வணக்கம் செய்து அவனைக் கை குலுக்கினான். "சார்...அந்தப் பக்கம் வர்ரதே இல்லை..."

"முடியலே சதாசி. வரணும்னு தினமும் நினைத்துக் கொள்கிறது. முடிவதில்லை. ஹௌ இஸ் வெங்கடகிரி...."

"நல்லாயிருக்கார்..."

சரஸ்வதிக்கு நண்பனை அறிமுகம் செய்தான் பூஷணம். "என் ஃபிரண்ட் சதாசி. மெடிகல் செய்திட்டிருக்கிருன். இவன் முயற்சி இல்லையானுல் செல்லாவை அட்மிட் பண்ணியிருக்க முடியாது."

சரஸ்வதி நன்றியுடன் கும்பிட்டாள்.

"ஒன் மினிட் சார்...பாரதியும் வந்திருக்கு."

அந்தப் பெயரைக் கேட்டதும் சரஸ்வதி கூர்மையடைகிருள். இவ்வளவு நேரமிருந்த சோர்வு அவளை உதறிக் கொண்டு நீங்குகிறது.

பாரதி?

அவள் பாரதியைச் சந்திக்க ஆவலாயிருந்தாள்.

சதாசி தனியாகத் திரும்பி வந்தான். டாய்லெட் போயிருக்கிருள் போலும். "அவளுக்கு கொஞ்சம் வயிறு அப்ஸெட்..."

"பரவாயில்லே. அப்புறம் பார்த்துக்கலாம். நீ நைன்தர்ட்டிக்கெல்லாம் அவளைக் கூட்டிட்டு வர்றது அட்வைஸபிள் இல்லே..." பூஷணம் கண்டிப்பது மாதிரி சொன்னதை சரஸ்வதி கவனித்தாள். "நீங்க பேசிட்டு இருங்க இதோ வர்றேன்..." அவன் கார் பார்க்கிங் பக்கமாகப் பார்த்துவிட்டு வந்தான். ஒரு நீலக்கார் புறப்பட்டது மாதிரி இருந்தது. புஷ்பராஜுடையது?

"என்ன பார்த்தீங்க?"

"யாரோ பசங்க கார்கிட்டே விஷமம் பண்ணின மாதிரி இருந்தது. சரி. நாம் உள்ளே போகலாமா?"

"கொஞ்ச நேரமானுல்கூடப் பரவாயில்லே. உங்க பிரண்டின் மிஸஸைப் பார்த்துட்டே..."

"மிஸஸ்ஸா! இன்னும் அந்தப் பாக்கியம் கிடைக்கலேம்மா...ஃபிரண்ட்ஸ் லெவல்லேதான்..." சதாசி.

பூஷணம் சரஸ்வதியிடம் சிரிக்கிருன். "அதாவது நம்ம மாதிரிதான். சரி. போவோமா?"

"நீங்க போங்க சார். படம் ஆரம்பமாயிட்டுது. பிக்சர் முடிஞ்சதும் வெயிட் பண்றேன்."

பாரதியை எங்கே பார்க்க முடியாமல் போய் விடுமோ என்று சரஸ்வதிக்குள் ஏதோ கூறியது. குறைந்தது பாரதியின் விலாசத்தைத் தெரிந்து கொண்டு விடுவது நல்லது என்று நினைத்தாள்.

மிக கேஷுவலாக, "நீங்க ஹாஸ்டலில்லே இருக்கீங்களா?" என்று விசாரித்தாள்.

"ஹாஸ்டலா? ஊஹூம். பாரதியுடைய வீட்டிலேயே சின்ன போர்ஷனில் முதல் அறையில்..."

பாரதி வீட்டு எண்ணும், தெருவும் கேட்டுத் தெரிந்து கொண்டாள்.

பாதிப் படத்துக்கு மேல் திடுமென்று மின்சாரம் கட் ஆகி தியேட்டரில் ஒரே இருள். திரும்பி வரவே இல்லை. அந்த இருட்டில் பாரதியையும் சதாசிவையும் அவர்களால் மீண்டும் சந்திக்க முடியவில்லை.




ராத்திரி சரியாக அவளால் தூங்க முடியவில்லை. பலவிதமான கனவுகள். 'பாரதி... லெட்மி ட்ரை' என்று அவள் வீரிட்டுக் கத்துகிறாள்.

"என்ன சரஸ்... கத்தினே?" என்று பூஷணம் பதறி அவளை அணைத்துக் கொள்கிறான்.

இல்லை. அப்படிக் கத்துவது மாதிரி இருந்ததும் கனவு. பூஷணம் அணைத்துக் கொண்டதும் கனவு.

அவள் கண்ணை விழித்தபோது அருகே டீப்பாயில் மேட் விரித்து அவளுக்கு பெட் காப்பி மூடி வைக்கப் பட்டிருந்தது. பூஷணம் படுக்கையில் இல்லை.

காப்பியைப் பருகிவிட்டுக் குளித்து முடித்து டிரெஸ் செய்து கொண்டாள்.

போதுமான அளவு அலங்கரித்துக்கொண்டு சரஸ்வதி ஹாண்ட்பாக்குடன் அறைக் கதவைப் பூட்டியபோது, அறைக்குள் அப்போதுதான் டெலிவரி பாக்ஸில் யாரோ போட்ட தபால் உறை அவளுக்குத் தெரிகிறது.

பூஷணத்தின் பெயருக்கு வந்திருந்தது.

புறப்பட்டவள் மறுபடி உள்ளே சென்ருள். ஹீட்டரை ஆன் செய்தாள். கொஞ்சம் வென்னீர் வைத்தாள். நீராவியில் அந்த இன்லண்ட் லெட்டரின் ஒட்டிய பகுதியை லேசாகக் காட்டினுள். பிரிந்து கொண்டது.

அதைப் படித்துவிட்டு, பசையிட்டுப் பழையபடி ஒட்டி வைத்துவிட்டாள்.

'சந்தனப் பெட்டி—அவசரம்' என்று அதிலிருந்த அந்த ஒற்றை வாக்கியம் அவளுக்கு ஒருவிதக் குழப்பத்தைத் தந்தது.

சந்தனப் பெட்டி வியாபாரம் செய்கிருரா பூஷண்? விசித்திரமான வியாபாரம். சந்தன மரம் ரொம்ப காஸ்ட்லிதான். சட்ட விரோதமாக சந்தனக் கட்டைகளை வரவழைக்கிருரோ? ஸ்டேஷனில் வரவேற்ற தினம்கூட அவனிடமிருந்து சந்தன வாசனை அடித்த மாதிரி அவள் ஞாபகத்துக்கு வந்தது.

கடிதத்தைப் பழையபடி ஒட்டும்போது அவளுக்குத் தலை வலிக்கிறுற்போலிருந்தது. வெளியில் எங்காவது போய்விடுவது கொஞ்சம் மனசை லேசுபடுத்தும் என்று தோன்றியது.

ஏன் பாரதி வீட்டுக்குப் போய் வரக்கூடாது?

பாரதியைப் பார்க்கக் கிளம்பினுள். அர்ச்சகர் வீட்டு அதிகப்பிரசங்கித்தனமான அம்மாளுக்கு அந்த ஸ்டோர்ஸிலுள்ள அத்தனை குடித்தன வீட்டுக்குள்ளும் காற்றைத் தவிர வெய்யிலைத் தவிர மூட்டைப்பூச்சி கொசு தவிர—வேறு யார் வந்தாலும் தெரிந்து கொள்ளாவிட்டால் மண்டை வெடித்துவிடும். பாட்டு வாத்தியாரும் விதிவிலக்கல்ல. ஐந்து நிமிஷத்துக்குள் மூன்று தடவை எச்சில் துப்பிவிட்டு வந்துவிட்டார்.

"அந்த அஸ்பஸ்டாஸ் ரூம்லேதான் பூஷணம் சார் இருந்தார்." பாரதி.

"தெரியும்..."

"உங்க லெட்டரையெல்லாம் நான்தான் அவருக்கு டெலிவரி செய்வேன்—பிரிச்சுப் படிக்காமல்தான்."

சரஸ்வதியின் முகத்தில் ஒரு விஞடிக்கு வெட்கம் பரவிப் பின் வேதனையாகிறது. இதே அஸ்பஸ்டாஸ் ரூமில் இன்னும் பூஷணம் இருந்திருந்தால் அவள் எவ்வளவு சந்தோஷப்படுவாள்? அவருக்கு ஏன் இப்படிப் பெரிய மனிதனாகத் திடீர் ஆசை. அதுதான் மனித சுபாவமா?

"பச்சைத் தண்ணியிலே எப்போதும் குளிப்பார்...ஆமாம். டேட் ஃபிக்ஸ் ஆயிட்டுதா?"

"எதுக்கு?"

அவள் கழுத்தை உரிமையுடன் தொட்டாள் பாரதி. தனக்கு ஒரு சகோதரி கிடைத்தமாதிரி மகிழ்ச்சி பாரதிக்கு.

"ரூம் சாருக்கு நீங்க வர்ர வேளை அதிருஷ்டம். பணம் கொழித்துட்டுது. அப்பாகூட மாசம் பத்துக்குக் குறையாமல் லாட்டிரிச் சீட்டு, இந்த ஸ்டேட், அந்த ஸ்டேட்னு வாங்கறார். பானை பிடிக்கிறவள் பாக்கியசாலியாயிருக்கணுமில்லையா? அம்மாவை மாற்ற முடியாது. அட்லீஸ்ட் பானையையாவது மாற்றலாமில்லையா?"

சரஸ்வதி புறப்பட்டாள்.

பூஷணத்துக்கு லாட்டிரிச் சீட்டில் அவ்வளவு பணம் கிடைத்தது என்றால் அதை அவன் தன்னிடம் மறைக்க வேண்டிய அவசியமில்லையே. ஆனல் உழைக்காமல் அப்படி வெறும் பணமாகச் சம்பாதிச்சதை மட்டமாக நினைத்துடுவேன்னு அவர் அதை ஒரு கௌரவப் பிரசினையாக நினைத்திருக்கிறரோ?

அப்போது சாயந்தரம் ஆறுமணியிருக்கும். ஆனல் வழக்கமாகத் தெருவில் ஆள் நடமாட்டமிருக்காது. டாக்ஸி ஸ்டாண்ட் சிறிது தூரத்திலிருந்தது. ஆறுக்குள் இவ்வளவு இருட்டிக்கொண்டு வருகிறது என்று எண்ணியவாறு வேகமாக நடந்தாள். பூஷண் ஆபீசிலிருந்து வந்து வெயிட் செய்து கொண்டிருக்கக்கூடும். அவனுக்கு அவள் பாரதியைப் பார்த்து வந்தது ஒருகால் பிடிக்காதோ? அவனிடம் சொல்லலாமா வேண்டாமா?

அவளுக்குப் பின்புறம் மிகவும் நெருங்கினற்போல் யாரோ வந்த மாதிரி காலடி ஓசை கேட்டது. சட்டென்று திரும்பி நோக்கினள். விருட்டென்று அருகிலிருந்த சந்துக்குள் யாரோ ஓடினற்போலிருந்தது.

கழுத்தை இறுக்கமாகப் போர்த்துக்கொண்டாள். இது மெட்ரூஸ்... நடந்து கொண்டிருக்கும்போதே பெண்களின் பின்னல் வந்து கழுத்துச் செயினை லபக்கென்று

பறித்துப் போகும் கேஸ்கள் அடிக்கடி நிகழும் திருட்டு ஸ்தலம்.

டாக்ஸியில் ஏறி அவள் சோழா ரூமுக்கு வந்த போது பூஷணம் வந்திருக்கவில்லை. டெலிபோன் ஒலித்தது. பூஷணம் இன்னும் தாமதமாக வருவதாக போன் செய்கிருனே? ரிஸீவரை எடுத்தாள். மன நோய் விடுதி நர்ஸிங் ஹோமிலிருந்து டாக்டர் பேசினர்.

"உங்க பேஷண்ட் செல்லாவை நீங்க டிஸ்சார்ஜ் செய்துட்டுப் போகலாம்...நன்ருகக் குணமாகி விட்டார்."

செல்லாவைப் பார்க்க வேண்டும் என்று அவளுக்கு ஆவல் எழுந்தது.

ராத்திரி பூஷணம் வந்ததும் அவனிடம் அந்த மகிழ்ச்சியான செய்தியைச் சொல்ல நினைத்துக் காத்திருந்தாள்.

பூஷணம் ராத்திரி பூரா வரவில்லை.

அவளுக்குத் தனியே இருக்கப் பயமாக இருந்தது. மனத்தில் திரும்பத் திரும்ப 'பூஷணம் ஏன் வரவில்லை?' என்ற கேள்வி அவளைக் குழப்பிக் கொண்டிருந்தது.

எதற்காக மெட்ராஸுக்கு வந்தோம் என்று அவள் வருந்தினள். எதையாவது படிக்கலாம் என்று ஒரு புத்தகத்தை எடுத்தாள்.

இரண்டு பக்கம் படித்திருப்பாள். தன் குழப்பத்தை மறந்து கண்கள் தூக்கக் களைப்பில் சொக்கும் நேரம்.

டெலிபோன் கிணுகிணுத்தது. பூஷணமாக இருக்க வேண்டும் என்று ஊகித்தாலும் அந்த யத்திரத்தைத் தொட அவளுக்கு அச்சமாக இருந்தது.

எடுக்காமலே விட்டுவிட நினைத்தாள். ரிஸீவரைத் தூக்கிக் கீழே வைத்துவிட்டால்? ஒருகால் பூஷணமாக இருந்தால்?

அவளுக்கு மார்பு படபடத்தது. மனசைத் திடப் படுத்திக் கொண்டாள்.

"பூஷணம் இல்லே?" யாரோ அதிகாரம் செய்தார்கள்.

"ஊஹூம்..."

"நிஜமாவே இல்லையா?"

சூடாகப் பதில் கொடுக்கிற தைரியத்தில் அவள் இல்லை. "வரலே."

"யார் நீ?"

"நான்...நான்..." அவள் சொல்ல வேண்டா மென்று தயங்கினுள்.

"வந்ததும் சோப் பாக்டரிக்கு போன் பண்ணச் சொல்லு. சந்தனப் பெட்டி வேண்டும் என்று சொல்லு."

டிஸ்கனெக்டாகியது.

ஒரு கையின் நடுக்கத்தை இன்னொரு கையைக் கொண்டு பிடித்துவிட்டுக் கொண்டாள். டாய்லெட் ரூம் போய் வந்தாள். அவள் பார்வை மிரட்சியுடன் அலமாரியிலிருந்த சந்தனப் பெட்டியைக் கவனித்தது. கமகமவென்று சந்தன வாசனை. அந்தப் பெட்டியை எடுத்தாள். உள்ளே காலி யாக இருந்தது...அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். அதை விற்ற கம்பெனியின் முத்திரை சிறிய வட்ட வடிவுக் காகிதத்தில் ஒரு புறம் ஒட்டப்பட்டிருந்தது.

காஷ்மீர் எம்போரியத்தின் டல்லடித்த நேரம். கலைப்பொருள்களின் மேல் வாடிக்கையாளர் பார்வை விழாத தால் ஏற்பட்ட தூசியைத் துடைத்துக் கொண்டிருந்த கிழவர் சுத்தம் செய்தவதை நிறுத்தினுர்.

"வாங்கம்மா...எஸ் மேடம்."

வந்தவளின் கையிலிருந்த சந்தனப்பெட்டி கடைக் காரர்களுக்கு அடையாளம் தெரிகிறது.

"ப்ரொப்ரைட்டரைப் பார்க்கணும்."

"நான் தான் அது..."

"ஓ..."

"உங்களுக்கு என்ன வேணும்?"

அவள் அந்தச் சந்தனப் பேழையை மேஜைமீது வைத்தாள். "இது சரியான சந்தன மரம் இல்லை... வாபஸ் பண்ணிட்டு வரச் சொன்னுங்க..."

"ஹூ ஸெட் ஸோ?"

"வாங்கிட்டுப் போனவர்கள்..."

"மிஸ்டர் புஷ்பராஜ்?"

"எஸ்."

"அவருக்கு நாங்க இதைபோல எட்டுப் பெட்டி சப்ளை பண்ணியிருக்கோம். தப்பு சொன்னதில்லை... இது அதே ரகம்...நோ மிஸ்டேக்...ப்யூர் ஸேண்டல்..."

புஷ்பராஜ்...சந்தனப் பெட்டிக்குள் எதையாவது வைத்துக் கடத்தல் வியாபாரம் செய்கிறவரா இந்த புஷ்ப ராஜ். அவருக்கு பூஷண் கையாளா?

பூஷண் வந்தான் நகைகளோடு.

கண்ணீரைக் கஷ்டப்பட்டு சரஸ்வதி அடக்கிக் கொண்டாள். "எனக்கு நகைகளிலே அவ்வளவு நாட்டமில்லே."

அவன் சிரிக்கிறான். "பழக்கமில்லே என்கிறது பொருத்தம். கவரிங்கிலேயே வாழ்க்கையைத் தள்ளிவிட்ட நம் மாதிரி நடுத்தரக் குடும்பத்தினர்களுக்கு இதையெல்லாம் 'நாட்டமில்லே'ன்னு சொல்லிக் கிறதுதான் கௌரவம். சரஸ்... முழுசாக இவ்வளவையும் போட்டு உன்னே அலங்கரித்துப் பார்க்கணும்னு ஆசையாக இருக்கிறது... ராத்திரி வரவில்லேயே என்று கோபமா?"

அவன் ஒவ்வொன்றாகப் போட்டுவிடும்போது அவளுக்குத் திகிலாயிருக்கிறது.

"என்னத்துக்காக இப்படி வாரி வாரி விடுகிறீர்கள்?"

"அஸ்பஸ்டாஸ் ஷீட்டுக்கடியில் வெந்ததுக்கு ஒரு விடிவு வேண்டாமா? சரஸ். சந்தோஷமாக இருப்பது மனிதனுடைய பிறப்புரிமை. கஷ்டம்தான் படணும் என்று நம் தலேயெழுத்தை நாமே சில சமயம் எழுதிக் கொள்கிறோம். ஒரே ஒரு சிங்கிள் டீ குடிக்க நான் நடுத்தெருவிலே நின்றிருக்கிறேன். இன்றைக்கு சவுகரியமாக இருக்கிறேன்."

அவள் கையைப் பற்றி அவன் உதடுகள் முத்தமிட்டன. "சரஸ்! உன் தம்பி குணமான பிறகுதான் நீ என்னேக் கல்யாணம் பண்ணிப்பாய் என்று சொன்னே. நான் என் வேலேயை ராஜினமா செய்துட்டு இங்கே வந்து லாட்டிரி அடிச்சது உனக்காக சரஸ்! நீ என்னேக் குற்றவாளியைப் போலீஸ் பார்க்கிற மாதிரி பார்க்காதே... ரீடிங் ரூமில் பார்ப்பாயே... அப்படிப் பார்."

பின்கட்டுக் குழாயடியில் பாரதி சுறுசுறுப்பாக முகத்தைச் சேர்ப்புப் போட்டுக் கழுவிக் கொண்டிருந்தாள்.

திருகு கொஞ்சம் லூஸாக இருந்ததால் எப்படி அழுத்தி மூடினாலும் ஏதாவது ஒரு பக்கம் குழாய் பீய்ச்சி அடித்துக் கொண்டிருந்தது. அதை இறுக்கிக் கட்டுவதற்குப் பயன்பட்ட அழுக்குக் கிழிசலேத் தேடி குழாயின் வாயை ஒழுங்காக அடைக்க அவளுக்குப் பொறுமையில்லே.

"அட அட! ஓசின்னு என்ன பரபரப்பு...என்ன

சுறுசுறுப்பு!" ஷேவ் செய்துகொண்ட கிண்ணியுடன் முகம் கழுவ வந்த சதாசி கிண்டல் செய்தான்.

"அவ்விடம் மட்டும்? மிஸ்டர், சீக்கிரம் முகத்தைக் கழுவிட்டு குழாயைக் கந்தல் துணியால் தேடி இறக்கி ஒழுங்காக் கட்டிவிட்டு வந்து சேருங்க...கடைசியிலே வருகிறவங்கதான் கந்தல் கட்டணும்! பூஷணம்சார் நமக்கு வெயிட் பண்ணிட்டிருக்கிறுர் என்கிறதையும் கொஞ்சம் கவனம் வைத்துக்கொண்டு சீக்கிரம் வந்து சேருங்கள்..."

அவளுக்கு ஒரே உற்சாகம் பெருமை.

ஐம்பது ரூபாய் டிராமா டிக்கெட்—முன் வரிசை—அதுவும் சதாசியுடன்.

பூஷணத்துக்குத்தான் அவள் மீதும் சதாசி மீதும் எவ்வளவு அன்பு. டிக்கெட் மட்டுமல்ல. காரையும் கொண்டு வந்திருக்கிறுர் கூட்டிப்போக.

தனக்காக வீட்டு வாசலில் ஒரு கார் காத்திருக்கிறது என்பது அவளுக்கு ஓர் அலாதியான பூரிப்பைத் தந்தது.

"பூஷணம் சார்! நான் ரெடி. உங்க ஃபிரண்ட்தான் லேட்..."

"ஆண் பிள்ளையாயிருக்கிறதால் அது ஒரு சங்கடம். தினமும் ஷேவ் செய்துக்கொள்ள வேண்டியிருக்கிறது." சிரித்தான் பூஷணம்.

"அய்! அப்படிப் பார்த்தால் எங்களுக்கு எவ்வளவு நீளத் தலைப் பின்னல்...நாங்ககூடத்தான் தினமும் பின்னிக்கிறேம்...உங்க ஃபிரண்டை விட்டுக் கொடுக்காமல் பேசறீங்க."

சதாசி அதற்குள் முகத்தைத் துடைத்துக்கொண்டு உள்ளே வந்தான். "ஸாரி...பூஷண் சார்! இதோ இன்னும் இரண்டு வினுடியில் நான் ரெடி...நீங்க என்ன அதற்குள்ளே சாப்பிட்டு முடித்துவிட்டீர்கள்?"

"நேரமாச்சே!"

பாரதி சொன்னுள்: "இந்த டிராமாவிலே முதல் ஸீன் பிரமாதமாம். மிஸ்ஸே பண்ணக்கூடாதாம்."

"ஆமாம். ரொம்ப நல்ல ஸீன் என்றுதான் சொல்லிக் கொண்டார்கள்..." அப்போதுதான் பாரதியைக் கவனித்தான் நன்ருக.

"நீ என்ன இவ்வளவு ஸிம்பிளான புடவையைக் கட்டிட்டு? வேறு இல்லே?"

"இருக்கு. பீரோவைத் திறந்து எடுக்கணும்

சார்...'' சதாசி விமரிசித்தான். ''எப்படித்தான் இந்த சோம்பேறியைக் கட்டிட்டு எதிர்காலத்தில் அவதிப்படப் போகிறேனே?''

''சரி. சரி. கிளம்புங்க. பாரதி...நீ வேணு மானுல் அந்த இந்த ஸாரியைக் கட்டிக்கிறியா?'' பாரதியின் அம்மா.

''போம்மா...கல்யாணத்துக்கா போகிறேம்? நேரமாயிட்டுது.''

''இருந்தால் கட்டிட்டு வாயேன்...காரிலேதான் போகிறேம். நேரமிருக்கு.'' பூஷண் கூறினுன்.

பாரதி ரோஷம் வந்தவள்போல் பிரமாதமாக டிரெஸ் செய்துகொண்டு வந்தாள். பூஷணத்துக்குத் திருப்தி யாயிருந்தது.

மூன்றில் எதற்குத்தான் நன்றியைத் தெரிவிப்பது என்று சரஸ்வதிக்குத் தெரியவில்லே.

மருத்துவருக்கா,
காதலுக்கா,
பணத்துக்கா?

டாக்டர் ஜார்ஜ் செல்லாவைத் தட்டிக் கொடுத் துப் பேசினுர். ''மிஸ்டர் செல்லா எங்களேயெல்லாம் இவ்வளவு சீக்கிரமா விட்டுட்டுப் புறப்படுவீங்க என்று நான் நினேக்கவேயில்லே...வெகு நன்ருகக் குணமாகிவிட்டார். என்ன மிஸ்டர் செல்லா...அக்காகிட்டே சொல்லுங்க... பேசுங்க...இப்படித் தலேயைக் குனிந்துகிடா எப்படி?''

செல்லாவிடமிருந்த அந்தப் பழைய 'ங்க' 'ங்க' போட்டு வளவளவென்று பேசுகிற தன்மை போய்விட்டி ருந்ததை சரஸ்வதி கவனித்தாள். ஆனுல் முற்றிலும் குணம் ஆனதாகச் சொல்வதற்கில்லே.

''ஏன் தலேயை இப்படிச் சாய்த்துக்கருன்?''

''நத்திங் டு வொர்ர்ரி. மேனரிஸம்... தானு கப் போய்விடும்...இன்னும் ஒரு ஷாக் கொடுத்தால் கம்ப் ளீட் க்யூர் ஆகக்கூடும்...ஆனுல் இப்போ இவருக்கு இருக் கிற நர்வஸ் வீக்னஸில் அதைத் தருவது அட்வைஸிபிளா என்பது தெரியவில்லே...மெடிஸன் மட்டும் நிறுத்தவே நிறுத்தாதீர்கள்...''

டாக்டருக்கு நன்றி சொல்லிவிட்டு செல்லாவை அழைத்துக்கொண்டு புறப்பட்டாள்.

டாக்ஸிக்காரர் பெட்ரேல் போட்டுக்கொள்ள ஒரு

பங்க்கில் நிறுத்தினர். "அக்கா! அக்கா! அதோ! பூஷண் சார்!"

அவர்கள் டாக்ஸிக்குச் சற்று முன்புறம் ஆயில் பார்த்துக் கொண்டு நின்ற காரில் பூஷணம், சதாசி, பாரதி ஆகியோர் இருந்தனர்.

அவர்களும் இவர்களைப் பார்த்துவிட்டனர்.

சரஸ்வதிக்கு அடுத்த நிமிடம்கூடத் தாங்க முடியாது போலிருந்தது. அந்த பெட்ரோல் பங்கிலேயே பூஷணுக்குத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள். "பூஷண்! செல்லா எவ்வளவு நல்லாயிருக்கிறான் பார்த்தீர்களா?"

அவர்கள் ஒரு நாடகத்துக்குப் போவதாக பூஷணம் சொன்னதும், சரஸ்வதி, "நானும் வருகிறேனே," என்றாள் உற்சாகமாக. "செல்லா குணமானதற்காக எல்லாருக்கும் இன்று ட்ரீட்..."

பூஷணத்துக்கு முகம் கடுகடுப்பாகியது. ஆனால் சரஸ்வதிக்கிருந்த உற்சாகத்தில் அதைக் கவனிக்கவில்லை.

"மூன்று டிக்கெட்தான் இருக்கிறது. எப்படி நாம் ஐந்து பேர் போகிறது?"

"அங்கே போய் வாங்கிக் கொண்டால் போகிறது... செல்லாவும் டிராமா பார்த்ததில்லை." திருவொற்றியூர் சாலையில் சென்றது கார்.

"உங்க முதலாளியுடைய சோப் பாக்டரிகூட இங்கேதான் எங்கோ இருக்கிறதில்லை?" பாரதி கேட்டாள்.

"நாம இப்போ ஃபாக்டரிக்குத்தான் போகிறோம். அங்கு போய் டிக்கெட்ஸ் கலெக்ட் செய்துக் கொண்டு."

சோப்புப் பாக்டரி பாரதிக்கு வெகு ஏமாற்றம். "ஒண்ணுமே காணோமே."

சிறிய ஹாலில் அவர்களை உட்கார வைத்துவிட்டு உள்ளே சென்ற பூஷணம் வரச் சிறிது நேரமாயிற்று.

"பாவமாயிருக்கிறது உன்னைப் பார்த்தால். முதல் ஸீனை மிஸ்ஸே பண்ணக்கூடாதாமே? ஊம்?" சதாசி பாரதியைக் கிண்டல் செய்தான்.

காப்பி கொண்டுவந்தான். சரஸ்வதி அவனிடமிருந்து எதிர்கொண்டு சென்று அவற்றை வாங்கி எல்லாருக்கும் தந்தாள்.

பாரதிக்கு ஆவல் தாங்கவில்லை. "பூஷண் சார். மணி ஏழேகால். டிராமா ஆரம்பித்திருக்காது?"

பூஷணம் எழுந்து கதவைத் தாளிட்டு வந்தான்.

"ஸ்மோக் பண்றியா சதாசி..."

"நோ. தாங்க்ஸ் சார்.."

திடுமென அறையில் ஓர் அசாதாரண அமைதி.

பூஷணம் சட்டென்று சதாசியின் கைகளைப் பற்றிக்கொண்டான். "சதாசி! நீ எனக்கு ஒரு உபகாரம் செய்யணும்..."

"அதை என் பாக்கியமாக நினைக்கிறேன்..."

"அப்புறம் மாட்டேனென்று சொல்லக்கூடாது. பாரதி. இப்படி இந்த நாற்காலிக்கு வா. அதிலே இல்லை. இதிலே...சதாசிக்குப் பக்கத்திலே..."

"சதாசி! உனக்கு ஞாபகமிருக்கிறதோ இல்லையோ....நீ நரம்பு சிலந்தியில் துடிச்சிட்டிருந்தே..."

"நீங்கதான் சமயத்துக்கு வந்து உதவினீங்க.... நான் மறக்கமாட்டேன்..."

"இப்போ உன்னை ஒண்ணு கேட்கப் போறேன். சரஸ், நீ செல்லாவைக் கூட்டிட்டு அந்த ரூமுக்குப் போ."

"ஏன்?"

"சொன்னதைச் செய்." அவன் குரலிலிருந்த கடுகடுப்பு எல்லோருக்கும் அதிர்ச்சி அளித்தது.

"சதாசி! பாரதியை நீ சற்றுக் கொஞ்ச வேண்டும்..."

சதாசி துணுக்குற்றான்...."என்ன! என்ன சொல்கிறீங்க...பூஷண் சார்?"

"பாரதியைக் கொஞ்சச் சொல்கிறேன்...க்விக்!"

"பூஷண்...என்ன பேத்தறீங்க?" சரஸ்வதி அடுத்த அறையிலிருந்து வந்துவிட்டாள்.

"ஷட் அப்! சதாசி...நீ கொஞ்சறியா இல்லையா?" அவன் முகம் விபரீதமாகக் கடுகடுத்தது.

"ஸாரி பூஷண்...நீங்கள் குடித்துவிட்டு வந்திருக்கீங்களோன்னு..."

பாரதிக்கு வெடவெடவென்று உடம்பு நடுங்கியது. சரஸ்வதியின் முகத்தில் பீதி...

"கொஞ்சுகிறாயா, இல்லையா? பாரதி, சதாசிகிட்டே நெருங்கி நில்...ஊம்...உரசிட்டு...இன்னும் நல்லா நெருங்கி..."

"பாரதியோடு நான் கல்யாணத்துக்கு முன் பழகறது தப்புன்னு அட்வைஸ் பண்ணின நீங்களா?"

"சொன்னதைச் செய்...சதாசி.... பாரதியின் கன்னத்தை மெதுவாக வருடு....ஊம்...."

பூஷணத்தின் கையில் இப்போது ஒரு துப்பாக்கி. திகைத்தனர்.

''மரியாதையாகக் கொஞ்சு.'' அவன் கட்டளை.

சரஸ்வதி ஓடிவந்து அவன் கையைப் பற்றிக் கொண்டாள்.

முரட்டுத்தனமாக ஓர் இடி இடித்து அவளைக் கீழே தள்ளினான். ''நீ தலையிடாதே இதில்...''

''கொஞ்சு...நான் மூன்று எண்ணுவதற்குள். ஒண்ணு...இரண்டு...''

சதாசிக்கு நடுங்கியது...பாரதியைக் கட்டிப் பிடித்துக் கொண்டான்.

''கொஞ்சச் சொன்னேன். பயந்துட்டுப் பிடிக்கிறே...கொஞ்சு...தனியா நீ இருக்கிறபோது அவள் கிட்டே எப்படிக் கொஞ்சுவாயோ அந்த மாதிரிக் கொஞ்சு. தோளைத் தடவு...இடுப்பை...''

''சே! நீங்க ஒரு மிருகம்!'' சரஸ்வதி துடித்தாள்.

''சதாசி! பாரதியின் ரவிக்கையைக் கிழி!''

''மாட்டேன் சார்...''

''துப்பாக்கிக்கு வேலை வைக்காதே...''

சதாசி கட்டளைக்குக் கீழ்ப்படிந்தான். இவருக்கு இது என்ன வகை மேனியா?

''வெரி குட்! கையால் லேசாக இடுப்பிலே வருடு. பின் பக்க வளைவுகளைக் கவனி. அங்கெல்லாம் தொடு... கைகளை மார்புக்கு கொண்டு செல்..அழகை நிதானமாக உன் கைகள் திரும்பத் திரும்பச் சுற்றிச் சுற்றி ரசிக்கட்டும்...''

''பூஷணம் சார்,இப்படி மிருகமா ஆயிட்டீங்களே!''

''பேசாதே. இப்போ ஆசையா ஒரு முத்தம் கொடு. உதட்டில். கழுத்தில்...கன்னத்தில்...மார்பில்...''

''அய்யய்யே! என்னங்க... முத்தமெல்லாம் கொடுக்கறுங்க! எல்லாரும் வாங்க... வாங்க... முத்தம் தர்ராங்க இங்கே...'' செல்லா.

எழுந்து அங்கிருந்த அறைக் கதவைத் திறக்க ஓடினவனை பூஷணம் பிடித்து ஒரு தள்ளுத் தள்ளினான்...

ஆ! என்ற அலறல். ஒரு நாற்காலியில் விழுந்து துடித்தவன் சரஸ்வதியின் மடியில் விழுகிறான்.

உள்ளே சென்றுவிட்டுச் சில விநாடிகளில் பூஷணம் திரும்புகிறான். வரும்போது அவன் முகத்தில் களிப்பு.

பாரதி குலைந்த ஆடைகளுடன் தலையைக் கவிழ்த்து அழுது கொண்டிருக்கிறாள்... "வெரி வெரி ஸாரி...பாரதி!" பூஷணம் அவளுக்கு ஆடைகளை எடுத்துத் தருகிறான். "சதாசி, ...என்னை மன்னித்துவிடு...." சதாசியிடமும் மன்னிப்பு கேட்கிறான்.

சரஸ்வதி மடியில் செல்லா. தள்ளிவிட்டதால் மின்சார நாற்காலியில் பட்டு ஷாக். ஆனால் உயிருக்கு அபாயமில்லை. பூஷணத்தை நிமிர்ந்து பார்க்கவே அருவருப்பு அடைந்தவளாக இருக்கிறாள்.

"சரஸ்! ராட்சஸத்தனமாக நடந்து கொண்டுவிட்டேன்...மன்னித்துவிடு. என்னோடு யாராவது அந்த அறைக்கு வருகிறீர்களா?"

"ஒருத்தரும் வரத் தயாராக இல்லை." வெறுப்பு.

"வந்து பார்த்துவிட்டு அப்புறம் என்னை வெறுங்கள்...."

அவன் பின்னாடி மற்றவர்கள் சென்றனர்.

அது ஒரு சிறிய அறை. ஒருபுறம் பிரத்தியேகக் கண்ணாடிக் கதவு. உள்ளிருந்து பார்த்தால் வெளியே நடப்பது தெரியும். வெளியிலிருப்பவர்களுக்கு உள்ளிருப்பவர் தெரியமாட்டார்.

நாற்காலியில் ஓர் சடலம். அலங்கோலமாகச் சரிந்து கிடக்கிறது. தன் கழுத்தைத்தானே நெரித்துக் கொண்டாற்போல் கண்கள் அடர்ந்த புருவத்தினடியில் பிதுங்கி விழிக்கின்றன. உதட்டைப் பற்கள் கடித்துக் கொண்டதால் ரத்தம் உதடுகளில் உறைந்திருக்கிறது.

எல்லோருக்கும் நடுங்குகிறது.

"யார் இது?"

"மிஸ்டர் புஷ்பராஜ். என் முதலாளி—முதலாளி மட்டுமல்ல. கொலையாளி...

"புஷ்பராஜ்—விசித்திரமான, விபரீதமான ஒரு தத்துவத்தைக் கடைப்பிடித்துப் பலபேரைக் கொலை செய்தவர். அழகு புனிதமானது...அந்தப் புனிதம் மாசு படாமல் காக்கப்பட வேண்டுமானால் அதை அழிக்கிறதுதான் வழி என்ற விபரீத புத்தியை உடையவர்.

"அழகாக எதையாவது பார்த்துவிட்டால் அது அழியும் வரை அந்தத் திணறல் அவருக்கு இருந்துட்டே இருக்கும். கண் மறைவாக அது போய்விட்டால்கூட திணறல் போகாது. அவர் ஒரு கொலைகாரர் என்று எனக்கு ஆரம்

பத்தில் தெரியாது. ஒருநாள் தற்செயலாக அவர் பங்களாவுக்குப் போனேன். அவரது தாயார் படத்துக்கு சில பல்புகள் போட வேண்டுமென்று. தற்செயலாக அங்கே ஒரு சந்தனப் பெட்டி தென்பட்டது. உள்ளே சாம்பல், ஒரு பெண்ணின் புகைப்படம். இரண்டுக்குமுள்ள சம்பந்தம் என்ன என்று குழம்பிக் கொண்டிருந்தேன். மேற்படி பெண்ணைக் காணும் என்று புகைப்படம் பத்திரிகையில் வந்தது. யோசித்தேன். புஷ்பராஜ் அதைச் செய்திருக்கக் கூடுமோ என்று உறுத்தலிருந்தது. ஆராய்ந்தேன்.

''அவர் நடத்திவந்த சோப்பு பாக்டரி என் சந்தேகத்தை உறுதி செய்தது. சோப்புத் தயாரிப்பே கிடையாது. ஆனால் ஜெனரேட்டர் வைத்து நடத்துகிற அளவுக்கு மின்சாரத்துக்கு என்ன வேலை?

''மின்சார நாற்காலியையும், உடம்பை எலும்பு கூட இல்லாமல் பஸ்மமாக எரிக்கச் செய்யும் மின் அடுப்பும் சோப்புப் பாக்டரியில் இருப்பதைக் கண்டு பிடித்தேன்.

''உடனே போலீசுக்குச் சொல்லத் தோன்றியது. அவரிடம் லேசாக நான் தெரிவித்தேன். விஷயம் எனக்குத் தெரிந்துவிட்டது என்றதும் புஷ்பராஜ் ஒளிவுமறைவின்றி என்னிடம் கூறிய அவரது வாழ்க்கைச் சரித்திரம் என் உள்ளத்தைத் தொட்டது. அவருடைய தாயார் பிரமாதமான பேரழகி. சிறு வயதிலேயே விதவையாகிவிட்டார். புஷ்பராஜுக்கு அப்போது பதின்மூன்று வயது... ஒருதினம் வீட்டுக்கு வந்திருந்த நெருங்கின விருந்தாளி ஒருவர் செய்து கொண்டிருந்த காரியம் ஒன்று அவர் கண்ணில் பட்டது. அவருடைய தாயார் குளித்துக் கொண்டிருந்தபோது அந்த விருந்தாளி குளியல் அறைக்கு மேலிருந்த வெளிச்சக் கண்ணாடியின் இடுக்கு வழியே பார்ப்பது வழக்கம் போலும். புஷ்பராஜ் தாயாரிடம் அதைத் தெரிவித்துவிட்டார். உடனே அவமானம் தாங்காமல் பெட்ரோல் கொட்டிக்கொண்டு தற்கொலை செய்து எரிந்து போனாள். அழகான அம்மா அழகாக இருந்த ஒரே காரணத்துக்காக இறந்துபோனதிலிருந்து அழகு மேலேயே அவருக்குச் சிறு வயது முதல் வெறுப்பு. அழகான எதைக் கண்டாலும், அவருக்கு அம்மா நினைவு ஏற்பட்டு மூச்சுத் திணறும். அம்மா அழிந்ததுபோல் அதையும் அழித்தால்தான் அவரால் அடுத்த மூச்சு விட முடியும்.... யாரும் அழகை அனுபவிக்கக்கூடாது. தான்

அழிக்கும் அழகிகள்தான் அம்மாவுக்கு அவர் செலுத்தும் காணிக்கையாம்.

"பரிதாபத்துக்குரியதாக இருந்த காரணத்தாலோ, அல்லது என் அடி மனத்தில் பணத்துக்கு ஒரு ஏக்கம் இருந்ததாலோ அவரைக் காட்டிக் கொடுக்கவில்லை. ரகசியம் தெரிந்த என்னிடம் அவர் எப்போதும் பயப்பட்டார். அந்தப் பயத்தைக் காசாக்கினுல் என்ன என்று யோசித்தேன். அவரிடம் நான் கேட்கும்போதெல்லாம் பத்தாயிரம் இருபதாயிரமாகக் கிடைத்துவந்தது.

"ஆனுல் இது தப்புக் காரியம் என்பதும், அவரைக் காட்டிக் கொடுக்காமலிருப்பது உடந்தையானதாகும் என்று எனக்குத் தெரியும். ஆனுலும் எந்தக் கொலையையும் நான் நேராகச் செய்யாததால், யாரோ யாரையோ செய்து கொண்டு போகட்டும். நமக்கு வேண்டியது பணம் என்றிருந்தேன்.

"பாரதியையும் சதாசியையும் ஒரு தினம் என் காரில் டிராப் செய்யும்போது புஷ்பராஜின் கண்களில் பாரதி பட்டுவிட்டாள். அவள் என் சினேகிதனின் எதிர்கால மனைவி என்பது அவருக்குத் தெரியாது. பாரதியைக் கண்டதிலிருந்து அவருக்கு மூச்சுத் திணறல். என்னை வற்புறுத்தினுர்—என் சினேகிதனின் காதலி என்று நான் தெரிவித்த பின்னும் அவர் என்னை வற்புறுத்திக்கொண்டேயிருந்தார். ஐயாயிரம், பத்தாயிரம் என்று தந்து கொண்டிருந்தார். செலவு செய்யச் செய்ய நான் என்னை அறியாமல் அவருக்குக் கடமைப்பட்டவனுகிவிடுவது தெரிந்தது. அவரது மூச்சுத் திணறலைக் கொண்டே அவரை முடித்துவிட்டு அவர் பிடியிலிருந்து விடுபட விரும்பினேன். உங்கள் இருவரையும் அவர் எதிரில் இன்பமாக நடந்து கொள்ளச் செய்தால், அதைப் பொறுக்காமல் மூச்சுத் திணறி, அவருக்கு முடிவு வந்துவிடும் என்று ஊகித்தேன். வெளியே வரமுடியாதபடி தாளிட்டேன்.

"உங்களையும் மிரட்டி அப்படி நடந்து கொள்ள வைத்தேன். சாதாரணமாக நான் சொல்லியிருந்தால் நீங்கள் ஒத்துழைத்திருக்கமாட்டீர்கள். மன்னித்துவிடுங்கள்..."

அனைவரும் வாயடைத்து நின்றனர்.

"இப்போ போலீசுக்குப் போன் செய்கிறேன். அவர்களுக்கு என் முதலாளியின் மரணத்தை அறிவிக்க வேண்டுமல்லவா?"

"பூஷண் சார். ப்ளீஸ் வேண்டாம். போலீஸ்

வந்தால் ஒருகால் உங்கள் மேலேயே கொலைக் குற்றம் விழக்கூடும்.''

''நான் அவரை எங்கே கொலை செய்தேன்? கத்தியால் குத்தினேனு, சுட்டேனு? நெறித்தேனு? அவராகத் தன்னை அழித்துக்கொண்டுவிட்டார். அழகாயிருப்பதை அழித்துக் கொண்டிருந்தார்—அவரும் அழகாகத்தானிருந்தார்—ஆகவே தன்னையே அழித்துக்கொண்டுவிட்டார்போலும்.. போலீசிடம் இதைச் சொல்வோம்.''

''பூஷண்! போலீஸ் இதை நம்பும் என்பது என்ன நிச்சயம்...அப்படியே நம்பினுலும் மூச்சடைக்கும் சூழ்நிலையை ஏற்படுத்தி இறக்கப்பண்ணினது கொலைக்குச் சதி செய்த குற்றம் ஆகிவிடாதா?''

''தண்டனை கொடுத்தாலும் நான் புன்னகையுடன் ஏற்றுக் கொள்வேன். நான் சம்பாதித்த பணம் கறை படிந்த பணம். தண்டனை அளிப்பதோ நம்பி விடுதலை அளிப்பதோ அதைத் தீர்மானிக்க வேண்டிய பொறுப்பு போலிஸுடையது.''

''பூஷண்!'' சரஸ்வதி விம்மினுள். சாலக்குடியின் சாதாரண பூஷணமாகவே அவன் இருந்திருக்கலாகாதா?

அவன் டயல் செய்தான். ''போலீஸ் ஸ்டேஷன்? மேதா காலனி, ஏழாம் நம்பர் பங்களா.''

சரஸ்வதியின் கேவலுடன் பாரதியின் கேவலும் சேர்ந்து கொண்டது.

தூரத்தே ஜீப் ஓசை கேட்டது.

முற்றும்

